# திருமந்திர மாநாட்டு மலர்



திருவாவடுதுறை ஆதீனம்



ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகமூர்த்திகளை
ஸ்ரீ-ல-ஸ்ரீ மஹாஸன்னிதானம் வழிபடுதல்.

தலச்சிறப்புகள் :—

1. சிவபெருமானுடைய ஆணையால் பசுவடி வெய்திய உமாதேவியார் இத்தலத்துக்கு வந்து சிவ பெருமானைப் பூசித்துப் பசுவடிவம் நீங்கப்பெற்றமை. 2. திருமூல நாயனர் மூவாயிரம் ஆண்டுகள் இத் தலத்திலே சிவயோகமிருந்து திருமந்திரமாலையை அருளிச்செய்தமை; (மூவாயிரம் மந்திரங்கள்) 3. போகநாத சித்தருடைய மாணவர் ஆகிய திருமாளிகைத்தேவர், ஆசாரியருக்குத் தொண்டுசெய்திருந்து அருள்பெற்று சைவஸ்தாபனம் செய்தமை; பற்பல அற்புதங்கள் செய்து விளங்கினமை. 4 நவகோடி சித்தர்கள் இங்கே வசித்துத் தவங்கிடந்தமையால் நவகோடி சித்தபுரம் எனப் பெயர் பெற்றமை. 5. சைவ சமயாசாரியர் நால்வருள் முதல்வரான ஆளுடைய பிள்ளையார் தமது தந்தையார் யாகம் செய்யும்பொருட்டுத் தேவாரத் திருப்பதிகம் பாடி ஆயிம்பொன் பெற்றமை. 6. தமது கட்டளையின்படி தேவர்கள் படர் அரசு மரங்களாக



திருவாவடுதுறை சிவாலயம்

அம்மர நிழலில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளமை. 7. மகப்பேறு கருதி வந்து வழிபட்ட முசுகுந்த சக்கரவர்த்திக்கு இதனைத் திருவாரூராகவும், தம்மைத் தியாகேசப் பெருமானுகவும் காட்டிப் புத்திரப்பேறும் அளித்துப் புத்திரத்தியாகர் என்னும் பெயருடன் வீற்றிருந்தருளுகின்றமை. 8 தருமதேவதை தம்மை வழிபட அதனை இடபமாகக் கொண்டதன்றிச் சந்நிதியில் அரசமர நீழலில் கோயில்கொண்டிருக்கும்படி வரந்தந்தமை. 9. தேவர்களும் முனிவர்களும் வேண்டிக்கொள்ள அவ்வேண்டுகோளை ஏற்றுப் போதியம் பலத்திலே சிவபெருமான் மகாதாண்டவம் புரிந்தருளியமை. 10. சில முனிவர்கட்குச் சிவஞானோபதேசம் செய்தருளியமை. 11. சில அந்தணர்களுக்கு வேதத்தை ஓதியருளியமை. 12. போகநாத சித்தர்—நவகோடி சித்தர் முதலிய சித்தர்கள் விரும்பியவண்ணம் அவர்களுக்கு அட்டமாசித்திகளையும் பிறவற்றை யும் அருளியமை முதலிய அற்புதங்கள் பலப்பல சிவபிரான் ஆணையால் இத்தலத்திலே நிகழ்ந்தன. சித்தர் கள் பலர் இங்கே எப்போதும் வசிக்கின்றனர் என்ற ஐதிகமும் உண்டு.

*நாட்டில் மடங்கள்:*

அன்றுமுதல் நாள்தோறும் நாள்தோறும் அண்ணல்
அடியரள விறந்தபெயர் வந்தவர்கள் எல்லாம்
சென்றுறையத் திருமடங்கள் திருமடங்கள் தோறும்
திருவிளக்கு அங்கு அவர்சாத்த உள்ளுடை மேற்போர்வை
துன்றியசெந் நெலின்அடிசில் கன்னல்நறுங் கனிகள்
தூயஅறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட பால்தேன்
நன்றுதிருப் பண்ணியந்தண் ணீரமுதம் அடைக்காய்
நரபதிஏ வலின் அமைச்சர் நாள்தோறும் நடத்த.

— சேக்கிழார் புராணம்.



திருவாவடுதுறை ஆதீன மடாலய முகப்பு.

குறிப்பு :

இச் செய்யுள், பன்னிரண்டாம் நூற்றாண்டில் நிகழ்ந்த வரலாற்றுச் செய்தியை அடிப்படையாகக்கொண்டு **உமாபதிசிவாச்சாரியார்** அருளிச்செய்த சேக்கிழார் புராணத்தில் உள்ளது. சேக்கிழார் பெரிய புராணம் சோழ அரசர்கள் உள்ளத்தை உருக்கிய காரணத்தால், சோழ அரசர்கள் சோழ நாட்டில் பல மடங்களை நிறுவினார்கள். அம் மடங்கள் எல்லாம் தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடும் முனிவர்கள் தங்கும் இடங்களாயின. முனிவர்கள் தாங்கள் ஆராய்ந்து கண்ட உண்மைகளை எல்லாம் தமிழ் நாட்டிற்குத் தத்துவ சாத்திரங்களாகவும், சமயக் கோட்பாடுகளாகவும் வழங்கினார்கள். அவையே, நாட்டில் அரசியலில் பல மாறுதல்களும், அமைதி இன்மையும் ஏற்பட்ட காலத்தும் மக்களை மக்களாக வாழ்வதற்குப் பெரிதும் உதவிபுரிந்தன. இன்றைக்குத் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் போற்றும் சித்தாந்த உண்மைகளை விளக்கியவர் சந்தானகுரவர்களுள் நான்காமவராகிய உமாபதி சிவம் என்னும் பெருந்தகையாராவர். இப் பெருந்தகையார் அறுநூறு ஆண்டுகட்கு முற்பட்டவராவர்.

நமசிவாயமூர்த்திகள் :

இருதய நாப்பண் அஞ்செழுத் துருவின்
இறைவனை, உயிர்க்கொலை செய்யாமை
அருள், பொறி அடக்கல், பொறை, தவம், வாய்மை,
அன்பு, அறிவு என்னும்எண் மலர்கொண்டு
ஒருமையொடு அருச்சித்து இடுகஎன்று அடியர்க்கு
ஒள்ளிய தீக்கைசெய்து உணர்த்தத்
திருஅமர் துறைசை உறையருள் குருவாம்
திருநமச் சிவாயர்தாள் போற்றி.

— சிவஞானமுனிவர்.

குறிப்பு :

இச் செய்யுள், நமச்சிவாயமூர்த்திகளுக்கு வணக்கம் கூறும் முறையில் மாதவச் சிவஞான முனிவர் பாடியதாகும். நமச்சிவாயமூர்த்திகள் தெய்வத்தன்மை உடையவராய்த், திருவாவடுதுறை ஆதீனத்தை இன்றைக்குச் சுமார் ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னர் தோற்றுவித்த அருளாளராவார். இவர் கண்ட ஆதீனம், தென்னாட்டில் பலகோடி மக்களுடைய ஞானத்தையும், சமய உணர்ச்சியையும் நன்னெறியையும் நிலைபெறச்செய்வதற்கும் வளர்ப்பதற்கும் துணையாக இருந்துகொண்டிருக்கிறது. இவ்வருள்மூர்த்திகளால் கட்டளை இடப்பெற்ற நற்செயல்களும் இன்றுவரைநடைபெற்றுவருகின்றன. நாட்டிலும் மக்கள் உள்ளத்தும் எத்துணையோ மாறுபாடுகள் தோன்றினும், மூர்த்திகளுடைய கட்டளையும் திட்டமும் எள்ளளவும் மாறியன அல்ல. எடுத்துக்காட்டாகத் திருமடத்தின் அடுக்களையை மூர்த்திகள் அமைத்து, அதில் பொருத்திய நெருப்பு அணையாமல் நின்று என்றும் அடியவர்களுக்கு அமுதளிக்கவேண்டும் என அருளிய திருமொழி இன்றும் உண்மையாக இருந்துவருவது உலகமறியும். இந்த ஐந்நூறாண்டுகளில் நிகழ்ந்த மாறுதல்களும், பஞ்சமும் எவ்வளவோ ஆயினும் திருமடத்திலும் அதன் கிளைமடங்களிலும் இன்றுவரை பசிப்பிணியொன்று உண்டு என்பதை எவரும் அறியார். எந்த நல்ல நோக்கங்களுடன் தோன்றியதோ அந்நோக்கங்கள் இன்றும் நிறைவேறி வருகின்றன. சிவஞான முனிவர் சங்கரர், இராமாநுசர், இவர்களுடன் வைத்து எண்ணக்கூடிய ஒரு பெருந் தத்துவ ஞானியாவார். அவரும் இத் திருமடத்தின் தம்பிரான்களில் ஒருவரே.



ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள்

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாவடுதுறை ஆதீனம்

# திருமந்திர மாநாட்டு நிகழ்ச்சிகள்.

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 21-வது குருமஹா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ **சுப்பிரமணியதேசிக சுவாமிகள்** கட்டளையிட்டு அருளியபடி திருமந்திர மகாநாட்டுக்கெனவே தனியே அமைக்கப் பட்டிருந்த "திருமந்திர மன்றத்தில்". மெய் கண்டார் யாண்டு – 731, விசய – தை – 18-ந் தேதி (31—1—54) அன்று மாலை சரியாக நான்கு மணிக்குத் திருவாவடுதுறையில் ஸ்ரீ-ல-ஸ்ரீ மஹாசந்நிதானத்தின் திருமுன்னர் "**திருமந்திரமாநாடு**" தொடங்கிற்று.

மாகாணம் முழுவதிலுமிருந்தும் சிந்தாந்த சைவச்செந்நெறியும், சிவயோகப்பயிற்சியும் மிக்க அன்பர்கள் பலர் திரள் திரளாக வந்து குழுமியிருந்தனர்.

மாநாட்டுக்கெனவே அமைக்கப்பட்டிருந்த திருமந்திர மன்றத்தைக் கண்டு பலர் பார்த்தது பார்த்தபடியே வியப் பெய்தி நின்றார்கள் என்றால் அது மிகையாகாது. திருமந்திர மன்றம் துறைசை ஆதீனத்து மேலைத்தோட்டத்தில் அமைக் கப்பட்டிருந்தது. செயற்கை யோடு, இயற்கையாகவே பூஞ் சோலைகள் நிரம்பிய மேலைத் தோட்டத்திலே அந்த மன்றம் அமைந்திருந்தபடியால் அதன் அழகு இன்னும் பல மடங்கு பெருகியே காணப்பட்டது.



திருமந்திர மாநாட்டு அலங்காரப் பந்தல்

பெரிய அளவிலே அச்சிடப் பட்டிருக்கும் படங்கள் பல மன்றத்திலே அலங்காரமாக வைக்கப்பட்டிருந்தன. குறிப் பாக குருமகாசந்நிதானம் தனது பரிவாரங்களுடன்கூட சென்ற ஆண்டு காசி யாத்தி ரைக்குச் சென்றபோது பிடிக் கப்பட்ட பல படங்கள் அங்கே காணப்பட்டன. மகாநாட் டுக்கு வந்திருந்தோர்களெல்லாம் 21-வது குருமகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள் ஸ்ரீ காசிவிஸ்வநாதருக்குப் பால் அபிஷேகம் செய்யும் படத்தையும், குருமகா சந்நிதானத் தோடுகூட, திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர் ஸ்ரீ-லஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் காசி விசாலாட்சி அம்மனைத் தரிசிக்கும் படத்தையும் கண்டு மெய்மறந்து நின்றூர்கள்.

மன்ற மேடையை நெருங்க நெருங்க அலங்காரங்கள் மிக அதிகமாயிருந்தன. மன்றத்தின் நடுவே திருக்கயிலாய பரம்பரையில் வந்த திருவாவடுதுறை ஆதீன 21-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசார்ய சுவாமிகள் தமது குரு மகா சந்நிதானம் முத்தி பஞ்சாக்கர தேசிகர் எனப் போற்றப்படும் ஸ்ரீ நமசிவாய மூர்த்திக்கு முன் தலை குனிந்து கை கூப்பிய வண்ணம் தேஜோமயமாக நின்றுகொண்டிருக்கும்படி எழுதப்பட்ட பெரிய படம் ஒன்று புஷ்ப மாலைகளால் அலங்கரிக்கப் பட்டுப் பார்ப்போர் உள்ளங்களில் பூரிப்பையும், உவகையையும் எழுப்புவதாக இருந்தது.

கூட்டத்திற்கு வந்திருந்த பல சித்தாந்த சைவச் செல்வர்களைப் போலவே துறைசை ஆதீன மகா வித்வான் ஆறுமுக நாவலரவர்களும்கூட அந்தப் படத்தைப்பார்த்துப் பெரிதும் வியப்பும், களிப்பும் எய்தி, கூப்பிய கை பிரிக்கும் வண்ணம் தெரியாது நின்ற காட்சி நெஞ்சைவிட்டுப் பிரிய முடியாததாகும். அப் படத்திறல் பெரிதும் உள்ளம் கவரப்பட்ட ஆதீன மகாவித்வான் ஆறுமுக நாவலரவர்கள் மாநாட்டு முதல்நாள் கூட்டத்திற்குத் தலைமை வகித்துப் பேசியபோது மன்றத்திலே அமர்ந்திருந்த குருமகா சந்நிதானத்தின் பொன்னூர் திருமலரடிகளுக்கு வணக்கம் தெரிவித்துக் கொண்டு, "மன்ற அரங்கிலேயுள்ள படத்தை – அதாவது ஸ்ரீ நமச்சிவாய மூர்த்தியின் முன் 21-வது குருமகா சந்நிதானம் கை கூப்பிக் கொண்டு பக்தியும், பணிவும் தோன்ற நிற்கும் காட்சிப் படத்தை ஒருமுறை எப்படிப் பட்டவன் பார்த்துவிட்டாலும் உடனே அவன் நெஞ்சு இளகும்: குருவுக்கு வணக்கம் செலுத்தவேண்டுமென்ற எண்ணம் பெருகும். ஆகவே இதே படத்தை ஆதீனத்திலிருந்து வெளியிடப்படும் எல்லாப்புத்தகங்களிலும் மேல் அட்டையின் படமாகப் பிரசுரிக்கவேண்டு மென்றும். அப்பொழுதுதான் தாய்தந்தையர்களையே வணங்குவதற்கு வெட்கப்படும் மாணவர்களின் அகக்கண் திறப்பதற்கு வழியாக இருக்குமென்றும் குறிப்பிட்டார் என்றால் மேலேயும் இதை வர்ணிப்பது எப்படி என்று தெரியவில்லை.

அடுத்தாற்போல திருமந்திர மன்ற அரங்கத்தின் வலது கைப்புறம் 16-வது மேலகரம்-சுப்பிரமணிய குருமகா சந்நிதானத்தின் படமும், 17-வது குருமகா சந்நிதானம் அம்பலவாண தேசிக பரமாசார்ய சுவாமிகள் படமும், இடது கைப்புறம் 20-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகளது திருவுருவப்படமும், தருமபுர ஆதீனம் 25-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகளது படமும் அலங்காரமாக இருந்தன. அரங்கத்தின்மேல் திருமூலரின் படமும் மாட்டப்பட்டிருந்தது.

அத்துடன்கூட துறைசை ஆதீனம் ஸ்ரீ கவிராக்ஷஸ கச்சியப்ப முனிவர் படமும், அதற்கு எதிரில் சிவஞானபோதம் மெய்கண்டதேவ நாயனூர் படமும், அதைப் போலவே திரிசிரபுரம் பிள்ளையவர்கள் மகாவித்வான் திரு. மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் படமும், அதற்கு எதிரில் அவரது சிஷ்யரும், தமிழுலகத் தால் தந்தையெனப் போற்றப்படுபவரும்,

*"பொதிய மலை பிறந்தமொழி வாழ்வறியும்*
*காலமெலாம் புலவோர் வாயில்*
*துதியறிவாய். அவர் நெஞ்சின் வாழ்த்தறிவாய்*
*இறப்பின்றித் துலங்குவாயே"*

என்பதாக மகாகவி பாரதியாரால் பாடப் பெற்றவருமான திரு உ. வே. சாமிநாதய்யர் அவர்களுடைய படமும் மன்றத்தை அலங்கரித்துக்கொண்டிருந்தன.

மெய்கண்டதேவ நாயனுரது சிவஞான போதத்தின் பன்னிரண்டு சூத்திரங்களும் எழுதப்பட்டு மன்றத்திலே ஆங்காங்கு மாட்டப்பட்டிருந்தன.

அதோடுகூட திருமூலதேவரது திருமந்திரத்திலுள்ள பொன்னுன மொழிகளும், எல்லோரும் சதா சிந்தையில் வைத்துக்கொள்ளத் தக்க பாடல்களின் அடியுமான,—

"சிவசிவ என்கிலர் தீவினையாளர்", "பெரியாருடன் கூடல்பேரின்பமாமே", "நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்";, "சிவனேடொக்குந் தெய்வம் தேடினும் இல்லை" என்ற பொன்னுன அடிகளெல்லாம் பொன்னெழுத்துக்களில் பொறிக்கப்பட்டு மாட்டப்பட்டிருந்தன.

இப்படி இந்திரசபைபோல வண்ண வண்ணத் தேர்ச்சிலைகளாலும், பார்வையை விட்டு அகலமாட்டா அழகான நிழற்படங்களாலும் நெஞ்சைவிட்டு நீங்கமாட்டாப் பொன்மொழிகளாலும், கண்ணையும் கருத்தையும் கவரும் ஒரே தீபாலங்காரங்களாலும் ஜ்வலித்த திருமந்திர மன்றத்தில் 31-1-1954 அன்று துறைசை ஆதீன 21-வது குருமகா சந்நிதானத்தின் கருணுகடாக்ஷத்தால் குறித்தது குறித்தபடி திருமந்திர மாநாடு தொடங்கி, 3—2—54 புதன் அன்று முடிவுற்றது.

முதல்நாள் 31—1—54 ஞாயிற்றுக்கிழமை நடந்த விழாவிற்கு ஆதீன மகாவித்வான் ஆறுமுகநாவலரவர்கள்தலைமைவகித்தார்கள். திருமந்திரத்தின் **முதல் தந்திரம்** பற்றிக் காஞ்சீபுரம், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் க. வச்சிரவேல் முதலியாரவர்களும் **இரண்டாம் தந்திரம்** பற்றி அண்ணுமலைப் பல்கலைக்கழகம் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் வித்வான் ஜி. சுப்பிரமணிய பிள்ளையவர்களும், **ஐந்தாம் தந்திரம்** பற்றி அண்ணுமலைப் பல்கலைக்கழகம் விரிவுரையாளர் இ. எஸ். வரதராசையரவர்களும் விரிவுரையாற்றினுர்கள்.

இரண்டாம் நாள் 1—2—54 திங்கள்கிழமை அன்று நடந்த விழாவிற்கு பழநி வேதசிவாகம பாடசாலை, சித்தாந்தசரபம்-சிந்தாந்த மஹாமஹோபாத்தியாய சிவஸ்ரீ ஈசான சிவாசாரியர் அவர்கள் தலைமை வகித்தார்கள். திருமந்திரத்தின் **மூன்றும் தந்திரம்** பற்றித் தருமபுர ஆதீனப் பல்கலைக்கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் திரு. ச. தண்டபாணி தேசிகரவர்களும், **ஆறும் தந்திரம்** பற்றித் தருமைப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர், சிந்தாந்த ரத்னுகரம்—வித்வான் முத்து சு. மாணிக்கவாசக முதலியாரவர்களும், **எட்டாம் தந்திரம்** பற்றிக் காஞ்சீபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் வித்வான் திரு. அருணைவடிவேல் முதலியாரவர்களும் விரிவுரையாற்றினுர்கள்.

மூன்றும் நாள் 2-2-54 செவ்வாய்க்கிழமை அன்று நடந்த விழாவிற்கு ஆதீன மகாவித்வான் ஆறுமுக நாவலரவர்கள் தலைமை வகித்தார். **ஒன்பதாம் தந்திரம்** பற்றி மாம்பாக்கம் [குருகுலம்] திருமந்திரப் பேராசிரியர் ஆ. இளவழகனுர் அவர்களும், **ஏழாம் தந்திரம்** பற்றிக் கலைமகள் ஆசிரியர் வித்வான் கி. வா. ஜெகந்நாதய்யர் அவர்களும், **நாலாம் தந்திரம்** பற்றித் தருமை ஆதீனம் தமிழ்த்துறைத் தலைவர் வித்வான் ச. தண்டபாணி தேசிகரவர்களும் விரிவுரையாற்றினுர்கள்.

ஆக மூன்றுநாள் விழாவிலே திருமூலதேவர் எழுதிவைத்த திருமந்திரத்தின் 9-தந்திரங்களையும் பற்றி ஒன்பது விரிவுரையாளர்கள் வெகு அழகாக எடுத்து விளக்கினுர்கள்.

திருமந்திர மகாநாட்டு முடிவு விழா 3-2-54 புதன்கிழமை அன்று சென்னை சர்க்கார் அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர் கனம் வேங்கடசாமி நாயுடு அவர்கள் தலைமையில் நடந்தது.

இதற்குமுன் அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர் அவர்களை வரவேற்றுத் திருமந்திர மன்றத்தில் எழுந்தருளியிருந்த குருமகா சந்நிதானத்தின் முன்னிலைக்கு அழைத்துச் சென்றவுடன் சந்நிதானம் அவருக்குப் பொன்னுடை

போர்த்தி மாலையணிவிக்கச்செய்து கௌரவப் படுத்தினர். பின்னர் ஆதீன வித்வான் திரு. டி. எஸ். மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் அறநிலையப் பாதுகாப்பு அமைச்சருக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்து அளித்தார்கள். ஆதீன மகாவித்வான் ஆறுமுக நாவலரவர்கள் குருமகா சந்நிதானத்தின் கட்டளைப்படி கனம் வேங்கடசாமி நாயுடு அவர்களின் வரவைப் பாராட்டி முடிவு விழாவிற்குத் தலைமை தாங்கும்படியாகக் கேட்டுக்கொண்டார்.

முடிவு விழாவிற்குத் தலைமை தாங்கிய சென்னை சர்க்கார் அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர் கனம் வேங்கடசாமி நாயுடு அவர்கள், மடங்களும் ஆலயங்களும் மதத்தைப் பரப்புவதற்காகவும், மக்கள் தர்ம மார்க்கத்தில் நின்று, தங்கள் வாழ்வில் அறநெறி குன்றாது இன்பமாக வாழ்வதற்கு வழிகாட்டியாகவும் திகழ்வன என்றும், மடாதிபதிகள்தான் மக்களுக்குக் குருவாக நின்று அறநெறியை வகுத்து அதன்படிசெல்ல வழிகாட்ட வந்தவர்கள் என்றும், நாஸ்திகம் வெகுவேகமாகப் பரவி வருவதைத் தடுப்பதற்காகத் திருவாவடுதுறை மகாசந்நிதானம் ஆங்காங்கே ஏராளமான சமயப் பிரசாரகர்களை ஏற்படுத்திச் சமயத் தொண்டாற்றி வருவது பாராட்டப்பட வேண்டிய விஷயமென்றும், மக்கள் நன்மையைக் கருதித் திருமந்திரத்தின் கருத்துக்களை உலகில் பரப்புவான்பொருட்டுக் குருமகா சந்நிதானம் திருமந்திர மகாநாட்டைக் கடந்த மூன்றுநாட்களாக இந்த மன்றத்திலே சிறந்த முறையில் நடத்திவருவதற்குத் தாம் ரொம்பவும் சந்தோஷப்படுவதாகவும், இம்மாதிரியான மகாநாடுகள் மக்களிடையேயுள்ள மதசம்பந்தமான அறியாமை இருளைப்போக்கி அவர்கள் நல்ல தர்ம வாழ்வு வாழ்வதற்கு மிகவும் உபயோகமாக இருக்குமென்று தான் நம்புவதாகவும் குறிப்பிட்டார். மேலும் அவர் குறிப்பிடுகையில் மடாதிபதிகளும், தர்ம கர்த்தாக்களும், நமது மதம் அழியாமல் இருப்பதற்கான நடவடிக்கை மேற்கொள்ளும்போதே மதப்பிரசாரம் செய்துகொண்டுவருவது இன்றியமையாததாகும். கோவில் அதிகாரிகளும் ஆண்டவனது குழந்தைகளாகிய ஏழை அநாதைகளுக்கு உதவிசெய்ய முன் வந்தாகவேண்டும். திருப்பதிக்கோவில் தேவதானத்தின் சார்பில் சமயாசார சாஸ்திரம்போதிக்கும் கல்லூரி ஒன்றை முன்பு நிறுவ யோசனை கூறினேன். அப்படியே ஆரம்பிக்கப்பட்ட அந்தக்கல்லூரி மிகவும் நன்றாக இப்பொழுது நடந்து வருகிறது. அதைப்போலவே சென்னை மாகாணத்திற்கும் ஒரு சமய சாஸ்திரக் கல்லூரி மிகவும் அத்யாவசியமாகும். இந்தக் கல்லூரியைநிறுவ யாராவது முன்வந்தால் இந்த சர்க்கார் தங்களாலான எல்லா உதவியையும் தருவார்கள். மேலும், சென்னை மாகாணத்தில் எவ்வளவோ ஆலயங்கள் இருக்கின்றன. அவைகளுக்கு எல்லாம் நிர்வாகம் அமைக்கப்படும்போது இந்தக் கல்லூரிப் பட்டதாரிகளில் பலரைப் பொறுக்கிக்கொள்ளமுடியும். மடாதிபதிகள் எல்லாம் இப்பொழுது ஒருமுகமாகச் சேர்ந்து பணியாற்றுவது நல்ல வருங்காலத்தைத்தான் சுட்டிக்காட்டுகிறது. நாட்டையே பயமுறுத்திக்கொண்டிருந்த நாஸ்திகம் அழியும் காலம் வந்துவிட்டது என்பதைக் காட்டுகிறது. மடாதிபதிகள் எல்லாம் ஒன்றுசேர்ந்து சமயப் பிரசாரம்செய்ய முன்வந்திருப்பது போலவே இந்த மாகாணத்தில் ஒரு சமய சாஸ்திரக் கல்லூரி ஏற்படுத்தவும் நான் யோசனை கூறுகிறேன்,'' என்பதாகக் குறிப்பிட்டார்.

பின்னர் திருமந்திரம்பற்றி ஆதீன மகாவித்வான் ஆறுமுகநாவலர் அவர்களும், திருமந்திரப் பேராசிரியர் இளவழகனார் அவர்களும் திரு. வீர. சுப்பிரமணியம் அவர்களும் பேசிய பின்னர் திருமந்திர மகாநாடு முடிவுற்றது.

(31—1—54 அன்று) முதல்நாள் திருமந்திர மகாநாடு ஆரம்பிப்பதற்கு முன்னதாகத் திருமூலதேவரின் நூல்கள் ஊர்வலமாக எடுத்து வரப்பட்டன. தமிழ் மூவாயிரம் எழுதித்தந்த திருமூலதேவர் திருவாவடுதுறை திருக்கோயிலின் வெளிப்பிரகாரத்தில் வடமேற்கு மூலையிலிருந்த ஓர் அரசமரத்தின் கீழ்த் தங்கி மூவாயிரம் ஆண்டுகள் தவம் செய்த வரலாறு யாவருக்கும் தெரிந்திருக்கலாம்.



திருமூலதேவரின் நூல்கள் ஊர்வலமாக எடுத்துவரும் காட்சி.

அந்தக் கோயிலின் வெளிப்பிரகாரத்திலுள்ள திருமூலதேவர் இருப்பிடமிருந்து ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானத்தின் உத்தரவுப்படி சுப்பிரமணியத் தம்பிரான் தம் சிரமீது திருமூலரின் நூல்களை எடுத்துக்கொண்டு, ஆதீனநாதஸ்வரவித்வான் நாதஸ்வரம் வாசிக்க, ஆதீனத்துத்திருப்புகழ் தேவார கோஷ்டிகள் காதுக்கினிய இறைவன் கீதம் பாடிவர ஊர்வலமாகத் திருமந்திர மன்றத்துக்குக் கொணர்ந்தார்கள். அப்பொழுது வேட்டுகள் முழங்கின. சரியாக நான்கு மணிக்கே குருமகாசந்நிதானம் மன்ற அரங்கில் எழுந்தருளுவதும், ஊர்வலம் மன்றத்திற்குள் நுழைவதும் சரியாக இருந்தது.

இதுவரையிலும் யாருமே இவ்வளவு சிறப்பாகக் கொண்டாடாத முறையில் சைவ உலகத்திற்கு ஒரு வியப்பையும், திகைப்பையும் அளிக்கத்தக்க வகையில் திருமந்திர மகாநாட்டைக் கூட்டிய துறைசை ஆதீனத்து 21-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகளைப் பாராட்டும் முகத்தான் தருமபுர ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களுடைய சார்பில் ஸ்ரீ மாணிக்கவாசகத்தம்பிரான், துறைசை குருமகாசந்நிதானத்திற்குப்பட்டுச்சால்வை போர்த்தி, திருவாவடுதுறையின் பெருமையையும், மகிமையையும் விளக்கி அந்த ஊரிலேயுள்ள ஆதீனத்தின் பெருமையையும், அது செய்து கொண்டிருக்கும் நல்தொண்டுகளையும்பற்றிப் பாராட்டி, மெய்கண்டான்மகாநாடு போன்று எத்தனை எத்தனையோ மகாநாடுகளைச் சிறப்பாகக் கொண்டாடியிருந்தாலும் கூட, இவ்வளவு சிறப்பாகத் திருமந்திர மகாநாட்டை யாருமே கூட்டாதவகையில் கூட்டியது பெருமைப்படத்தக்கது என்றும், திருமுறைகளுக்குள் பத்தாம் திருமுறையும், தமிழாகமக் கடலேயாயுமான திருமந்திரத்தின் பெருமை உலகிற் பரவும்பொருட்டு மூன்று நாட்கள் திருமந்திர மகாநாட்டைக் கூட்டக் கருணைகூர்ந்த மகாசந்நிதானத்தைப் பாராட்டியும் ஒரு வாழ்த்துரையைப் படித்து வழங்கினர். அந்த வாழ்த்துரை 28-பக்கங்கள் அடங்கின. குறிப்பாக அவர்கள் அதில் கூறியிருந்ததாவது :-

"திருமந்திரப் பெருமை உலகிற் பரவும் பொருட்டு, திருவாவடுதுறையில் இன்று

(31–1–54) முதல் மூன்று நாட்கள் திருமந்திர மாநாடு நிகழ இருக்கின்றது. திருவாவடு துறையிலுள்ள மடாலயம் தொன்மையுடையது. திருக்கயிலாயபரம்பரையின் நந்திமரபில் மெய்கண்ட சந்தானத்தில் நான்காவது குரு மூர்த்திகளாகிய உமாபதி சிவாசாரியாரது அருளுபதேசம் பெற்றவர் அருணமச்சிவாயர். அவர் அருண்மாணுக்கர் சித்தர் சிவப்பிரகாசர். அவரிடம் திருவருள் ஞானம்பெற்ற ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகளே துறைசை மடத்தின் முதல்வர். இப்பெருமானை முக்திபஞ்சாக்கர தேசிகர் என்று தொழுவது தொன்றுதொட்டுள்ள மரபாகும். அந்தக் குருமூர்த்திகளின் மரபில் இருபத்தொன்ருவது சந்நிதானமாக விளங்கும் ஸ்ரீ–ல–ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரியசுவாமிகள் அவர்களே இத்திரு மந்திரக்கருத்து உலகெலாம் பரவச்செய்யும் அருள் நினைவு கொண்டு, இம்மகாநாட்டை நிகழ்த்துகின்ருர்கள்.

இத்திருவாவடுதுறை மடத்திலுள்ள அத்திருவருள் விலாசமே குருநாதர் பலரையும் மாதவச் சிவஞானயோகிகள், தாண்டவராய சுவாமிகள் முதலிய முனிவர் பலரையும் வித்துவான்கள் பலரையும் தோற்றிப் போற்றிச் சைவ உலகிற்குப் பயன்படச்செய்தது. மகா வித்துவான் என்னும் தனிப்பட்டத்தோடு வாழ்ந்த ஸ்ரீ மீனுட்சிசுந்தரம்பிள்ளை அவர்களை இந்த ஆதீனமன்ருே! உலகிற்கு உதவியது. அப்புலவர்க்கும் அவர் மாணுக்கர் பலருக்கும் திருவருளோடு கலந்து நல்லுணவும் பொன்னுடையும் மற்றும் வேண்டும் நலம் பலவும் நல்கி ஆதரித்த கீர்த்தி இத்துறைசை மடத்திற்கே உரியது. தமிழ்க்கிழவர், உ. வே. சுவாமிநாதையருக்குந் தாயகமாய்இலங்கியது. இத்திருமடத்திலிருந்து தான் பண்டும், சிவ ஞானபோதத்திற்குச் சிற்றுரைகளும் திராவிட மாபாடியமும், சிவஞான சித்தியார்க்குப் பொழிப்புரையும் பிற மெய்கண்ட நூல்களின் உரை பலவும் வெளிவந்தன. இன்னும் இம் மகா சந்நிதானம் அவர்கள் நூற்றுக்கணக்கான நூல்களுக்குமேல் ஆதீன இலவச வெளியீடுகளைச் சைவ உலகிற்கு வழங்கியிருக்கின்ருர்கள். இவர்கள் பீடத்திற்கு வந்து சில ஆண்டிற்குள் பல மாநாடுகள் நிகழ்த்தப் பெற்றன. திருமந்திர மகாநாட்டுக்கும் பேரறிஞர்களின் தலைமையில், அன்பர் பலரின் சொற்பொழிவுகளுடன் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருப்பது மிகப் பாராட்டத் தக்கது.

இம்மாநாடு, நன்கு நிறைவுற்றுச் சிறந்து விளங்குக. இத்திருமந்திரம் தூய நிலையில் நன்மக்கட்குப் பயன்படுக. சைவத் திருமுறைகளும், சைவ சித்தாந்த சாத்திரங்களும் உலகிற் பரவித் திருவருள் வாழ்க்கை ஓங்கி வளர்தற்கு இத்திருமந்திர மாநாடு சிறந்ததொரு சாதனமாகத் திகழ்க.

பின்னர் அன்று மாநாட்டுத் தலைமை தாங்க இருந்த சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை உடல் நலம் சரியில்லாததினுல் வரமுடியாது போனதன் காரணமாக ஆதீன மகாவித்வான் ஆறுமுக நாவலரவர்கள் தலைமை தாங்கித் தனது பேருரையை நிகழ்த்தினுர்கள். அவர்கள் கூறியதின் சாரமாவது :—

"ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளின் குரு பரம்பரையில் திரு அவதாரம் செய்துள்ளவரும், இங்கே சைவச் செந்நெறி தழைக்க இடையருது உழைத்து வருபவருமான ஸ்ரீ–ல–ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய குரு மகா சந்நிதானத்தின் பொன்னுர் திருவடிகளுக்கு வணக்கத்தைச்செலுத்திக்கொண்டும், இங்கே வந்துள்ள பெரியவர்களுக்கும், தாய்மார்களுக்கும் வணக்கத்தைச் செலுத்திக்கொண்டும் எனக்கிட்டுள்ள கட்டளையை நிறைவேற்றத் தொடங்குகின்றேன். இம்மாநாட்டுக்குத் தலைமை தாங்கும் தகுதி எனக்கு இருக்கின்றதோ இல்லையோ குரு பீடத்தில் அமர்ந்துகொண்டு சைவச்செங்கோல் ஓச்சி வரும் திருக்கைலாயபரம்பரையில் வந்துள்ள குருமகா சந்நிதானம் எனக்குத் தலைமை தாங்கக் கட்டளையிட்டவுடனேயே எல்லாத் தகுதியும் எனக்கு வந்துவிட்டதாக நான் கருதுகின்றேன்."

"திருவாவடுதுறை என்ற க்ஷேத்திரமே பல்வகையாலும் சிறப்புற்று விளங்குகின்றது. சைவசமயத்திற்கு இடையருது தொண்டாற்றி வரும் இந்த மடாலயம் தொன்மையுடையது. சைவசமயத்திற்கு மிகவும் சிறந்ததொரு நூலாகச் சிறப்புற்று விளங்கும் திருமந்திரம் என்ற தமிழ் மூவாயிரத்தை அளித்த திருமூலதேவரும் மூவாயிரம் ஆண்டுகள் யோகத்தில் அமர்ந்திருந்ததும் இந்தத் திருவாவடுதுறையில்தான். உலகெல்லாம் போற்றிப் பாராட்டப்படவேண்டிய திருமந்திரம் என்ற தமிழ் மூவாயிரத்தை அருளிச்செய்த திருமூலதேவருடைய விழாவை இப்படிப்பட்ட சிறப்பான முறையில் இதுகாறும் கொண்டாடும் வாய்ப்பு சைவ உலகத்திற்கே ஏற்படவில்லை. நமது 21-வது சந்நிதானமாக சைவச்செங்கோல் ஓச்சுகின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாச்சாரிய சுவாமிகளது திருவுள்ளத்தில் தான் முதன்முதலாகத் திருமூலதேவரின் திருமந்திரப் பெருமையை உலகுக்கெல்லாம் எடுத்து விளக்குகின்ற ஒரு பெரிய மகாநாட்டைக் கூட்டுகின்ற எண்ணமே தோன்றியது எனலாம். அவர்களது உள்ளக்கருணையை நாட்டு மக்கள் நிச்சயம் பாராட்டுவார்கள்."

மேலும் அவர் குறிப்பிடுகையில் மக்களின் உள்ளத்தில் பலபல சந்தேகங்கள் எழுகின்றன என்றும், அவைகளைச் சரியான முறையில் நீக்குவது அவசியம் என்றும் தெரியாதவர்கள் தங்களுக்குத் தெரியாதவற்றை நன்கு தெரிந்தவர்களிடம் கேட்கவேண்டுமென்றும் இதைப்பற்றித் திருமூலதேவர் என்ன கூறியிருக்கிருர் என்று பார்ப்பதும் அவசியம் என்ருர்.

"குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக்
குருடும் குருடும் குழிவிழுமாறே"

என்பதாகத் திருமூலர் பாடியிருக்கிருர் என்றும், அறியாமை இருளை யாரால் போக்க முடியும் என்று தேடி அலைந்து கடைசியில் ஞானப்பிழம்பாய் விளங்கும் சரியான குருவை அடையாமல் ஒரு குருடன் தனக்கு வழி காட்ட ஒரு குருடனையே தேடிப்பிடித்துக் கொண்டு கடைசியில் இந்தக் குருடனும், வழிகாட்டிய குருடனும் குருட்டாட்டமாகக் குழிவிழுந்தவாறு, மக்கள் பலர் அழிகிருர்கள் என்றும் சொல்லி, அம்மாதிரி நாமும் குழியில் விழுந்து அழியாதிருக்கவேண்டுமே யென்ற பெருங்கருணையை உள்ளடக்கித் தான் ஈசனது திருவருள் ஞானம்பெற்ற ஸ்ரீநமச்சிவாய மூர்த்திகளின் மரபில் வந்துள்ள நமது 21-வது குருமகாசந்நிதானம் திருமந்திர மகாநாட்டைக்கூட்டி நம்மையெல்லாம் ஆட்கொண்டு விட்டார் போலும் என்று தான் கருதுவதாகவும் குறிப்பிட்டார்.

திருமூலதேவர் வாழ்ந்தகாலம், அவர் தங்கிய இடம், அவர் காலத்திலிருந்தவர்கள் எல்லாம் அவர் வாய்ப்பாடலாகவே நம்மால் அறியமுடிகிறது என்றும், வேதாகமங்கள் எல்லாம் சர்வேஸ்வரனுன சாட்சாத் பரமேஸ்வரனிடமிருந்தே இந்த உலகுக்குக்கிடைத்தன என்பதும், சிவபெருமானே தமிழில் வேதாகமங்கள் இயற்றித்தருவான் வேண்டி அவதாரம் செய்தார் என்றும் குறிப்பிட்டார். நந்திதேவரையே குருவாகக்கொண்டு கைலாயபதியின் அருளினுல் திருமந்திரமாக ஆகமங்களைத் திருமூலர் எழுதினுர் என்றும், கைலாய பரம்பரையில் வந்துள்ள குருமகாசந்நிதானம் அதை உலகுக்குப் பரப்ப மகாநாடு கூட்டிய திருவுள்ளத்தையும் நினைக்கும் போது பெரிதும் வியப்படைவதாகவும் கூறினுர். மேலும் அவர் கூறியதாவது ;—

"திருமூலர் யார்? அவர் ஒரு ஆயர்: மாடு மேய்க்கிறவர். அவர் ஒரு நாள் மாடுகளை மேய்த்துக்கொண்டு நிற்கிருர். யமன் அவர் உயிரை எடுத்துப்போய்விட்டான். அவரது சவத்தைச் சுற்றிச் சுற்றி மாடுகள் வருகின்றன. முகர்ந்துபார்க்கின்றன, அம்மா! அம்மா! எனப் பிரிவு தாளமாட்டாமல் விம்முகின்றன. வளர்பிறை தாங்கும் முக்கண்ணுடைக்

கடவுள் கைலாயபதி அந்தப் பசுக்களின் பரிதாப நிலைமையைப்பார்த்து மனம் இளகிஞர். அவர் உள்ளத்திலே அருள்வெள்ளம் சுரந்தது. இந்த ஆயன் உயிர்பெற்று எழுந்தாலன்றோ? இந்தப்பசுக்களின் துயரம்நீங்கும் என்று எண்ணியவராய் ஆயன் உடலில் போய்ச்சேர்ந்தார். இது சாத்தியமா? சார்! என்று ஒருவன் கேள்வி போடுகிருன். நமக்கு எதுவும் சாத்தியமில்லை. மேலை நாட்டான் இது சாத்தியம் – அது சாத்தியம் எனச் சொல்லியபின் தான், "ஆமாம் சாத்தியம்", என ஒத்துக் கொள்வது நம் நாட்டு வழக்கமாகிவருகிறது. அந்தக்காலத்தில் உடலை ஸ்தூலம், சூட்சுமம் என இரண்டாகப் பிரிப்பது சாத்தியமாக இருந்தது. அப்படித் தனது ஸ்தூலஉடலையும், சூட்சுமத்தையும் தனித்தனியாகப் பிரித்து ஆயன் உடம்பில் போய்ப் புக ஆயன் எழுந்திருந்தான். மாடுகள் சந்தோஷம் அடைந்தன, அவைகளை, வீடுகள் நோக்கி ஓட்டிக் கொண்டு வந்தார். தன் நாயகனைக் காணுமே என வருந்திக்கொண்டிருந்த அவன் மனைவி ஓடோடியும் வந்து ஏன் நேரமாகிவிட்டது? என அவன் உடலைத் தொட்டுக் கேட்டாள். அந்தப் பெண் தொட்டவுடன் பரமேஸ்வரனுக்கு ஒரு ஷாக் அடித்தது. பசுக்களின் பரிதாபம் நீக்கவன்றோ! இந்தக் காரியம் செய்தோம். இந்தப் பத்தினிப் பெண்ணிடம் நாம் அகப்பட்டுக்கொண்டோமே என எண்ணியவர் யாதும் பேசாமல் ஓடிஞர். மூலன் மனைவியும் அவன் பின்னே ஓட, அதற்குள் அவர் திருவாவடுதுறைக் கோயிலை அடைந்து பிரகாரத்திலிருந்த மரப்பொந்தில் தவத்தில் உட்கார்ந்துவிட்டார். மூலன் மனைவியோடு ஊராரெல்லாம் அவரைப் பார்க்க, அவர் தவ யோகம் கண்டு, இவர் சாதாரணமானவர் அல்லர். இவர் ஒரு கைலாயச்சித்தர் எனச் சொல்லி அவர் நிட்டை கலைக்காது விட்டகன்ருர்கள். அவர் அம்மரத்தடியில் மூவாயிரம் ஆண்டுகள் தவம் இருந்து உலகம் உய்ய, சைவம் தழைக்க, "தவமால் பிரமீசர் தம்மில் தாம் பெற்ற நவாகமம் எங்கள் நந்தி பெற்ருனே," என்பதாக ஒன்பது ஆகமங்களின் சாரத்தை ஒன்பது தந்திரங்களாக மூவாயிரம் ஆண்டுகள் தவம் இருந்து ஆண்டுக்கொரு பாடலாக எழுதிவைத்தார். அதன்பெருமை அளவிடற்கரியது."

மேலும் அவர் தருமபுரம் ஆதீனத்து வாழ்த்துரையைப்பற்றிச் சொன்னதாவது:—"நமது திருவாவடுதுறை ஆதீனத்தில் நடைபெற்று வருகின்ற திருமந்திர மாநாட்டைப்பாராட்டித் திருக்கைலாய பரம்பரையில் வந்தவரும், இருபத்தொன்ருவது சந்நிதானமாக விளங்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாச்சார்ய சுவாமிகள் இந்தத் திருமந்திர மாநாட்டைக் கூட்டினமைக்காக அவரையும் பாராட்டி ஸ்ரீ மாணிக்கவாசக ஸ்வாமிகள் மூலம் அனுப்பிவைத்திருக்கும் வாழ்த்துரையை நீங்களெல்லாம் கேட்டீர்கள். அந்த வாழ்த்துரையில் திருமந்திரத்தின் அருமையான பகுதிகளெல்லாம் திருமந்திரத்தின் ரசம் போல் பிழிந்து கொடுக்கப்பட்டிருக்கிறது. சைவப்பரம்பரையில் வந்த யாரும் இது மாதிரியான மாநாட்டைக் கூட்டினது இல்லை. ஆகவே, துறைசை மகாசந்நிதானத்தின் திருவுள்ளத்தைப் பாராட்டாமல் யாருமே இருக்க முடியாது.இம்மாநாட்டையொட்டிக்கயிலாய சித்தர் உரையுடன் திருமந்திரம் வெளியீடு வெளிவருகின்றது. மேலும் சொந்தத்திலேயே அச்சகம் ஒன்று நிறுவ ஏற்பாடாகியிருக்கிறது". "சிவஞான பாஷ்யமும்" வெளியிட உத்தேசித்திருப்பது பற்றி நான் மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்கிறேன். இதைப் போல சைவத்திற்கேஉறுதுணைபோல் விளங்கியிருக்கின்ற பல நூல்களையெல்லாம் வெளியிட மகாசந்நிதானத்தார் திருவுள்ளம் கொண்டிருப்பது தமிழகத்தின் அதிர்ஷ்டம் தான்"

மேலும் அவர் நாஸ்திகத்தைப் பரப்புபவர்கள் விநாயகர் உடைப்பு இயக்கம் நடத்தியதைப்பற்றிக் குறிப்பிட்டுக் கூறியதாவது:— "விநாயகர் தமிழ்க்கடவுள் இல்லையென்றும், விநாயக பூசை தமிழ் மரபை ஒட்டி வந்தது அல்ல என்றும் பலர் பேசக்கேட்கிருேம்.

சைவ சமயத்தார்களுக்குத் திருமூலரைப் பற்றி நன்கு தெரியும்; அவர்கள் காலம் எது? என்றும் ஆராய்ந்திருப்பார்கள்.

" நந்தி அருள்பெற்ற நாதரை நாடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே, "

என்ற திருமூலதேவரது வாய்வழி வந்த அகச் சான்றுப்படியே, அவர் பதஞ்சலி, வியாக்கிர மர் காலத்தவர் என்று அறிகிகிருேம். இவர் களுடைய காலம்; அதாவது கி.மு. 6000 ஆண்டுகளுக்குமுன் என்பது ஆராய்ச்சியாளர் கண்ட முடிவு.

மேலும்கூட, "ஓதும் எழுத்தோடு உயிர்க் கலை மூவைந்து ஆதி எழுத்தவை ஐம்பதோ டொன்றென்பர்", என்னும் பாட்டைக் கொண்டும் தமிழ் மொழிக்கு 51 எழுத்துக்கள் உள்ள காலத்தில் அவர் படித்தவர் என்ருல் அதுதான் இடைச்சங்க ஆரம்ப காலமாகும். இடைச்சங்க காலத்தை கி.மு. 6805 முதல் கி.மு. 3105 வரை என்று நிர்ணயித்திருக்கிருர் கள். ஆகவே கிட்டத்தட்ட திருமூலரது காலம் எண்ணுயிரம் வருஷங்களுக்கு மேற்பட்டது. எண்ணுயிரம் வருஷங்களுக்கு முன் உலகம் புல் பூண்டு மயமாக இருந்ததே தவிர உலகில் மனிதர்களே கிடையாது என்று யாராவது மேலைநாட்டான் சொன்னவுடனே நம்மடவர் நம்பி இதெல்லாம் பொய் எனக்கூடச்சொல் வார்கள். (சிரிப்பு) நம் கணக்குப்படி எண்ணு யிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயிருந்து தமிழாகமக்கடலாக விளங்கும் திருமந்திரத் தை எழுதித்தந்த திருமூலதேவர் தனது நூலுக் குக் காப்பாக,

" ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில்வைத்தடி போற்று கின்றேனே",

என்பதாக விநாயகப்பெருமானைப்பற்றிப்பாடி யிருக்கிருர் என்ருல் விநாயக பூசையென்பது தமிழ் நாட்டிற்கு இன்று நேற்று வந்த வழக்கமா ? என்பதை நீங்களே அறிந்து கொள்ளுங்கள். ஆகவே ஒவ்வொரு தமிழ னும் முதலில் வணங்கவேண்டிய கடவுள் விநாயகப் பெருமான் என்பதை மறந்துவிடக் கூடாது," என்ருர்.

"ஒரு கூட்டத்திலே ஒருவன் எழுந்திருந்து "அன்புக்கும், சிவனுக்கும் என்ன சார் சம்பந் தம்?" என்று என்னைக்கேட்கிருன். இவன் தமிழனு? அல்லது தமிழ்மரபில் வந்தவனது பேச்சைப்போலா இருக்கிறது?

நமது திருமூலதேவர் சொல்லுகின்ருர்.

" அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே"

என்று எவ்வளவு அழகாக, தெள்ளத்தெளிய, அறிவில்லாதவர்கள் அன்பும் சிவமும் ஒன்று என்று அறிந்துவிட்டால் பின்னர் ஏதும் பேசாமல் அன்பே சிவமாய் அமர்ந்து விட மாட்டரோ", என்றும் குறிப்பிட்டார்.

மேலும் திருமூலர் படிப்படியாக அருள் ஞானம் பெறுவதற்கு முன்னர் நெறிகளை யெல்லாம் பற்றிச் சொல்லியிருக்கிருர் என் றும், கருணைமூர்த்தியாகிய சிவபெருமான் தன்னை நிந்திப்பவர்களையும் ஆட்கொண்டா ரே அன்றித் தள்ளுவது கிடையாது என்றும், அப்படிப்பட்ட பெருமான் எழுந்தருளியுள்ள கோயிலிலுள்ள ஒரு கல்லைப் பெயர்த்து எடுத்துவிட்டாலும்கூட அரசன் அழிவான், வேதியன் அழிவான், உலகமே அழியும். இது விண்ணவன் ஆணை எனத்திருமூலதேவர்,

" கட்டுவித் தார்மதிற் கல்லொன்று வாங்கிடில்
வெட்டுவிக் கும்அபி டேகத் தரசரை
முட்டுவிக் கும்முனி வேதிய ராயினும்
வெட்டுவித் தேவிடும் விண்ணவன் ஆணையே "

என்ற பாட்டில் குறிப்பிட்டிருப்பதையும் சுட்டிக்காட்டித் தற்காலத்தில் பல சிவாலயங் கள் இடிந்து விழுந்துகொண்டிருக்கின்றன என்றும், அவைகளைப் புனர் நிர்மாணம் செய்யவில்லையானல் இந்த நாடு அழிவை நோக்கித்தான் போகும் என்றும் சொன்னுர்,

மேலும் சில கோயில்களில் பூசையே நடப்பதில்லை யென்றும், சாமிமேல் போட்டிருக்கும் வத்திரம் எவ்வளவு நாளாயிற்றோ? தெரியாது எடுக்கப்படாமல் இருப்பதாயும், எண்ணெய்ப்பசையில் ஒட்டிக்கொண்டுள்ள அந்த சுவாமியின் துணியை நீக்கப்போனால் அந்தத் துணி தூள் தூளாகக் கையுடன் வந்துவிடுமென்றும் சொல்லி,

*" முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்*
*மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றுங்*
*கன்னங் களவு மிகுத்திடுங் காசினி*
*என்னரு நந்தி எடுத்துரைத் தானே"*

என்பதாகத் திருமூலதேவர் கூறியுள்ள பாட்டையும் சான்றாக எடுத்துக்காட்டினார்.

மேலும் தான் ஓரிடத்தில் இப்படி நாட்டில் சிவபூசைகள் நடக்காது போய்க்கொண்டிருப்பதன் காரணமாக மழையில்லை, வறுமை அதிகமாகிறது. நாடும் அமைதியின்றித் தவிக்கிறது என்று சொல்லும்போது ஒரு பையன், "சிவபூசை செய்யும் நீங்கள் ஒருவர் இருக்கையில் உங்களுக்காகவாவது ஏன் மழை பெய்யக்கூடாது" என்று கேட்டதாகவும், தன் போன்ற சிலர் இருப்பதால்தான் குடிக்கவாவது தண்ணீர் கிடைக்கிறதென்றும், இல்லாவிட்டால் நாடு சகாராவாகியிருக்கும் என்று சொன்னதாகவும் சொன்னவுடன் பலத்த சிரிப்பு எழுந்தது.

பின்னர் அவர் காலம் மாறிக்கொண்டு வருகிறதென்றும், மக்களின் மனம் கடவுள் பால் இழுக்கப்படுகிறது என்றும், அதற்குத் துறைசை ஆதீன மகாசந்நிதானம் இடைவிடாது நடத்திவரும் பிரசாரங்களும் ஓரளவு காரணமாகும் என்றும், கடவுளும் மனமிரங்கி மழை பொழிய ஆரம்பித்திருப்பது நாட்டின் நல்ல எதிர்காலத்தைக் காட்டுவதாகவும் சந்தோஷம் தெரிவித்துக்கொண்டார்.

இரண்டாம்நாள் மகாநாட்டுக்குத் தலைமை வகித்த பழனி வேத சிவாகம பாடசாலை சித்தாந்த சரபம் சித்தாந்த மஹாமஹோபாத்தியாய சிவஸ்ரீ ஈசான சிவாசாரியர் அவர்கள் தனது பிரசங்கத்தில் ஒவ்வொரு சமயத்திற்கும் சாஸ்திரமும், தோத்திரமும் மிகவும் இன்றியமையாதது என்றும் சைவ சமயத்திற்குத் திருமந்திரம் சாஸ்திரமாகவும், தோத்திரமாகவும் அமைந்துள்ள ஒரு சிறப்புவாய்ந்த நூல் என்றும் மேலும் திருமுறைகளுள் பத்தாம் திருமுறையாகவும் அது அமைந்து சிறப்புப் பெற்றுள்ளது என்றும் கூறினார். மேலும் திருமூலதேவரைப் பற்றி நாம் அறிந்து கொள்வதற்குப் பெரிய பெரிய அநுபூதிமகான்கள் எழுதி வைத்திருக்கும் பாடல்கள் பெரிதும் பயன்படும் என்றும் சமயாசாரியார்களுடைய வரலாறுகளையெல்லாம் கூறிய சேக்கிழார் பெருமான் இவரை ஒரு கைலாயசித்தர் என்பதாக அதாவது சாட்சாத் பரமேஸ்வரனுடைய அவதாரம் என்பதாகக் குறிப்பிடுகிறார் என்றும்,

*" எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்*
*ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்*
*நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்"*

என்பதாக திருஞானசம்பந்தப் பெருமானுக்கு எம்பிரான் என்ற அடைமொழியைக் கொடுத்தவர் திருமூலருக்கு நம்பிரான் என்ற சிறப்பு மொழியைக் கொடுத்துச் சிறப்பித்துள்ளதும் நம்பி ஆரூரர் அருளிய திருத்தொண்டத்தொகையில் கவனிக்கத்தக்கது என்று குறிப்பிட்டார்.

சேக்கிழார் பெருமான் திருமூலதேவர் என்ற பெயரை பின்னால் உபயோகித்திருந்தும் கூட முதலில் அவரை கைலாய ஒரு சித்தர் என்று குறிப்பிட்டிருப்பது கவனிக்கத்தக்கது என்றும், வேதங்களும் ஆகமங்களும் வடமொழியில் இருந்தனவற்றைத் தமிழிலே ஆக்குவதற்காகவே சர்வேஸ்வரனாக சாட்சாத் பரமேஸ்வரன் இவ்வுலகில் அவதாரம் எடுத்தார் என்று கொள்ள வேண்டியதையே அப்படிச் சொன்னதாக எண்ணவேண்டுமென்றும் குறிப்பிட்டார். அவர் விதிவசத்தால் பிறவி எடுக்கவில்லையென்றும். மூலன் என்கிறவன் இறந்தபின் அவன் உடலில் புகுந்து கொண்டதால் அதனை அவனாகவும் கொள்ளமுடியாது. அவனது வினைகள் அவன்

இறந்தவுடன் அவனுடனே அழிந்துவிடுகின்றன. எஞ்சியுள்ள உடல் அழிக்கப்படவேண்டிய தாகையால் அதற்குள் இவர் புகுந்தது புதுப் பிறவிபோல்தான் என்றும் ஆகவே உலகுக்கு நன்மை செய்வான் வேண்டியே கயிலாயபதி அவதாரம்எடுத்துள்ளார் என்றும். அதே கயிலாய பரம்பரையில் முத்தி பஞ்சாக்கர தேசிகர் என அழைக்கப்பட்டு, ஞானபானுவாய் விளங்கும் ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளின் மரபில் வந்திருக் கும் நமது குருமகாசந்நிதானம் திருமந்திரத்தை உலகிற் பரப்புவான் மகாநாடு கூட்டியதுபற்றிச் சந்தோஷம் தெரிவித்தார்.

*" தவமால் பிரமீசர் தம்மில் தாம்பெற்ற*
*நவஆ கமம் எங்கள் நந்தி பெற்றனே ",*

என்ற பாடலைக் கொண்டு ஒன்பது ஆகமங்களை திருமந்திரத்தில் ஒன்பது தந்திரங்களாக எழுதி இருப்பதினுல் ஒன்பது ஆகமங்கள்தான் மொத் தம் இருக்கின்றனவோ என்று யாரும் எண்ணி விடக்கூடாது என்றும், தற்காலத்திலும் 28 ஆகமங்கள் அமுலில் இருந்துகொண்டிருக்கின் றன என்றும். 28 ஆகமங்களிலும் மிகச் சிறப் பாகத் தோன்றிய ஆகமங்களை இறைவன் திரு வருளை அடைவான் பொருட்டு படிப்படியாக ஒன்பது தந்திரங்களாக விளக்கியுள்ளது கவ னிக்கத்தக்கது என்றும் குறிப்பிட்டார். யோக சாஸ்திரத்தைப் பற்றி வெகு அழகாகக் குறிப் பிட்டிருக்கிறார் என்றும், ஞானயோகத்தைப் பற்றிப் பேசுகின்ற ஒரு வடித்தெடுத்த செம் பொருள்தான் திருமந்திரம் என்றும் வேதாகமங் களின் முடிவே திருமந்திரத்தின் ஆரம்பம் என் றும். வேதாகமங்களினுல் கடைசியாகக் கண்டு பிடிக்கப்பட்ட ஒரு முடிவைத் தனது நூலின் ஆரம்ப அடியாகக் கொண்டு அதற்குமேல் ஞானயோகத்தைப்பற்றியும், ஞானனந்தத்தைப் பற்றியும் பேசுகின்ற திருமந்திரம் சைவத்திற் கே அஸ்திவாரம் என்றும் அதை உலகில் பரப் புவான் வேண்டித் துறைசை ஆதீன குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகபர மாச்சார்ய சுவாமிகள் இந்தத் திருமந்திர மகா நாட்டைக் கூட்டியது பெரிதும் பாராட்ட வேண்டிய விஷயம் என்றும் கூறினர்.

திருமந்திரத்தின் முதல் தந்திரத்தைப் பற்றி காஞ்சீபுரம், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் க. வச்சிரவேல் முதலியாரவர்கள் திரு மந்திர மன்றத்திலே எழுந்தருளியிருந்த குருமகா சந்நிதானத்தின் பொன்னர் திருவடிகளுக்கு வணக்கம் செலுத்திக்கொண்டு பேச ஆரம்பித்தார்கள்.

**முதல் தந்திரம்**

அவர் தனது விரிவுரையின் முதலில் சைவ சமயத்திற்குத் திருவாவடுதுறை ஆதீனம் செய்துவரும் தொண்டு அவர்போன் ரேரால் அளவிடற்கரியது என்றும் திருமந்திர மகாநாட்டு வெளியீடாகக் கயிலாயசித்தர் உரை யுடன் திருமந்திரம் வெளியிட்டிருப்பது மிக வும் பாராட்டப்படவேண்டிய விஷயம் என்றும் குருமகா சந்நிதானத்தின் கருணையினுல் சிவ ஞான பாஷ்யம் சீக்கிரத்திலேயே வெளிவரப் போவது கேட்டு மிகவும் அகமகிழ்வதாகவும் குறிப்பிட்டார்.

திருமந்திரத்தில் அடங்கிய கருத்துக்கள்யாவும் தன்போன்ற சாதாரண மக்களுள்ளத்தில் இருக் கின்ற யான் எனது என்ற செருக்கையும், மும் மலத்தையும் ஒழித்து இறைவனது திருவருட் தன்மையை பெறுவதற்கான வழிகளையெல்லாம் பசுக்களாகிய ஆன்மாக்களுக்குப் படிப்படியாக விளக்கும் ஒரு பெருமையைப் பெற்றிருக்கிறது என்றும் குறிப்பிட்டார்.

மேலும் அவர் திருமந்திரம் மிகவும் பழமை யானதொரு நூல் என்றும் அதை ஆக்கிய திருமூலதேவர்

*" சேர்ந்திருந்தேன் சிவ மங்கைதன் பங்கனைச்*
*சேர்ந்திருந் தேன்சிவ னவடு தண்டுறை*
*சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலிற்*
*சேர்ந்திருந்தேன் சிவன் நாமங்கள் ஓதியே"*

அவர் இந்த திருவாவடுதுறையில் உறைந் துள்ள சிவபெருமானை துதித்துக்கொண்டு மூவாயிரம் ஆண்டுகள் தவமிருந்தார் என்பது தெரியவருகிறது என்றும், எண்ணிலி கோடி ஆண்டுகள் இராப்பகல் அற்ற இடத்தே நந்திதேவ ரின் இணையடிக்கீழே தவமிருந்து அவர் எழுதிய

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"

என்ற பாடலைக்கொண்டு வேதாகமங்களை தமிழில் எழுதுவான் வேண்டி இறைவன் இவருக்கு அருள் புரிந்ததும் அதன் வாயிலாக அவர் ஆண்டுக்கொரு பாடலாக திருமந்திரத்தை அருளினார் என்பதும் தெரியவருகிறது என்று குறிப்பிட்டார்.

பின்னர் திருமூலதேவர் வரலாற்றை எடுத்துச் சொல்லி, திருமந்திரத்திலே சொல்லப்பட்டிருக்கும் கருத்துக்கள் எப்படி மிக உயர்ந்தனவோ அப்படியே அதில் சொல்லப்பட்டிருக்கும் உவமைகளும் கூட மிக உயர்ந்தன என்றும்,

"சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதியிற் சுடுமாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்றமலங்களே"

என்பதாக உலகத்திலுள்ள சகல ஜீவாத்மாக்களையும்பற்றியிருக்கிற மும்மலத்தையும், ஜீவாத்மாக்கள் குருமகாசந்நிதானத்தை அடைந்துவிட்டால், சூரியகாந்தத்தின் சந்நிதியில் பஞ்சு தீய்ந்துவிடுவதுபோல எல்லாம் தானே பொசுங்கிவிடுகின்றன என்று காணப்படும் உவமையையும் பாராட்டினார்.

திருமந்திரத்தில் பாயிரமாக 112 பாடல்கள் இருக்கின்றன என்றும், பாயிரத்துக்கு முன்,

"ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே"

என்பதாக விநாயகர் காப்புப் பாடல் உள்ளது என்றும் குறிப்பிட்டார். காப்புக்குப் பின் ஒன்பது தந்திரங்களுக்கும் முதலிலே வைக்கப்பட்டிருக்கும் கடவுள் வாழ்த்து என்ற பகுதியில்,

'ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந்தானுணர்ந்தெட்டே"

என்றபாடல் உள்ளது என்றும், அதன் கருத்தே புத்தகத்தின் சாரமெல்லாம் என்று கூடச்சொல்லலாம் என்றும் குறிப்பிட்டு அதன் கருத்தை விளக்கினார். அதாவது, உலகத்திற்கெல்லாம் தலைவனாக விளங்குகின்ற சர்வேஸ்வரன் முதல்வன் தன் உண்மையில் ஒன்றாக உளன் :

உயிர்களுக்கெல்லாம் நன்மையைத் தருகின்ற அவன் இனிய திருவருள் மறைப்பாற்றல், அருளாற்றல் என இரு வகையாக உள்ளது.

பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மும்மூர்த்திகளில் தன் அதிகார சக்தியை வைத்து உலகை அவனே நடாத்துகிறான். அதனாலேதான் அப்பர் பிரான் "மூன்று மூர்த்தியுள் நின்றயருந்தொழில் மூவிலைச் சூலத்தான்" என்றார்.

அறம், பொருள் இன்பம், வீடென்ற நான்கு உறுதிப் பொருள்களையும் அவனே அமைத்தான்.

அவற்றின் இயல்பை உணர்த்துவதற்குத் தவக்கோலத்தினனாயிருக்கையில் புலனைந்தும் வென்றவனாக உளன். இப்படியாக ஐந்து பொறிகளையும் வென்ற அவன் ஆறு ஆக விரிந்தனன் என்றார். அதாவது வன்னம், பதம், மந்திரம், கலை, தத்துவம் புவனம் என்னும் ஆறாக விரிந்துளன். "ஏழும்பர்ச் சென்றனன்", என்பதினால் அவன் எழுலகங்களையும் கடந்து நிற்கின்றான் என்பது புலனாகிறது என்றும், அவரே எட்டு திசைகளையும் தான் உணர்ந்தவனாய் சிவாக்ஷரியாகவும் உளன் என்றும் இப்படிக் கடவுள் வாழ்த்து என்ற பகுதியில் இறைவனைத் தொழுவார்க்கே அவன் அருள்வான் என்பதை உறுதி செய்தல்போலும் வாழ்த்தல் என்னும் மரபை ஒட்டியும் கடவுள் வாழ்த்து என்ற பகுதியை முதலில் வைத்து இருவகையிலும் நமக்கு உணர்த்துகிறார்.

திருமந்திரத்தின் முதல் தந்திரத்தில் 124 பாடல்கள் உள்ளன: அதனை 24 பகுதிகளாகப்

பிரித்திருக்கிருர்' என்றும், முதல் தந்திரம் காரணுகமத்தின்சாரம் என்றும், முதல் தந்திரத்தின் முதற்பகுதி உபதேசம் என்றுள்ளது என்றும், இதில் 30 மந்திரங்கள் அடங்கியுள்ளன: இது நூலின் இலக்கியப்பொருளைத் தொகுத்துக்காட்டுகிறது. ஞானத்தின் இப்பயனைத் துரிய அருணிலையில்வைத்துப்பரமானந்த போதத்தாண்டவம் எனப்படும் அம்பலவாணர் அருட்கூத்தின்மேல் வைத்துக் கூறுகின்ருர் என்றும், அம்பலக்கூத்தன் குருவாக வந்து தீக்கைசெய்து புனிதனுக்கி பரமானந்த போதத்தாண்டவத்தைக்கண்டு உணர்வின் நேர்பெறவரும் சிவபோக நுகர்ச்சி நிலையில் வைத்தருளி நின்ருர் என்பது இவ்வதிகாரத்தின் பிழிவு என்றும், ஞானநெறிக்கு அடிப்படையாகிய ஒழுக்கநெறியை உணர்த்துகின்ருர் என்றும் குறிப்பிட்டார்.

ஒழுக்க நெறியாக கொல்லாமை, புலால்மறுத்தல், பிறர்மனை நயவாமை கள்ளுண்ணுமை இவைகளைச்சொல்லி, அன்பேசிவம் என்பதை அன்புடைமை என்ற பகுதியில் சொல்லி, கல்வி ரொம்பவும் அவசியமாகும். கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன் என்றும்,

"கற்றறிவாளர் கருத்திலோர் கண்ணுண்டு எனச்சொல்லி,

*" பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்*
*முற்றது எல்லா முதல்வன் அருள்பெறில்*
*கிற்ற விரகிற் கிளரொளி வானவர்*
*கற்றவர் பேரின்பம் உற்று நின்ருரே ",*

என்ற உண்மையைத் திருமூலதேவர் உலகுக்குச் சொல்லியிருக்கிருர் என்றும் குறிப்பிட்டார்.

அன்புடைமை என்ற பகுதிக்கு முன்னதாக, "அறம் அறியார் அண்ணல்பாதம் நினையுந்திறம் அறியார்", ஆதலின் "ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்", என்று அறன் செய்யும்படியாக மக்களை அறைகூவி அழைக்கின்ருர் எனவும் குறிப்பிட்டார்.

கல்வி கற்ருல் மட்டும் போதாது. கற்றபின் அதற்குத்தக நிற்கவேண்டும். பாரபட்சமற்ற நடுவு நிலைமையில் நிற்கவேண்டும்.

*"நடுவு நின்ருர்க்கன்றி ஞானமும் இல்லை*
*நடுவு நின்ருர்க்கு நரகமும் இல்லை", எனச்சொல்லி*

*"நடுவு நின்ருர் நல்ல தேவருமாவார்*
*நடுவு நின்ருர்க்கு நரகமும் இல்லை",*

எனச்சொல்லி தன்போல் மற்றவரும் நடுநிலைமையில் நின்று வாழவேண்டுமென்று அறநெறி சொல்லியிருக்கிருர் என்ருர்.

கடைசியாக இறைவனது திருவருள் விலாசத்தைப் பெற விரும்புவோர் ஒழுக்க நெறியின் கண்ணே செயலாற்றி நிற்கவேண்டுமென வற்புறுத்துவான்போல் திருமந்திரத்தின் 9 தந்திரங்களில் முதல் தந்திரத்தில் ஒழுக்கத்தைப் பற்றியே வற்புறுத்தியுள்ளது எனச் சொல்லி எல்லா மக்களும் ஆன்ம ஞானம்பெற ஒழுக்க நெறியில் நிற்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்.

பின்னர் இரண்டாம் தந்திரம் பற்றி அண்ணுமலைப்பல்கலைக்கழகம் தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர் வித்வான் ஜி. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் விரிவுரையாற்றினுர்கள்.

**இரண்டாம் தந்திரம்**

அவர்கள் முதலில் குருமகா சந்நிதானத்திற்கும், பின்னர் சபையிலுள்ள மற்ற முனிபுங்கவர்களுக்கும், பெரியோர்களுக்கும் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு பேச ஆரம்பித்தார். அவர் பேச்சின் விவரமாவது :—" பெரியோர்களே ! பொதுவாக இன்றையதினம் நம்நாட்டு மக்களின் மனம் மேலை நாட்டான் எதைக் கண்டுபிடித்திருக்கிருனே அதையே பாராட்டும் வகையில் இருக்கிறது. மேலைநாட்டான் நீராவி இயந்திரம் கண்டுபிடித்தான். ரேடியோ கண்டுபிடித்தான். நீர்மூழ்கிக் கப்பல் கண்டுபிடித்தான் " என்பதாக அவர்கள் கண்டுபிடித்துள்ளவைகளுக்கு ஜாப்தா போடும் வழக்கம்தான் அதிகமாகிவிட்டது. நம்நாட்டவர்கள் ஒன்றையுமே கண்டுபிடிக்கவில்லை என்பதாக மிகவும் குறைபட்டுக்கொள்ளுகிருர்கள். ஆனுல், நம் நாட்டவர்கள் எதைக் கண்டுபிடித்திருக்கிருர்கள் என்பதைச் சிந்திக்க இவர்களுக்கு

ஆற்றல்கிடையாது. விஞ்ஞானத்துறையில் அதி வேகமாக முன்னேறிக்கொண்டிருக்கும் மேலே நாட்டார் கடைசியாகக் கடவுளை கண்டுபிடிக்கப் போகிறோம் என்று சொல்லுகிறார்கள். அக் கடவுளைத் தான் நம் நாட்டு மூன்று வயது குழந் தை கண்டுபிடித்தது. திருஞானசம்பந்தர் எதைக் கண்டுபிடித்தார் ? கடவுளைக் கண்டுபிடித்தார். கடவுளை மாத்திரம் அவர் கண்டுபிடிக்கவில்லை. தமிழ் மணம் அவர் மூக்கில் ஏறயேறத் திருமூல தேவர் எழுதி இந்த துறைசை மடத்தின் எல்லைக் குள்ளேயே புதைத்துவைத்துவிட்டுப் போன திருமந்திரத்தையும் அவர்தான் கண்டுபிடித்தார். ஒரு ஞானசம்பந்தர் இல்லாதிருப்பின் பூமியின் அகத்திலேயே இருந்திருக்கும் இந்தத் திருமந்திரம்.

சைவ சமயத்திற்கு ஆதார பீடமாய் இன் றையதினம் இலங்குவது பன்னிரண்டு திருமுறை கள் ஆகும். இவைகள் யாவும் சிவபெருமானால் திருவாய்மலர்ந்தருளப்பெற்றன.

பன்னிரு திருமுறைகளுள் திருக்கோவையார் நீங்கலாக முதல் ஒன்பது திருமுறைகளும் பதி னோராம் திருமுறையும் தோத்திரப்பாக்களாய் அமைந்துள்ளன. திருக்கோவையார் இறைவனுக் கும் உயிருக்குமிடையே நிகழும் இன்ப உணர்ச்சி யாடல்களை இயம்புகின்றது. பன்னிரண்டாம் திருமுறை நாயன்மார்களுடைய செயற்கருஞ் செயல்களையும் அவர் வரலாறுகளையும் எடுத்துக் கூறுகின்றது. எஞ்சி நிற்கும் பத்தாம் திருமுறை யாகிய திருமந்திரம் ஒன்றுதான். சாத்திர நூலா கத்திகழ்கிறது.ஆகவே பன்னிரு திருமுறைகளுள் திருமந்திரம் ஒன்றே சாத்திரமாகவும், தோத்திர மாகவும் திகழ்வதிலிருந்து அதன் பெருமையை யாவரும் உணரலாம். திருமூலர் வெறும் பாட் டுக்களை மட்டும் எழுதிக்கொடுத்த கவி அல்ல. மூவாயிரம் ஆண்டுகள் யோகம் செய்து அந்த யோகத்தினால், " நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் " என்ற பரந்த உயரிய நோக்கத் தைக் கொண்டு ஆண்டுக்கு ஒரு பாடலாக மூவா யிரம் பாடல்கள் எழுதித் திருமந்திரமாலையை தமிழ்த்தாய் கழுத்திலே கட்டிக் களித்த ஞானி. அப்படி மூவாயிரம் ஆண்டுகள் தனிமையில் தவ யோகம் செய்த ஞானியார், முத்திபெற்ற சிவயோக சித்தர். சைவ சமயத்தின் அடிப்படையும், சிவ தத்துவத்தையே உணர்த்தும் நெறியாகவும் விளங்கி வருகின்ற அதாவது "உடையானடியா ரடியாருடன் போய்க் கூடுதலே பேரின்பம்" என்றபடி தனது இரண்டாம் திருமந்திரத்தின் கடைசியில் பெரியாரைத் துணைக்கோடல் என்ற அதிகாரத்தை வைத்ததோடு,

*" அறிவார் அமரர் தலைவனை நாடிச்*
*செறிவார் பெறுவர் சிலர் தத்துவத்தை*
*நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்*
*பெரியாருடன் கூடல் பேரின்பமாமே "*

என்று பாடுகின்றார். வாழையடி வாழையாகப் பல பெரியார்களின் வழியில் வந்திருக்கும் நமது குருமகாசந்நிதானம் திருமந்திரத்தையும், திருமூல தேவரின் பெருமையையும் உலகில் பரப்பத்திரு வுள்ளம் கொண்டார் என்றால் இதற்குச் சான்று வேறு என்னவேண்டும்.

ஆங்கிலத்தில் சொல்வார்கள், " tell me your friends I will tell you who you are" என்பதாக. அதைப்போல நல்ல நண்பர்கள், நல்ல அறிவாளிகள், ஞானிகள் இவர்களுடன் தொடர்பு கொள்ளக்கொள்ளத்தான் நம் அறி வும் வளரும். ஆன்மஞானமும் எளிதில் பெற முடியும் என்று கருதியே, "பெரியாருடன் கூடல் பேரின்பமாமே" என்ற பொன்னுன உப தேசத்தை திருமூலர் நமக்கு அளிக்கிறார். நமது ஔவைப்பிராட்டியாரும் கூட, "சான்றோர் இனத்திரு" என்றுதானே நமக்குச் சொல்லிக் கொடுத்தார்கள்.

திருமூலதேவரின் திருமந்திரத்தின் இரண் டாம் தந்திரம் காமிகம் என்னும் ஆகமத்தின் சாரம் என்பார்கள். இது 25 பகுதிகளையும், 312 பாடல்களையும் கொண்டுள்ளது.

திருமூலதேவர் யார் ? அவர் ஆதிப்பெயர் என்ன ? என்றெல்லாம் ஆராய்கையில், ஒருவர்

*"தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்*
*சுந்தரன் ஆகமச் சொன்மொழிந்தானே"*

என்ற பாடலை அகச்சான்ருகக் காட்டி அவரது பெயர் "சுந்தரநாதர்", என்றிருக்கவேண்டுமென்கிருர். இன்ஞெருவர் அவர் தவம் செய்த இடம் இமாலயம். அவர் பஞரிஸ், அலஹாபாத், நேபாளம் போன்ற இடங்களிலிருந்துதான் தெற்கே வந்தார். ஆகவே அவர் ஒரு வடக்கத்தியர் என்கிருர். அது எப்படியிருந்தாலும் தமிழகத்திலுள்ள தமிழன் மூலன் என்பானின் உடலில் அவர் புகுந்து கொண்டபின் தானே அவரால் திருமந்திரம் பாடப்பெற்றது. ஆகவே அவர் பெயர் மூலன் எனக்கொள்வதே சாலச்சிறப்புடையது. அவர் கைலாயபதியாக இருந்தாலும்கூட, தமிழகத்தில் வந்து திருவாவடுதுறையை அடைந்தபின் தானே அவரால் ஓரிடத்தில் அமர்ந்து மூவாயிரம் ஆண்டுகள் தவம் இருக்க முடிந்தது. ஆகவே அவர் தமிழ் நாட்டவர் என்றே கொள்க. மேலும் கூட மூலம் என்ருல் உண்டான பொருள்களுக்கெல்லாம் ஆதியான இடம் எனப்பெயர். நமது சைவசமயத்திற்கெல்லாம் ஆதி மூலமாக விளங்குவது திருமந்திரம். ஆகவே அதை திருமூலரே ஆக்கிஞர் என்பது ரொம்பவும் பொருத்தமுடையது." என்ருர்.

மேலும் அவர் பேசுகையில் இது டாப்லட் காலம் என்றும், இரண்டாம் தந்திரத்தில் சாரம் என்னவென்று சட்டென அறியவே பலர் துடிப்பார்கள் என்றும், அப்படிச் சொல்ல வேண்டுமென்ருல், "சிவ நிந்தனை புரிவோர் அழிந்துபோவார்கள்" என்பதுதான் இதன் சாரமென்றும், அதற்குச் சான்ருகத் தக்கன் பட்ட பாட்டையெல்லாம் இரண்டாம் தந்திரத்தில் சொல்லியிருக்கிறதென்றும் கூறிஞர்.

சிவபெருமானுடைய பரத்துவத்தின் தன்மையை நிலைநாட்டுவதே இரண்டாம் தந்திரத்தின் உட்கோளாகும் என்றும், சிவனே முழுமுதற்கடவுள் என்பதும் எல்லா உயிர்களும் சென்று அடைதற்குரிய புகலிடம் அவனே என்பதும், திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் சிவனை இகழ்ந்து தாழ்ந்ததும், பின்னர் சிவனைப் புகழ்ந்து போற்றி வாழ்ந்ததும் நன்ருகக் காட்டப்படுகிறது என்றும், பஞ்சகிருத்தியம் என்று சொல்லப்படுகிற படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளுதலாகிய காரியங்களைச் செய்பவரும் பரமசிவனே என்பதும் நன்கு விளக்கப்பட்டிருக்கிறதென்றும், தாயின் வயிற்றிலே கருத்தரித்துப் பத்துத்திங்களாய் வளர்கின்ற வாற்றினை 41-பாடல்களில் திருமூலர் வெகு அழகாக் விளக்கியிருக்கிருர் என்றும், இதை எல்லோரும் குறிப்பாக டாக்டர்கள், பிரசவ மருத்துவம் செய்யப்புகுகின்ற டாக்டர்கள் அவசியம் படிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்.

மேலும் அவர் சொன்ஞர். "இப்பகுதியில் உள்ள பாடல்கள் மிக மிக அழகாக இருக்கின்றன. ஒரு பெண்ணுக்குத்தெரியுமா தன் வயிற்றில் எப்படிக் குழந்தை உண்டாகிறது என்று? தாயிடம் சென்று, "நான் எப்படிப் பிறந்தேன்" என்று கேட்டால், "நீ எப்படிப் பிறந்தாய் என்று நான் எங்ஙனே அறிவேன்? ஜோஸ்யர்கள் முதற்கொண்டு பெண் மகவு தான் பிறக்கப்போகிறது என்று சொன்ஞர்கள். கடைசியில் பார்த்தால் நீ பிறந்தாய்" என்று சொல்வாள். (சிரிப்பு) இப்படி வயிற்றிலிருப்பது ஆணு, பெண்ணு என்பதை யாராலும் அறியமுடியாத நிலையுளது. பெண்ணுக்கே தெரியாமல் அவள் உதரத்தில் வித்தைத் தூவி விடுகிருன் ஈசன். அவள் அதை அழிக்கவேண்டுமென்று என்ன முயற்சித்தாலும் அது கற்குழவிபோல் அழியாமல் கிடக்கிறது. துள்ளுகிறது. அம்மாடி, அம்மாடி என பெண் துடிக்கிருள். அவளால் என்ன செய்யமுடியும்? வயிற்றுக்குள் சிசுவைப் போட்டது போலவே வெளியேயும் அதைக் கொண்டு வருகிருன் ஈசன்.

குயில் எப்படிக் குஞ்சு பொரிக்கிறது என்று உங்களுக்குத்தெரியுமா. அது தன் முட்டையை காகத்தின் கூண்டில் இட்டுவிட்டுப் போய்விடுகிறது. காகம் குயில் முட்டையையும் தன் முட்டையாகக் கருதி பேணி அடை காக்கிறது. முட்டை உடைந்து குயிலின் குஞ்சு வெளி வரும்போது, காகம் காகா என்ருல் இது கூகூ என்று கத்துகிறது. அடடா! ஏமாந்துபோய்

விட்டோமே எனக் காகம் அதைக் கொத்தப் போகும்போது அது ஓடிவிடுகிறது. குயிலைப் போலவே நமது சிவபெருமான் ஒரு மாயாவி. பெண்ணுக்கும் தெரியாமல் அவள் வயிற்றில் சிசுவைப்போட்டு விடுகிருன். குழந்தையின் உடலிலே நமச்சிவாயா என்ற சீல் விழுந்துவிடுகிறது. அக்குழந்தையைப்பத்துமாதம் வயிற்றில் சுமந்து பெற்றெடுக்கிருள் தாய். இருந்தாலும் அது அவள் குழந்தையாகிவிடுமா ? அவள் உதிரத்தாலே வளர்ந்தது குழந்தையின் உடல் மட்டும்தான். தாயின் உயிருக்கும், குழந்தையின் உயிருக்கும் என்ன சம்பந்தம் ? மாயை நீங்கிஞல் "தாய் யார் ? தந்தை யார் ? வந்தவாறு எதோ? போமாறு எங்ஙனே?" என்பதாகத் தன் உள்ளக்கிடங்கிலுள்ள சர்வேஸ்வரன் நமச்சிவாயத்தைத் தேடி அவன் ஓடிவிடமாட்டானே ?

அதைப் பார்த்து, "மகனே! உன்னை என்மகன் என்று எண்ணிப் பெற்று வளர்த்ததற்கு ஒரு கற்குழவியையாவது பெற்றெடுத்திருக்கலாமே" எனப் புலம்புகிற தாயின் கண்களும் மாயையிஞல் அன்றே மறைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு இறைவன் இவ்வையகத்தில் உயிர்களைப் பெருக்கி வளர்த்திடும் முறையை

*"குயிற்குஞ்சு முட்டையைக் காக்கை தன்கூட்டிட்டால்*
*அயிர்ப்பின்றிக் காக்கை வளர்கின்றது போல்*
*இயக்கில்லை போக்கில்லை ஏனென்பதில்லை*
*மயக்கத்தால் காக்கை வளர்கின்ற வாறே"*

என்று திருமூலர் சொல்வதைப் பாருங்கள், இப்படியாக ஒரு மயக்கநிலையை உண்டுபண்ணித்தன் சிருஷ்டி காரியத்தைச் செய்துகொண்டு போகிருர் ஈசன். தந்தைக்கும் சரி, தாய்க்கும் சரி குழந்தை உண்டான விதம் தெரியாது. அதனைப் படைத்துவிட்ட நான்முகனுக்குக் கூடப் படைத்தது ஒன்றைத்தவிர வேறுயாதும் தெரியாது. ஈசனைத் தவிர வேறுயாருக்கும் தெரியாத ஒரு மாயை நிலவுவதிஞல்தான் பெற்றோர்கள் பிள்ளைப் பாசம்பற்றி அலைகிருர்கள்.

*" இட்டார் அறிந்திலர் ஏற்றவர் கண்டிலர்*
*தட்டான் அறிந்தும் ஒருவர்க்குரைத்திலன்*
*பட்டாங்கு சொல்லும் பரமனும் அங்குளன்*
*கெட்டேன் அம்மாயையின் கீழ்மை யெவ்வாறே"*

எனக் கூறுகிருர் திருமூலர்.

மேலும் கரு முதிர்ந்து குழந்தை பிறக்கும் பருவத்தைக் குறிப்பிட வந்த திருமூலர்,

*" இன்புற் றிருந்தவர் இசைவித்து வைத்தமண்*
*துன்பக் கலசம் அணைவான் ஒருவனே*
*ஒன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு*
*வெந்தது சூளை விளைந்தது தானே "*

என்பதாக சூளையில் மண்பாண்டங்கள் வெந்தெடுக்கப்படுவதோடு உவமித்துப் பாடுகின்ருர். இந்த லீலைகளையெல்லாம் செய்பவன் ஒரு ஈசன். "ஒரு நாமம், ஒருருவம் இல்லாதார்க்கு ஆயிரம் நாமம் பாடி தெள்ளேணம் கொட்டாமோ", என்பதைப்போல, எங்கும் கலந்து அவர் உள்ளத்தெழுகின்ற வங்க முதல்வனுக்குத்தான் எத்தனை எத்தனை அழகான பெயர்களை அவர் வழங்கியுள்ளார் என்று பாருங்கள். அப்பணி செஞ்சடையாதிபுராணன், ஆதி, எம்மாதி, ஒண்சுடராதி, வானவராதி, நின்மலன், ஈசன், ஏடில்புகழோன், தந்தை பிரான், தூயமொழியான், சமைக்கவல்லான், வெள்ளிமலை யமராபதி, மாமணிகண்டன், பூரணன், புராணன், நம்பன், புனிதன், நிமலன், என்பதாக அவர் அளித்துள்ள பெயரையே சொல்லிக் கொண்டு போகலாமே.

பார்வதி கல்யாணத்தின்போது வடதலை தாழ்ந்து, தென்தலை உயர்ந்து நிலம் நிலை குலைந்த பொழுது இருதலைகளையும் சமன் செய்தற்பொருட்டு இறைவன் அகத்தியஞரை தென்றிசை நோக்கி அனுப்பிய செய்தி அகத்தியம் என்ற தலைப்பில் இரு பாடல்களால் கூறப்படுகின்றன.

பேராற்றல் படைத்த சிவபெருமானின் சினத்துக்கு ஆளாகித்தண்டிக்கப்பட்டவர் எண்மர். அவ்வெட்டு நிகழ்ச்சிகளும் எட்டு இடங்களில் நடைபெற்றுள்ளது. அவ்வெட்டுத் தலங்களும், அட்ட வீரட்டானங்கள் எனப்படும். எட்டு மந்திரங்களில், எட்டு வீரட்டங்களையும் திருமூலர் இரண்டாம் தந்திரத்தில் குறிப்பிடுகிருர்.

இலிங்க புராணம் என்று ஒன்று இருக்கிறது. இன்னும் சிவபெருமான் திருமாலுக்கு சக்கரம் கொடுத்தருளிய வரலாற்றின் நுண் பொருள்களை யும் திருமூலர் கூறியிருக்கிறார். சலந்தரனைக் கொன்ற சுடராழியை அப்படியே சிவபெருமான் திருமாலுக்குக் கொடுக்க, அச் சக்கரத்தை திரு மால் தரிக்கும் வலிமையில்லாது சிவனை வழிபட்டு இரங்கவும், சிவனார் திருமாலுக்கு ஆழியைத் தாங்கும் ஆற்றல் அளித்ததும், அவன் ஆற்ற லுக்கு ஏற்ப ஆழியின் பாரத்தைக் குறைத்ததும் பாடப்பட்டிருக்கிறது. இப்படியாக சிவநிந்தை, குருநிந்தை செய்பவர்களைத் தண்டித்து, அடியார் களை ஆட்கொள்ளும் ஏழைபங்காளனைய் விளங்குகிறார் ஈசன். அவனது அருள் ஞானத் தைப் பெருவதற்கு முதற்படியாக முதல் தந்திரத் திலும், இதிலும் மனிதர்கள் பின்பற்றவேண்டிய நெறிகளைப் பற்றி உபதேசிக்கிறார்.

கடைசியாக அவர் கூறுகையில், இப்படிப் பட்ட சிறப்புக்கள் பலவாய்ந்த திருமந்திரத்தை எல்லோரும் படிக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு, நாட்டுக்கு நன்மை பயக்கும் திருமந் திரத்தை உலகில் பரப்புவான்வேண்டிப் பெரிய மகாநாட்டைக் கூட்டிய குருமகா சந்நிதானத்தின் கருணை உள்ளத்தையும் பாராட்டி, இப்பெரும் மகாநாட்டில் தனக்குப் பேச வாய்ப்பு அளித்த தற்காக மிகவும் நன்றி தெரிவித்துக்கொண்டார்.

மூன்றும், நான்காம் தந்திரங்கள் பற்றி தருமபுர ஆதீனம், பல்கலைக் கல்லூரி, தமிழ்த்துறைத் தலைவர் வித்வான் ச. தண்டபாணி தேசிகரவர்கள் 1—2—54-அன்றும், 2—2—54-அன்றும் வெகு சிறப்பாகச் சொற்பொழிவு ஆற்றினார்கள். அவர் கள் பேசியதின் விபரமாவது :—

"திருமந்திரத்தின் பெருமையை அறிய நம்மு டைய அறிவை, அறிவுச் சாதனமாகக் கொள்வ வதைக் காட்டிலும் அனுபூதி மகான்களுடைய வாக்கைக் கொள்வதுதானே மேன்மை. நமது சிவாசாரியாள் அவர்களும், "சேக்கிழார் பெரு மானுடைய வாக்கைக்கொண்டுதானே திருமூல ரின் பெருமையைச் சாற்றினார்கள். அதுபோல நாமும்கூட ஒரு அநுபூதி மகானுடைய வாக் கைத் துணை கொள்ளலாமே. அப்படிப்பட்ட அநுபூதி மகான் யார்? கமலை வெள்ளியம்பல வாணர்தான். இவர்கள் திருவாரூரிலே திருக்கூட் டத்து அடியார்களாகிய சைவ அபிஷேகஸ்தர் பரம்பரையிலே பிறந்து குமரகுருபரஸ்வாமிகளி டம் வடமொழி, தென்மொழி பயின்று மாசிலா மணி ஞானசம்பந்தரிடம் ஞானோபதேசம்பெற்ற அனுபூதிமான். திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார்போல திருமந்திரமாலையார் என்றுதான் அருளுவார்கள், திருமந்திரப் பெருமையைப் பற்றிகுஞ்சரமீன்ற கன்றெனை ஆண்டுக்கொரு முறைதான் நிட்டை கலைந்து உலகவர் உய்ய வேண்டுமென்ற கருணையுள்ளத்தோடு ஒவ்வொரு கவியாகப் பாடப்பெற்றதாகும் என்கிறார்.

மேலும் இது 'ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்' என்று திருமூலதேவரே,

*"நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்*
*வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடில்*
*ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்*
*தான்பற்றப் பற்றத் தலைப்படுந்தானே"*

என்ற பாடலில் கூறியிருப்பதும் கவனிக்கத் தக்கது.

திருமூலதேவர் இறைவனது அருள் விலா சத்தை மந்திரம், யந்திரம் போன்ற சாதனங் கள் எதுவுமில்லாது அடையவேண்டுமென்று கருதியவர் போல மந்திரம், யந்திரம் முதலிய வைகளைப்பற்றி நான்காம் தந்திரத்தில் சொல் வதற்கு முன்னதாகவே மூன்றும் தந்திரத்தில் யோகம், தியானம் போன்றவைகளை அமைத்து யோகம், தியானம் முதலியவைகளால் சித்திக் காது போனல் நான்காம் தந்திரத்திலுள்ளபடி மந்திரம். யந்திரம் முதலியவைகளைக் கைக் கொள்ளலாமென்று குறிப்பிட்டுள்ளார் என்றார்.

மூன்றும் தந்திரத்தில் 335 பாடல்கள் உள் ளன என்றும், அவைகள் 21 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன என்றும் குறிப்பிட் டார். மூன்றும் தந்திரத்தின் முதற்பகுதி அட்டாங்க யோகம். யோகக் கலை தமிழ் நாட்டில் மிகத் தொன்மையாகப் பயின்று

வருவதென்பதற்குத் திருமூலர் திருமந்திரமே தக்கசான்று. ஞானக்கோட்டையின் அணுக்க வாயில் இக்கலை. நமது அன்றாடச் சமய வொழுக்கங்களனைத்தும் யோகக் கலையின் அடியொற்றியே அமைக்கப்பெற்றுள்ளன. இதன் அருமையையும், அனுபவப் பயனையும் மறந்து சமய உலகம் வெறும் சடங்கு மாத்திரையாக இதனை ஆக்கிவிட்டது. உண்மையான யோகக்கலையை உலகம் உணருமானால் சிவஞானம் செழிக்கும்; தன்னிலையில் தாழாது. மேலும் மேலும் ஓங்கிவளரும். யோகம், ஹடயோகம், சிவயோகம் என இருவகைப்படும். ஹடயோகத்துக்குப் பிடிவாதமும், வைராக்கியமும் சிறந்த கால்கள், ஹடயோகி தன் தேக சுத்திக்காக மெல்லிய நூல் கயிற்றைப் பதினேரங்குல அளவினதாக எடுத்து மூக்கில் உறிஞ்சியேற்றி வாயின் வழியாக இழுத்துச் சுத்தம் செய்வான். ஹடயோகம் செய்பவனுக்கு சாஸ்திர ஞானம் அவசியமில்லை. சிவயோகம் முன்னதைவிட உத்தமமானதாகும். சிவயோகத்திற்கு இயமம், நியமம், ஆதனம் பிராணயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதி என எட்டு வகையான உறுப்புக்கள் இன்றியமையாதன.

முதல் உறுப்பு இயமம். இயமம் என்றால் கட்டுப்பாடு. கட்டுப்பாடு இல்லாத வாழ்க்கை கெட்டுப்போகும். கட்டுப்பாடு வாழ்வில் சித்திக்கவேண்டுமானால் அதற்கு அத்யாவசியமான நெறிகளையெல்லாம் முதல் தந்திரத்தில் வெகு அழகாகச் சொல்லிவிட்டார். அந்நெறிப்படி நின்ற பெரியாரின் துணையையும் பெற்றுவிட்டவர்கள், கண்ட வழியில் தங்கள் சிந்தனையைச் செலுத்தாது சிவயோகப் பயிற்சியில் நிற்கவேண்டுமென்பதற்கு,

*"அந்நெறி இந்நெறி என்னா தட்டாங்கத்*
*தன்னெறி சென்று சமாதியிலே நின்பின்*
*நன்னெறி செல்வார்க்கு ஞானத்தி லேகலாம்*
*புன்னெறி யாகத்திற் போக்கில்லை யாகுமே"*

என அந்நெறி, இந்நெறி என்று கெட்டு அலையாது அட்டாங்க யோகத்தில் இருங்கள் என்கிறார் திருமூலதேவர். மூவாயிரம் ஆண்டுகள் யோகத்தீவில் இருந்து, நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற பேராவலுடன் திருமூலர் யோகத்தைப் பற்றி எழுதும்போது அவ்வளவும் அவர் கண்ட அனுபவத்தை எழுதி நாமும் அவர்போல் அனுஷ்டிக்கக் கூடியவைகளை மட்டுமே சொல்லியுள்ளார் என்பதையும் முதற்கண் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கவிதை என்பதே கனிந்த உள்ளத்தின் எழுச்சி அல்லவா? அவர் சிவயோகத்தின் முதற்படியாக இயமம் என்பதைச் சொல்லுகிறார். ஒரு இயமி, "எழுந்து நீர் பெய்யினும் எட்டுத் திசையுஞ் செறிந்த நியமங்கள் செய்மின்" என்று திருமூலர் சொல்வதுபோல எட்டு திசைகளிலிருந்தும் மழை கொட்டினாலும்கூட விடாமல் கர்மாக்களைச் செய்தால்,

*"போதகந் தேறும் புரிசடை யானடி*
*யாதகந் தாரம ராபதிக் கேசெல்வர்"*

என்பதாக அதன் பலனையும் குறிப்பிடுகின்றார்.

*"கொல்லான் பொய்கூறான் களவிலான் எண்குணன்*
*நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய*
*வல்லான் பகுத்துண்பான் மாசிலான் கட்காமம்*
*இல்லான் நியமத் திடையினின் றானே"*

என்பதாக இயமத்தில் நிற்கின்ற ஒருவன் கொள்ளவேண்டிய நெறிகளையெல்லாம் சேர்ந்தும், பொய்கூறாது, உயிர்களை வதைக்காது, களவில்லாது, அடக்கத்தோடு, நடுநிலைமையில் கிடைப்பதை பிறருக்கும் பகுத்துக் கொண்டு மாசில்லாதவனாய் காமம் போன்ற இச்சைகளைத் துறந்தவனாய்இருக்கவேண்டுமென்கிறார்.

அதற்கு அடுத்த உறுப்பாக சாதகன் மேற்கொள்ளவேண்டியது நியமம். அவற்றை உண்டி சுருக்கல் முதலாகப் பத்தும், தபம். செபம் முதலாகப் பத்துமாகத் திருமூலரால் கூறப்படுகின்றன, அறிவைப் பெருக்குகின்றவன் அதற்குத் துணைக்காரணமாக உள்ள உடலைப் போஷிக்கவேண்டும், அதற்கு வேண்டிய அளவு உணவை உட்கொள்ளலாம். நாக்கிற்கு அடிமையாகிப் பலவகைக் கொழுப்புப் பொருள்களை உட்கொள்ளக்கூடாது

என்பதற்காகத்தான் அன்னம் சுருங்கினுல் அஞ்சும் சுருங்கும்'' ஔவையார் கூறியுள்ளார்.

அடுத்தது தூய்மை வேண்டும். தூய்மை உடலுக்கும், உள்ளத்துக்கும் தேவை. உடலும் உள்ளமும் ஒன்றையொன்று பற்றி நிற்பன. உடல் வெதும்பினுல் ஆசையும் காமமும் அதிகரிக்கும். ஆகவே உடலையும், உள்ளத்தையும் தூய்மையாக வைத்துக் கொள்ளவேண்டுமென்கிறுர். அடுத்ததாக மகிழ்ச்சி என்பது அறிவால் அறியாமை வெல்லும்போது ஏற்படும் உள்ள நிறைவாகும். இப்படியாகவெல்லாம் செம்மை, வாய்மை, உறுதி, இவைகளைக்கொண்டு, காமத்தை வென்று தபம், செபம் முதலியனவும் சாதகன் செய்தாகவேண்டும்

அடுத்ததாக ஆசனம் என்பதைப் பற்றிச் சொல்லுகிறுர். ஆசனமென்பது உறுதியாயும், வசதியாயும், இருத்தலாகும்.

மேலும் ஆசனம் பற்றிக் குறிப்பிடுகையில், பத்மாசனம் எது, பத்தபத்மாசனம் எது, பத்ராசனம் எது, குக்குடாசனம் என்ருல் எது என்பதை யெல்லாம் தெளிவாகவிளக்கிஞர். பின்னர் ஆசனப்பயிற்சியால் விளையும்பயன் மனஒருமைப்பாடுதான் என்றும், சுவாசத்தின் வரத்துப் போக்கை ஒழுங்குபடுத்தும் பிராணுயாமசித்தி இதனுல் கிடைக்கும் என்றும் கூறினுர்.

ஆசனம் செய்வதனுல், ''இருந்தின்பம் எய்துவர் ஈசன் அருளே'' என்று திருமூலர் கூறியிருக்கிறுர் என்றும் குறிப்பிட்டார்.

பின்னர் பிராணுயாமம் பற்றிக் குறிப்பிடுகையில், மூச்சை உள்ளிழுத்து, உள்ளடக்கிப் பின்னர் ஒழுங்காக வெளிவிடும்போது இஷ்டதேவதைக்குரிய மூலமந்திரம், பீஜம் இவற்றைத் தியானித்துக் கொண்டே செய்வதாகும் என்றும் இதுதான் பலன் அளிக்கக்கூடியது என்றும் குறிப்பிட்டார். மனச் சுத்தத்திற்கும் பிராணுயாமம் நன்கு உபயோகப்படு மென்றும், பிராணுயாமத்தில் மூன்று நிலைகள் உண்டு என்றும், அவைகள் பூரித்தல், நிறுத்துதல், விடுதல் என்பனவாகுமென்றும், இவற்றை வடமொழியில் பூரகம், கும்பகம், ரேசகம் எனச்சொல்வார்கள் என்றும், பிராணுயாமம் செய்கின்றவர்கள் சுத்தமான இடத்தில் உட்கார்ந்து, ஏற்கனவே உட்கொண்ட காற்றை வலதுநாசியின் வழியாக வெளியேற்றி, பின்னர் இடதுநாசியின் வழியாக உள்ளுக்கிழுத்து சிறிதுநேரம் கும்பித்தல் அவசியம் என்றும் குறிப்பிட்டார். ரேசக பூரகங்களில்லாமல் வெறும் கும்பக மாத்திரம் செய்வதும் உண்டு என்றும் அது உயர்ந்த நிலை: நினைத்தமாத்திரத்தில் நிகழ்வது. அதனுல் புத்தித்தெளிவு உண்டாகும் என்றும் சொன்னுர். ஒருவன் பிராணுயாமத்தை ஒழுங்காகச்செய்து வந்தால் மனம் பொறிவழியாகச்சென்று புலன்களைப் பற்ருது. சோம்பல் நீங்கும். பிறப்பு இறப்பு இல்லை. பழுத்த உடலும் பிஞ்சாகும். சிவபெருமானின் அருளை சடுதியில் பெறலாம். பகல் இரவு அற்ற இன்பநிலைதானே எய்தும்.

*'' செம்பொற் சிவகதி சென்றெய்தும் காலத்துக்*
*கும்பத் தமரர் குழாம்வந் தெதிர்கொள்ள*
*எம்பொற் றலைவன் இவனு மெனச்சொல்ல*
*இன்பக் கலவி இருக்கலு மாமே ''*

என்பதாகத் திருமூலர் சொல்லுகிறுர் எனக் குறிப்பிட்டார்.

மேலும் அவர் பேசுகையில் திருமூலர் பிராணுயாமத்திற்குப் பிறகு பிரத்தியாகாரம், தாரணை. தியானம், சமாதி முதலியவைகளைச் சொல்லியிருக்கிறுர் என்றும், நம்முடைய கண்களிரண்டையும். மூக்கின் நுனியில் வைத்துத் தியானிப்பவர்களுக்கு வாட்டமில்லை. உடலுக்கு அழிவில்லை, சிவனே தானுய் இருக்கலாம். தியான சாதகனுக்கு மணி, கடல், யானை, குழல், மேகம். வண்டு, தும்பி, சங்கு, பேரிகை ஆகிய பத்துவித நாதங்கள் கேட்கும். இத்தகைய நாதத்தின் முடிவிலேதான் பராசக்தி விளங்குகிறுள், இப்படி தியானத்தில் இருப்பவர்கள் ஞான சொரூபமான திருவருள்பேறு பெறுகிறுர்கள் என்றும் கூறினுர்,

தியான நிலையில் இருந்ததுபோல தியானிக்கிறவனும், தியானமும் அற்றுத் தியானிக்கப்

படும் பொருளே தானாக நிற்கும் நிலைக்கு சமாதி நிலையென்றும், சிவனை நினைப்பவன் சிவனாகவே அமர்ந்துவிடும் நிலையே இதனைக் குறிக்குமென்றும், இந்நிலையில் உள்ளபோது ஆகாரம் வேண்டாம். நீர் மூழ்கிக் கிடந்தாலும், நிலத்திற் புதையுண்டு கிடந்தாலும் உயிர் நீங்காது என்றும், சமாதியில் வல்லவர்கள் எல்லாம் சிவகரணமாய் இன்பநிலையில் என்றும் இருப்பர் என்றும் குறிப்பிட்டார்.

மேலும் இப்படி யோக நெறியில் நிற்பவர்களுக்கு அட்டமாசித்திகள் தானே வந்து கூடுமென்றும், அதனைக் கண்டு சாதகன் ஏமாந்துபோகக்கூடாது என்றும் சொன்னார். இப்படியாக யோகப்பயிற்சி செய்து இறப்பில்லாது செய்ய உறக்கமில்லாதிருக்க பலவகை உபாயங்களின்படி சிவபெருமானை இடைவிடாது தியானிக்க பல வழிகள் இந்த மூன்றாம் தந்திரத்தில் சொல்லப்பட்டுள்ளன என்றும், மூன்றாம் தந்திரம் முழுவதும் ராஜயோகத்தின் அங்கங்களையும், அனுட்டிக்கும் வகைகளையும், அனுட்டித்தார் எய்தும் பயனையும் அறிவிக்கின்றது என்றும் குறிப்பிட்டார்.

இப்படியாக தியானத்தில் மனம் அமைதி பெருது, தியானத்தில் உட்கார்ந்து சமாதி நிலையை எய்த முடியாவிட்டால் அதற்குச் சாதனமாக மந்திரம் யந்திரம் முதலியவைகளைப்பற்றி சொல்லி அவைகளைக் கையாளும் முறைகளையும் நான்காம் தந்திரத்தில் குறிப்பிடுகிறார் என்றும், அந்தத் தந்திரத்தை தான் பேசாமல் பேசி, சொல்லாமல் சொல்லி விளக்கவேண்டிய நிலைமையில் இருப்பதாகவும், குறிப்பாக இதில் அடங்கியுள்ள பகுதிகள் அனைத்தையும் குருவின் மூலமாக அறிந்துகொள்வதுதான் சிலாக்கியமானது என்றும் சொன்னார். நான்காம் தந்திரம் சிந்தியாகமத்தின் சாரம் என்றும் இதில் 535 பாடல்கள் உள்ளன என்றும், இதனை 13 பகுதிகளாகப் பிரித்திருக்கிறார் என்றும் குறிப்பிட்டார். அதன் முதற்பகுதி அசபை. செல்வத் தியாகப்பெருமான் திருவாரூரிலிருந்து ஆடும் நடனம் அஜபையாகும். அஜபை என்பதற்கு ஜெபிக்கப்படாதது என்பது பொருளாகும். அதாவது தானே இயங்குவதாகும். பூரக கும்பக ரேசகங்களாகிய உயிர்ப்பை அவன், நான் என்ற தியானத்தோடு செலுத்தின் அது அசபையாகிறது. இதுவே பிரணவ பஞ்சாக்கரம், அஷ்டாட்சரம் இவையெல்லாம் அசபையாக அனுபவிக்கப்படுமாயின் செம்பு பொன்னாகும். உடல் வயிரமாகும். இருந்த இருப்பில் திருவம்பலத்தைத் தெரிசிக்கலாம் என்று தொடங்கித் திருவம்பலச் சக்கரம், அதனைக் கீறும் முறை, அடைக்கும் எழுத்துக்கள், உபாசிக்கும்முறை, திரிபுரைச் சக்கரம், பைரவி யந்திரம், ஆதார ஆதேய அனுபவ நிலை, ஏரொளிச் சக்கரம், பைரவசாம்பவி மண்டலச்சக்கரங்கள், புவனை, திரிபுரை, நவாட்சரி முதலிய மந்திரம், சக்கரம், இவற்றினுடைய உபாசனா முறைகள் முதலியன உரைக்கப்பட்டிருக்கின்றன என்றும், இவை முழுதும் ஆசாரியன் மூலமாக உபதேசக் கிரமத்தால் உணர வேண்டியவைகள் என்றும், தான் சொல்லக்கூடாத விஷயங்கள் ஏதாவது சொல்லியிருந்தாலும் அதை குருமகா சந்நிதானம் தனது கருணாகடாச்சத்தால் ஏற்று, அதனால் ஏற்படும் தீங்கு எதுவும் தன்னை அணுகாமற் செய்யவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு, தனது சொற்பொழிவை முடித்துக்கொண்டார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகம், விரிவுரையாளர், திரு. இ. எஸ். வரதராஜ அய்யரவர்கள் (31—1—54 அன்று) விரிவுரையாற்றினார்கள்.

**ஐந்தாம் தந்திரம்**

அவர் பேசியதின் சாரமாவது :— " அவை முன் வீற்றிருக்கின்ற குருமகா சந்நிதானத்திற்கும், அவைத்தலைவர் அவர்களுக்கும், மற்றுமுள்ள பெரியோர்களுக்கும் எனது வணக்கம் உரித்தாகட்டும். எண்ணாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே சிவபெருமானவர் வேதாகமங்களைத் தமிழில் வழங்குவான் வேண்டி கருணை கூர்ந்து மூலன் மூலமாக திருமந்திரத்தை அருளிச்செய்தார். அதிலே இறைவனது திருவருள்ஞானத்தைப் பெறுவதற்கான மார்க்கத்தைப் படிப்படியாக ஒன்பது தந்திரங்களில் விளக்கியுள்ளார். ஒன்பது தந்திரங்களும் ஒன்பது ஆகமங்களின் சாரமாக விளங்குகின்றன.

அவைகளைப்பற்றியெல்லாம் பேச ஒரு பெரிய மகாநாட்டை நமது குருமகாசந்நிதானம் கூட்ட திருவுள்ளங்கொண்டது நமது பாக்கியம் என்று தான் கருதுகிறேன். இதில் எனக்குமுன் பல பிரசங்கிகள் வெகு அழகாக முதலில் வரும் தந்திரங்களை எல்லாம்பற்றி விரிவுரையாற்றினுர்கள். நான் பேசவேண்டியது ஐந்தாம்தந்திரம். அதில் 154 பாடல்கள் உள்ளன. அவைகள் 19 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இதை வாதுளாகமத்தின் சாரம் என்பார்கள்.''

மேலும் அவர் குறிப்பிடுகையில் இந்த உலகைப் படைப்பவன் யார்? அவன் படைக்கின்ற உலகமானது எப்படியிருக்கிறது? கடைசியில் என்ன ஆகின்றது? என்பன போன்ற பல கேள்விகளைப் போட்டுக்கொண்டால் கிடைக்கும் பதில்கள் இறைவனது தன்மையை உணர உதவியாக இருக்குமென்றும், மேலும் மேலும் பிறப்பும் இறப்புமாக உலகம் மாறி மாறிக் கொண்டிருப்பதும், அதனுல் இப்பிறப்பில் நாம் செய்யும் கர்மாக்களே நம்மை மறுபிறப்பிலும் தொடர்வதைக் காணலாம் என்றும் பிறவிப் பெருங்கடல் நீந்தவே இறைவன் தாள்பற்றி அவன் அருட்கண் வாய்ப்புப் பெற யோகம் இருப்பது பற்றியும், தவம் சித்தித்து, தியானம் நிலேக்காவிட்டால், மந்திரம் யந்திரம் முதலிய சாதனங்களைக் கொள்வது பற்றியும் சென்ற தந்திரங்களில் நன்கு விளக்கப்பட்டுள்ளனவென்றும், இந்த ஐந்தாம் தந்திரம் சிவாகமப் பயன்களை நான்கு பாதங்களாகக் கூறுகிறது என்றும் குறிப்பிட்டார். மேலும் இறைவன் திருவருளைப் பெறுவதற்கான கலைஞானம் அதாவது சாஸ்திரஞானம் வேண்டுமென்றும், சாஸ்திரஞானம் ஒன்றினுல் மட்டும் கடவுளைக் கண்டுபிடிக்கமுடியாது என்றும், அனுபவஞானமும் வேண்டுமென்றூர். சித்தாந்த சாஸ்திர முறைகள் அப்படியே திருமந்திரத்தில் இருக்கின்றன என்றும், மக்களின் பரிபக்குவத்திற்கு ஏற்ப அவைகள் நான்கு நிலைகளாக சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று வகுக்கப்பட்டிருக்கின்றன என்றும், இந்த நான்கு நிலைகளினுலும் 16 படிகள் ஏற்படுகின்றன என்றும், சைவசித்தாந்தப் பயிற்சி பெறுவோருக்குப் படிப்படியாக இந்நிலைகள் பயன் அளிக்க வல்லது என்றும் குறிப்பிட்டார்.

*" சரியாதி நான்குந் தருஞான நான்கும்*
*விரிவான வேதாந்த சித்தாந்த மாறும்*
*பொருளான நந்தி பொன்னகர் போந்து*
*மருளாகு மாந்தர் வணங்க வைத்தானே "*

என்ற திருமூலர் வாக்குப்படி சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கும், ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்ற நான்கும் இப்படியாகப் படிப்படியாகவுள்ள வேதாந்த சித்தாந்த மார்க்கத்தில் பயிற்சி பெற்று, சன்மார்க்கமாகிய சகமார்க்கத்தில் நின்று,

*" பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்*
*ஆசற்ற நற்றவம் வாய்மை அழுக்கின்மை*
*நேசித்திட் டன்னமும் நீசுத்தி செய்தன்மற்*
*றுசற்ற சற்புத்திர மார்க்கமாகுமே "*

என்பதாகக் கூறப்படும் சற்புத்திரமார்க்கத்திலும் நின்று,

*" வாசித்தும் பூசித்தும் மாமலர் கொய்திட்டும்*
*பாசிக் குளத்தில் வீழ்கல்லா மனம்பார்க்கின்*
*மாசற்ற சோதி மணிமிடற் றண்ணலை*
*நேசத் திருந்த நினைவறி யாரே "*

என்றபடி தாசமார்க்கத்தையும் கடந்து சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்ற பதவிகளை அடைவார்கள் என்றும் குறிப்பிட்டார். மேலும் புறச்சமயதூடணம் கூடாது என்றும், " நன்றிது தீதிது என்றுரையாளர்கள் குன்று குரைத்தெழு நாயை யொத்தார்களே " என்று திருமூலர் குறிப்பிட்டுள்ளார் என்றும் கூறினுர்.

1-2-54 திங்களன்று தருமை பல்கலைக்கல்லூரி தமிழ்ப்பேராசிரியர், சித்தாந்த ரத்னுகரம், வித்துவான் முத்து சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் விரிவுரையாற்றினுர்கள். அவர் தனது பிரசங்கத்தில் திருவாவடுதுறை மடம்

**ஆறும் தந்திரம்**

மாத்திரம் இல்லாமலிருந்தால் 154ஆண்டுகளுக்கு முன்னரே இந்த நாட்டில் சைவம் அழிந்து போயிருக்கும் என்றும் இந்தத் திருவாவடுதுறை மடம் இல்லாதிருப்பின் சைவ நூல்கள் எதுவுமே இன்று இருந்திருக்காது என்பது அறிஞர்களின் எண்ணமென்றும், இறைவன் திருவருள் ஞானம் பெற்ற ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகளின் மரபில் வந்துள்ள 21-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களும், சைவமும், சைவ நூலும் தழைக்கப் பல துறைகளிலும் தொண்டாற்றி வருவது பாராட்டத்தக்கது என்றும், அவர் இப்பொழுது கூட்டியுள்ள திருமந்திர மகாநாடே அதற்குச் சான்று என்றும் குறிப்பிட்டார்.

மேலும் கூறுகையில், பெரிய இம் மகாநாட்டில் பேச எனக்கு ஆற்றல் உண்டானதே இங்கே வீற்றிருக்கின்ற நம்முடைய குருமகா சந்நிதானத்தின் திருவருள் கடாக்ஷத்தால்தான் என்றும், குருவருள் ஒன்றே மெய்ப்பொருள் உண்மைகளை உணர்த்தும் ஆற்றல் பெற்றது என்றும், கயிலாய பரம்பரையில் வந்துள்ள குருமகாசந்நிதானத்தை சாட்சாத் சிவபெருமானாகவே கருதவேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

வேதங்களும், ஆகமங்களும் உலகத்தில் நிலவச் செய்யும் பொருட்டு ஒரு நல்ல புத்திரன் வேண்டுமென்று சிவபாதவிருதயர் இறைவனை வேண்ட, அவர் ஆசையைப் பூர்த்தி செய்வான் வேண்டி ஞானசம்பந்தப் பெருமானாகவே இறைவன் அவதரித்த வரலாற்றை நாம் அறிவோம்.

அப்படி "ஆகமமாகி நின்றண்ணிப்பான் தாள் வாழ்க", என்று மாணிக்கவாசகப் பெருமான் அருளியதுபோல, வேதங்களையும், ஆகமங்களையும் தமிழில் தருவான் வேண்டியே

*"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்*
*தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"*

என்ற அகச்சான்றுப்படியே திருமூலதேவராகவே அவதாரம் செய்தார் எனவும் கொள்ளலாமென்றார். "வேதநெறி தழைத்தோங்க", அவதாரம் செய்த, "ஒரு கயிலாயசித்தர்", என்று திருமூலதேவரை சேக்கிழார் பெருமான் குறிப்பிட்டுள்ளார்", என்றார்

"வேதமும், ஆகமமும் உலகில் இறைவனால் செய்யப்பட்டன. தனித்தனியாய் இருப்பினும் இவைகள் இரண்டும் ஒன்றே, இரண்டும் மெய்யே," என்பதான கருத்தைத் திருமூலர் 6-ம் திருமந்திரத்தில்

*"வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன் நூல்*
*ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன*
*நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்*
*பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே"*

எனக்குறிப்பிட்டுள்ளார் என்றார்.

"வேதநெறி என்று ஒன்று உண்டு. அதற்கேற்றதுறை ஒன்றுண்டு. அது வேதங்களை ஒத்துக்கொள்ளுகிற எல்லாச் சமயத்திற்கும் பொதுவாக இருக்கிறது. ஆகமங்களும் அப்படியே. இந்த இரண்டும் இல்லையானால் ஆண்டவன் திருவருளை அடைவதற்கு வழியில்லையென்றும் குறிப்பிட்டார்.

"வேதநெறி, சைவநெறி, என இரண்டு நெறிகள் இருப்பதாகவும், வேதநெறி வேதத்துறையையும் சைவநெறி சைவத்துறையும் விளக்குவதாகக் கொள்வதில் தவறில்லையெனவும் குறிப்பிட்டார்.

28-ஆகமங்களில் குறிப்பாக, சிறப்பாகவுள்ள 9-ஆகமங்களைத்திருமூலதேவர் எளிதான நடையில் தமிழிலேயே திருமந்திரமாக எழுதித் தந்திருப்பது தமிழர்கள் செய்த பாக்கியம் என்றும், திருமந்திரத்தின் பல பிரதிகள் அச்சில் வந்திருப்பதும் பாராட்டவேண்டியது என்றும் ஆனால் ஒவ்வொரு பிரதியிலும் நிறைய பாட பேதங்களும், அச்சுப்பிழைகளும் இருப்பது வருந்தத்தக்கது என்றும், இவைகளையெல்லாம், நீக்கிச் சுத்தமான பிரதி ஒன்று வர குருமகாசந்நிதானம் கருணைகொள்ள வேண்டுமென்றும் குறிப்பிட்டார். மேலும் அவர் கூறுகையில், "குருவை இடைவிடாது தியா

னிக்கவேண்டும், குருவின் அருளினுல்தான் இறைவன் பேற்றை எளிதில் அடையமுடியும்'' என்ற கருத்தை 6-ம் தந்திரத்தில் நன்ருக விளக்கப்பட்டுள்ளது என்ருர்.

ஆரும் தந்திரத்தில் 14 தலைப்புகளின் அடியில் 131 பாடல்கள் உள்ளன. அவைகள் வியாமளாகமத்தின் சாரமாகும். அவைகள் எல்லாவற்றையும் விளக்க முடியாவிட்டாலும்கூட பின்னுல் அவற்றைப் படிப்போருக்கு உதவக்கூடிய வகையில் சில பாடல்களை மட்டும் குறிப்பிடுவதாகச் சொன்ஞர்.

தற்காலத்தில் பல மேடைப் பிரசங்கிகள் ஏழைகள் தான் நடமாடும் கோயில் என்ற கருத்தில் பேசுவதை எல்லோரும் அறிவார்கள் என்றும், ஆனுல் திருமூலதேவர் நடமாடும் கோயில் என்று சிவஞானிகளின் உடம்பைத் தான் குறிப்பிட்டுள்ளார் என்றும் கூறினுர்.

ஒவ்வொரு உள்ளத்திலும் ஆண்டவன் இருக்கின்ருர். அவர் வாசம் செய்யக்கூடிய ஒவ்வொரு உடம்பும் ஒவ்வொரு ஆலயம். வாய் என்ற உறுப்புத்தான் கோபுரவாசல். ஞாஞசிரியன் உபதேசவாயிலாக நான் யார் என்று கேட்டு, சிந்தித்து, தெளிந்து, நிட்டையிலிருந்து மிகத் தெளிவாக அறிந்துவிட்ட ஞானிகளுக்கு சீவாத்மாவே சிவலிங்கமாகிவிடுகிறது. அப்போது பிறப்பு இறப்பு என்ற சுழலிலே கொண்டுபோய்த் தள்ளும் வஞ்சனை மிக்க ஐம்பொறிகளும்கூட கோயிலின் மணி விளக்காக மாறிவிடுகின்றது என்ற கருத்தோடு,

*" உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்*
*வள்ளற் பிரானுர்க்கு வாய் கோபுரவாசல்*
*தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்*
*கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே "*

என்று பாடியிருப்பதைப் பாருங்கள் என்ருர். மேலும் சிவஞானிகளுடைய உள்ளம் தான் பெருமைதங்கிய கோயிலாகும். அந்த ஞானிகளுடைய உடம்பே நடமாடும் கோயில்,

*" சிவனே சிவஞானி ஆதலால் சுத்த*
*சிவனே யெனஅடி சேரவல்லார்க்கு*
*நவமான தத்துவநன்முத்தி நண்ணும்*
*பவமான தின்றிப் பாலோக மாமே "*

என்பதாக சிவகுரு தரிசனம் என்ற தலைப்பில் திருமூலர் கூறியுள்ளார் என்றும் அதற்கு அடுத்த பாடலில்,

*" குருவே சிவமெனக் கூறினன் நந்தி*
*குருவே சிவமென்பது குறித்தோரார்*
*குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்*
*குருவே யுரையுணர் வற்றதோர் கோவே "*

என்று கூறியுள்ளார் என்றும் தெரிவித்தார்.

*" அகத்து நோய்க்கு உள்ளினர் அன்றி*
*அதனை செகத்தவரும் காண்பரோ "*

என்று உமாபதிநாயஞர் சொல்லியதைப்போல நம் உள்ளேயிருக்கும் அழுக்காறுகளையெல்லாம் சரியானதொரு குருவை அடைந்து அவர் மூலமாகத்தான் களைந்து கொள்ளமுடியும் என்றும் கூறிஞர்.

மேலும் அவர் பேசுகையில், நான் உங்களைப் பார்க்கிறேன். நீங்கள் என்னுல் பார்க்கப் படுகிறீர்கள். நீங்கள் என்னைப்பார்க்கிறீர்கள். நான் உங்களால் பார்க்கப்படுகிறேன். இப்படி பார்க்கும் பொருளுக்கும், பார்க்கப்படுகின்ற பொருளுக்கும் இடையே ஒன்றிருக்கிறதே அது எது?'' என்று ஆராயும் தன்மை குருவருளினுல்தான் உண்டாகுமென்றும், அப்படிப்பட்ட ஞானகுருவின் பாதாரவிந்தங்களைச் சேர்ந்துவிட்டால், அக்குருவினுடைய,

*" திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந்*
*திருவடி ஞானஞ் சிவயோகஞ் சேர்க்குந்*
*திருவடி ஞானஞ் சிறைமல மீட்குந்*
*திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே"*

என்று திருமூலர் கூறியிருக்கிருர் என்றும் சொன்ஞர்.

இப்படி ஒரு குருவின் திருவடிக் கமலங்களை அடைந்தவர்கள், துறவு நிலைக்கொண்டு, தவவேடம் பூண்டு, பிரானருள் வேண்டி ஏங்கிக் கிடக்கிருர்கள் என்றும் இப்படிப்பட்ட

ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம் நடுங்குவ தில்லை: நமனுமங்கில்லை, என்று திருமூலர் சொல்லியுள்ளார் என்றும்,

> *" சதி கொண்ட சாக்கி யெரியின் வடிவாம்*
> *எரி கொண்ட ஈசன் எழில் வடிவாமே"*

என்பதாக எழில் வடிவுள்ள ஈசன் சந்நிதானம் அடைய ஒரு வேஷம் வேண்டுமென்றும், வேஷமில்லாது கதி முடியாது என்றும், நல்ல உடையணியாதவர்கள் சென்றால் எப்படி பணக்காரர்களின் வீட்டிற்குள் நுழைய முடியாதோ அப்படி சிவ கணங்களால் நமக்கு தடை ஏற்படாதிருக்கத் திருநீறு சாத்திக் கொள்ளவேண்டுமென்றும்,

> *" கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை*
> *மங்காமற் பூசி மகிழ்வாரே யாமாகில்*
> *தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி*
> *சிங்காரமான திருவடி சேர்வரே "*

என்பதாக திருமூலர் கூறியுள்ளார் என்றும் குறிப்பிட்டார்.

பின்னர் தவத்திற்குரிய வேஷம் வேறு: சிவத்திற்குரிய வேஷம் வேறு. உயிரை மட்டும் அறிகின்ற ஒரு நிலை ஞானயோகம், உயிரோடு சிவத்தையும் அறிகின்ற ஒரு நிலை சிவயோகம். ஞானயோகத்திற்குரிய வேடம் ஞானவேடம். சிவயோகத்திற்குரிய வேடம் சிவவேடம். இப்படி ஒருவர் இறைவன் திருவருள்பேற்றை நாடி செயல் புரிவாரேயானால் பின்னர் ஞானாசிரியன் இந்த மாணாக்கர்களுள் எவன் பக்குவன், எவன் அபக்குவன், எவனுக்கு உபதேசம் செய்யலாம், எவனுக்குக் கூடாது என்று அறிந்து தன் பணியாற்றுவார் என்பதாக இந்த 6-ம் தந்திரத்திலே பதினன்கு பகுதிகளிலுள்ள 131 பாடல்கள் நன்கு விளக்குகின்றன என்றும் குறிப்பிட்டார்.

"கலைமகள்" என்ற மாதாந்திரப் பத்திரிகையின் ஆசிரியர், வித்வான் கி. வா. ஜெகந்நாத ஐயரவர்கள் (2—2—51 செவ்

**ஏழாம் தந்திரம்** வாய்க்கிழமை அன்று) விரிவுரையாற்றினர்கள். அவர்கள் பேசியதின் விபரமாவது:—

"இங்கே எழுந்தருளியிருக்கின்ற மகாசந்நிதானத்தின் திருவடிகளுக்கும், திருமந்திர மகாநாட்டின் மூன்றும் நாள் விழாவாகிற இன்றைக்குத் தலைமைதாங்குகின்ற ஆதீன மகாவித்வான் ஆறுமுக நாவலவர்களுக்கும், ஏனைய பெரியோர்களுக்கும், தாய்மார்களுக்கும் என் வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அறிவிலும், ஆற்றலிலும், அனுபவத்திலும், சைவசமய ஞானத்திலும் முதிர்ந்த பலராலும் போற்றப்படுவது திருமந்திரம். வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒழுக்க நெறிகளைப்பற்றியும், யோகம், மந்திரம், யந்திரம் போன்றவைகளோடு, ஆண்டவனது திருவடிப்பேற்றை அமைந்து எல்லையற்ற அருள் ஆனந்தத்தின் மூழ்கிக்கிடக்கும் மார்க்கம் பற்றியும் போதிப்பது திருமந்திரம்.

வடமொழியில் மந்திரமாக வேதங்களும், தந்திரமாக ஆகமங்களும் நிரம்பியிருக்கின்றன. தென்மொழியில் தனித்தனியாக இரண்டும் அமையப்படாவிட்டாலுங்கூட வேதமாகவும், ஆகமங்களாகவும் அமைந்த ஒரு நூல் உண்டென்றால் அது திருமந்திரமாகும், அதைத்தான் சாத்திரமாகவும், தோத்திரமாகவும்அமைந்திருக்கிறதென்று சொல்வார்கள்.

அப்படிப்பட்ட அந்த நூலினூடே புகுகின்ற அறிவு ஒருவருக்கு உண்டென்றால், அவர் நிச்சயமாக, சமய வழிபாட்டில் ஊன்றிய பற்றோடு, நல்ல ஞானம் படைத்தோராய் இருக்க வேண்டும்.

அப்படியுள்ளவர்கள் பலர் எனக்கு முன் பேசினர்கள். இன்னும் பேசவும் போகிறார்கள், இடையே, எப்படிப்பட்ட ஆற்றலுமில்லாத நான் பேசுவது ஏனைய பேச்சுக்களுக்கு விளக்கம் தருவதற்காகத்தான். நல்ல இனிப்புள்ள பண்டங்களை, சுவைமிக்கதான உணவை மேலும் மேலும் உண்ணும்போது, இடையே புசிக்கப்படும், காரமான உப்புமிக்க பண்ட

மும்கூட இனிப்பாக இருக்கும் என்பதுமாப் போல என் பேச்சும்கூட உங்களுக்கு இனிப் பாக இருக்குமென்ற எண்ணத்துடன் பேச முன்வந்துள்ளேன்.

ஏழாம் தந்திரம்-காலோத்தராகமத்தின் சார மாகும். இதிலே அடங்கியுள்ள 418 பாடல் களும், 38 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக் கின்றன. முதற்பகுதி ஆருதாரத்திலிருந்து தொடங்குகின்றது. பின்னர் லிங்கத்தின் வகைகள் பற்றியும், சிவபூசை. குருபூசை, மகேசுவர பூசை என்பதாக 'பூசை' வகைகள் பற்றியும், ஆன்ம ஞான இலக்கணங்கள் பற் றியும், சமாதி நிலையைப் பற்றியும் சொல்லி, நல்வாழ்க்கையில் சொல்லியிருக்கின்ற சம்பிர தாயங்களைச் சொல்லி, எவரவர் நட்பை விலக்கவேண்டும்; எவரவர் நட்பைக்கொள்ள வேண்டுமென, விலக்குவன விலக்கி, கொள் வனகொண்டு, ஆண்டவனது திரு அருள் ஞானத்தைப் பெறுவதற்குச் சாதகமாக, எளிய முறையில் "இதோபதேசத்தையும்" கடைசி யாக இத்தந்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின் றது. அவ்வளவையும் பற்றி விரிவாகப் பேச எனக்குப் பொழுது இல்லை. "ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்" என்பதுபோல எழாந்தந்திரத்திலிருந்து நான் இரண்டொரு பாடலை மட்டும் உங்களுக்கு எடுத்துக்காட்டி குறிப்பிட்ட காலத்திற்குள் என் சொற் பொழிவைமுடித்துக்கொள்ள முயல்கின்றேன்.

பொங்கு நுரையுமாக குமிழிட்டு வெள்ளம் ஓடினும்கூட, அதிலே முக்கப்படுகின்ற நாழி தன்னளவு நீரைத்தானே கொள்ளும்?

*" ஊனுடம்பிற் பிறவி விடந் தீர்த்துலகத்தோருய்ய*
*ஞானமுதல் நான்குமலர் நற்றிரு மந்திரமாலை"*

என்பதாக சேக்கிழார் ஸ்வாமிகளாலேயே புக ழ்ப்பெற்றதுமான திருமந்திரமாலையை, "நான் பெற்ற இன்பம்பெறுக இவ்வையகம்", என்ற பெருங்கருணையோடு, மனம் உவந்தளித்த பெருங் கருணையாளர் திருமூலதேவர் பசுக்களா கிய மக்கள், ஆன்ம ஞானத்தை அடையும் நெறிகளை படிப்படியாகச்சொல்லி வரும்போது ஏழாந் தந்திரத்தில் லிங்கங்கள் எவ்வளவு வகைப்படும் என்று சொல்லுகிறார். அண்ட லிங்கம், பிண்டலிங்கம், சதாசிவலிங்கம், ஆத்ம லிங்கம், ஞானலிங்கம், சிவலிங்கம் என ஆறு வகை லிங்கங்களைப்பற்றிப்பேசுகின்றார்.நாமும் எத்தனையோ லிங்கங்களைப் பார்த்திருக்கிறோம். ஒவ்வொரு சைவனும் தனதுவீட்டில் "ஸ்படிக லிங்கம்" வைத்துப் பூசிப்பதைப் பார்க்கிறோம். அவன் பக்கத்தில் அந்த ஸ்படிக லிங்கத்திற்கு அபிஷேகம் செய்ய ஒரு சின்னக் கிண்ணியில் தண்ணீர், அந்த நீரை எடுத்து விடுவதற்காக ஒரு உத்திரணி, மேலும் அந்த ஸ்படிக லிங்கத் திற்கு சாத்துவதற்காக ஒரு சிறிய ஆடை. பூசு வதற்காக கொஞ்சம் சந்தனம், வெண்ணிறம் படைத்த ஒரு நந்தியாவட்டை மலர். இவை களைத்தான் நாம் அங்கே பார்க்கிறோம். ஆனல் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெரு மானுக்கு வீட்டிலுள்ள லிங்கத்திற்கு அபிஷே கம் செய்ய வைக்கப்பட்டிருந்த நீரோ, அன்றி சாத்துவதற்காக வைக்கப்பட்டிருந்த ஆடை யோ, சந்தனமோ போதுமா? போதாது. அது தான் போகட்டும். திருக்கோயில்களிலும்கூட சிவலிங்கப்பெருமான் ஒரே அளவிலே இருக் கின்றாரா? சிற்சில இடங்களில் மிகப் பெரியவ ராகவும் அன்றோ காட்சி அளிக்கின்றார்? தஞ்சா ஊர் பிரகதீசுவரர் கோவிலிலே மிகப் பெரிய வராகக் காட்சியளிக்கின்றார் பெருவுடையார்.

அந்தப் பெரிய கடவுளைச் சுற்றி, பெரிய கோயிலைக் கட்டியிருக்கின்றான் சோழன் ராஜ ராஜன். அந்தப் பெரிய சிவலிங்கப் பெருமா மானுக்கு உடுத்துவதற்கான ஆடை சிறியதா யிருந்தால் போதுமா? அல்லது அந்தப் பெருமா னுக்கு நாம் அபிஷேகம் செய்கின்ற அளவு. நீர் தான் கிண்ணியில் இருந்தால் போதுமா? போதாது? அந்தப் பெருவுடையாருக்கு அபி ஷேகம் செய்யவேண்டுமானல் ஒரு குளத்தி லன்றோ ஜலம் நிரப்பி வைத்துக்கொள்ள வேண்டும். அதற்காகத்தானே சிவகங்கைக் குளம் வெட்டப்பட்டது. தஞ்சையில் எழுந் தருளியிருக்கும் பிரகதீச்வரப் பெருமானைவிட கங்கைகொண்டசோழிங்கனைப்பாருங்கள்.இவர் அவரையும்விட இன்னும் பெரியவர். நமது

புறக்கண்களுக்கே மிகவும் பெரியவராகக் காட்சியளிக்கின்ற இந்த இறைவனுக்கு சாரம் போட்டல்லவா, அதன்மேல் ஏறி நின்று அபிஷேகம் செய்யவேண்டியிருக்கின்றது? அப்படியிருக்கையில் அப் பெருமானுக்கு அபிஷேகம் செய்யவேண்டுமானுல், எப்படி சிறிய சொம்பில் தண்ணீர் மொண்டு அபிஷேகம் செய்யமுடியும்? அப்பெருமானுக்காகவென்றே இரண்டு பீஸ்கள் துணி நெய்து அலங்காரம் செய்கிருர்கள். நினைத்துப் பாருங்கள். வீட்டிலுள்ள ஸ்படிக லிங்கப்பெருமானுக்கு அபிஷேகம்செய்ய ஒரு சின்னக் கிண்ணியில் தண்ணீர்; ஒரு திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்ய ஒரு குடம் தண்ணீர்; பெரிய கோயிலில் எழுந்தருளியுள்ள பெருவுடையாருக்கு அபிஷேகம்செய்ய ஒரு குளத்தில் தண்ணீர். ஆனுல், கங்கைகொண்டசோழபுரத்திரலே எழுந்தருளியிருக்கும் கங்கைகொண்ட சோழிங்கருக்கு அபிஷேகம்செய்ய ஒரு குளத்துத் தண்ணீர்கூட போதாது. ஒரு ஏரியே வேண்டுமல்லவா? அதற்காகத்தான் "கங்கை கொண்ட சோழனேரி" வெட்டப்பட்டது. இப்படியாக ஒவ்வொரு சைவன் வீடுகளிலும் எழுந்தருளியிருக்கும் ஸ்படிக லிங்கங்களேயும் தென்னுட்டுத் திருக்கோயில்களிலே மனிதர்களின் ஆற்றலே அளவிட்டு மேம்படுத்திக்காட்டும் வகைகளில் அமையப்பெற்றிருக்கும் சிறிய பெரிய சிவலிங்கங்களேயும் பார்த்தோம். நம்மைப்போலத் திருமூலதேவரும்கூட இந்த லிங்கங்களேப் பார்த்தார். ஆனுல், நம்மால் பார்க்க முடியாத, நமது சிற்றறிவுக்கும் எட்டாத இன்னுமொரு பெரிய லிங்கத்தையும் அவர் பார்த்தார், அந்த லிங்கத்திற்குத்தான் 'அண்ட லிங்கம்' என்று பெயர் கொடுத்தார். நாமும் காணலாம் நமக்குக் கண்களிருந்தால்.

தினமும் நாம் பார்க்கிறேம். நம் தலேக்கு மேலே நீலவான் இருப்பதை; தரையின்மேலே நின்றுகொண்டிருக்கும் நாம் ஒரு சிறிய மலேயின் மேலே ஏறி நின்றுகொண்டு சுற்றுமுற்றும் பார்த்தால் நமக்குத் தோன்றுவன என்னென்ன? கீழே வீடுகள், தோப்புகள், ஆறுகள் போன்றவற்றைப் பார்க்கலாம். மேலே நிமிர்ந்து பார்த்தால் வானம் ஒரு பந்தல்போல காட்சியளிக்கும். இக்காலத்தில், வீடுகளேயே மாடிக்குமேல் மாடி வைத்துக் கட்டுவதால் வீட்டின் கூரைமேல் நின்று பார்த்தாலேயே வானம் ஒரு பந்தல்போலத் தோன்றும். ஆனுல் மிக மிக உயரமான ஒரு மலேயின்மேல் ஏறி நின்று பார்த்தால் வானம் ஒரு பந்தலாகத் தோன்ருது. வீட்டுக் கூரையின் மேலே நின்று பார்த்தபோது பந்தலாகத் தோன்றிய வானம் இப்பொழுது என்ன ஆயிற்று? பந்தல்போன்று தோற்றம் காட்டிய வானம் குவிகிறது. அதன் விளிம்புகள் தரையைத் தொடுகின்றது போல காட்சி தென்படுகிறது (Horizon) என்பார்களே; அந்த வான விளிம்பு தரையிலுள்ள நீர்ப் பரப்பைத் தொடுவதோடுகூட அதற்குள்ளேயும் போவதுபோலத் தோன்றுகிறது. பந்தல் போலத் தோன்றிய வானம் 360 டிக்ரி என்று சொல்வார்களே அந்த அரை வட்டத்தில் தரையின்மீது கவிழ்க்கப்பட்ட ஒரு அருக்கஞ்சட்டியைப்போல, ஒரு தொப்பியைப் போல, ஒரு மாக்காலேப்போல காட்சியளிக்கிறது. அதைப் பார்க்கும் நாம், "அடடா; "ஹொரைசன்" என்ன அழகாக இருக்கிறது" என்போம். ஆனுல், அந்த வட்டமாகத் தோன்றும் பல வண்ண நிறம் தோய்ந்த வான விளிம்பை நமது திருமூலதேவரும் பார்த்தார். பல பல சிவலிங்கங்களேப் பார்த்துப் பழகிய அவரது கண்கள், "அடடா; இது வான் அல்ல ...வீட்டிலும் கோவில்களிலும் பார்க்கும் இறைவன் சிவலிங்கப் பெருமான் அன்ருே இங்கேயும் பெரிய உருவில் காட்சியளிக்கின்ருர். இந்தப் பூமியாகிய ஆவுடையார் மேலே, வானுகிற லிங்கமன்ருே இருக்கின்றது; வீட்டிலுள்ளது பிண்ட லிங்கமானுல், இது அண்ட லிங்கமல்லவா" என்று பரவசப்பட்டுவிடுகின்ருர். மானசீகமாக பீமன் சிவபூசை பண்ணுவானே அதைப் போலத்தான் இவரும் செய்ய ஆரம்பிக்கிருர். இந்த அண்ட லிங்கப்பெருமானுக்கு அபிஷேகம்செய்ய நீர் எங்கே என்று அவர் கண்கள் தேடுகின்றன. அதோ;' அதோ, என்று காண்கிருர். 'ஓ' வென்று இரைச்சலோடு மலேபோல் எழும்பி விழுந்து கொண்டிருக்கின்ற நீர்க்

கடலை; அண்ட லிங்கமாகக் காட்சியளிக்கும் சிவலிங்கப் பெருமானுக்கு அபிஷேகம் செய்வதற்காகவென்று தண்ணீரைத் தேக்கி வைத்துக் கொண்டிருக்கும் மஞ்சனசாலை அல்லவா அந்த நீர்க்கடல்'' என வியந்தார். அத்துடனு......? அங்கிருந்து ஜலம் மொண்டு எப்படி அபிஷேகம் செய்வது...... ''கங்கைகொண்ட சோழிங்கருக்கே, அபிஷேகம்செய்ய இரண்டு மைல் நீளத்திற்குமேல் சாரம் கட்டியன்றோ நீர் மேலே எடுத்துக் கொண்டு போகப்படுகிறது. பூமியாகிய ஆவுடையார்மேல் கவிழ்க்கப்பட்டுள்ள வான லிங்கத்திற்கு அபிஷேகம் பின் எப்படி நடக்கிறதென்றால், கருநிறமிக்க மேகங்கள் இருக்கின்றனவே, அவைகள் ஆழ் கடலிலிருந்து நீரை மொண்டு மொண்டுபோய் மழையாக அபிஷேகம் செய்கிறதாம். மழை ஓய்ந்தவுடன் வானைப் பாருங்கள். எவ்வளவு சுத்தமாக நீலவண்ணம், வெண்ணிற வண்ணமாகக் காட்சியளிக்கிறது. இதுதான் அபிஷேகத்திற்குப்பின் அண்டலிங்கப் பெருமானுக்கு உடுத்தப்படும் ஆடையாம். வானவெளியே 'டால்' அடிக்கும் மாணிக்கக்கற்களைப் பதித்து வைத்தாற்போல வெட்டி வெட்டிக் கண் சிமிட்டும் விண்மீன்களின் கூட்டம் சரம் சரமாக இருக்கின்றதே, அது சிவலிங்கப் பெருமானின் ஆபரணங்கள் அல்லவா? அவன் திருமேனியை அலங்கரிக்கும் தூய அணிகலன்கள் அல்லவா? அவைகள்தான் கண்ணைப் பறிப்பதுபோல வெள்ளை வெளேரென்றிருக்கும் நந்தியாவட்ட மலர்கள் அன்றோ என்பதாக அடுத்து அடுத்துக் காட்சியும், கற்பனையும் அவர் உள்ளத்திலே தோன்றுகிறதே.

*'' தரையுற்ற சத்தி தனிலிங்கம் விண்ணுந்*
*திரைபொரு நீரது மஞ்சனசாலை*
*வரைதவழ் மஞ்சுநீர் வானுடு மாலை*
*கரையற்ற நந்தி கலையுந்திக் காமே''*

என்று பாடுகின்றார் திருமூலர். அவருக்குத் தோன்றியது நமக்கு ஏன் தோன்றவில்லையெனக் கேட்கலாம்; அவர் வீட்டிலே சிவலிங்க பூசை செய்பவர்; திருக்கோயில் சென்று சிவலிங்க வழிபாடு செய்பவர்.........க்ஷேத்திரம் க்ஷேத்திரமாக வடகயிலையினின்று புறப்பட்டு பொதிகை மலை நோக்கி இடையேயுள்ள சிவ தலங்களையெல்லாம் தரிசித்துவந்தவர் அல்லவா? அவருக்கு அப்போது பூமியையும், வானையும் சிவபெருமானுகக் காணுமல் பின்னர் எப்படிக் காண முடியும்? இங்கே வெகுவிமரிசையாக துறைசை ஆதீனத்து 21-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகசுவாமிகளின் கருணையினுல் திருமந்திர மகாநாடு நடைபெற்று வருகின்றது. ஏராளமான அன்பர்கள் பலர் இங்கே வந்திருக்கிருர்கள். மாநாடு முடிந்து இவர்கள் போகிருர்கள். ஓரிடத்தில் 500 பேர்களுக்குமேல் மக்கள் கூட்டமாக நின்று கொண்டிருந்தால் 'இங்கே என்ன கூட்டம்......? இங்கும் ஒரு திருமந்திர மகாநாடு நடக்கிறதோ'' என இவர்கள் எண்ண மாட்டார்களா? அதைப்போல சண்டை சச்சரவிலேயே ஈடுபடுபவர்கள் அந்தக் கட்டத்தில் சண்டை நடக்கிறதோ என எண்ணி ஓடுவது இயல்புதானே. இதைத்தானே Association of ideas என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். ஒவ்வொருவனும் தன்னுடைய சகவாசம், அதனுல் ஏற்படுகின்ற சகவாசக் கருத்து இவைகளைக் கொண்டுதானே உலகத்திலுள்ள மற்ற நிகழ்ச்சிகளைப் பார்க்கின்றுன். சிவப்புக் கண்ணுடி போட்டுக் கொள்பவருக்கு உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் சிவப்பாகவும், பச்சைக் கண்ணுடிக்காரருக்கு எல்லாப்பொருளும் பச்சையாகத் தோன்றுவனமாப்போலே உள்ளத்தில் சதா இறைவனையே பூசித்துக்கொண்டிருப்போருக்கு சதா புறக்கண்களால் அவரது திருமேனியழகை, வண்ணத்தைக்கண்டு ஆனந்தித்துக்கொண்டிருப்போருக்கு உலகிலுள்ள சகலவற்றையும் ''அவனுகவும், அவன் உருவமாகவும்தானே'' காண்பார்கள்.

ஆகவே, திருமூலதேவரும் பார்த்தார்-சொல்லுகின்றுர். ''அப்பா, நீ வீட்டில் ஸ்படிக லிங்கத்தைப் பார்த்திருக்கிறுய் அல்லவா? பின்னர் சிவக்ஷேத்திரங்களெல்லாம் சென்று திருக்கோயில்களிலே எழுந்தருளியிருக்கும் லிங்கங்களை எல்லாம் பார்த்திருக்கிறுய் அல்லவா? இதோ பார் அவைகள் எல்லாவற்றையும்விட இது பெரிய லிங்கம். இதற்கு அண்ட லிங்கம் என்று பெயர்.

பூமியாகிற ஆவுடையார் மேலே லிங்கமாகிற வான் கவிழ்க்கப்பட்டிருக்கிறது.

"தாரையுற்ற சக்தி—விண்ணும் தனி லிங்கத்திற்கு அபிஷேகம்செய்யவேண்டுமானால் நீருக்கு எங்கே போவது என்று கவலைப்படாதே...... திரை பொரு நீரதுதான் மஞ்சனசாலை......" எப்படிக் கடலிலிருந்து நீரை மொண்டு அபிஷேகம் செய்வது என்ற கவலையும் உனக்கு வேண்டாம் மேகங்களே அதனைச் செய்கிறது. தரைதவழ் மஞ்சுநீர்; உடையும், அணிகலங்களும், வானும் அதினுள்ளே புதைக்கப்பட்டிருக்கும், மாணிக்கங்களைப்போல் மினுமினுக்கும் தாரகைக் கூட்டங்கள் தான் என்பதாக" வானுடு மாலை கரையற்ற நந்தி கலையுந்திக்காமே" என்பதாகத்திருமூல தேவர் பசுக்களாகிய மக்கள் ஆன்ம ஞானம் அடைவதைக் கருதி அண்டலிங்கத்தைக்கண்டார். பின்னர் பிண்டலிங்கத்தைக்காட்டினார். எப்படியென்றால் ஒரு கட்டிளம்காளை மணப் பருவம் அடைந்த யுவன் திருவாவடுதுறையில் இருக்கிறான், ஒரு அழகான பெண்ணும் காசியில் இருக்கிறாள். இவர்கள் இருவருக்கும் மணம் செய்யலாமென யோசிக்கப்பட்டது. ஆனால் ஆண் முதலில் பெண்ணைப் பார்க்கவேண்டாமா? பெண் அழகுள்ளவளாய் இருப்பாளா? சப்பைமூக்கும், கோண வாயுமாக இருக்க மாட்டாளே" என்ற ஐயம் நீக்கப்பெற்றாலன்றோ பெண்ணை மணக்கப் பையன் உள்ளம் காதல்பெறும். காசிக்குப் போய்வருவது என்றாலும் செலவு மிக அதிகமல்லவா? ஆகவே முதலில் பெண்ணின் போட்டோவைத் தருவிக்கிறார்கள். போட்டோவைப் பார்த்த அவள் பேரில் இவனுக்கு ஓர் உள்ளக் கனிவு. உள்ளக் காதல் ஏற்பட்டுவிட்டால், இவன் அடுத்த கணமே காசிக்குப் போய்விடமாட்டானா நேரில் பெண்ணைப்பார்க்க.

தான் நேரில் பார்க்காத காரணத்தால் அந்த நிழற்படம் பொய்யாகுமா? அந்த நிழற்படத்தைப் பிடித்த ஒருவன் அந்த உருவத்தை நேரில் பார்த்துத்தானே பிடித்திருக்கிறான். பின்னுலதன்னுடைய உரிமைப் பொருளாக ஆக்கிக்கொள்வதற்கு முதற்படியாக பெண்ணின் உருவத்தைப் படத்தில் தானே பார்த்தான்,

அதைப் போலவேதான் நமது பெரியோர்கள் ஆண்டவனைக்கண்டஅநுபூதி மகான்கள் அவன் உருவத்தை நிழற்படமாகப் பிடித்து அண்டலிங்க உருவமாகக் காட்டினார்கள். பிண்டலிங்க உருவமாகத் தந்தார்கள். நாமும் அந்த லிங்க உருவத்தை அன்போடு உள்ளக்கனிவோடு காதலோடு வழிபட்டால் அதற்கு உரித்தான நிசப் பொருளைப்பார்க்கமுடியும்.

அப்படிச் செய்யாமல் பிண்ட லிங்கமே பொய் என்றால் கல்லியாணம் செய்துகொள்ள விரும்பிய பையன் போட்டோவிலேஉள்ள பெண்ணே இருப்பது பொய் என்பதைப் போலத்தானே இருக்கும். பெண்ணின் நிழற்படமிருப்பதால் படத்திற்குரிய பெண் இருப்பது நிஜம். படத்தைப் பிடித்தவன் ஒருவனும் அவளைப் பார்த்திருக்கிறான் என்பதும் நிஜம். அப்படியே ஆண்டவன் இருப்பதும் நிஜம். நேரில் பார்த்தவர்கள் சொல்லும் கருத்துக்களை நாம் ஒத்துக்கொள்ளத்தான் வேண்டியதாக இருக்கும்.

பார்த்தவர்கள் ஏன் அப்படியே அவனை நமக்குக் காட்டிவிடக்கூடாது. எதற்காக அவனை நீயும் பார்ப்பதாயிருந்தால் இந்தந்த நெறியில் இரு என்று சொல்லுகின்றார்கள் எனக் கேட்கலாம்.

ஒரு பாட்டி சின்னஞ்சிறு கிண்ணி வெண்ணைபோல அன்ன அமுதைப் பிசைந்து எடுத்துக் கொண்டு வீதியிலுள்ள மரத்தையும், வண்டியையும், மாட்டையும் காட்டிக் காட்டி சின்னச்சின்ன உருண்டையாகக் குழந்தைக்கு உணவை ஊட்டுகிறாள். அப்படியே குழந்தை முன், 'இந்தா சாதம்' என்று வைத்துவிட்டால் என்ன? குழந்தையால் சாப்பிடமுடியுமா? உணவை வீசுக்கும். சாப்பிடமாட்டேன் என அழக்கூட அழும். அதைப்போல ஈசனிடம் அப்படியே அழைத்துப் போய் விட்டால் மாத்திரம் இவர்களுக்கு என்ன பயன்? நேரில் பார்க்கும் போது நன்மையை விட தீமையே இவர்களுக்கு அதிகம் உண்டாகலாம். ஆகவே

நமது பெரியோர்கள் சமய ஆன்ம ஞானம் எதுவுமே இல்லாத குழந்தைபோலிருக்கும் நமக்கு கொஞ்சம் கொஞ்சமாக அண்டலிங் கத்தையும், பிண்டலிங்கத்தையும் காட்டி எங் கும் நிறைந்த பரம்பொருள் இறைவனை அடைய வேண்டுமென்றதோர் வேட்கையை முதலில் எழுப்புகின்றார்கள். ஆண்டவனைக் கண்டு அவன் அருள் இன்பத்தில் திளைத்தவர்கள், "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற பெருங்கருணையோடு, தன்னைப்போல பிறரும் இறைவன் அருள் பெற படிப் படியாக பல நெறிகளை வகுத்துக் கொடுத்து, தாங்களும் ஞான வொளியாகத் திகழ்ந்தார்கள். அடிப்படி யிலுள்ள ஒருவன் படிப்படியாக ஏறிச் சென் றால் தானே மேல்மாடத்தை அடையமுடியும்? படியேறாது மாடம் போய்விடவேண்டு மென்று சிந்திப்பது சரியா?

வீட்டிலே விருந்தாளி வந்து விட்டார்கள். வடை பால்போளி பாயசத்தோடு தாயார் உண வைச்சமைக்கிறாள். ஆக்கியஉணவை விருந்தாளி களுக்கு எல்லாம் நிறையப்போடுகின்றாள். வீட்டி லே கறந்து வைத்திருக்கிற பசும்பாலைக் கூழ் போலக்காய்ச்சி தண்ணீர் விடாமல் அப்படியே அவர்களுக்குக் கொடுக்கிறாள். ஆனால் தன் னுடைய கைக்குழந்தைக்கோ கால் ஆழாக்குப் பசும்பால் எடுத்து அதில் வெந்நீரைக்கலந்து போட்டுகிறாள் என்றால் குழந்தையிடம்தாய்க்கு அன்பு இல்லை என்று அர்த்தமா?

அதைப்போலவே ஒவ்வொருவரும் சரியான குருவை நாடிவிட்டால் குருவானவர் இவனது மனப்பரிபக்குவத்திற்கு ஏற்ப ஈசனது திருவருள் விலாசத்தைப் பெறுவதற்கான மார்க்கத்தைப் போதிக்கிறார். தாயைப் போலவே குருவுக்கும் தனது சீடன் சீக்கிரத்திலே வெற்றிபெறவேண்டு மென்ற அவா அதிகமிருக்கும் என்பதில் யாருக்கு சந்தேகம் உண்டு?

ஆண்டவனது அருள் ஞானத்தைப் பெற்ற நமது திருமூலதேவரும்கூட பிண்ட லிங்கத் தைக்காட்டி அண்டலிங்கத்தைக்காட்டி நமக் குப் பல அரிய நெறிகளையெல்லாம் வகுத்திருக் கின்றார்கள்.

நவராத்திரி கொலுப்படியில் வைக்கப்படும் சிவலிங்கம் வேறு. வீட்டில் பூசை செய்யப்படும் சிவலிங்கம் வேறு. திருக்கோயில்களில் பிரதிஷ் டை செய்யப்படும் லிங்கங்கள் வேறு. இவை கள் உருவத்தில் எவ்வித மாற்றம் உடைத்தா யிருப்பினும்கூட இவைகள் எல்லாம் ஆண்ட வன் திருமேனியை நினைவு படுத்தும் சின்னங்க ளாகும். இந்த உருவத்தைத்தான் அகண்ட நீர், நீலவான் பரப்பிலே திருமூலர் நமக்குக் காண பித்தார். அந்த அண்ட லிங்கத்தையும் உடனே வழிபடலானார். அப்படிப்பட்ட அருட்கண் நமக்கெல்லாம் இருக்கவேண்டாமா? நம் எல் லோருக்கும் கண்களிருந்தால்மட்டும்போதுமா?

எனது நண்பர் ஒருவர் மலையாளத்தில் காட் டிலாகாவில் வேலையாய் இருக்கிறார். அவர் நல்ல பெரிய சேகேறிய தேக்குமரத்தை எனக்கு அனுப்பி வைத்தார். நல்ல அருமையான பெரிய மரம் அது.

எனது பக்கத்து வீட்டிலுள்ள பாட்டி ஒரு வள் அந்த மரத்தைப் பார்த்து விட்டாள். ஆகா எவ்வளவு பெரிய மரமாக இருக்கிறதே. இது வும் பனிக்காலமாயிற்றே. வெந்நீரில் ஸ்நானம் பண்ணலாமென்றாலும் அடுப்பெரிக்கவிறகு இல் லையே. இந்த மரம் கிடைத்தால் இதை வெட்டி அடுப்பெரிக்கலாமே; என நினைத்தாள். பாட்டி யின் கண்கள் அது சேகேறிய தேக்கு மரமா யிற்றே என்று பார்க்கவில்லை. பாட்டியின் கொள்ளிக்கண்கள் அந்த மரத்தை எரித்து விட்டது.

ஆனால், அதே தேக்கு மரத்தை ஒரு தச்சன் பார்த்தான். "அடடா! இது எப்படிப்பட்ட மரம்! இதைக்கொண்டு இரண்டு மூன்று நாற் காலிகள், மேஜைகள் எல்லாம் பண்ணலாமே" என எண்ணினான்.

அதையே ஒரு மரச்சிற்பி பார்த்தான். அடடா எத்தனை அழகான தேக்கு மரம். இது இந்த சே கேறியமரத்திலே ஆண்டவனதுதிருவிளையாடல் களையெல்லாம் அப்படியே செதுக்கி வைத்தால் எவ்வளவு அழகாக இருக்குமென எண்ணினான்.

பாட்டியும், தச்சனும், மரச்சிற்பியும் ஒரே மரத்தைத்தான் பார்த்தனர். பாட்டி, தச்சன், சிற்பி இவர்களது கண்கள் ஒரே மரத்தைத்தான் பார்த்தன என்றாலுங்கூட அவர்கள் உள்ளக் கருத்தோடு அந்தப் பார்வை சேர்ந்தபொழுது வெவ்வேறு விதமாக உபயோகப் படுத்தலாமே யென தோன்றவைத்தது. பார்த்தவர்களுடைய கண்களுக்கும் எந்த விதமான வித்தியாசமும் கிடையாது. அவர்கள் மூவரையும் டாக்டரிடம் அழைத்துச்சென்று கண்களைப் பரிசோதித்தாலும் எந்தவிதமான வித்தியாசத்தையும் காண முடியாது. அவர்கள் உள்ளுக்குள்ளேயுள்ள கருத்தில் தான் மாறுபாடு காணமுடியும்.

நல்லவர்கள் என்றால் அவர்கள் முகம் தாமரை போன்றும், கெட்டவர்கள் என்றால் அவர்கள் முகம் வேறுவிதமாகவும் இருக்குமென்றும் யாரும் நினைக்கக் கூடாது. கெட்டவர்கள் என்றால் பூதம் போலவோ, பேய் போலவோ ஒன்றும் இருக்கமாட்டார்கள்.

" மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங் கண்ட தில் "

என்று நல்ல மக்கள் எப்படியிருப்பார்களோ அப்படியே தான் அப்பா கெட்ட மக்களும் இருப்பார்கள் என்று திருவள்ளுவர் குறிப்பிட்டிருப்பதைக் கவனிக்கவேண்டும். ஆகவே நல்லவர்களுக்கும், கெட்டவர்களுக்கும் உருவத்தில் வித்தியாசம் இருக்காது.நல்லவர்களுக்கு நல்ல கருத்தோடு இணைந்த அருட்கண் இருக்குமானால், கெட்டவர்களுக்குக் கெட்ட கருத்தோடு கூடிய கொள்ளிக் கண் தான் இருக்கும்.

சேகேறிய கருங்காலி மரத்தைக் கண்ட பாட்டி அதைச் சுட்டு எரித்து விட்டாள். அது சேகேறிய நல்லமரமாயிற்றே என்றகவலை அவளுக்குக் கிடையாது. அம்மரத்திலேறி நிற்கும் வண்ணத்தையும், அவள் பார்க்கவில்லை. அதன் திண்ணத்தையும் அவள் பார்க்கவில்லை. ஆனால் அதை விறகாகப் பார்த்தாள். தச்சன் இருக்கானே. அவன் பாட்டியையும்விட ஒரு படி மேற்பட்டவன். அவன் அதன் வண்ணத்தையும் பார்த்தான். திண்ணத்தையும் பார்த்தான். ஆனால் எல்லோருக்கும் உபயோகப்படக் கூடிய வகையில் அதைச் சிறப்பாக என்ன செய்யலாமென்று எண்ணவில்லை. தன் எசமானருக்கு உபயோகப் படக்கூடிய நாற்காலி மேஜை போன்ற கருவிகளாகச் செய்யலாமே யென எண்ணினான். அவன் எண்ணியதே நியாயமெனத் தற்காலத்தில் utility value அதிகப்படுத்திப்பேசும் பொதுவுடைமைக்காரர்கள் சொல்லலாம்.

ஆனால் நாற்காலி தனியாக இருந்தால் என்ன பயன்? அதன்மேல் உட்காருவதற்கு ஒரு மனிதன் இருந்தால்தானே அதன் பயன் புலப்படும். கருவிக்குத் தனியான யோக்யதை என்ன இருக்கிறது? அதை உபயோகப்படுத்துபவர் இல்லா விட்டால் அதனால் என்ன பயன்?

அதே மரத்தில் இறைவனது திருவிளையாடல்களை சிற்பியை விட்டுச்செதுக்கச் செய்தால் அது கலைப்பொருளாகிறது. கலை தனித்திருந்து பிறருக்கு இன்பம் பயக்கவல்லது· கலை ஒன்றுதான் மனிதர்களின் கவலையைப் போக்கவல்லது. கலைப்பொருள் பிறிதொன்றின் துணை ஏதுமின்றி அதுவே தனித்திருந்து அழியாது விளங்குவதோடு கூட ஆயிரமாண்டுகளுக்குப் பின்னரும்கூட அதனைப் பார்ப்போர் பரவசம் அடையத்தக்க வகையில் அன்றே அமரத்துவம் பெறுகிறது.

சிற்பியின் கண்கள் மரத்தைப் பார்த்தன. உள்ளக்கருத்தோடு ஒன்றிப் பார்த்தன. மரத்தை மாத்திரம் பார்த்திருந்தால் பாட்டியின் கொள்ளிக் கண்களைப்போல அதனை எரிக்கலாமே எனத்தான் எண்ணியிருப்பாள். அம்மரத்தின் வண்ணத்தையும், திண்ணத்தையும்கூட அவன் கண்கள் பார்த்தன. வண்ணத்தையும், திண்ணத்தையும் மாத்திரம் பார்த்திருந்தால் தச்சனைப் போல நாற்காலியாகவும், மேஜையாகவும் ஒரே கருவிப் பொருள்களாகப் பண்ணலாமே யென்று தான் எண்ணியிருப்பான்.

ஆனால் பண்பட்ட உள்ளத்தோடு கலை ஞானம் ஊன்றி நின்ற கருத்தோடு அம்மரத்தையும் அதன் வண்ணத்தையும், திண்ணத்தையும் பார்த்தான். அடடா! எப்படிப்பட்ட சேகேறிய மரம்

இது. இதில் என்னென்ன கலைப்பொருள்களைச் செய்யலாம். என்றும் அழியாத அமரத்துவம் பெறும் எந்த சிற்பத்தைச் செதுக்கலாம்' என எண்ணிற்று அவள் உள்ளம்.

அருட்கண் இவன் பெற்றவனாக இருந்ததால் தானே இவ்வளவையும் அவனால் பார்த்து பரவசப்பட்டு, என்ன செய்யலாமென யோசிக்க முடிந்தது. இவன் கண் கொள்ளிக் கண்ணாயிருந்தால் மரத்தை இவனும் எரிக்கத்தானே எரித்திருப்பான். ஆகவே அகத்தில் அருட்கண் இருந்தால் தானே அரும்பொருள்கள் தோன்றும். அகத்திலே அருட்கண் இல்லாதவர்களுக்கு புறக்கண்ணால் எதைப்பார்த்தால்தான் என்ன? நம் வீட்டிலே புடலை காய்த்துத் தொங்குகிறது



திருமந்திர மகாநாட்டு விழாவில் கலந்துகொண்ட பிரமுகர்களின் ஒரு பகுதி.

என்று வைத்துக்கொள்ளுங்கள். அருட்கண்ணில்லாது பார்ப்பவன் அதன் எழிலையும், மென்மையையும் பார்த்துக்கொண்டே யிருப்பானா? பறித்து ஆக்கி உண்பான். அன்றிச் சந்தைக்கு அனுப்பிப் பணமாக மாற்றிவிடுவான். ஆனால் அருட்கண் பெற்றவன் அதைப்பார்த்தால் அதன் வண்ணத்தையும், மென்மையையும் கண்டு இறைவனது அழகையும் அதில் கண்டு ஆனந்திப்பான். அதைப் பறித்தாலும் மகேஸ்வர பூஜைக்கு நிவேதனமாக்கி இறைவனைக் களிப்படையச் செய்கின்றான். கருத்திலே அருளிருந்தால் தானே ஆண்டவனை அருள்மயமாகக் காண்கின்ற தன்மை ஏற்படும்.

வரகுணபாண்டியன் என்ற ஒரு பாண்டிய மன்னன் இருந்தான். அவன் சோழநாட்டையும், பாண்டிய நாட்டையும் அக்காலத்தில் சேர்த்து ஆண்டான். ஆற்றல்மிக்க அவன் பாண்டியநாட்டு மன்னனாகை மதுரையில் தங்கிச் சோழநாட்டையும் தன் ஆணையின் கீழ் ஆண்டிருக்கலாம். அல்லது சோழநாட்டுத் தலைநகரான தஞ்சையிலே தங்கிக் கொண்டும் தன் அரசாட்சியை செலுத்தியிருக்கலாம். ஆனால் குழந்தையிலிருந்தே சிவலிங்க வழிபாட்டில் ஊன்றிய பற்றுக் கொண்டிருந்த அவன் எந்த ஊரிலே பெரியதொரு லிங்கமிருக்கின்றதோ அந்த ஊரிலே தங்கி அரசாட்சி புரிவதோடு நாள்தோறும் சிவலிங்கப் பெருமானையும் வழிபட விரும்பினான். ஆகவே திருவிடைமருதூரில் தனது தலைநகரை அமைத்துக்கொண்ட வரலாற்றைப் பார்க்கிறோம். அருள்நோக்கம் படைத்திருந்த அம்மன்னன் ஒருநாள் ஆலயத்திற்குச் செல்ல அங்கிருந்த வேப்பமரத்தில் கனிகள் பழுத்துக் குலுங்கியிருக்கக் கண்டான். அக்கனிகளெல்லாமே அவனுக்குச் சிவலிங்க ரூபமாகவே காட்சியளித்தன. உடனே அம் மரத்திற்கு மேல்விதானம் அமைக்கச் செய்தான் அம் மன்னன்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பழனியில் ஆவினன்குடியில் பேகன் என்றொரு மன்னனிருந்தான். அவன் சதா வழிபடும் தெய்வம் முருகன்: ஒருசமயம் அவன் வந்துகொண்டிருக்கையில் ஒரு மயில் ஆடிக்கொண்டிருந்தது. ஆடும்பொழுது மயில் அடிக்கடி "சர்ர் சர்ர்" என உடம்பைச் சிலிர்த்துக்கொள்ளும் அல்லவா? அதைப் பார்த்த அந்த அரசன், "அடடா: நாம் வழிபடும் எம்பெருமான் முருகனது வாகனமல்லவா இது: உடம்பைச் சிலிர்த்துக்கொள்ளும்படியாய்க்குளிர் தாங்கவில்லையோ என்னமோ", எனக் கருதித் தன்னுடல் மேல் போர்த்தியிருந்த சால்வையை எடுத்துப் போர்த்தினான் என்பதையும் பார்க்கிறோம். உள்ளமும் கருத்தும் கனிந்து நிற்க, உலகத்திலுள்ள பொருள்கள் யாவற்றையும் இறைவன் திருவுருவமாகவே காணும் அருட்கண்பெற்றவர்கள் அல்லவா இவர்கள்.

இப்படிப்பட்ட "அருட்கண்ணுள்ளோர்க்கெதிரே சிவபெருமான் தோன்றாமல் என்ன செய்வார்? இதைத்தான் திருமூலர் சொல்லுகின்றார்

*" அருட்கண்ணி லாதார்க் கரும்பொருள் தோன்றா*
*அருட்கண் ணுளோர்க்கெதிர் தோன்றும் அரனே "*

என்பதாக.

ஒருவன் குருடனாயிருந்ததால் அவனுக்கு இருளுக்கும், வெளிச்சத்திற்குமுள்ள வித்தியாசம் எப்படித் தெரியும்? நன்றாகக் கண்களிருந்தால் மாத்திரம் போதுமா? ஒரு வாலிபன். அவனுக்குக்கண்கள் நன்றாக இருக்கின்றன. இருந்தும் அவனால் எந்தப் புத்தகத்தையும் படிக்க முடியவில்லை. உடனே கண்டாக்டரிடம் சென்று, "என்னால் படிக்கமுடியவில்லை. கண்ணாடி போட்டுவிடுங்கள் என்றான். அவர் ஒவ்வொரு பவர் கண்ணாடியாகப் போட்டுப் படிக்கச் சொன்னார். ஐந்தாறு கண்ணாடிகள் மாற்றி மாற்றிப் பார்த்தும் அவனால் படிக்கமுடியவில்லை. கடைசியில் டாக்டர் அவனிடம் "உனக்குப் படிக்கத்தெரியுமா"? என்றார். அவன், "எனக்குப் படிக்கத் தெரியாது. கண்ணாடி போட்டால் படிக்கலாம் என்றல்லவா எண்ணினேன்" என்றான். (பலத்த சிரிப்பு) கண்ணாடி போட்டுக்கொண்டால் எதையும் படித்துவிடலாமென்று எண்ணிய எழுத்துவாசனையற்றவனைப்போல திருமுறைகளை எல்லாம் வாங்கி வைத்துவிட்டால் அருள் ஞானம் வந்துவிடுமென யாரும் கருதக்கூடாது. அருள் ஞானம் அடையத்தக்க வகையில் நாம் நம்மைச் செம்மைப் படுத்திக்கொள்ளவேண்டும். அருள்ஞானம் அடைந்துவிட்டாலோ அவர்களுக்கு எல்லாம் ஒளிமயமாகப் பிரகாசிக்கும் என்பதாக,

*" இருட்கண்ணி னோர்க்கங் கிரவியுந் தோன்றா*
*தெருட்கண்ணி னோர்க்கெங்குஞ் சீரொளியாமே "*

என்கின்றார் திருமூலர்.

இன்றையதினம் பாருங்கள். நமது செவிப்புலன்களால் உணரக்கூடிய சாதாரணமான விஷயங்களையே நம்மால் உணர முடியவில்லையே.

மலரின் மணத்தை நம்மால் நுகர முடிகின்றதா? மிகமிக மென்மையான தாமரை மலரில் மணமிருக்கிறது என்று சொன்னால் அது பலருக்கு வேடிக்கையாகவன்றே உளது. சிகரெட் புகையை இழுத்து இழுத்து மலரின் மென்மையான வாசனையை நுகரக்கூடிய சக்தியை அவர்களின் நாசி இழந்துவிட்டது என்பதில் தவறென்ன?

சோலையிலே "கூகூ" எனக் குயில் கூவுகின்றது அவர்கள் காதில் விழவில்லையே. புகையிலே, சிகரெட், சினிமா போன்றவைகளின் விளம்பரங்களுக்காகத் தெருவிலே ஒலி பெருக்கி வைத்து இரவு பகலென்று பாராமல் பாடி அலறிக் கொண்டே போகின்றார்களே. அதைக் கேட்டுக் கேட்டு அவர்கள் செவிகள் மறுத்தன்றே போய்விட்டது. இல்லையாயின் மாணிக்க வாசகப் பெருமானைப் போல,

*" கீத மினிய குயிலே கேட்டியோ எங்கள் பெருமான்*
*பாதமிரண்டும் வினவிற் பாதாள மேழினுக்கப்பாற்*
*சோதி மணி முடி சொல்லிறந்து நின்ற தொன்மை*
*ஆதிகுணமொன்று மில்லானந்த மிலான் வாக்*
*[கூவாய், கூவாய் "*

என்று பாடமாட்டார்களா?

மெல்லிய மலரின் மணத்தையும், குயிலின் இனிமையான கீதத்தையும் நம் மேலே பட்டு நம்மையெல்லாம் தடவிச் செல்லும் காற்றின் மென்மையையும்கூட உணர முடியாதபடி நமது உடல் உறுப்புகள் எல்லாம் மறுத்துவிட்டன. இவைகளையெல்லாம் உணரக் கூடிய ஆற்றல் நமக்கிருக்குமேயானால், அத்துடன் ஆண்டவன் திருவுருவத்தை எங்கு பார்த்தாலும் காணக் கூடிய அருட்கண்ணும் பெற்றுவிட்டோமானால் நம்புலன்களின் ஊடே கெட்டவைகளும், நல்லனவாகவன்றே நுழையும். அருட்கண் பெற்றவர்களுக்கு நன்மைகளே வந்துகொண்டிருக்கின்றன என்று சொல்வதைவிட வருகின்ற தீமைகளும் நல்லனவாக மாறிவிடுகின்றன என்றல்லவோ சொல்லவேண்டும். குணங்களிலே ஆண்டவனைக் கண்டுகளிக்கும் அந்த அருட்கண் பெற்றோர்கள் குற்றங்களிலும் ஆண்டவன் திருவுருவத்தைத்தானே கண்டார்கள்.

ஆகவே நல்லதே அவர்களுக்குத் தோன்றும் என்பதைவிட, எல்லாம் நல்லதாகவே அவர்களுக்குத் தோன்றும் என்றுகூடச் சொல்லலாம்.

"குணமும் நீ – குற்றமும் நீ", என்பதாக குணத்திலும், குற்றத்திலும் சிவபெருமானை யன்றே அப்பெருமகான்கள் கண்டு ஆனந்தித்திருக்கிறார்கள். குற்றத்தையும் குணச்சிகரமாக விளங்கும் ஈசனுகவே எண்ணி நல்லது என்று பாடினார்கள் என்றால் காரணமென்ன? அவர்கள் ஈசனது அருள்நோக்கம் பெற்றவராதலின் உலகம் முழுவதுமே அவர்களுக்குத்திருவருள் பெற்றதாகத் தெரிகிறது. குணமும், குற்றமும் நல்லதும், தீயதும் நிரம்பிய இவ்வுலகத்தில் எல்லாம் சீரொளிபெற்று விளங்கும் ஈசனுகக் காட்சியளிக்கிறது.

இவர்கள் உள்ளம் திருவருள் பெற்றிருக்காவிட்டால் எல்லாம் இருள் மயமாகத்தானே தெரியும்.

வீதியிலே நடந்து செல்லும்போது ஒரு வீட்டை ஜன்னல் வழியே உற்று நோக்கினால் வீட்டிற்குள் விளக்கிருந்தால் அவ்வீட்டிற்குள் இருக்கும் பொருள்களும், படங்களும், மனிதர்களும் நம் கண்ணில்படும். அங்கே ஒளியில்லையாயின் எல்லாம் இருள்மயமாகவன்றே தோன்றும். ஆண்டவனது திருவருள் நம்முள்ளத்திலிருந்துவிட்டால் அந்த இருளும்கூட நமக்கு ஒளிமயமாகத் தோன்றாதா?

நிழலைக்கண்டே பேய், பிசாசு எனப் பயப் பயப்படுவாருண்டு. நிழலே அழகாகக் தோன்றுவதில்லையா? 'நிழல் படம்' பிடித்துக் கொள்ள பணத்தைச் செலவழித்துக்கொண்டு போட்டி போடுவதில்லையா? என்னையும் படம் பிடி, என்னையும் படம்பிடி என்கின்றேமே இருள்மயமான நிழலே, போட்டோ பிடிக்கும் ஒளிமயமான கருவிக்குள் புகும் போது அழகுள்ள நிழற்படமாக மாறிவிடுவது

போல, திருவருள் பெற்றோரின் கண்களுக்கு இரவியும், ஒளிமயமாகப் போவதில் வியப் பென்ன ? இதைத்தான் திருமூலர்,

"அருட்கண்ணி லாதார்க் கரும்பொருள் தோன்றா
அருட்கண்ணு ளோர்க்கெதிர் தோன்றும் அரனே
இருட்கண்ணி னோர்க்கங்கிரவியுந் தோன்றா
தெருட்கண்ணி னோர்க்கெங்குஞ் சீரொளி யாமே"

என்று பாடியிருக்கின்றார். இந்தத் திருமந்திர மகாநாட்டு மன்றத்தையே பாருங்கள். அவை யிலே கொலு வீற்றிருக்கின்ற மகாசந்நிதானத் தின் திருவுருவப்படம் பல பல க்ஷேத்திரங் களுக்குச் சென்றபோது பிடிக்கப்பட்ட அழ கான நிழற்படங்கள் எங்கு பார்த்தாலும் மாட் டப்பட்டிருக்கின்றன. அவைகள் எல்லாவற் றையும் ஒரே படமென்று சொல்லமுடியுமா ? ஒரே படமென்று சொன்னால் ஒரே படத்தை யே பல காப்பிகள் அச்சிட்டு எல்லா இடங்களி லும் மாட்டப்பட்டிருக்கவில்லை. அப்படி மாட்டப்பட்டிருந்தாலும் நீங்கள் ஒவ்வொரு படத்தையும் வியப்போடு உள்ளப் பூரிப்போடு பார்க்கமாட்டீர்கள். ஒரே படத்தைப் பார்க் கும்போது உள்ளப்பூரிப்பு ஏற்பட்டாலும்கூட அடுத்ததாக மாட்டப்பட்டிருக்கும் படத்தைப் பார்த்தால் "அடடே ! அதே படம்தான் இது" என்று சொல்லிப் போய்விடுவீர்கள். ஆனால் இங்கேயுள்ள ஒவ்வொரு படத்தையும் வியப் போடு, உற்சாகமாகப் பார்க்கிறீர்கள் என்றால் எல்லாம் ஒரே படமில்லை. ஒரு படத்திற்கும் மற்றொரு படத்திற்கும் வித்தியாசமுள்ளது.

மகாசந்நிதானம் ஒரு படத்தில் காசி விஸ்வ நாதப்பெருமானுக்கு பால் அபிஷேகம் செய் வதுபோலிருந்தால், மற்றொரு படத்தில் காசி விசாலாக்ஷி அம்மனைத் தரிசிப்பதுபோல் இருக் கின்றது. படங்கள் ஒன்றுக்கொன்று வித்யாச மாக இருந்தாலுங்கூட மகாசந்நிதானத்தின் திருவுருவை நேரிலே பார்த்துக்கொண்டிருக் கின்ற உங்கள் எல்லோர்க்கும் தெரியும், அப் படங்கள் எல்லாம் ஒன்றுதான் என்று. அப் படங்களிலே பதிந்திருக்கின்ற மகாசந்நிதானத் தின் சாயையில் எவ்விதமான மாற்றமும் இல்லையென்பதை நீங்கள் அறிவீர்கள்.

அதைப்போலவேதான் இறைவன் இவ்வுல கிலே பல பல பொருள்களை உற்பத்தி செய்திருக் கின்றான். அவைகள் ஒன்றுக்கொன்று வண் ணத்திலே வித்தியாசப்படலாம். உருவத்திலே வித்தியாசப்படலாம். குரலிலே வித்தியாசப் படலாம். ஆயினும் ஆண்டவனைக் கண்ட அநுபூதி மகான்களின் கண்களுக்கு அவைகள் யாவும் ஒன்றாகவேதான் தெரியும். பல்வேறு பொருள்களாயிருப்பதன் காரணமாகப் பலவும் ஒன்றேயாகியிருக்கும் தன்மையில் மாறுதல் இல்லை அல்லவா ? unity in divoty என்று சொல்வார்களே. அதைப்போல அருட்கண் பெற்றவர்கள் இவைகள் யாவையும் ஒன்றாகக் கருதினார்கள்.

" ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணுமே "

என்பதாகப் பாடிய அருட்கண் பெற்ற திருமூல தேவர்,

" ஒன்றெனக் கண்டேயெம் ஈசன் ஒருவனை
நன்றென் றடியிணை நானவனைத் தொழ
வென்றைம் புலனு மிகக்கிடந் தின்புற
அன்றென் றருள்செய்யும் ஆதிப் பிரானே "

என்பதாக எல்லாவற்றையும் ஒன்றாகவே, ஒரு கடவுளாகவே பாவிக்கும் தன்மையைப் பெற் றார். அதே நிலையை நாம் அடைவதற்கு அடிப் படையாகப் பாமர மக்களாகிய நமக்கு ஆறு வகை லிங்கங்களைக் காட்டி, பூசை செய்யும் வழிகளைச் சொல்லி, ஆண்டவனது அருளொளி கிடைப்பதற்கு நாம் நிற்கவேண்டிய நெறி களைச் சொல்லி உலகிலுள்ள பொருள்களையெல் லாம் ஒன்றாகவும், ஈசனாகவும் நோக்கும் அருட் கண் பெற்று, எல்லாப்பொருள்களையும் பார்க் கும்போது எல்லாம் இறைவன் என்ற நினைப்பே உண்டாகி பேதமில்லாத, அபேத ஞானமுண் டாகும் மார்க்கத்தைச் சொல்லியிருக்கிறார் ஏழாம் தந்திரத்திலே.

இவைகளையெல்லாம் நீங்கள் படித்துப்பயன் பெறவேண்டுமெனச் சொல்லிக்கொண்டு எனக்குப் பேச வாய்ப்பளித்த திருவாவடுதுறை ஆதீன மகாசந்நிதானம் அவர்களது கருணைக்கு நன்றி கூறிக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

**எட்டாம் தந்திரம்**

காஞ்சீபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி தலைமைத் தமிழ் ஆசிரியர் வித்வான் அருணை வடிவேல் முதலியார் அவர்கள் (1—2—54 திங்கள் கிழமை அன்று) விரிவுரையாற்றினார்கள். அவர் தனது சொற்பொழிவை ஆரம்பிப்பதற்குமுன் குருமகாசந்நிதானத்திற்கு வணக்கம் தெரிவித்துவிட்டு, திருமந்திர மகா நாட்டைக் கூட்டியது சிவநேசச் செல்வர்கள் செய்த பாக்கியம்தான் என்றும், இந்த மகா நாட்டில் தனக்குப் பேச வாய்ப்புக் கொடுத்ததினுல்தான் திருமந்திரம் பற்றி முழுவதும் படிக்க ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது என்றும் குறிப்பிட்டார்.

மேலும் அவர் பேசுகையில், ஞானம் இரு வகைப்பட்டது என்றும், கலைஞானம் என்று சொல்லுகின்ற ஒன்றும், அனுபவ ஞானம் என்று சொல்லப்படுகின்ற ஒன்றும் சேர்ந்தால் தான்ஞானம் பூர்ணத்துவம்அடைகின்றது என்றும் சொன்னார். கலைஞானம் என்பது நல்லஆசிரியர்களை அடுத்து, பல விஷயங்களை அவர் வாயிலாகக் கேட்டு, உண்மையான பொருளை உணர்ந்து ஐயம் திரிபுஅற அறிவைப் பெறுவது ஆகும் என்றும், பலருக்குக் கலைஞானம் இருக்குமே தவிர, அனுபவ ஞானம் இருக்காது என்றும், அனுபவ ஞானம் இல்லாதவர்கள் கலைஞானம் எவ்வளவுதான் பெற்றிருந்தாலும் இறைவன் திருவருளைப்பெற இயலாதவர்கள் என்றும், அனுபவஞானம் உள்ள ஒருவர்க்குக் கலைஞானம் இல்லாமலேயேகூட இறைவன் அருளைப்பெற முடியும் என்றும், அதற்குச் சான்ருகக் கண்ணப்ப நாயனர் சரித்திரம் உள்ளது என்றும் குறிப்பிட்டார். கலைஞானம் அனுபவ ஞானம் இரண்டும் ஒன்று சேரப்பெற்று இறைவன் திருவருளை அடைந்த திருமூலர் எழுதியது திருமந்திரம் எனவும் குறிப்பிட்டார்.

நமது சைவசித்தாந்தத்தினுடைய முடிவான கொள்கையே உலகத்தை சிருஷ்டிப்பன, காப்பன, அழிப்பன போன்ற முத்தொழில்களையும் புரியும் ஈசன் ஒருவன். அவன் கைலாயபதியான சாட்சாத் பரமேஸ்வரன் என்பதுதான் என்றும், சேக்கிழார் பெருமான் குறிப்பிட்டுள்ள, "ஈசன்பால் அன்பே" என்பதைச் சொல்லி, சிவபெருமானை முதல்வன் என எண்ணி அவன்பால் அன்பு உண்டாவதே ஞான மாகும் என்றும், எனவே ஞானத்தின் பயன் அன்பு என்றும், ஈசன்பால் முதலில் அன்பைப் பெற்ற கண்ணப்பர் பின் ஞானத்தை அடைந்தார் என்றும், ஆகவே அன்பும் சிவமும் ஒன்ருகி நிற்பதைக் காணலாம் என்றும் இதைத்தான் திருமூலதேவர்,

*" அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே"*

என்கின்ருர் எனக் குறிப்பிட்டார். மேலும், தன்னை மறப்பதே ஞானம். பிற உயிர்களின் பால் அன்பு உண்டானுல்தான், நான், எனது என்ற தன்னை மறக்க முடியும். உள்ளத்தில் அன்பு உள்ளோர் உலகில் இறைவனைத் தவிர, வேறு எதையும் காணமாட்டார்கள்" எனவும் குறிப்பிட்டார்.

திருமூலர் திருமந்திரத்தில் முதல் தந்திரமாக ஒழுக்க நெறியைச் சொல்லி, இரண்டாம் தந்திரத்தில் சிவநெறி உண்மைகள் சொல்லி, மூன்ரும் தந்திரத்தில் யோகம் பற்றியும், நாலாம் தந்திரத்தில் யோகத்தில் ஞானம் சித்திக்காதவர்களுக்கு மந்திரம், யந்திரம் முதலியனவும் சொல்லி, ஐந்தாம் தந்திரத்தில் சிவாகமப் பயன்களைச் சொல்லி, ஆரும் தந்திரத்தில் குருவின் மகிமை கூறி, ஏழாம் தந்திரத்தில் லிங்கத்தின் வகைகள், பூசை வகைகள் முதலியவற்றைச் சொல்லி, எட்டாம் தந்திரத்தில் ஞானச்செய்திகளாகப் பல விஷயங்களைச் சொல்லுகிருர் என்

றும், எட்டாம் தந்திரத்தை சுப்பிர பேதாகமத்தின் சாரம் என்பார்கள் என்றும், இதில் 527 திருப்பாடல்களும், 43 பகுதிகளுமாக இருக்கின்றன என்றும் குறிப்பிட்டார்.

எட்டாம் தந்திரத்தின் முதற்பகுதி உடலிற் பஞ்ச பேதம். அதாவது நமது உடம்பு பஞ்ச கோசங்களால் ஆனது.

இதை திருமூலர் சொல்லுகின்ருர் :-

*" காயப்பை யொன்று சரக்குப் பலவுள*
*மாயப்பை யொன்றுண்டு மற்றுமோர் பையுண்டு*
*காயப்பைக் குள்நின்ற கள்வன் புறப்பட்டால்*
*மாயப்பை மண்ணு மயங்கியவாறே "*

என்பதாக என்றும், காயப்பை என்ருல் ஸ்தூல தேஹம், இதை அன்னமய கோசம் என்பார்கள். மாயப்பை என்ருல் சூக்ஷம சரீரம். இதையே பரசரீரம் என்பார்கள். ஸ்தூல தேகத்திலுள்ள சூக்ஷமத்திலிருந்து இறைவன் பிரிந்து விட்டால் ஸ்தூலம் அழிந்துவிடும். சூக்ஷமத்திற்குள் இருக்கும் ஈசன் பாம்பு சட்டை உரிப்பதுபோல, அடிக்கடி உடலில்போட்டுக் கொள்ளும் உடைகளை மாற்றிக்கொள்வது போல ஒரு ஸ்தூலம்விட்டு மற்றெரு ஸ்தூலத்தைப் பற்றிக் கொள்ளுகிருர் என்ற கருத்தை,

" நாகமூடியவுரி போலும் " காயத் துகில் போர்வை யொன்றுவிட்டாங்கொன்றிட்டேயு மவரென்ன ஏய்ந்திடும் காயமே" என்பதாகத் திருமூலர் குறிப்பிட்டுள்ளார் என்றும் சொன்ஞர்.

அவத்தை என்ருல் நிலைகள் எனப் பொருள் படும் என்றும், அவைகள் மூன்று வகைப்படும் என்றும், அதாவது கேவல அவஸ்தை ஸகலாவஸ்தை, சுத்த அவஸ்தை எனப்படும் என்றும், நல்ல நிலையில் உறக்கம் என்பது இல்லாமல், தீட்சண்யமான புத்தியோடு பேசி, கேட்டுப் பணியாற்றுவது சகலாலவத்தை என்று பெயர் என்றும், மத்தியாலவத்தை என்ருல் மற்றப் பணிகளோடு இறைவனை நினைத்துக் கொண்டிருப்பது என்றும், சுத்தாவத்தையென்ருல், உலகத்தையே மறந்து, உறங்கும் நிலையிலும்கூட இறைவனை சதா நினைத்துக் கொண்டிருப்பது என்றும் குறிப்பிட்டார்.

சிலந்திப்பூச்சிஎப்படிக்கூடுகட்டிக்கொண்டு அதன் மத்தியில் உட்கார்ந்துகொண்டு அதில் வந்து சிக்கிக்கொள்ளும் பூச்சிகளை உணவாக உட்கொள்ளுகிறதோ, அதைப்போல இறைவன் ஐம்பொறிகளால் ஒரு கூட்டை அமைத்துக்கொண்டு அதன் நடுவே வசித்து பிராணிகள் பல செயல்கள் புரியுமாறு செய்கின்ருன் என்ற கருத்தைத் திருமூலர்

*" மத்திம மொத்த சிலந்தி வலயத்துள்*
*ஒத்தங் கிருந்து உயிர்உண்ணு மாறுபோல்*
*அத்தனும் ஐம்பொறி யாடகத் துள்நின்று*
*சுத்தமுதல் ஐந்துந் தானுண்ணு மாறே"*

என்று பாடியிருக்கிருர் என்றும் குறிப்பிட்டார்,

பசுக்கள் பல வண்ணம்.ஆனல் ஆன்மாக்கள் ஒருவகைதான். ஆயனைப்பின்தொடர்ந்து பசுக்கள் எல்லாம் போவது போல இறைவனுகிய தலைவனை நாடிப் பசுக்களாகிய எல்லா ஆன்மாக்களும் செல்லுகின்றன என்றும் குறிப்பிட்டு ஆணவமாகிற அறியாமை ஈசனை அறிய முடியாது செய்கிறது என்பதைக் காட்ட

*" மரத்தை மறைத்தது மாமத யானை*
*மரத்தின் மறைந்தது மாமத யானை*
*பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்*
*பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே"*

என்பதாக திருமூலர் குறிப்பிட்டுள்ளார் என்றும், தான் என்ற ஆணவம் நம்மை விட்டு அகன்ருல்தான் உலகம் முழுவதையும் இறைவனுகக் காணமுடியும் என்றும் குறிப்பிட்டார்.

*" ஆனைகள் ஐந்தும் அடக்கி அறிவென்னும்*
*ஞானத் திரியைக் கொளுவி அதனுட்புக்க*
*கோனை இருளற நோக்கும் ஒருவற்கு*
*வானக மேற வழியெளி தாமே "*

என்பதாக ஆனைகள் போன்ற பலத்தையுடைய ஐம்பொறிகளையும் வென்று அறிவாகிற ஞான ஒளியைக்கொண்டு தவம்செய்து சமாதி நிலை கூடிவிட்டால் (ஆனமலமறும் அப்பசுத் தன்மைபோம் ஈனமில் காயம் இருக்கும்) என்பதாக திருமூலர் கூறுவதாகவும் சொன்னார்.

*" வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன் நூல்*
*ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன*
*நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்*
*பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே"*

என்பதாகத் திருமூலர் கூறியுள்ளபடி பேதம், அபேதம் அற்ற ஒரு நிலையை எய்தி, ஈசனது அருள் ஞானத்தை அடைவதற்கு எல்லாவித மான தகுதிகளும் உடையவர்களாக மாறிவிடுவார்கள். பதிபசுபாசம் நீக்கப்பட்டு எல்லாம் ஒன்றென உணரும் ஆற்றல் பெறுவார்கள் எனவும் குறிப்பிட்டார்.

மாம்பாக்கம், குருகுலம், திருமந்திரப் பேராசிரியர் திரு. இளவழகனார் அவர்கள் (2—2—54 செவ்வாய்கிழமைஅன்று) விரிவுரையாற்றினார்கள். அவர்கள் பேசியதின் விபரம் வருமாறு:-

"துறைசை ஆதீன குருமகா சந்நிதானத்தின் திருமலரடிகளுக்கும், மகா

**ஒன்பதாம் தந்திரம்** நாட்டுக்குத் தலைவராக அமர்ந்திருக்கின்ற திரு.

ஆறுமுக நாவலர் அவர்களுக்கும் ஏனைய பெரியோர்களுக்கும், தாய்மார்களுக்கும் அடியேன் பணிவு.

திருமந்திரத்தைப் பற்றிப் பேச வேண்டுமென்று இங்கிருந்து அருள் அழைப்புக் கிடைத்தது. அதனை அருள் அழைப்பு என்றே கருதி, தகுதி பாராமல், மறுப்புக் கூறாமல் வருவதற்கு இசைந்து கொண்டேன்,

திருவாவடுதுறை என்பது இந்தத் தலத்தின் பெயர். துறை என்றால் முடிந்த இடம் என்று பொருள்படும். அந்த முடிந்த இடத்திற்குப் போய்ச் சேருவதற்கான பாதைகள் நெறிகள் எனப்படும். கடைசியாக எல்லோரும் ஒரு துறைக்கு வந்தேயாக வேண்டுமல்லவா? அதனால்தான் நான் இந்தத் திருவாவடுதுறைக்கு வந்து சேர்ந்தேன். அடியேன் மட்டுமா அப்படி ? "கைலாய ஒரு சித்தர்" எனச் சேக்கிழாரால் பாடப்பெற்ற திருமூலதேவரும் இங்கே தான் வந்து தங்கிவிட்டார். அவர் வந்துசேர்ந்த இடம் இந்தத் துறை தான். கைலாய சித்தர் திருவாவடுதுறைக்கு வந்து சேருவதற்குமுன் அவர் உள்ளத்தில் இருந்தது நெறிதான். இங்கு வந்த பிறகே பசுபோதம் நீங்கப்பெற்று, பதி ஞானம் கைவரப்பெற்று ஒரு துறை எய்தினார். அந்தத் துறையின் விளக்கப் பாடல்தான் திருமந்திரம். ஒரு துறையை அடைவதற்கு முன் தலம், தீர்த்தம், மூர்த்தி எனப்பலநெறிகள் வழிவரவேண்டும். ஒவ்வொரு தலத்திற்கும் ஒரு விதமான ஆற்றல் உண்டு. ஒவ்வொரு தலமாக தரிசித்து வந்துகொண்டே யிருந்த திருமூலரை இந்தத் தலத்திலேயே தங்கும்படி செய்த ஆற்றல் இந்தத்திருவாவடுதுறைக்கே உரியது. இந்தத் துறையிலேயே தங்கும்படியாக இந்த இடம் அவர் உள்ளத்தைக் கவர்ந்தது. அது தான் இந்த இடத்தின் பதிவு. இம்மாதிரி அருள்பதிவு பெற்றஇடங்கள்சிற்சிலதான்உண்டு. துறைசை ஆதீனமே அதனால் துறையுடைய ஆதீனமாக மாறிவிட்டது. திருவாவடுதுறை என்றால் ஞானிகளின் உள்ளத்திற்கு எத்தனையோவித மான பொருள் புலப்படுகின்றது

ஒரு ஆசிரியர், கரும்பலகையில் 'ட' என்று எழுதி, பின்னர் ஒரு பையனைக்கூப்பிட்டு 'அது என்ன?' என்றார், ஒரு பையன் 'ட' என்றான். படிக்கத்தெரியாத பையன் ஒரு கோடு என்றான். இவ்விரண்டும்மெய். படிக்காதவனுக்குக் கோடாகத்தான் தெரியும். படித்தனுக்கு முதலில் கோடாகவும், பின்னர் ட வாகவும் தெரிகிறது. அவன் சொன்னது பொய் என்றோ அல்லது இவன் சொன்னது பொய் என்றோ யாராவது சொல்லமுடியுமா? அதைப்போலவே திருவாவடுதுறை ஒரு ஊர். தஞ்சை ஜில்லாவிலுள்ளது என்று சிலர் கருதலாம். ஞானிகளுக்கு இது வெறும் ஓர் ஊர்மாத்திரமில்லை. "திருவருள் விலாசம்"பெற்ற இடமாகத் தோற்றமளிக்கிறது. திரு, ஆ, அடு, துறை என்றால் தற்போ

தத்தை ஒழித்து அருள் ஞானத்தைக் கொடுக்கின்ற ஒரு துறை என்றுதான் தோன்றும்.

இத்துறைக்கு வந்து சேருமுன் திருமூலதேவருக்குப் பாடல் எழுதும் ஆற்றல் இருந்திருக்குமேயானால் அவர் மூன்றே நாளில் மூவாயிரம் பாடல்களையும் எழுதிவிட்டுப் போயிருப்பாரே. இம்மென்னும் முன்னே மூவாயிரம் நாலாயிரம் பாடல் எழுதுவோர் இல்லையா?

*''ஆவடுதண்டுறை...சிவபோதியின்நீழலில்...நாதனை அர்ச்சித்து.. எண்ணிலிகோடி இருந்தேன்''*

என்று அவரே சொல்லுகிறார். அப்படி மூவாயிரம் ஆண்டுகள் தவம் இருந்து, மூவாயிரம் பாடல்கள் எழுதினார் என்றால் அவ்வித ஆற்றலை அவருக்குக் கொடுத்தது இந்தத் துறைதான் என்பதில் என்ன சந்தேகம் இருக்கிறது?

இப்படிப்பட்ட திருவருள் விலாசம் பதியப் பெற்றதான திருவாவடுதுறையில் திருமந்திர மகாநாட்டைக்கூட்ட குருமகா சந்நிதானம் கருணை கூர்ந்தது சாலச் சிறப்புடையது என்றும், திருக்கழுக்குன்றத்திலே ஒவ்வொரு ஆண்டும் திருமூலதேவர் விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது என்றாலும்கூட இவ்விடத்திலே நடத்துவதுதான் ரொம்பப் பொருத்தமுடையது எனத் தான் கருதுவதாகவும் குறிப்பிட்டார்.

மேலும், அவர் பேசுகையில் 'ஞானசம்பந்தப் பெருமான் சமயாசிரியர் அல்லவா? அவர் பெரிய தலைவரும்கூட. அந்தப் பெரியாராலேயே திருமந்திரம் இந்தத் துறையில் கண்டு பிடிக்கப்பட்டு வெளியிடப்பட்டது என்றால் திருமந்திரத்தின் பெருமையை நாம் எங்ஙனே சொல்ல முடியும்? நாம் பெருமைப்படத்தக்க வகையில் தமிழில் திருக்குறள், தொல்காப்பியம், புறநானூறு, சிவஞானபோதம், திருக்கோவையார் போன்றவைகள் இருக்கின்றன. இவைகள் எல்லாவற்றின் கருத்தும் திருமந்திரத்தில் அடங்கியுள்ளது. வேதமாகவும், ஆகமங்களாகவும் அந்நூல் திகழ்கிறது.

அதை ஆக்கிய திருமூலதேவர் ''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்:தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே'' என்று சொல்லுகிறார். தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே, என்னை நன்றாகப் படைத்தனன் என்று அவர் சொல்லும்போது அதிலேகாணப்படும் நம்பிக்கையையும், அமைதியையும் பாருங்கள். அதிலே சித்தத் தெளிவும் காணப்படுகிறது. எண்ணிலிகோடி ஆண்டுகள் தவமிருந்ததனால் ஏற்பட்ட அந்தச் சித்தத்தெளிவோடு, அமைதியோடு தமிழ் நூல் எழுத அவர் உட்கார்ந்தால் தமிழ் குழைந்து குழைந்துதான் அவருக்கு வரும். தமிழ்மொழி இனிமையானது. இறைவனது மறைகள் சொல்லத் தமிழ்மொழி ஏற்றது. அதற்காகவே மெல்லிய வார்த்தைகளாகப் பொறுக்கியெடுத்து மறைகள் அமைத்தார்கள். நமச்சிவாயா என்பதிலுள்ள வார்த்தைகள் ஒவ்வொன்றையும் எடுத்துப்பார்த்தால் அவைகள் எவ்வளவு அழகாகஅமைக்கப்பட்டிருக்கின்றனஎன்பதுதெரிய வரும். ''சிவம்'' என்னும் சொல்லே இந்த நாட்டவர் தெய்வத்திற்கு வைத்த அழகான பெயராகும். அச்சொல்லிற்குப்பொருள் பார்த்தால், மங்கலம், உண்மை, நன்மை, தூய்மை, நுட்பம் என எவைகள் எல்லாம் நல்லனவோ அவைகள் எல்லாம் பொருந்தும்படியாக வைத்தார்கள்.

மேலும் அவர் பேசுகையில் ஒரு மாணவன் ஒரு மாதுளம்பழத்தை வாங்கிக்கொணர்ந்ததாகவும்,அதை உடைத்து இவர் அதிலுள்ள முத்துக்களின் அழகைக்கண்டு பெருமிதத்தோடு, இப்பழத்தை அமைத்தது எது என்று கேட்டதாகவும், அப்பையன் கடவுள் என்று சொல்லத் தயங்கி இயற்கை என்றதாகவும், அப்படியானால் இயற்கைக்கு அறிவுள்ளதா,அறிவற்றதா என்று கேட்டதாகவும், அறிவுள்ளது என்றால் கடவுள் இருப்பதை ஒத்துக்கொள்ள வேண்டிவரும், அறிவற்றது என்று விட்டாலோ அறிவற்ற ஒன்று இவ்வளவு அழகாக இதை அமைக்க எப்படி முடியும் என்ற மற்றொரு கேள்விக்கு பதில் சொல்லமுடியாது எனத்தயங்கி மாணவன் கடவுள் இருப்பதை ஒத்துக்கொண்டதாகவும் கூறினார்.

மூலன் என்ற பசு மேய்க்கும் ஆயன் மூல மாகப்பசுக்களாகிய உலகமக்கள் ஆன்மஞானம் பெறுவதற்காக ஈசன் வேதாகமங்களை தமிழில் திருமந்திரமாக அருளினர் என்றும், இன்பமான வாழ்வு வாழ்வதற்கு இவைகள் பெரிதும் பயன் படுமென்றும் கூறினர். மொழியில்லாமல் உரை முடியாது, புலன்கள் இல்லாமல் இன்பம் அனு பவிக்க முடியாது, நூல்கள் இல்லாமல் அறி வைப் பெருக்க முடியாது என்பதெல்லாம் கருவி ஞானத்தைச் சேர்ந்தது என்றும், கருவி ஞானத்தால் மாத்திரம் வாழமுடியாது என்ப தைப்போலவே, உயிர் உணர்விறைலும் வாழ முடியாது. இவைகள் எல்லாவற்றிற்கும் மேம் பட்டதான மெய்வாழ்வு என்று ஒன்றிருக் கிறது. அந்த வாழ்வைக்கடைப்பிடித்தால்தான் நிலையான இன்பம் பெறமுடியும் என்பதாக பெரியோர்கள் கண்ட உண்மை என்ருர். நாம் மெய்வாழ்வு வாழாமல் பொய்வாழ்வு வாழ்வ தால்தான் பலவிதமான கஷ்டங்களுக்கும் உள்ளாகியிருக்கிருேம் என்றும் சொன்னர். இறைவன் திருவருள் பெறுவதற்கு உதவியாக நமக்கு ஒரு குருவின் உதவி வேண்டும், என்றும் ஒன்பதாம் தந்திரம் பஞ்சாட்சரம் முத்திபேதம் சூனியசம்பாஷணை தோத்திரம் முதலியன கூறப் பட்டுள்ளன என்றும், இவற்றுள் சூனிய சம் பாஷணை என்றபகுதியில் அடங்கியுள்ள பாடல் களின் பல பகுதிகளைக் குருமூலமாகவே அறிந்து கொள்ளவேண்டுமென்ற கருத்தோடு எழுதியிருக்கிருர்கள் என்றும், பாட்டுக்கள் வேடிக்கையாக இருக்குமென்ருலும் அதன் பொருள்கள் மிகவும் ஆழ்ந்த கருத்தைக் கொண்டன என்றும் குறிப்பிட்டார்.

உதாரணமாக,

*“ வழுதலை வித்திடப் பாகன் முளைத்தது*
*புழுதியைத் தோண்டினேன் பூசனி பூத்தது*
*தொழுது கொண்டோடினர் தோட்டக் குடிகண்*
*முழுதும் பழுத்தது வாழைக்கனியே ”*

என்ற பாடலைச்சொல்லி, யோகப்பயிற்சி யாகிய வழுதலை வித்து நட்டவுடன், வைராக்கியம் என்ற பாகல் முளைத்தது என்றும், தத்துவ ஆராய்ச்சியாகிய புழுதியைத்தோண்ட ஆரம் பித்தவுடன் சிவம் என்கிற பூசனி பூத்தது என் றும், தோட்டக்குடிகளாகிய இந்திரியங்கள் மறைந்தது என்றும், இந்திரியங்கள்யாவும் அடங்கிய விடத்தே வாழைக்கனியாகிய ஆன்ம லாபம் பழுத்துக் கிடைத்தது என்றும் அதன் பொருள் என்ருர்.

சூக்கும பஞ்சாக்கரம் ஆக நமச்சிவாய என அமைக்கப்பட்ட சொல்லின் அழகும், ஒவ் வொரு வார்த்தைகளின் உயர்வையும் நன்கு விளக்கி, “சிவசிவ என்றிடத்தீவினை மாளும் ஆதலால், தீவினையாளர்கள்தான் சிவசிவ என்று சொல்லமாட்டார்கள் என்றும், சிவசிவ என்று சொல்பவர்கள் தேவருமாவர் – சிவசிவ எனச் சிவகதி தானே” கிடைக்கும் என்று திருமூலர் சொல்லியிருப்பதாகவும் விளக்கினர்.

ஒன்பதாம் தந்திரத்தில் 399 பாடல்களும், 23 பகுதிகளும் உள்ளன என்றும், அவைகள் மகுடாகமத்தின் சாரம் என்றும் குறிப்பிட் டார். ஒன்பதாம் தந்திரத்தில் சர்வ வியாபியாகிய சிவபெருமானது ஆனந்த தாண்டவத்தைக் காட்டி, அவன் அருள் ஒளி காட்டி,

*“ மூல னுரைசெய்த மூவாயிரந்தமிழ்*
*மூல னுரைசெய்த முந்நூறு மந்திரம்*
*மூல னுரைசெய்த முப்ப துபதேசம்*
*மூல னுரைசெய்த மூன்றும் ஒன்றுமே ”*

என்பதாகச் சொல்லி, வேதமாகவும், ஆகமங் களாகவும்பலவாய்விரித்துள்ள பொருள் ஒன்று தான்.

*“ ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்*
*நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து*
*வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்*
*சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே ”*

என்ற ஆரம்பப்பாட்டின் கருத்தை வைத்து எல்லாம் ஒன்றே என முடிப்பதாகவும் சொன் னர்.

# திருவாவடுதுறையில் திருமந்திர மகாநாட்டின்

## நான்காம் நாள் நிகழ்ச்சிகள்

## குருவின் அவசியம்பற்றி மந்திரி ஸ்ரீ வேங்கடசாமி நாயுடு

'திருமந்திர மன்றத்தில்' 3—2—54 மாலையில் ஸ்ரீ-ல-ஸ்ரீ மஹாசந்நிதானத்தின் திருமுன்னர் சென்னை அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர் கனம் வேங்கடசாமி நாயுடு (பி. ஏ. பி. எல்.) தலைமையில் நான்காம்நாள் நிகழ்ச்சிகள் தொடங்கின.

மகாநாடு ஆரம்பிக்குமுன்னர். கனம் மந்திரி திருவாவடுதுறை ஆதீன பிரதம நாதசுர வித்வான் (கக்காயி) ஸ்ரீ டி. என். ஆர். நடராஜ சுந்தரம், நாச்சியார்கோவில் ஸ்ரீ என். பி. ராகவன் தவுலுடன் கூடின நாதசுரகானத்துடன் 'திருமந்திர மன்றத்திற்கு' அழைத்துவரப்பட்டார்.



ஆதீனம் உயர்நிலைப்பள்ளி சாரணர்கள் மாநாட்டுப் பந்தலில் கனம் மந்திரி அவர்களை அணிவகுத்து நின்று வரவேற்றல்

மஹா சந்நிதானம் கனம் அமைச்சருக்குப் பொன்னுடை போர்த்திப் பூமாலை சூட்டிக் கௌரவித்தல்.




மஹாசந்நிதானம் அவர்கள் கனம் மந்திரி அவர்களுக்கு
பொன்னுடை போர்த்திப் பூமாலை சூட்டல்

இறை வணக்கம் ஆனவுடன் ஆதீன வித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை ஆதீனத்தின் சார்பாக மந்திரிக்கு ஓர் வாழ்த்துரை வாசித்தளித்தார்கள்.

உ

## திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

## திருமந்திரமாநாட்டிற்கு

சென்னைமாகாண அறநிலையப்பாதுகாப்பு அமைச்சரவர்கள்

## கனம்-திரு, K. வேங்கடசாமிநாயுடுகாரு B. A B. L.,

3—2—54ல் விஜயம் செய்த காலத்து

## ★ வாசித்தளித்த வாழ்த்துரை. ★

தெண்டிரை சூழ்புவி மகட்கொரு திலகமா
எண்டிசைப் பரப்பும் இலங்குமா றியைந்த
செங்கம லவளர் சென்னையம் பதியில்
தங்குமா காணத் தறநிலைப் பாது
காப்பமைச் சன்னெனக் கண்போல் விளங்கி
மாப்பெருந் தன்மை மனத்தகத் தென்றும்
பழுதில்நல் லறங்கள் பார்மிசை நிறையக்
கெழுமிய நலமெலாம் கிளர்ந்துமீக் கூர
மாதவர் முனிவர் மாபெருங் குரவர்
ஏதமில் கடவுளர் என்றிவர் மடங்களும்
கோயிலும் சீர்பெறக் குன்றா வளத்ததாய்த்
தாயினும் பன்மடங் கேயபே ரன்பின்
வசையுங் குறையு மிலாமல் வளர்க்கும்
நசைமிகக் கொண்ட நற்பண் பாள !
பொய்யா வளமையின் மெய்யுற நினைந்து
செய்யுங் கடமைகள் சிறிதுந் தவிராச்
செல்வ ! கல்வியு மறிவு மொழுக்கமு
மல்லல் வைணவச் சமயநூல் வாய்மையு
முறைமையிற் பெற்றநல் லிறைமைக் குணங்களும்
கறையிலாச் சிந்தையிற் கவின்பெற வமைந்தோய் !
திருமந் திரப்பொருள் திருமா லன்பர்
ஒருவா துளங்கொண் டுய்யுமா றெண்ணிக்
கோபுர மீதே றிக்கொண் டளித்த
மாபுகழ் தன்முனிக் கணம்பூண் மாமணி
சித்தசித் தீச னென்னும் மூவகைத்
தத்துவத் தியலும் சதுர்மறைப் பொருளுணர்
பற்று சறுமெய்ப் பாராங்குசன் எதிக்கோன்
நற்றாய் எனத்தென் மறைப்பா வளர்த்தோன்
கற்றோர் பரவு மிராமா நுசமணி
பொற்றா ளொன்றே புறத்து மகத்தும்
புகலெனக் கொண்டகங் ககலாத் திண்ணிய !
**வேங்கட சாமிப் பெயர்கொள் வித்தக !**
பாங்குடன் மேலும் பதவிகள் பெற்று
நீயுநின் மனைவி மக்களும் நிலத்தில்
ஆயுவு மட்ட லக்குமி கடாட்சமும்
பெற்றுநனி வாழிய பெரும்பெயர்ப்
பஞ்சாக் கரகுரு வருளினிற் பெரிதே.

திருவாவடுதுறை
3—2—54.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் உத்தரவுப்படி,
**சுப்பிரமணியத்தம்பிரான்.**
ஒடுக்கம்-பெரியபூஜை.

ஆதீன மகாவித்வான் ஆறுமுக நாவலர் அமைச்சருக்கு வரவேற்பு கூறும் முறையில் ஸ்ரீ வேங்கடசாமி நாயுடு தெய்வநம்பிக்கையில் திளைத்து, சைவசமயத்தில் பக்தி சிரத்தை கொண்டவர் என்றும் கல்விக்கும், கடவுளுக்கும் அறத்திற்கும் அருந்தொண்டாற்றி வருகிறார் என்றும் அறிவுறுத்தினார். பிறகு அமைச்சர் தமது தலைமைப் பிரசங்கத்தில் குறிப்பிட்டதாவது:—

மகா சந்நிதானத்தின் உத்தரவுப் பிரகாரமே நான் இந்த மகாநாட்டிற்கு வந்திருக்கிறேன். இந்த மகாநாடு தமிழ்நாட்டில் முதன்மை பெற்றதாகும். அநேக மாநாடுகள் எங்கும் நடைபெறுகின்றன. அவைபோல் அல்ல இது. மகா சந்நிதானத்தின் திருவருளாலும், குருமூர்த்தியின் சந்நிதானத்திலேயே நம் நாட்டில் தத்துவ நெறி பரவ நடத்தப்படுகிறதாகும். மேலும் திருமூலதேவர் யோகம் செய்து அருளிய இத்திருவாவடுதுறையிலேயே இதை நடத்துவது நமது நாட்டின் பாக்கியமேயாகும் மதப் பிரசாரத்திற்கு இம்மாநாடு செய்யும் பணி சாதாரணமல்ல. அருள் நிறைந்த இடத்திலிருந்து புறப்படும் நெறிமொழிகள் மிகவும் பயனளிக்கக்கூடியவை. மதப் பிரசாரத்திற்கு மகா சந்நிதானம் செய்துவரும்சேவை நம்யாவராலும் மிகவும் நன்றியுடன் போற்றுதற்குரியது. இதற்கு மக்கள் யாவரும் என்றென்றும் கடமைப்பட்டுள்ளோம். மதப் பிரசாரத்திற்கு கோவில் மாத்திரம் போதாது.குரு மூர்த்திகளின் அருளும்ஆசியும் தேவை.பகவானைஅடையகர்ம ஞான, பக்தி, பிரபத்தி மார்க்கங்கள் உபாயங்களாக வகுக்கப்பட்டிருக்கின்றன.

நாம் கர்மங்களைச் செய்கிறோம். பக்தி செய்கிறோம். குரு உபதேசமில்லாமற் போனால் ஒன்றும் பலிக்காது. பகவானை அறிவதும் கஷ்டம், முக்கிய உபாயம் குரு உபதேசம். ஆகவேதான் நம் நாட்டில் மகா சந்நிதானங்கள் ஏற்பட்டுள்ளன. அவர்களின் பொறுப்பு மிகவும் பெரியது. அரும் பெரும் காரியங்களைச் செய்துமுடிக்க அவர்களுக்குச் சிந்தனையும் ஆற்றலும் உண்டு. அநேக குரு மூர்த்திகள் தோன்றி, அவர்களால் பெரும் அற்புதங்கள் நிகழ்ந்திருக்கின்றன. இப்பொழுது இங்கே எழுந்தருளியிருக்கும் மகா சந்நிதானம் 21-வது பட்டத்தை வகிக்கிறார்களென்றால், இந்த ஆதீன21குருகாலத்தில் எவ்வளவு அற்புதமான வேலைகள் செய்யப்பட்டிருக்கவேண்டுமென்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். குரு உபதேசம்பெற்று அற்புதங்களை விளக்கக்கூடிய சீடர்களாலேயே மதப்பிரசாரம் நடக்கவேண்டும். இந்த ஆதீனத்தைப் பற்றி எனக்கு ஒரு பெரிய சந்தோஷமுண்டு. நல்ல முறையில் பிரசாரகர்களை அமைத்து, மத தத்வங்களை அவர் பரப்பிவருவதேயாகும். இந்த தடவைதான் மகாசந்நிதானத்தை நான் முதல் முதல் தரிசித்தது. அவருடைய உற்சாகமும் மத ஆர்வமும் ஆச்சரியமாயிருந்து வருகிறது. ஆதீன மகா வித்துவான் ஆறுமுக நாவலரை திருச்செந்தூரில் சென்ற ஆண்டு தரிசித்தேன். அங்கு பிரசாரம் செய்து வருகிறார். என்னுடன் பச்சையப்பா ஸ்தாபனத்திலிருந்த மற்றொரு நண்பர் ஓர் பிரசாரகராயிருக்கிறார். இப்பொழுது பிரசாரம்தான் தேவை. நல்ல வஸ்துவுக்குக்கூட விசேஷப் பிரசாரம் வேண்டிய காலம் இது. நாவலர்போல் பெரியவர்கள் வேலை செய்ய வேண்டும். எவ்வளவு பிரயாசைப்பட்டுச் செய்தாலும் விசேஷம் ஆகாது. இதற்கெல்லாம் காரணமாயுள்ள சந்நிதானத்தின் அருளை எண்ண எண்ண ஆச்சரியமாக யிருக்கிறது. அற நிலைய நிர்வாகத்திலுள்ள எனக்கு இதன் சிரமங்கள் ஒருவாறு தெரியும், ஒரு கோயிலை நிர்வகிப்பதே எவ்வளவோ கஷ்டம். அப்படியிருக்க, இப் பெரும் அற நிலையத்தைப் மிகவும் திறமையாக மகா சந்நிதானம் நடத்திவருவது நமக்குப் பெரும் மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. நம்மவர்க்கு மேலும் மேலும் மடங்களும், ஆலயங்களும் பயன் பட்டு மக்கள் சன்மார்க்க நெறியைக் கடைப் பிடித்து வாழவேண்டுமென்று நான் பகவானைப் பிரார்த்திக்கின்றேன்.

ஆழ்வார்கள், நாயன்மார்கள் கிரந்தங்களைப் பார்த்தும்கூட சிலருக்கு நாஸ்திகப் புத்தி ஏன் வருகிறதோ? நம்மாழ்வாரே புலவர்களை நோக்கி இவ்வாறு கூறியுள்ளார். அப்படியிருக்க, சாதா

ரண ஜனங்களைப்பற்றிச் சொல்ல வேண்டிய தில்லை. இம்மாநாட்டின் நோக்கமாகிய மந்திரம் எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் குருவும் ஆவார். நாமத்திற்கு இருக்கிற பலம் பகவானுக்கே இல்லையென்று சொல்லுகிறார்கள். மந்திரங்களை அர்த்தம் தெரியாமல் ஜபித்தால் கூட அவை பலனளிக்காமல் போகாது. ஸ்ரீ ராமானுஜர் திருமந்திரத்தின் தத்துவத்தை கோபுர உச்சியிலிருந்து உலகம் உய்யுமாறு அருளினார் தான் கண்ட இன்பப் பேறு உலகம் அனைத்தும் அடையவேண்டுமென்கிற திருநோக்கம்கொண்டு. திருமந்திரம் குஹ்யமானதுதான். ஆனால் மந்திரத்தின் அர்த்தத்தை எல்லோருக்கும் சொல்லலாம். திருமந்திர மாநாடென்று சொன்னதும் எனக்கேற்பட்ட சந்தோஷத்திற்கு அளவில்லை. இது ஏனைய மாநாடுகள்



கனம் மந்திரி வேங்கடசாமி நாயுடுகாரு அவர்களின் தலைமைப்பிரசங்கத்தின் ஓர் காட்சி

போலல்ல. சீடர்களெல்லாம் குரு சந்நிதானத்தில் ஒன்றுகூடி மக்களையுங் கூட்டி இன்பப் பேறு படைக்கும் மாநாடு இது. குருபூஜைக்கு எல்லா சிஷ்யர்களும் கூடி குருவின் அருளைப் பெறுவது போலுள்ள பேரின்ப வெள்ளம் தோய்ந்த மாநாடு இது. நாங்கள் ஸ்ரீபெரும்புதூருக்கு (ஸ்ரீராமானுஜர் அவதரித்த ஸ்தலம்) ஒவ்வொரு ஆண்டும் போகிறோம். அந்த இடத்திற்கு இந்தியா முழுவதிலும் உள்ளவர்கள் வருஷம் ஒரு முறையாவது வரவேண்டும். இங்கேயும் சிஷ்யகோடிகள் வந்திருக்கிறார்கள். குருவின் கிருபாகடாக்ஷத்தை வேண்டும் பொருட்டு இந்த ஊருக்கு வந்த உடனேயே எல்லா தத்துவார்த்தங்களும் தானாகவே தோன்றும். அவ்

ளவு அருமை வாய்ந்த ஸ்தலத்தில் நடக்கும் திருமந்திர மாநாடு இது. நான் நேற்றே இங்கு வந்திருக்கவேண்டும். ராஜ்ஜிய விஷயத்தினுல் வரமுடியவில்லை. கிருபை கூர்ந்து மகா சந்நிதானம் இன்று எனக்கு வாய்ப்பு அளித்ததற்கு மிகவும் நன்றியுள்ளவனுயிருக்கிறேன். உலகத்தில் அருமையான விஷயம் ஒரு மகானைப்பார்ப்பதுதான்.சாதாரணமாக நாம் பார்க்கமுடியாது. உங்கள் மனம் தூய்மையாயிருந்தால் குருநாதன் கிடைப்பாரென்று ஒரு பெரியவர் சொன்னுர். பகவானுக்கு மேற்பட்ட லக்ஷணங்கள் குருவின் லக்ஷணங்களாகக் கூறப்படுகிறது.என் பாக்கியத்தினுல் நல்ல குருமூர்த்தி எனக்குக் கிடைத்தார். குரு வேண்டுமென நாம் மனப்பூர்வமாக பிரார்த்தித்தால் நிச்சயம் அந்த பாக்கியம் கிடைக்கும். சமாஸ்ரயணம், சிவ தீக்ஷையைப்போல். குருவைப் பார்ப்பதற்குச் சரியான தீக்ஷைகள் பெற வேண்டும். நேற்று நான் ஒரு ஜெயினர் கோவிலுக்குப் போயிருந்தேன். அங்கே 48-மணி நேரத்தில் ஒரு முறை சாப்பிட்டுக்கொண்டு தீக்ஷை பெறப்போகும் ஒருவரைப் பார்த்தேன். பட்டாடைகள் உடுத்திக்கொண்டு ஆபரணங்களெல்லாம் போட்டுக்கொண்டிருந்தார். மாப்பிள்ளைபோல் காணப்பட்டார், தீக்ஷை பெறப் போகும் ஒருவருக்கு ஏன் இந்த அலங்காரமென ஐயமுற்றது. எங்களுக்காக அவர் ஆபரணங்கள் அணிந்திருக்கிருரென்றும், எங்கள் வற்புறுத்தலினுலேயே அப்படி இன்று காணப்படுகிருரென்றும். நாளை தீக்ஷைபெற்று சுவேதாம்பரத்துடன் விளங்குவாரென்றும் அங்கு என்னிடம் ஒருவர் கூறினுர். நான் அப்போது உண்மையை உணர்ந்தேன். நல்ல தீக்ஷைபெற்று பகவானை அடையவேண்டுமென்பதே அவ்வுண்மை. இந்த ஆசையைப் பரிபூரணமாகச் செய்து கொள்ளவேண்டியதே நமது கடமை. முனி புங்கவர்கள் கூடியிருக்கும் ஓர் சபைபோல் அமைந்துள்ள இத்திருமந்திர மாநாட்டில் நாம் இந்த நல்ல சிந்தனையை உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டும்.

நாம் மூன்று பிரதிக்ஞைகளைச்செய்து கொள்ள வேண்டும். முதலாவது — ஆண்டாள் சொன்னதுபோல் வையகம் வாழவேண்டும்......நம்முடைய கொள்கையினுல், இரண்டாவது - பகவானை அடையவேண்டுமென்கிற சங்கற்பம். அதுதான் தீக்ஷையின் தத்துவம். மூன்ருவது — நமது மதம் வளரவேண்டும். ஆஸ்திகம் வளர வேண்டும்.

இப்பொழுது உலகத்தில் எவ்வளவோ கஷ்டங்கள். இறந்தவரை பிழைப்பூட்டுவதைத்தவிர இதர சக்திகளை மனிதன் அடைந்து வருகிருன். நடு நிலைமையிலிருந்து இப்போக்குகளையுணர்ந்து கடவுள் சக்தியை நாம் சிந்தனை செய்யவேண்டும். இந்தியாவின் சக்தியை வைத்துக்கொண்டு, நேருஜி உலகத்திற்கே சேவை செய்ய விரும்புகிருர். இந்தியா சுயேச்சையடைந்து ராஜ்ய பாரம் வகித்த நாளன்று இவ்வாதீனத்திலிருந்து செங்கோல் அனுப்பப்பட்டது. நாங்கள் எல்லோரும் அப்போது அங்கிருந்தோம். மிகவும் சந்தோஷப்பட்டோம். சந்நிதானத்தின் பூரண ஆசீர்வாதத்துடன் அந்தச் செங்கோலை வைத்துத்தான் இப்போது அரசாங்கம் நடைபெறுகிறது. சரியாக நடக்கவேண்டுமென்பதே எங்கள் பேரவாவும், பயமுமேயாகும். இது அணுகுண்டு சகாப்தம் ஆனுல் ஒரு நல்லொளி காணப்படுகிறது. அது இந்தியாவிற்கும் மகாத்மாகாந்திக்கும் உலகம் வைத்திருக்கும் மரியாதையேயாகும். உலகத்தைக் காப்பாற்றக் கூடிய சக்தி பாரத தேசத்திலிருந்து கிளம்ப வேண்டும். மகாத்மா காந்தியின் சக்தி குருமூர்த்திகளின் சக்தி இவைகளாலேயே நாம் உலகத்தைஉஜ்ஜீவிக்கச்செய்யமுடியும்.அதற்கு நாம் அனைவரும் திரிகரண சுத்தியாக உழைப்போமாக.

25 வருட காலமாக, ஒரு வைஷ்ணவ மாநாட்டுடன் நான் தொடர்பு கொண்டிருக்கிறேன். 5-மணி. 6-மணி நேரம் தொடர்ந்தாற்போல் உட்கார்ந்து அங்கு செய்யப்படும் உபந்நியாசங்களைக் கேட்டுக்கொண்டிருக்கும் பழக்கமுண்டு. அப்பேர்ப்பட்ட சக்தி இம்மாநாடுகளினுல் சந்தேகமன்னியில் பிறக்கிறது. தனிப்பட்டு நம்மால் செய்யமுடியாததும், நடு நிலைமை வகிக்

கும் அரசாங்கத்தாரால் செய்ய முடியாததுமான பெரிய வேலைகளை மடாதிபதிகளால் செய்ய முடியும். திறம்பெற்ற கோவில் அதிகாரிகள் ஒன்றுசேர்ந்து செய்ய முடியும். அவ்வதிகாரிகளுக்கு மனதில் உண்மையான உணர்ச்சியை ஊட்டக்கூடியவர்கள் மடாதிபதிகளேயாவார்கள். நம் கோயில்களும் மடங்களும் நம் பெரும் பொக்கிஷங்களாகும். ஆச்சரியமான முறையில் நம் ஆலயங்கள் நிர்மாணிக்கப் பட்டுள்ளன. அவைகளை நாம் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாக்க வேண்டும். ஜடாயு மோட்சமடைந்த திருப்பக்குழி என்ற ஸ்தலத்தில் கோபுரம் ஜீர்ணமாயிருக்கிறது. பத்துப்பதினையாயிரம் ரூபாயிருந்தால் அதைச் சீர்படுத்தி விடலாம். அது விழுந்து விட்டால் பெரிய அபாயமாகும். யாராவது மகான்கள்தான் செய்ய வேண்டும். நகரத்தார்களும் ஆரிய வைஸ்ய தனிகர்களும் முன்பு இப்பேர்ப்பட்ட நல்ல காரியங்களை செய்து முடித்து வந்தார்கள். இப்போது அவர்கள் நிலையும் சரியாயில்லை. "பணமிருந்தால்தானே நாம் கட்டுவது கேட்க முடியும்" என்று ராஜாஜி ஹாஸ்யமாகச் சொன்ன கருத்து இப்பொழுது நமக்கு நன்கு விளங்குகிறது. இப்பேர்ப்பட்ட நல்ல காரியங்களுக்கு மக்கள் உதவி செய்ய முன் வரவேண்டும்.

இப்போது 20 ஸ்தலங்களில் குழந்தைகளை வைத்து அனாதை விடுதிகளில் காப்பாற்றப்பட்டு வருகிறது. 600 குழந்தைகளிருக்கிறார்கள் 600 குழந்தைகளிருந்தால் போதுமா என்று நினைக்கலாம். மதத்தின் பெயரால் பாதுகாக்கிறோமே என்றபெருமைதான் நமக்கு. இதரமதத்தினர்கள் இதைப்பெரிய அளவில் செய்து வருகின்றனர். சின்ன வயதில் குழந்தைகளை நம் கிரந்தங்களைப் படிக்கச் செய்வதுதான் பெரிய காரியம். ஜனங்களின் மத உணர்ச்சி வளர வேண்டும். அமெரிக்காவில் சர்ச்சுக்கு (கோவிலுக்கு) போய் வணங்காமல் ஒரு காரியமும் செய்வதில்லை. பிரிட்டிஷ் ராணியின் மகுடாபிஷேகமே ஒரு சர்ச்சில்தான் நடைபெற்றது. நம் தேசத்திலோ கடவுளைத் திட்டினால் குற்றமே கிடையாது! இங்கிலாந்தில் அரசாங்கத்தைத் திட்டினால் அது பெரிய குற்றமாகும். இங்கோ பகவானையே திட்டுகின்றனர்! அது பெரும் குற்றமாகும். தேசத்துரோகமான செயலுமாகும். ஆதீனத்தின் வேலை எனக்குப் பெருமகிழ்ச்சியை அளிக்கிறது. சந்நிதானத்தின் உற்சாகத்தால் தேசத்திற்கும், தமிழ் நாட்டிற்கும் நல்வாழ்வு கிடைக்க அவர் பல்லாண்டு வாழ வேண்டுமென்பதே எனது பிரார்த்தனை. ஜேய்ஹிந்த். [நீண்ட கரகோஷம்]

நான்காம் நாளும் இளவழகனார் பேசினார். அப்பேச்சுக்களின் சாரம் இவை; திருமந்திரம் மூவாயிரம், திவ்யப்பிரபந்தம் நாலாயிரம். நேற்று அமைச்சர் வரவில்லை என்ற வருத்தம், இன்று அமைச்சர் வரவு மகிழ்ச்சியைத்தந்தது. எனக்கு மட்டுமல்ல எல்லோருக்குமே. அமைச்சர் வாக்கிலே சமய உண்மைகள் எல்லாம் பக்தியுடனே கலந்து விளங்கின. சமயங்களைப்பற்றி ஆராயச் சமய வாய்ப்பும் கிடைத்தது. ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு மந்திரம். ஆதலால் பெரியோர் திருமந்திரம் மூவாயிரம் எனப் பெயரிட்டனர். இது தமிழ்நாட்டிலே ஒரு வைப்புநிதியாக அமைந்தது. தமிழ் மொழியிலே இத்தகைய நூல் வேறில்லை. ஒவ்வொரு மந்திரமும் ஒவ்வொரு மலர். மூவாயிரம் மலரால் தொடுக்கப்பட்ட மாலை இது. மாசிலாமணி ஈசருக்குத் தொடுத்து அணிந்தார் திருமூல நாயனார். இது மந்திரமாலை. நாலாயிரத்தில் திளைத்தவர் அமைச்சர். இது மூவாயிரந்தான்: அத்தனையும் மந்திரமே, மந்திரமாலிகா எனவும் இதற்குப் பெயர் உண்டு. நிர்மால்யம் இது, மாசிலாமணியாருக்குச்சாத்தியது. இம் மந்திர நூல் திருவைந்தெழுத்தை முக்கியமாகப் பேசும். க்ஷகாரம் முதலிய அட்சரங்கள்—அசபை மந்திரம்-பிராசாதயோகம்—ஞானயோகம்—பிராசாதமந்திரம்-பீஜாக்ஷரங்கள் — அத்துவா மந்திரங்கள்—திருவைந்தெழுத்தின் பேதங்கள்—யந்திரமுறைகள்—யந்திரபேதங்கள் முதலிய எல்லாம் கூறப்பட்டுள்ளன, வாழ்வு—தாழ்வு சாக— உயிர்ப்பிக்கப் பல பேதங்கள் காணப்படும், அட்டமாசித்தி, ஞானயோகத்துக்குரிய தூல சூக்கும அதிசூக்குமங்கள் கூறப்பட்டுள. ஒவ்வொரு திருப்பாட்டும் மந்திரம், மலரால் தொடுத்தமாலை என்றேன்—சரியை முதலிய நால்வகை மலரையும் தொடுப்பது, மந்திர

மாலைக்கு வேறு காரணமும் உண்டு. சாதன வகையிலே முக்கிய நோக்கம்உடையது.சரியை முதலிய நான்கும் கூறுவது, திருநந்திதேவர் அருளால் அசாதாரண சக்தியால் கைவந்தது, 'தமிழ் மூவாயிரம்' எனச் சேக்கிழார் சுவாமிகள் அருளுவார். அசைக்கமுடியாத நலங்கள்—பண்புகள்—இவை தமிழ்நாட்டிலே தொன்று தொட்டு வந்தவை. உள்ளப்பண்பு — உயிர்ப் பண்புகள்—வாய்மைமொழி— மந்திர ஆற்றல் முதலிய ஆற்றல்களெல்லாம் படைத்தவை.

> *" நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
> *மறைமொழி காட்டி விடும் "*

என்பது திருக்குறள்.

> *" நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
> *மறைமொழி தானே மந்திரம் என்ப "*

என்பது தொல்காப்பியம்.

இனி, திருமந்திரம் சிவசத்தியின் எழுச்சி மிக்கது. கட்டளையிடும் மொழிகளையும் உடையது. நிறைமொழியாதலின் இயங்கவல்லது; இயக்கவும் வல்லது. அசைதல் உடையது, அசைத்தலையும் செய்யும், உயிரை, உயிரில்லாததையும் அசைக்கும் சக்தியுடையது, சித்தியைத்தருவது. பல்லாயிரம் ஆண்டுகள் சிவயோகத்திலிருந்து உண்மைகளையெல்லாம் தம் வாக்கினால் தெரிவிக்கின்றனர். பைபில், புத்த நூல்கள் போன்றவையெல்லாம் சொந்தக்கருத்துக்கள். சைனர் கூறுவதும் அவர் வாக்கியங்களே ? திருவருள் வாக்குக்களா ? நம்முடைய சாத்திரங்களும் தோத்திரங்களும் சொந்தக் கருத்துக்கள் அல்ல. திருவருட்செல்வத்தைச் செய்யுட்களால் பாடி அநுபவித்தார்கள். சம்பந்தர், அப்பர் முதலியோர் பரவசத்தால் பாடினர். தாளம் இசைகளுடன் கூடி அமைந்தது தமிழர் தவம்: பெரும்பாக்கியம். திருஞான சம்பந்தர் 3 வயதில் திருவருள் விளக்கம் பெற்றார். அவர்கள் வாக்கே சான்று; மதுரை நிகழ்ச்சி முதலியவற்றால் பெரியபெரிய உண்மைகளை விளக்கியருளினர். மனோதத்துவமுடையார் பெரிய ஏமாற்றத்தையேஅடைவர்; பாவித்தலின் பயனை அவர் அறியார். இடபக் காட்சி விடையின் தோற்றம் இவைகளைத் திருமூலர் வாக்கு அறிவிப்பது. மந்திரமாலை 9 தந்திரங்கள்: ஆகமங்கள், தாயுமானவர், சேக்கிழார் சுவாமிகள் ஒப்பம் பெற்றது. தாயுமானவர் மூலன்மரபில் வந்தவர். சேக்கிழார் சுவாமிகள் நாயனார் வரலாற்றில் வைத்து விளக்குகிறார். இயற்கை அநுபவங்கள் எல்லாம் திருமந்திரத்திலே காட்டப்படும். பிறந்தால் வாழ்வது எப்படி ? சூழல் கொண்டே வாழவேண்டும். அவரோ அறிஞர், அவர் கூறுகிறார். பிறவியில் அமையும் சூழலே இயற்கை. மலை, கடல், வாயு முதலியன எல்லாம் இயற்கைச் சூழல்கள். எல்லாவற்றிற்கும் உள்ளத்தெளிவுவேண்டும். அங்க ஈனம் நல்லதே. இயற்கையைப் பயன் படுத்தத் தெரியவேண்டும். டாக்டர் ஷெல்லி என்பவர் பூச்செடி—மலர் இவைகளை அநுபவித்தல் முதலியவற்றைக் காட்டுகிறார்.

இனி, 'மலரெடுக்க மனமும் நண்ணேன்' என்கின்றார் தாயுமானவர். தாயுமானவர் ஞான இயல்புடையவர். இயற்கை அநுபவங்கள் திருமந்திரத்தில் காட்டப்படும். அளி வெளி ஒளி தெளிவு இவை சொல்லப்படுகின்றன. திரையற்ற நீர்போல் சிந்தை தெளிதல், சோம்பர் இருப்பது, நடுத்தறி போன்றிருத்தல் இவைகளை விளக்கும். உருக்கமே அளி, பற்றின்மையே வெளி; எல்லாவற்றிற்கும் குருவருள் வேண்டும் நன்மை அடையலாம், லட்சியப் போக்கில் செல்லுதல் வேண்டும், படிமுறைகள் உள்ளன. சூக்கும வாழ்வில் வாழவும் சொல்லப்படுகிறது, அண்டம் பிண்டம் என்று பேசப்படும். மானுடர் ஆக்கை சிவலிங்கம் என்பர். ஆற்றலை அப்படியே வாங்க—வழங்க. அஷ்டமூர்த்தம் குறிக்கப்படுகிறது, எல்லாம் ஐந்தே. பூதம் 5, தன்மாத்திரை 5, ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, கலாதி 5. என இவை. கைவிரல் கால் விரல்களும் ஐந்தைந்தாக உள்ளன. கூடினாலோ குறைத்தாலோ விபரீதம், ஆறும் இருக்கிறது, ஐந்தெழுத்து பூதசக்தியை வாங்க வகை தெரிவித்தல். நூலின் சக்தி விளக்கமுடையது. பக்குவநெறியால் சக்திகொடுப்பார். கருத்துக்களை வாரி வழங்குவார். ஆசிரியர் வாயிலாகவே சக்தியும் கருத்தும் கொடுத்தருளுவார். பத

முத்தி பரமுத்தி. திருவைந்தெழுத்து இயக்கம்-கீழ்நிலை மேல்நிலைகளில்; மந்திரம் கிரியை பாவனை பாவனுதீதம், சூரிய சந்திரர் இயக்கம், மூச்சு அற்புதம் இவைகளை விரிவாகப் பேசும். மெய்யான போக்குடையது தமிழ். "சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது" என்றார். மணம் மண் பகுதி. பிருதிவி கந்தந்தன்மாத்திரை. பூரண ஞானத்தால் அறிந்தனர். ஞானக்காட்சியினு லேயே நாடுவளர்க்கப்பட்டது. மனநலம் வேண்டும், திருவருள் வாய்ப்பும் வேண்டும். உடம்பு, உணர்வு இவைகள் வளரவேண்டும். 'அறிவினில் அருளான் மன்னி' என்பது சிவ ஞான சித்தியார். உயிரறிவு பெரிதாக்க உணர்ச் சிக் கருவிகள் பாதுகாக்கப்படவேண்டும். முது கில் தடவுதல் இதவுணர்ச்சி, முதுகெலும்பில் இதவுணர்வுண்டு. அன்பின் செழிப்பு. என்புள்ள இடம் அன்புநிலை. நடுநாடியைக் காக்கவே பெண்கள் சடைபின்னித் தொங்கவிடுகிறார்கள். அது இயல்பான நிகழ்ச்சி. முதுகுநாடியை மூடவே மயிர் தொங்கவிடுதல். மூலம் இதயம் புருவம் உணர்ச்சிமிகும் இடங்கள். பிரமரந்தி ரம் சிறந்த இடம். "நாபிக்குக்கீழே" எனவும், "நெற்றிக்கு நேரே" எனவும் கூறுவர். அநுபவம் அவரவர் கையில் உள்ளது, மந்திரங் களில் வாய்ப்பு உண்டு. "எட்டும் இரண்டும்" என்பர் எட்டும் இரண்டும் பத்து. அது யகரம், யகரம் ஆன்மா: அம்பலம். "ஓங்காரமே நற் றிருவாசி" என்றமை காண்க. மூச்சுநிலைகளைச் சிந்திக்கவேண்டும். போகவர இருத்தல் வேண் டும். இருத்தலும் வேண்டும்; தங்குதலே முறை போகவர வழி இருத்தல்வேண்டும். காற்றினுல் சுத்தம், சத்திவளர்ச்சி, ஒளி, ஆற்றல், உணர்வு, வசப்படுதல் உண்டாம். உலகம் வாழத் தான் வாழ்தல் வேண்டும். தானே வாழ்வதற்குமட் டும் அல்ல. அடக்கம் அமைதி ஆற்றல்—சத்தி சிவம்—யோகம் ஞானம்—கடமை தூய்மை—சத்தியம் அஹிம்சை-வகை தெளிவு—உபாசனை ஒழுக்கம்—புலனடக்கம் மனஅடக்கம் இவை கள் அவசியம், "சிந்தையையடக்கியே சும்மா இருக்கின்ற திறம் அரிது" என்பர் தாயுமான வர். ஒலிமயம் ஒளிமயம், சம்பந்தர் திருமணம் சோதிமயம். நால்வர் நிலைகள் சிந்தனைக்குரி யன, வாயுமயம் சுந்தரமூர்த்திசுவாமிகள். வெளி மயம் மாணிக்கவாசகர். மண்ணுதல் வேண் டாம். காந்தியடிகள் வரலாறு காட்டும்: அவர் வாழ்வு தெளிவிக்கும். பிரார்த்தனையால் சக்தி உண்டு, ஆனுல், யோகசித்தியால் இடுக்கண்க ளைத் தடுக்கமுடியும், அப்பர் சுவாமிகள் யானை யால் கேடுறவில்லை, காமனை எரித்தல் காலனை உதைத்தல் இவைகள் இறைமைத்தன்மை. யோகநெறியால் நோயில்லாமல் வாழலாம். ஞானம் உயிருக்கு, யோகம் உடம்புக்கு. காந்தி யடிகள் அரசியல் தியாகி; யோகியல்லர், நல்ல பாடங்களையெல்லாம் திருமூலர் படிப்படியாக நமக்கு அறிவிக்கிறார். சித்திகள், ஞானயோகம் இவற்றைக் கூறுகிறார். பிறருக்கு உதவி செய்ய வேண்டுமாயின் ஆற்றல் மிகவேண்டும்; அற் புதங்கள் — உணர்வில் மேம்படுதல் — சரியை இவைகள் கூறும், வாழ்வு பொருள்வாழ்வு கலைவாழ்வு என இருவகை, கல்வி—கலை உயர்த் தும் அழகிலே திளைக்கச் செய்யும் ஞானவாழ்வு கலைவாழ்வைவிட மிக உயர்ந்தது. நன்மை: ந, திரோதானசத்தி திளைத்தல் — மறைப்புச்சத்தி; ம, அவைகளை எழுத்துக் குறிக்கிறது, பழத்தில் சாறு நிறைந்திருத்தலே அழகு, ஓவியம், புலமை, இசை இவைகள், மாயை பண்டம், ஆகமம் அநுபவப்படுத்துவது, வடிவம் வித்தை வடி வாக ஆக்குவது. 'ஆகமமாகி நின்று அண் ணிப்பான்' என்றமை காண்க. தூலம்-வளர்ச்சி —கலை நிலை—எல்லாம் மெய்நிலையில் வரவேண் டும், திருக்கழுக்குன்றம் எல்லாவற்றினும் சிறந்ததலம், அதை அநுபவத்தில் சென்னைவாசி கள்—சிவனடியார் திருக்கூட்டத்தார் நன்கு உணர்ந்திருக்கின்றனர். அதன் அமைப்பு அத் தகையது. மெய்ப்போக்குத்தான் பிரசாரத்தின் சிறப்பு, மெய்ந்நெறி ஓங்கப் பிரசாரம் அவசியம் உண்மையான பிரசாரமே தேவை. பொய்ப் பிரசாரங்கள்தான் நாட்டில் மலிந்தன — கேட் டை விளைவிக்கின்றன, நல்ல ஞானுசாரியர் களுடைய திருவருள் நாட்டிலே மலியவேண் டும். குருவருள் வேண்டும், குருவருளால் திரு வருளைப் பெறலாம். திருவருளால் எல்லா நல மும் கிடைக்கும். குருவருள்தான் குருகுலத்தி லிருந்து—என்னை—எங்களை சென்னையிலிருந்து

இங்கேகொண்டு வந்தது. குருவருளுக்கு சக்தி பெரிது, தூரத்திலுள்ள எங்களுக்குத்தான் அந்தக்குருவின் மேன்மைகள்— சக்திகள் தெரியும். அருகில் இருந்து நீங்கள் அநுபவிப்பீர்கள்: ஆனால் உங்களுக்கு அது தெரியாது. ஏன்? அதனைச் சிந்திக்க வாய்ப்புக் கிடைக்கவில்லை. ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் இருந்தபடியேயிருந்து நம்மையெல்லாம் இயக்குகிறது என்றும் கூறினார். நமச்சிவாயமூர்த்திக்கும் மகா சந்நிதானத்துக்கும் என்வணக்கம் செலுத்தி என் பணியை முடித்துக்கொள்ளுகின்றேன் என்றார்.

"திருமந்திர ரகசியம்" என்ற தலைப்பில் பேசிய ஸ்ரீ ஆறுமுகநாவலர், "பதி–பசு–பாசம்" ஆகிய முப்பொருள் உண்மை, "சின் முத்திரையின்" விசேஷம் திருமூர்த்திகளும் ஒன்று என்ற தத்துவம் எல்லாம் சாங்கோ பாங்கமாக விளக்கிவிட்டு, நம் எதிரில் வீற்றிருக்கும் குருமகாசந்நிதானம், மெய்கண்ட தேவர் இயற்றிய "சிவஞான போதம்" என்ற நூலை, வெளியிடப் போகிறார் என்றும், அச்சகம் இயங்க ஏற்பாடு செய்திருக்கிறார் என்றும் சமயக்கல்லூரி ஒன்று குருமகா சந்நிதானம் நிறுவவேண்டும் என்று தாம் கேட்டுக்கொள்ளுவதாகவும் சொன்னார்.

அடுத்தபடியாக 'திருமந்திர சங்கற்பணம்' என்ற விஷயத்தை எடுத்துக்கொண்டு குலசேகரப்பட்டினம் சமய ஆதீனப் பிரசாரகர் வீரசிவ சுப்பிரமணிய பிள்ளை, தற்கால நாஸ்திக சூழ்நிலையை விவரித்துவிட்டு ஆண்டவன் வழிபாடு எது செய்யாதுஎன்ற விஷயம், பிறர் வாழவேண்டும் என்று நினைத்த நம் முன்னோர்கள் மனோநிலை, ஆண்டவனே அன்புமயம் என்ற தத்துவம், மகேச்வர பூஜையின் விசேஷச் சிறப்பு எல்லாம் திருமந்திரத்தின் சங்கற்பணமாக அமைந்திருக்கிறது என்று கூறினார்.

இத் திருமந்திர மாநாட்டு வெளியீடாக "திருமந்திரம்" என்ற நூல் வெளியிடப்பட்டு எல்லோருக்கும் வழங்கப்பட்டது.

கனம் வேங்கடசாமி நாயுடு முடிவுரைக்குப் பின் நான்கு நாட்களிலும் "திருமந்திர மாநாடு" "வாழ்க அந்தணர்", என்ற பாட்டுடன் முடிவுற்றது.

ஸ்ரீ வெங்கடேஸ்வர் பிரஸ், கும்பகோணம்.

# திருமந்திர மாநாட்டு மலர்



திருவாவடுதுறை ஆதீனம்

திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண்: 95.

உ
சிவமயம்

இரண்டாவது

# திருமந்திர மாநாட்டு மலர்

[ ஜய - தை ]

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
21-வது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

திருவுள்ளப்பாங்கின்வண்ணம்

**வெளியிடப்பெற்றது.**

**திருவாவடுதுறை ஆதீனம்**

1956 ஜனவரி] [ மன்மத - தை



ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகளை
ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் வழிபடுதல்.

சிவமயம்

## வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

உ
சிவமயம்

**ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் தோத்திரம் :**

இருதய நாப்பண் அஞ்செழுத் துருவின்
இறைவனை உயிர்க்கொலை செயாமை,
அருள், பொறி அடக்கல், பொறை, தவம், வாய்மை,
அன்பு, அறிவு என்னும் எண்மலர்கொண்டு
ஒருமையொடு அருச்சித்து இடுகஎன்று அடியர்க்கு
ஒள்ளிய தீக்கைசெய்து உணர்த்தத்
திருஅமர் துறைசை உறையருள் குருவாம்
திருநமச் சிவாயர்தாள் போற்றி.

— *ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.*

**குறிப்பு :**

இச் செய்யுள், நமச்சிவாயமூர்த்திகளுக்கு வணக்கம் கூறும் முறையில் மாதவச் சிவஞான முனிவர் பாடியதாகும். நமச்சிவாயமூர்த்திகள் தெய்வத்தன்மை உடையவராய்த் திருவாவடுதுறை ஆதீனத்தை இன்றைக்குச் சுமார் ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னர்த் தோற்றுவித்த அருளாளராவார். இவர் கண்ட ஆதீனம், தென்னாட்டில் பலகோடி மக்களுடைய ஞானத்தையும், சமய உணர்ச்சியையும் நன்னெறியையும் நிலைபெறச்செய்வதற்கும் வளர்ப்பதற்கும் துணையாக இருந்துகொண்டிருக்கிறது. இவ்வருள்மூர்த்திகளால் கட்டளை இடப்பெற்ற நற்செயல்களும் இன்று வரை நடைபெற்று வருகின்றன. நாட்டிலும் மக்கள் உள்ளத்தும் எத்துணையோ மாறுபாடுகள் தோன்றினும், குருமூர்த்திகளுடைய கட்டளையும் திட்டமும் எள்ளளவும் மாறியன அல்ல. எடுத்துக்காட்டாகத் திருமடத்தின் அடுக்களையை மூர்த்திகள் அமைத்து, அதில் பொருத்திய நெருப்பு அணையாமல்நின்று என்றும் அடியவர்களுக்கு அமுதளிக்கவேண்டும் என அருளிய திருமொழி இன்றும் உண்மையாக இருந்துவருவது உலகமறிந்ததே. இந்த ஐந்நூறாண்டுகளில் நிகழ்ந்த மாறுதல்களும், பஞ்சமும் எவ்வளவோ ஆயினும் திருமடத்திலும் இதன் கிளைமடங்களிலும் இன்றுவரை பசிப்பிணி யொன்று உண்டு என்பதை எவரும் அறியார். இத்திருமடம் எந்த நல்ல நோக்கங்களுடன் தோன்றியதோ அந்நோக்கங்கள் இன்றும் இங்கே நிறைவேறி வருகின்றன. சிவஞான முனிவர், சங்கரர் இராமாநுசர் இவர்களுடன் வைத்து எண்ணக்கூடிய ஒரு பெருந் தத்துவ ஞானியாவார். இம்முனிவரும் இத் திருமடத்தின் தம்பிரான்களில் ஒருவரே.

சிவமயம்

# மகிழ்ச்சியான நிகழ்ச்சி

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஸ்ரீ முத்திபஞ்சாக்கர தேசிக சுவாமிகள் ஆதீனத்து இருபத்தோராவது குருமூர்த்திகளாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் அவர்கள், கர ஆண்டின் தொடக்கத்திலே ஞானபீடத்து எழுந்தருளினார்கள். இந்த ஐந்து ஆண்டுகளாக ஆதீனப்பணிகளின் முன்னேற்றம், பலவகையிலும் மிகச்சிறந்து திகழ்கின்றது.

ஞானதானப்பணியில் செந்தமிழ்நாட்டுள்ள சிவபக்த சிரோமணிகள் ஒவ்வொருவரும், ஞானபூசையை நாடோறும் இயற்றி ஈடேற, ஞானசாத்திரங்கள் பதினான்கையும் பதினாயிரக்கணக்கில் அச்சிட்டு வழங்கியருளுகிறார்கள்.

மக்களுடைய கல்வி அருள்விளக்கம் இவைகளின் பரிபாகநிலைக்கு ஏற்ப, ஞான சாஸ்திர உரைநூல்களையும் உரைநடை நூல்களையும் வெளியிட்டு அனைவரும் எளிதில் அடைந்து அறிந்து உய்ய அருள்பாலித்து வருகிறார்கள்.

அவர்கள் திருவுள்ளத்துச் சுரக்கின்ற அருள்மிகுதிக்கு வெளி அச்சகங்களின் பணி பற்றாமையால், ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளுடைய இடது திருக்கடைக்கண் - (திருவருட்கண்) பதிகின்ற சந்நிதியிலேயே அவர்களுடைய பெருங்கருணைபோல் விரிந்த கட்டிடத்தில் எல்லா அமைப்புக்களும் ஒருங்கே நிறைந்த - நாளொன்றுக்குப் பதினாயிரம் படிகள் அச்சிடக்கூடிய அச்சகம் ஒன்றை நிறுவியிருக்கிறார்கள். அதற்குப் பிரதம ஞானாசாரியப் பெருந்தகையின் திருப்பெயரை இணைத்து **ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகம்** என நாமகரணம் சூட்டினார்கள். இந்த மன்மத ஆண்டு விநாயகசதுர்த்தியன்று, ஸ்ரீ ஞானமா நடராஜப் பெருமான் திருவருட்பிரஸாதத்தையும், ஸ்ரீ முத்தி பஞ்சாக்கர தேசிக மூர்த்திகள் விபூதிப் பிரஸாதத்தையும் அணிவித்து இயந்திரத்தை இயக்குவித்தார்கள். அவர்கள் அருளியக்கவழியே அச்சகம் அநவரதமும் இயங்கிக்கொண்டிருக்கிறது.

அச்சகத்தில் முதன்முதலாகக் **கணபதி** என்னும் நூல் அச்சிற்குத் தொடங்கப் பெற்றது. அது, ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களால் புதிதாகவே நிர்மாணிக்கப் பெற்றதும் பண்படுத்தப்பெற்றதுமாகிய எடுத்தணிவயல் என்னும் கிராமத்தில் புதிதாகத் திருப்பணி செய்விக்கப்பெற்ற விநாயகர் கோயில் கும்பாபிஷேக காலத்தில் வெளிவர இருக்கிறது. இரண்டாவதாக இந்தத் **திருமந்திரமாநாட்டு மலர்** இன்று வெளிவருகிறது.

கணபதியில் தொடங்கித் திருமந்திரத்தை ஜெபித்து, ஞானானுபவ நிலையில் முதிர்ச்சி பெற, ஞானானுபவ நூல்கள் பலவற்றையும் நல்கி, நாடு மகிழ நற்பணிசெய்து, ஸ்ரீ ஞானமா நடராஜப்பெருமான் திருவருளாலும், ஸ்ரீ முத்திபஞ்சாக்கரதேசிகமூர்த்திகளின் கருணையாலும் இந்த அச்சகம் என்றும் இனிது இயங்குவதாகுக.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகளின் திருவருள் துணைக்கொண்டு, அவர்கள் குருபூசைத் திருநாளையொட்டி வழக்கம்போல, சென்ற ஜய ஆண்டு தைத் திங்களிலும் இரண்டாவது திருமந்திர மாநாடு நடைபெற்றது.

மாநாட்டில், அன்று காதாற்கேட்ட திருமந்திரக் கருத்துக்களை என்றும் கண்ணாலும் கண்டு கருத்தில் அமைத்துக்கொள்ள வாய்ப்புத்தந்தருள வேண்டுமென்று அன்பர்கள் பலர் வேண்டிக்கொண்டனர். அதற்கிணங்க, சுருக்கெழுத்தாளர்கள் எடுத்துக்கொடுத்துள்ள சொற் பொழிவுகளின் சுருக்கங்கள், எழுத்துப் பிழைகளைத் திருத்தி அப்படியே அச்சிடப்பெற்றன.

சைவத்தமிழ் உலகம் இவ்வெளியீட்டைப் பெற்று, கருத்துக்குவியலில் ஈடுபட்டுப் போற்றி மகிழுமாக.



திருவாவடுதுறை ஸ்ரீ கோமுக்தீசுவரர் ஆலய முன்தோற்றம்

## தலச்சிறப்புகள்:-

1. சிவபெருமானுடைய ஆணையால் பசுவடிவம் பெற்ற உமாதேவியார் இத்தலத்துக்கு வந்து, சிவபெருமானைப் பூசித்துப் பசுவடிவம் நீங்கப்பெற்றூர். 2. திருமூல நாயனர் மூவாயிரம் ஆண்டுகள் இத்தலத்திலே சிவயோகமிருந்து திருமந்திரமாலையை அருளிச்செய்தார்; (மூவாயிரம் மந்திரங்கள்). 3. போகநாத சித்தருடைய மாணவராகிய திருமாளிகைத்தேவர், ஆசாரியருக்குத் தொண்டுசெய்திருந்து அருள்பெற்று, சைவஸ்தாபனம் செய்து, மேலும் பல அற்புதங்கள் செய்து விளங்கினர். 4. தாம் தவஞ்செய்தமையால் பிற்காலத்து நவகோடிசித்தபுரம் என வழங்கப்பெறும் இத்தலத்தில் நவகோடி சித்தர்கள் சிவஞானம்பெறத் தவம் செய்தனர். 5. சைவ சமயாசாரியர்கள் நால்வருள் முதல்வரான ஆளுடையபிள்ளையார் தமது தந்தையார் யாகம் செய்யும்பொருட்டுத் தேவாரத் திருப்பதிகம்பாடி ஆயிரம்பொன் பெற்றனர். 6. தமது கட்டளையின்படி தேவர்கள் படரரசு மரங்களாக, சிவபெருமான் அம்மர நிழலில் எழுந்தருளினர். 7. மகப்பேறு கருதி வந்து வழிபட்ட முசுகுந்த மன்னருக்கு இறைவன் இதனைத் திருவாரூராகவும், தம்மைத் தியாகேசப் பெருமானகவும் காட்டிப் புத்திரப்பேறும் அளித்துப் புத்திரத்தியாகர் என்னும் பெயருடன் வீற்றிருந்தருளினர். 8. தரும தேவதை தம்மை வழிபட, பெருமான் அதனை இடபமாகக் கொண்டதன்றி, தம் சந்நிதியில் அரசமர நிழலில் கோயில்கொண்டிருக்கும்படி அதற்கு வரமும் தந்தார். 9. தேவர்களும் முனிவர்களும் வேண்டிக்கொள்ள அந்தவேண்டுகோளை ஏற்றுப் போதியம்பலத்திலே சிவபெருமான் மகாதாண்டவம் புரிந்தருளினர். 10. சில முனிவர்கட்குச் சிவஞானேபதேசம் செய்தருளினர். 11. சில அந்தணர்களுக்கு வேதத்தை அருளிச்செய்தனர். 12. போகநாத சித்தர், நவகோடி சித்தர் முதலிய சித்தர்கள் விரும்பியவண்ணம் அவர்களுக்கு அட்டமாசித்திகளையும் பிறவற்றையும் அருளினர். இதுபோன்ற அற்புதங்கள் பல சிவபிரான் ஆணையால் இத்தலத்திலே நிகழ்ந்தன. சித்தர்கள் பலர் இங்கே எப்போதும் வசிக்கின்றனர் என்ற ஐதிகமும் உண்டு.



திருவாவடுதுறை ஆதீன மடாலயம்

## நாட்டில் மடங்கள் :

அன்றுமுதல் நாள்தோறும் நாள்தோறும் அண்ணல்
அடியரள விறந்தபெயர் வந்தவர்கள் எல்லாம்
சென்றுறையத் திருமடங்கள் திருமடங்கள் தோறும்
திருவிளக்கு அங்கு அவர்சாத்த உள்ளுடை மேற்போர்வை
துன்றியசெந் நெலின்அடிசில் கன்னல்நறுங் கனிகள்
தூயஅறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட பால்தேன்
நன்றுதிருப் பண்ணியந்தண் ணீரமுதம் அடைக்காய்
நரபதி ஏவலின் அமைச்சர் நாள்தோறும் நடத்த.

— ஸ்ரீ உமாபதிசிவாசாரியார்.

குறிப்பு:-

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் போற்றிவருகிற சித்தாந்த உண்மைகளை உலகிற்கு உதவியருளிய சந்தானசாரியர்களுக்குள் நான்காமவராய் இன்றைக்கு அறுநூறு ஆண்டு கட்குமுன் எழுந்தருளியிருந்தவர் ஸ்ரீ உமாபதி சிவாசாரியசுவாமிகள். பன்னிரண்டாம் நூற்றாண்டில் நிகழ்ந்த வரலாற்றை அடிப்படையாகக்கொண்டு அவர்கள் அருளிச்செய்த சேக்கிழார்புராணத்தில் உள்ளது இச்செய்யுள். சேக்கிழார் அருளிய பெரிய புராணம் சோழ அரசர்கள் உள்ளத்தை உருக்கிய காரணத்தால், சோழ அரசர்கள் சோழ நாட்டில் பல திருமடங்களை நிறுவினார்கள். அந்தத் திருமடங்களெல்லாம், தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடுகின்ற முனிவர்கள் தங்கும் இடங்களாயின. முனிவர்கள் தாங்கள் ஆராய்ந்து கண்ட உண்மைகளையெல்லாம், தமிழ் நாட்டிற்குத் தத்துவ சாத்திரங் களாகவும் சமயக்கோட்பாடுகளாகவும் வழங்கினார்கள். அவையே, நாட்டில் அரசியல் மாறுதல்களும் அமைதி இன்மையும் ஏற்பட்ட காலத்து மக்கள் மக்களாக வாழ்வதற்குப் பெரிதும் உதவிபுரிந்தன.

சிவமயம்

# மகிழ்ச்சியான நிகழ்ச்சி

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஸ்ரீ முத்திபஞ்சாக்கர தேசிக சுவாமிகள் ஆதீனத்து இருபத்தோராவது குருமூர்த்திகளாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் அவர்கள், கர ஆண்டின் தொடக்கத்திலே ஞானபீடத்து எழுந்தருளினார்கள். இந்த ஐந்து ஆண்டுகளாக ஆதீனப்பணிகளின் முன்னேற்றம், பலவகையிலும் மிகச்சிறந்து திகழ்கின்றது.

ஞானதானப்பணியில் செந்தமிழ்நாட்டுள்ள சிவபக்த சிரோமணிகள் ஒவ்வொருவரும், ஞானபூசையை நாடோறும் இயற்றி ஈடேற, ஞானசாத்திரங்கள் பதினான்கையும் பதினாயிரக்கணக்கில் அச்சிட்டு வழங்கியருளுகிறார்கள்.

மக்களுடைய கல்வி அருள்விளக்கம் இவைகளின் பரிபாகநிலைக்கு ஏற்ப, ஞான சாஸ்திர உரைநூல்களையும் உரைநடை நூல்களையும் வெளியிட்டு அனைவரும் எளிதில் அடைந்து அறிந்து உய்ய அருள்பாலித்து வருகிறார்கள்.

அவர்கள் திருவுள்ளத்துச் சுரக்கின்ற அருள்மிகுதிக்கு வெளி அச்சகங்களின் பணி பற்றாமையால், ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளுடைய இடது திருக்கடைக்கண் - (திருவருட்கண்) பதிகின்ற சந்நிதியிலேயே அவர்களுடைய பெருங்கருணைபோல் விரிந்த கட்டிடத்தில் எல்லா அமைப்புக்களும் ஒருங்கே நிறைந்த - நாளொன்றுக்குப் பதினாயிரம் படிகள் அச்சிடக்கூடிய அச்சகம் ஒன்றை நிறுவியிருக்கிறார்கள். அதற்குப் பிரதம ஞானாசாரியப் பெருந்தகையின் திருப்பெயரை இணைத்து **ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகம்** என நாமகரணம் சூட்டினார்கள். இந்த மன்மத ஆண்டு விநாயகசதுர்த்தியன்று, ஸ்ரீ ஞானமா நடராஜப் பெருமான் திருவருட்பிரஸாதத்தையும், ஸ்ரீ முத்தி பஞ்சாக்கர தேசிக மூர்த்திகள் விபூதிப் பிரஸாதத்தையும் அணிவித்து இயந்திரத்தை இயக்குவித்தார்கள். அவர்கள் அருளியக்கவழியே அச்சகம் அநவரதமும் இயங்கிக்கொண்டிருக்கிறது.

அச்சகத்தில் முதன்முதலாகக் **கணபதி** என்னும் நூல் அச்சிற்குத் தொடங்கப் பெற்றது. அது, ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களால் புதிதாகவே நிர்மாணிக்கப் பெற்றதும் பண்படுத்தப்பெற்றதுமாகிய எடுத்தணிவயல் என்னும் கிராமத்தில் புதிதாகத் திருப்பணி செய்விக்கப்பெற்ற விநாயகர் கோயில் கும்பாபிஷேக காலத்தில் வெளிவர இருக்கிறது. இரண்டாவதாக இந்தத் **திருமந்திரமாநாட்டு மலர்** இன்று வெளிவருகிறது.

கணபதியில் தொடங்கித் திருமந்திரத்தை ஜெபித்து, ஞானநுபவ நிலையில் முதிர்ச்சி பெற, ஞானநுபவ நூல்கள் பலவற்றையும் நல்கி, நாடு மகிழ நற்பணிசெய்து, ஸ்ரீ ஞானமா நடராஜப்பெருமான் திருவருளாலும், ஸ்ரீ முத்திபஞ்சாக்கரதேசிகமூர்த்திகளின் கருணையாலும் இந்த அச்சகம் என்றும் இனிது இயங்குவதாகுக.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகளின் திருவருள் துணைக்கொண்டு, அவர்கள் குருபூசைத் திருநாளையொட்டி வழக்கம்போல, சென்ற ஜய ஆண்டு தைத் திங்களிலும் இரண்டாவது திருமந்திர மாநாடு நடைபெற்றது.

மாநாட்டில், அன்று காதாற்கேட்ட திருமந்திரக் கருத்துக்களை என்றும் கண்ணாலும் கண்டு கருத்தில் அமைத்துக்கொள்ள வாய்ப்புத்தந்தருள வேண்டுமென்று அன்பர்கள் பலர் வேண்டிக்கொண்டனர். அதற்கிணங்க, சுருக்கெழுத்தாளர்கள் எடுத்துக்கொடுத்துள்ள சொற் பொழிவுகளின் சுருக்கங்கள், எழுத்துப் பிழைகளைத் திருத்தி அப்படியே அச்சிடப்பெற்றன.

சைவத்தமிழ் உலகம் இவ்வெளியீட்டைப் பெற்று, கருத்துக்குவியலில் ஈடுபட்டுப் போற்றி மகிழுமாக.



ஏழாந்திருநாளில் திருமூலதேவர் உற்சவம்

கயிலாயத்து ஒரு சித்தராய் நந்திதேவர் திருவருளைப் பெற்ற சிவயோகி, தலயாத்திரை யாகப் பொதியமலை நோக்கி வருகிறபோது, திருவாவடுதுறைக்கு வந்து பெருமானை வழிபட்டு அருகில் உள்ள சாத்தனூர் அடைந்தார் ; அங்கு இறந்து கிடந்த பசுமேய்ப்போனாகிய மூலன் என்னும் இடையன் உடலில் புகுந்து மூலராக எழுந்தார் என்பது வரலாறு. இப்படி மூலராக எழுந்தவுடனே, எஜமான் இறந்த துக்கத்தால் கதறிய பசுக்கள், ஆனந்தமேலீட்டால் மோந்தன ; நக்கின ; கனைத்தன ; துள்ளிக் குதித்தன. எப்படி எப்படியோ சந்தோஷத்தைக் காட்டிக்கொண்டன. மூலராகிய சிவயோகியும் மகிழ்ச்சியோடு பசுக்களை மேய்த்தார் ; அவைகளைக் காவிரித் துறையிலே நீர் அருந்தச் செய்தார் ; வெயில்நேரத்தில் நிழலுள்ள இடத்தில் தங்கச்செய்து பாதுகாத்தார். மாலைநேரம் வந்ததும் பசுக்கள் கன்றுகளை நினைத்துக்கொண்டே வீடுகளை நோக்கி நடந்தன. அவை தத்தம் வீடுகளை அடையும்வரை மூலரும் பின்னே தொடர்ந்துசென்றார். இப்படி மூலர் அன்று மேற்கொண்ட பசுப் பணியும் முடிந்தது. பிறகுதான், திருவாவடுதுறையில் அரச மரத்தின்கீழ் மூவாயிரம் ஆண்டுகள் யோகத்திலிருந்து, அருந்தமிழ் மூவாயிரம் அருளினார் ; திருமூலதேவநாயனார் என்று சிறப்பிக்கப்பெற்றார். அருந்தமிழும் திருமந்திரம் என்ற பெயருடன் திகழ்கிறது.

இத்தகைய சிறப்போடுகூடிய திருமூலதேவநாயனாருக்கு, ஸ்ரீ கோமுத்தீஸ்வரர் கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறுகிற மகோற்சவ ஏழாந்திருநாளில், தனிச்சிறப்புச் செய்யப்பெறுகிறது. அன்று காலை திருவீதியுலாவில் பெருமானுடன் திருமூலதேவநாயனாரும் எழுந்தருளுகிறார். அவர் மேற்கொண்ட பசுப்பணியின் நினைவாக அவருக்கு முன்பு, ஒரு பசுமாடு கன்றுடன் கொண்டு செல்லப்பெறுகிறது. திருவுலா முடிந்து ஆலயத்தை அடைந்ததும் சந்நிதியிலேயே ஆதீன ஓதுவா மூர்த்திகளால் திருமூலர் வரலாறு வாசிக்கப்பெறுகிறது. உடனே கோபூஜை நடைபெறுகிறது. பிறகு தீபாராதனை தரிசனம். இப்படி நிகழ்கிற திருமூலர் உற்சவக் காட்சியை இப்படம் காட்டுகிறது.

உ

சிவமயம்

*திருச்சிற்றம்பலம்*

**சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்**
**சேர்ந்திருந் தேன்சிவன் ஆவடு தண்துறை**
**சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலிற்**
**சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே.**

*திருச்சிற்றம்பலம்*

—திருமூலர்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## திருவாவடுதுறை ஆதீனம்

# 2-வது திருமந்திர மாநாட்டு நிகழ்ச்சிகள்

**ஆணையின்வண்ணம்:**

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் இருபத்தோராவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் அவர்கள் கட்டளையிட்டருளிய வண்ணம், மெய்கண்டான் யாண்டு ௭௩௨ ஜய௵ தை௴ ௮௳ (21—1—1955) மாலை மூன்று மணிக்குத் திருமந்திரமாநாடு கொலுமண்டபத்தில் கூடியது.

**கொலுமண்டபம்:**

ஆதீனச் சார்பில் நடைபெற்ற பல மாநாடுகளின் சிறப்புக்களைத் தெரிவிக்கும் புகைப்படங்களும், அகிலமெல்லாம் அரன்நாமமே மலிய, ஞானச்செங்கோல் நடாத்தும் துறைசை தருமை மதுரையாகிய மூன்று ஆதீன மகாசந்நிதானங்களின் திருவுருவப்படமும், 'சிவ சிவ என்றிடத் தேவரும் ஆவர்' என்பது முதலான திருமூலர் பொன்மொழிகள் பொறித்த அட்டைகளும் அங்கங்கே அறிவுக்கு விருந்தாகக் கொலுமண்டபம் விளங்கிற்று.

**தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்**
**மூவர் தமிழும் முனிமொழியும் — கோவை**
**திருவா சகமும் திருமூலர் சொல்லும்**
**ஒருவா சகமென் றுணர்.**

என்ற ஔவையாரின் திருப்பாடல் அனைவர் உள்ளத்தையும் கவர்ந்து அணிசெய்து நின்றது. ஏழாம் நூற்றாண்டில் நின்றசீர் நெடுமாறன் அரசாட்சியில் சமயம் வளர்ந்ததையும், சிவபாதசேகரன் செங்கோல் ஆட்சியில் சைவம் வளர்ந்ததையும் நினைவூட்டிக்கொண்டு ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களோடு குடியரசுத் தலைவர் ராஜன்பாபு அவர்களும் சேர்ந்து எடுக்கப்பெற்ற படங்கள் திகழ்ந்தன. சென்னை ராஜ்யத்தின் அறநிலையப் பாதுகாப்பு அமைச்சராக இருந்த திரு. கே. வேங்கடசாமி நாயுடு அவர்கள் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களைத் தரிசித்தபோது எடுத்த படங்களும் இலங்கின. இவற்றிற்கெல்லாம்

நடுநாயகமாக நமது ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள், ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள, அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையேயாக, ஆதிகுருநாதனுகிய ஸ்ரீநமசிவாய மூர்த்திகளைத் தொழுதுகொண்டிருக்கும் திருவுருவப்படம் திகழ்ந்தது. அங்கங்கே ஆத்மநாத சுவாமி மாணிக்கவாசகருக்குத் திருவடி தீக்ஷை, ஸ்பரிச தீக்ஷைசெய்த படங்கள் சிந்தைக்கு விருந்தாய்த் திகழ்ந்தன. திருமூலதேவர் திருவுருவப்படமும், கவிராக்ஷஸ கச்சியப்ப முனிவர் படமும் கனிந்தவுள்ளத்திற்குக் கசிவைத் தந்தன. இக்காட்சியை எல்லோரும் சிவலோகக் காட்சியாகக் கண்டு கைதொழுது நின்றனர்.

**அருட்பெருகு தனிக்கடல்:**

கொலுமண்டபத்தின் நடுவிலே அருட்பெருகு தனிக்கடலாய் — அடைந்தவர்க்குப் பெருந்துணையாய் ஞானச்செங்கோல் நடாத்தும் துறைசைத் துறவரசு ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் எழுந்தருளியிருந்தார்கள். முத்தாந்தச் சென்னெறி தேடிச் சித்தாந்தச் செந்நெறி கடைப்பிடித்த சைவ நன்மக்களும், சிவயோகப் பயிற்சி மிக்க அன்பர்களும், தவநலம் கனிந்த முனிபுங்கவர்களும், இசைநலத்தால் இறைவனை வசப்படுத்திய ஓதுவா மூர்த்திகளும், தெய்வத் தமிழ்நலம் கனிந்த நாவலரும் பாவலரும் நிறைந்திருந்தனர்.

**இசைத்தமிழோடு எழுந்தது:**

**முதல்நாள்:-** 21—1—55 வெள்ளிக்கிழமை மாலை 3-மணிக்கு, திருவாவடுதுறை ஆதீன இசைப்புலவர்கள் திரு. சுந்தரேசஐயா, திரு. சோமசுந்தரம் தேவாரபாராயணத்தோடு திருமந்திர மாநாடு தொடங்கியது. திவான்பகதூர் ஸ்ரீ. கே. எஸ். இராமசாமி சாஸ்திரிகள் தலைமைவகித்தார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தலைவருக்குப் பொன்னுடை போர்த்தி, நிலைமாலைசூட்டிக் கௌரவித்தார்கள். ஆதீன வித்துவான், சித்தாந்த சைவமணி திரு. த. ச. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் மாநாட்டைத் தொடங்கி வைத்தார்கள். பின்னர் முறையே ஆதீன மகாவித்துவான் திரு. கே. ஆறுமுக நாவலர் அவர்கள், முதல் தந்திரத்தில் "ஒழுக்க நிலை" என்பதுபற்றியும், பாலகவி சித்தாந்தப் புலவர்மணி திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள் இரண்டாந்தந்திரத்தில் "ஐந்தொழில்" என்பது பற்றியும், ஆதீன மகாவித்துவான், அண்ணுமலைப் பல்கலைக்கழகத்துத் தமிழாராய்ச்சி விரிவுரையாளர் திரு. ச. தண்டபாணிதேசிகர் அவர்கள் மூன்றுவது தந்திரத்தில் "அட்டாங்க யோகம்" என்பதுபற்றியும் விரிவுரையாற்றினுர்கள். பாலகவியின் புதல்வி செல்வி மீனுக்ஷி யால் சிவஞானபோதம் பற்றி விளக்கம் கூறப்பெற்றது.

**இரண்டாம்நாள்:-** 22—1—55 சனிக்கிழமை அண்ணுமலைப் பல்கலைக்கழக உதவித் துணைவேந்தர் திரு. A. இராமநாதன் பிள்ளை அவர்கள் தலைமை தாங்கினுர்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பொன்னுடை போர்த்தி, நிலைமாலை சூட்டிக்

கௌரவித்தார்கள். தலைமையுரைக்குப் பிறகு பழநி சித்தாந்தசரபம், மகா மகோபாத்யாய சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்கள் நான்காம் தந்திரத்தில் "யந்திரமும் மந்திரமும்" என்பதுபற்றியும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவர் வித்துவான், திரு. ஜி. சுப்பிரமணிய பிள்ளை M. A., B. L., அவர்கள் ஐந்தாம் தந்திரத்தில் "நால்வகைநெறி" என்பதுபற்றியும், ஆதீன வித்துவான், சித்தாந்த சைவமணி திரு. த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் ஆறாந்தந்திரத்தில் "சிவகுரு தரிசனம்" என்பது பற்றியும் விரிவுரையாற்றினார்கள்.

**மூன்றாம்நாள் :-** 23—1—55 ஞாயிறு பழநி சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். முன்னைய நாட்களைப்போலவே அன்றும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் தலைவருக்குப் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார்கள். ஆதீன வித்துவான், கடலூர் ஸெயிண்ட் ஜோஸப் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர், திரு. ஸ்ரீநிவாசாசாரியார் அவர்கள் ஏழாந்தந்திரத்தில் "இறைவனும் ஆன்மாவும்" என்பதுபற்றியும், ஆதீன வித்துவான், திரு. வீர. சிவசுப்பிரமணியம் அவர்கள் எட்டாந் தந்திரத்தில் "அவஸ்தைகள்" என்பதுபற்றியும், கலைமகள் ஆசிரியர், திரு. கி. வா. ஜகந்நாதன் M. A., அவர்கள் ஒன்பதாம் தந்திரத்தில் "திருவைந்தெழுத்தும் திருக்கூத்தும்" என்பதுபற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள்.

இந்த மூன்று நாட்களிலும் தலைமைவகித்த பெருமக்கள் மூவருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் பொன்னாடை போர்த்தியதுபோலவே பேசிய புலவர் பெருமக்களுக்கும் பட்டாடைபோர்த்தி ஆசி அருளினார்கள். ஆதீன நாதஸ்வர வித்வான்கள் வீருசாமி, நடராஜசுந்தரம் குழுவினர் மங்கள வாத்தியம் முழங்கினர். அன்றைய காட்சி எப்பொழுதும் நினைவுக்குவர புகைப்படம் எடுக்கப்பெற்றது. ஆதீனத் தேவாரப் புலவர்கள் திரு. சுந்தரேசஐயா, திரு. சோமசுந்தரம் ஆகியோர் மூன்று நாட்களிலுமே திருமுறை ஓதிச்சிறப்பித்தனர். ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் நல்லாசி அருள்நோக்குடன் மாநாடு இனிதே நிறைவேறியது.

உ

சிவமயம்

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குலம்
மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன்
றன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி
யேபர விட்டென்உச்சி
அடிமன்ன வைத்த பிரான்மூல
னுகின்ற அங்கணனே.

—நம்பியாண்டார்நம்பி.



இரண்டாவது திருமந்திர மாநாடு - தொடக்கநாள்

# தொடக்கநாள் பேச்சு

**தலைமையுரை:**

## திரு. கே. எஸ். இராமசாமி சாஸ்திரி அவர்கள்.

ஓய்வுபெற்ற மாவட்ட நீதிபதி

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் உத்தரவை மனத்தில் நினைந்து, அவருக்குக் கீழ்ப்படிந்து, இவ்விடத்தில் வந்திருக்கும் சிவநேயச் செல்வர்க்கும் என்னுடைய வணக்கத்தைத் தெரிவித்து, இந்த மகாநாட்டில் தலைமை வகிக்கும்படி எனக்குப் பணித்திருக்கும் குருமகாசந்நிதானம் அவர்களை வணங்கி, சில கூறலாமென்று நினைக்கிறேன்.

இப்பொழுது இங்கு எனக்கு அளிக்கப்படும் கௌரவம் யாவும் எனது தந்தையின் குணத்தால் ஏற்பட்டது. அவர் தாம் மனத்தில் நினைக்கும் எண்ணங்களை அப்படியே எடுத்துச்சொல்லக் கூடியவர். கடவுளிடத்திலே நீங்காத பக்தி யுடையவர். அவர் எப்படித் தாம் நினைப்பவைகளைக் கூட்டாமல் குறைக்காமல் சொல்வாரோ, அதேபோலவே நானும் எனக்குத் தெரிந்தவைகளை ஒளிவு மறைவின்றிக்கூறலாம் என்றிருக்கின்றேன். வடமொழிச் சுலோகமொன்றில் கூறப்படும் ஒரு கருத்தை இங்குக் குறிப்பிட விரும்புகிறேன். பெரியவர்கள் எந்த வழியில் சென்றார்களோ அதே வழியில் போக வேண்டுமென்பது தொன்றுதொட்டு வந்திருக்கும் ஒரு கொள்கை. இக்கொள்கை என் தந்தையாரை நேரில் கண்டவர்களுக்குக் கூற வேண்டியதேயில்லை. அப்படி இருந்தும் இன்று எனக்கு இச்சபைமுன் பேசுவதற்குச் சிறிது அச்சமேற்பட்டிருக்கிறது. இம்மாதிரியான சபைகளிலே இதுவரை நான் தலைமை வகித்ததும் கிடையாது. அதுவும் இம்மாதிரியான ஒரு மகாசந்நிதானத்தின் முன்பு திருக்கயிலாயம் என்று நினைக்கும் இவ்விடத்திலே கூடியுள்ள சிவநேயச் செல்வர்களுடைய கூட்டத்திலே பேசியதில்லை. அதுவே எனது அச்சத்திற்குக் காரணம். எந்தச் சபையானாலும் தன்னிலை மறந்து தலைவனை நினைப்பது தான் பேரின்பத்தைப் பயக்கும். ஆனால் இப்போது இங்கு வந்தவுடன் இது சிவலோகம் அல்லவா? என்று எண்ணும்போது என்னுடைய பணி மறந்துவிட்டது. நாம் இருக்கும் இடமாகிய இப்பூமியிலே இந்த உணர்ச்சியை உண்டுபண்ணுவதையே நம்முடைய உயர்ந்த செல்வமாகக் கருத வேண்டும். இங்கு வந்தவுடன் எனக்குப் பொன்னாடை போர்த்தி இதுவரையில் நான் எங்குமே அணியாத - என் உயரத்திற்கும் உயர்ந்த - இவ்வளவு பெரிய மாலையை எனக்குப் போட்டு என்னை மெய்ம்மறக்கச் செய்துவிட்டார்கள். இருந்தாலும் என் நிலையைச் சற்றுச் சரிப்படுத்திக்கொண்டு என்னுடைய பொறுப்பைச் செய்யலாம் என்று நினைக்கிறேன். வாழ்க்கையின் உண்மையான செல்வம் சிவமணம். ஆனால் இப்போது என்கதை எப்படி இருக்கிறது என்றால் சீவனுக்குள்ளே சிவமணம் வீசிக்கொண்டிருக்கிறது. அதை ஸ்ரீ-ல-ஸ்ரீ குரு மகா சந்நிதானத்தின்முன் வெளிப்படுத்துவதற்கு முடியுமா என்ற சந்தேகநிலையில் தள்ளாடிக் கொண்டிருக்கிறேன். இருந்தாலும் ஓரளவு சுருக்கமாக - விளக்கமாகச் சிலவிஷயங்களைக் கூற நினைக்கிறேன்.

நான் மூன்று மொழிகளிலும் தேர்ச்சி பெற்றிருப்பவனென்று கூறினார்கள். நான் எவ்வளவு தேர்ச்சி பெற்றிருக்கிறேன் என்று

எனக்குத் தெரியும். நான் ஒரு சாதாரண வக்கீலாக ஐந்து வருஷ காலம் இருந்து, பின்னர் நீதிபதியாகி, இப்போது ஆண்டவன் நீண்ட ஆயுள் கொடுத்திருப்பதனுல் கடந்த இருபது ஆண்டுகளாகச் சர்க்காரின் உப காரச் சம்பளம் பெற்று வருகிறேன். இருந் தாலும் கடந்த முப்பத்தைந்து ஆண்டுகளாகச் சட்டத் துறையிலே கவனம் செலுத்தாது, சிவனுடைய திருவடிகளில் சரணடைந்து, உலக மக்கள் நன்மை எய்துவதற்கு என்ன வழி என்பதை ஆராய்ச்சி செய்துகொண்டு வருகிறேன். அதோடு, கல்வித் துறையிலே ஒரு பகுதியான கலைத் துறையைச் சற்று உயர்த்த வேண்டும் என்பதற்கும் பாடுபட்டு வருகிறேன்.

காளிதாசருடைய சாகுந்தல நாடகத்தில் ஒரு சிறு பகுதி என் நினைவிற்கு வருகிறது. அதாவது, ஒருவனுக்கு லட்சுமி கடாக்ஷம் வேண்டும் என்ருல் எளிதில் கிடைக்கவே கிடைக்காது. ஆனுல் மகாலட்சுமியினுடைய கருணைக் கடாக்ஷமே அவன்பால் ஏற்பட்டு விட்டால் அதைத் தடை செய்ய முடியவே முடியாது. அதுமாதிரியாக செல்வத்திலேயே உயர்ந்த செல்வமாகிய சமயச் செல்வம் இங்கு வீற்றிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத் தின் வாயிலாக எனக்குக் கிடைத்திருக்கிறது. இதிலிருந்து தப்பவேண்டும் என்று நான் நினைத்தால்கூட அது முடியாத காரியமாகும்.

பாகவதம் என்ற நூலிலே, முற்காலத்து கங்கை, யமுனை போன்ற நதிகள் பாயும் பிர தேசங்களிலிருந்துதான் உலகம் உய்வதற்கான தத்துவங்கள் வெளிப்பட்டன என்று கூறப் பட்டுள்ளது. அதேபோல நமது தென்னுட் டிலே தஞ்சை ஜில்லாவிலே, அதுவும் கும்பகோணத்திலே, காவிரி பாயும் செழிப் பான இந்த இடத்திலிருந்துதான் உலகத் திற்கு நன்மை ஏற்பட்டு வருகிறது என்பதை நாம் துணிவாகச் சொல்லலாம். நம் தென் நாட்டிலே காவிரி, தாமிரபரணி ஆகிய நதிகள் இருக்கும் இடங்களிலே அருட் செல்வம் நிறைந்திருப்பதை இன்றும் காணலாம். இவ் விடங்களிலிருந்தே உலகத்தை உய்விப்பதற்கு முயற்சிகள் செய்யவேண்டும். அந்த முறை யிலே, இந்த இடத்திலே திருமந்திர மாநாடு நடப்பது முற்றிலும் பொருத்தமுடையதே யாகும். நம்முடைய இந்த முயற்சிகளினுலே சைவ சமயத்தை உலகமெங்கும் பரவச் செய்யவேண்டும். மேல்நாட்டில்தான் தத்து வங்கள் நிறைந்திருக்கின்றன என்று நாம் நினைக்கக்கூடாது. கீழ்நாடுகளிலும், அதுவும் குறிப்பாக இந்த ஆசியா கண்டத்திலுந்தான் தத்துவங்கள் நிறைய இருக்கின்றன என்பதை நாம் நன்கு காணலாம். நம்முடைய ஆசியா கண்டத்தை எடுத்துக்கொண்டால் இங்கு இந்து மதம், பௌத்த மதம், ஜைன மதம், முஸ்லீம் மதம், கிறிஸ்தவ மதம் ஆகிய பல மதங்கள் இன்றும் இருப்பதைக் காணலாம். ஆகவே இக்கண்டத்திலிருந்துதான் மதங்களே தோன்றியிருக்கின்றன என்று கூறலாம். இந்த உலகத்தின் சுற்றளவு 25,000 மைல். இப் பரந்த உலகத்திலே நம்முடைய ஆசியா கண் டத்திலேதான் சமயம் முதன்முதலாகத்தோன் றிப் பின்னர் ஜாவா, சுமத்ரா, போர்னியோ, பர்மா போன்ற இடங்களுக்கெல்லாம் சென் றிருக்கவேண்டும் என்பதை ஆராய்ச்சியாளர் கூடக் கண்டு பிடித்திருக்கிருர்கள். நம் நாட்டி லிருந்துதான் பிற நாடுகளுக்கும் கலை வளர்ச்சி உண்டாகி இருக்கிறது.

வேடிக்கையான ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். நான் திருத்தருப்பூண்டியில் இருந்தபோது, ஒருநாள் ரயில் நிலையத்திற்குச் சென்றிருந்தேன். அங்கு ஒரே கூட்டமாக இருந்தது. என்ன கூட்டம் என்று விசாரித் தேன். ரயிலிலே பிள்ளையார் வருகிருர் என்று அங்குள்ளவர்கள் சொன்னுர்கள். நீங்களும் சிறிதுநேரம் இருங்கள்; இந்த வேடிக்கையைப் பார்த்துவிட்டுச் செல்லுங்கள் என்று சிலர் என்னிடம் கூறினுர்கள். நானும் இருந்தேன்; சிறிது நேரத்திற்கெல்லாம் வண்டி வந்தது. அருகிலே சென்று பார்த்தபோது அந்த ரயிலிலே உண்மையாகவே ஒரு பிள்ளையார் பிரயாணம் செய்துகொண்டு வந்திருந்தார்.

பிள்ளையாருக்கு மாலையெல்லாம் போட்டு அலங்காரமாகக் கொண்டுவந்திருந்தார்கள். காரணம் என்னவென்று அவர்களை விசாரித்த போது, அவர்கள் ஊரிலிருந்த பிள்ளையாரை வேறு ஊரார் கும்பாபிஷேகம் செய்வதற்கென்று அங்கிருந்து பெயர்த்துக்கொண்டு கப்பலில் கொண்டுபோக இருந்தார்களென்றும், இவர்கள் அது தெரிந்து உடனேசென்று கப்பலில் ஏற்றவிடாமல் தடுத்துத் தங்கள் ஊருக்கு எடுத்துச் செல்வதாகவும் கூறினார்கள். இதனை எதற்காகக் கூறுகிறேன் என்றால் இக்காலத்தில் ஒருசிலர் விநாயகரைப் பழிக்கிறார்கள். ஆனால் அவரை வழிபடும் ஒரு கூட்டத்தாரும் இருக்கின்றார்கள் என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும். மேலும், பழங்காலந்தொட்டு நமது நாட்டில் உருவ ஆராதனைப் பண்பாடு இருந்திருக்கிறது. இப்பேர்ப்பட்ட மறுமலர்ச்சிக் காலத்தில் இந்தத் திருமந்திர மாநாடு நடைபெறுவது மிகவும் வரவேற்கத்தக்கது. இன்று இருந்துவரும் சிற்சில எதிர்ப்புக்களும் விரைவில் கதிரவன் முன் பனிபோல் தானே விலகிவிடும்.

ஒரு நாடு உயர எப்படிச் சமுதாயம், அரசியல், பொருளாதாரத் துறைகள் உயர வேண்டுமோ அதேபோல், இவைகள் எல்லாம் உயர்வதற்கு முதற்காரணமாய் இருக்கும் சமயத்துறை முதலில் உயரவேண்டும்.

நம் நாடு சுதந்திரமடைந்தும், இத்துறையில் உயராவிட்டால் மற்ற மூன்று துறைகளிலும் உயர்வதற்கு இடமில்லை. இது எப்படி இருக்கிறதென்றால் ஒரு பெண்ணானவள் எவ்வளவுதான் ஆபரணங்கள் அணிந்திருந்தாலும் அவளுக்கு முக்கியமாக இருக்கவேண்டிய தாலி இல்லாததுபோலாகும். ஆகவே, நம் நாட்டில் முக்கியமாகச் சமயத்துறை மிக முன்னேறவேண்டும்.

எல்லாத் திருமுறைகளையும்விட திருமூல தேவர் அருளிய திருமந்திரம் காலத்தால் முற்பட்டதென்பது அனைவருடைய கொள்கை. அதைப்பற்றி ஆராய்ச்சி செய்து நானும் ஒரு சிறிய நூல் எழுதியிருக்கிறேன். இன்றைய தினம் அதைப் பார்வையிடும்படி ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களிடம் கொடுத்திருக்கிறேன். நான் சில வருடங்களாக இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டு வருகிறேன். குற்றம் குறைகள் இருக்கலாம். அவைகளைத் திருத்திக் கொள்வதற்கு நான் தயார். ஆராய்ச்சி என்றால் எப்போதும் அபிப்பிராயபேதம் எழுவதுதான் இயற்கை. ஆனால் திருமூலரைப் பொறுத்த வரையில் சைவ சித்தாந்த சாத்திரப்படி அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஞான சம்பந்தர் ஆகிய நால்வர்க்கும் முற்பட்டவர் என்பது பொதுப்படையான கருத்து. சுந்தர மூர்த்தி நாயனார் முந்தியா? மாணிக்கவாசக சுவாமிகள் முந்தியா? என்று ஒரு ஆராய்ச்சி செய்தால் மாணிக்கவாசகசுவாமிகளே முந்தியவர் என்பது உண்மையாகும். அவருடைய நூல்களிலிருந்து பார்த்தால் நம் சைவ சமயமானது அவர் காலத்திற்கு முன்னமேயே வளர்ந்திருக்கிறதென்பது தெரியும். ஆகவே, இப்பொழுது திருமூல நாயனார் காலம் திருவள்ளுவர் காலத்திற்கும், நால்வருடைய காலத்திற்கும் இடைப்பட்டதா அல்லது எல்லோருக்குமே முற்பட்டதா என்ற ஆராய்ச்சி இருந்து வருகிறது. இப்பொழுது அதைப் பற்றி நாம் ஆராய வேண்டியதில்லை. நானே பேசிக்கொண்டிருந்தாலும் தவறு. யானையை அங்குசத்தால் அடக்குவது போல் எனக்குக் காலம் அதிகமாகிவிட்டது என்பதைச் சொல்வதற்கு முன்னரே ஒரு விஷயத்தை மட்டும் கூற விரும்புகிறேன்.

திருவாவடுதுறையே திருமூலருக்குத் திருமந்திரத்தை உருவாக்குவதற்குச் சிறப்பான இடம் என்று கருதப்பட்டதும், ஓராண்டு தவமிருந்து ஒரு பாடல் வீதம் மூவாயிரம் ஆண்டு தவமிருந்து மூவாயிரம் அருந்தமிழ்ப் பாடல்களைத் திருமூலதேவர் இயற்றி அருளினார் என்பதும் அனைவர்க்கும் தெரிந்த விஷயம். நந்திதேவர் அருள்பெற்று வந்தவர் அவர் என்பதும், இடையன் உடலிற் புகுந்து திருமூல தேவராக அமர்ந்து திருமந்திரத்தையியற்றினார் என்ற வரலாறும் இங்குள்ள அனைவருக்கும்

தெரியுமென்று நினைக்கிறேன். இந்தத் தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள திருவாவடுதுறையில் ஒரு இடையன் இறக்க, அவனுடைய மாடுகள் கதறுகின்ற நிலைகண்டு உருகி, கயிலையிலிருந்து வந்த ஒரு சிவயோகியாரே திருமூலதேவராக உருக்கொண்டு வந்தார் என்பது தெரிகிறது. எப்பொழுதும் ஒருவனுடைய மனமானது நெக்குருகி இருக்கும் நிலையைத்தான் சமயம் என்று சொல்வது. ஆகவே, கடவுளும் இந்த உருக்கமான நிலையைக்கண்டுதான் சமயத்தைப் பரப்புவதற்கு இத்திருவாவடுதுறையையே ஏற்ற இடமாகத் திருவுளங்கொண்டு திருமூலரைத் தந்திருக்கிறார்.

திருமூலர் திருமந்திரத்தின் உயர்வை, ஔவையார் சூட்சுமமாகத் தெரிவிக்கிறார். அந்தப் பாட்டால் அதனை நன்கு உணரலாம்:

> தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
> மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
> திருவா சகமும் திருமூலர் சொல்லும்
> ஒருவா சகமென் றுணர்.

இப்பாட்டினால் இதன்பெருமை நன்கு தெரிகின்றது. சைவ சமயத்திற்கு அடிப்படையான நூல்களில் ஒன்றாகிய இத்திருமந்திரத்தைப்பற்றி ஆராயும் இம்மாநாட்டிற்கு, யான் தலைமை வகிக்க அருகதை யற்றவனாயினும் இங்கு இப்பொழுது உங்களுக்குச் சிறந்த முறையிலே அதைப்பற்றி விளக்க மூவர் தயாராக இருக்கிறார்கள். நீங்கள் அதைக் கேட்டு இன்புறப்போகிறீர்கள். இந்நூலின் தனிச்சிறப்பு என்னவென்றால், சைவாகமங்களாகிய இருபத்தெட்டையும் கடைந்தெடுத்து ஒன்பது தந்திரங்களில் மூவாயிரம் பாடல்களால் உருவாக்கி இருப்பதே.

நம்முடைய நாட்டிலே, முக்கியமாகத் தென்னாட்டிலே, தமிழ் ஜில்லாக்களைப் பார்த்தால், பண்டைக் காலந்தொட்டு, தேவாலயங்களும் மடாலயங்களும் அதிகமான சிறப்பையும், மக்கள் அன்பையும் பெற்று வந்திருப்பது நன்கு தெரியும். இனியும், நாம் மடாலயங்களையும், தேவாலயங்களையும் பாதுகாத்து வரவேண்டியது நமது கடமையாகும். ஏனெனில், இவைகளே மக்களனைவருடைய அன்பையும் அருளையும் ஒன்று சேர்க்கும் கருவியாக இருந்து வருகின்றன. எப்படியென்றால், மழை பெய்கிறது; நிலத்தில் பெய்யும் மழை முழுவதும் கடலிலே போய்க் கலந்தால் மக்களுக்கு ஏதும் நன்மையில்லை. ஆனால் ஓர் அணைக்கட்டு கட்டி, நீரைத் தேக்கினால் அது சுற்றியுள்ள மக்கள் அனைவர்க்குமே உபயோகப்படுகிறது.

கிருஷ்ணராஜசாகரத்தில் பார்த்தால் அங்கு கட்டியிருக்கும் அணைக்கு வெளியில் காவிரி அம்மன் பிம்பம் அழகாக அமைக்கப்பட்டு இருக்கிறது. அந்தஅம்மன் கையில் ஒரு பானை அமைக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பானையில் ஓர் இடத்தில் ஓர் சிறு துவாரம் இருக்கிறது. அதன் வழியே ஜலம் சொட்டுகிறது. இவ்வளவு பெரிய அகண்ட காவேரியை - அது எங்கிருந்து புறப்படுகிறது என்று பார்க்க முடியாத ஒன்றை – ஒரு சிறு துவாரத்தின் மூலமாக, இதுதான் காவேரி என்று எடுத்துக் காட்டுகிறதுபோல், நம்கடவுளுடைய திருவருளை மக்களுக்கு எடுத்துக்காட்டுவதற்கு மடாலயங்களும், தேவாலயங்களும் அவசியம் வேண்டும்.

நாம் வெறும் 'இன்டஸ்ட்ரீ,' 'இன்டஸ்ட்ரீ' என்று சொல்லிக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. இன்டஸ்ட்ரீ என்றால் என்ன? உலகத்திலே உற்பத்தி செய்யப்படும் மூலப்பொருள்களை உபயோகப்படும் பொருள்களாக மாற்றிக் கொள்வதற்குத் தொழில் என்று பெயர். நாட்டிலே சமயம் ஒன்றினால்தான் உலகத்திலே அமைதியான தொழிலபிவிருத்தி ஏற்பட முடியும். நம்சர்க்கார்கூட தற்போது இதில் மிகுந்த ஆர்வங் காட்டுவதில்லை. அவர்கள் அதிக கவனம் செலுத்த வேண்டும். வெறும் சமய நூல்களை வெளியிடுவதால்மட்டும் இந்நிலையை உயர்த்திவிட முடியாது. அவைகளால் சிறு அளவுதான் உயர்த்த முடியும். ஆனால் உண்மையை

உணர்த்தக் கடவுள் அருள் சுரப்பதற்கு மடாலயங்களும் தேவாலயங்களும் இன்றியமையாதவைகள். தாயிருந்தாலல்லவா குழந்தை நன்கு வளர முடியும்? தாயாகிய தேவாலயங்களும், மடாலயங்களும் சிறக்காமல் குழந்தையாகிய வெறும் சைவ நூல்களை மட்டும் வெளியிடுவதால் சமயம் நன்கு வளரமுடியாது. தமிழ்நாட்டில் சேலம், வடஆர்க்காடு, மதுரை போன்ற பல ஜில்லாக்கள் இருந்தாலுங்கூட, தஞ்சை ஜில்லாவிலேதான் இந்த தேவாலயங்களும், மடாலயங்களும் இன்னும் செழித்தோங்கி வளர்ந்து வருவதைக் காண்கிறோம். ஆகவே, உலகத்திற்கே பொதுவாக நன்மை ஏற்பட வேண்டுமானால், அது இங்கிருந்துதான் வளரவேண்டும். விஞ்ஞானத் துறையில், எப்படி இன்று ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டிருக்கிறதோ, அதேபோல் சமயத் துறையிலும் ஒரு மறுமலர்ச்சி ஏற்பட வேண்டும். சமயத்துறையில் மறுமலர்ச்சி ஏற்பட்டால் விஞ்ஞானத் துறையிலும், அரசியல் சமூக பொருளாதாரத் துறைகளிலும் நிச்சயம் முன்னேற்றம் அடைய முடியும். எப்படி இலையுதிர்ந்த ஒரு மரம் வசந்தகாலம் வந்தவுடன் சிறந்தோங்கி வளர்கின்றதோ அதேபோல், இன்று நாட்டிலே தேவாலயங்களிலும், மடாலயங்களிலும் ஒரு மறுமலர்ச்சி ஏற்படவேண்டும். இந்த முறையில் நமது இராச்சிய முன்னாள் சமயத்துறை அமைச்சர் பதவியிலிருந்த உயர்திரு. கே. வேங்கடசாமி நாயுடு அவர்கள் பெரிதும் உதவிபுரிந்தார்கள். அவர்களை நாம் பாராட்டாமலிருக்கமுடியாது.

நானே பேசிக்கொண்டிருக்கிறேன். கடைசியாக ஒரு விஷயத்தை மட்டும் சொல்லி முடித்துக் கொள்ளுகிறேன். இம்மாதிரியான மாநாடுகள் பல இங்கு நடப்பதோடு, சென்னையிலும் நடைபெற அங்கும சமய ஸ்தாபனம் நிறுவி, பிரசாரம் செய்தால் அதன்மூலமாக நகரத்திலும் சமயம் வளரப் பேருதவி செய்ததாகும். அதோடு இவ்வாதீன வெளியீடுகளை அச்சடிக்கத் தனி அச்சகமே நிறுவ இருப்பதறிந்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். இது ஒரு பெரிய தொண்டல்லவா! இவ் ஆதீனம் தொன்மையானது. இப்போது திரு. வி. க. அவர்கள் இரண்டாண்டுகளுக்கு முன் தமிழ் விழாவின்போது சொன்ன சொல் என் காதில் ஒலிக்கிறது. தள்ளாத வயதிலும் தமிழ் விழாவிற்கு வந்தபோது ராஜாஜி அவர்கள் அவரை அழைத்து வந்தார்கள். அப்பொழுதுதான் தமிழ்நாட்டின் தலைநகரத்திற்குத் தலைவலி வந்திருந்தது. அதற்காக நானும் ஓரளவு பாடுபட்டேன். திரு. வி. க. வை விழாப் பந்தலுக்கு அழைத்து வரும்போது அவர் ஒருகம்பத்தைப் பிடித்துக்கொண்டிருந்தார். அப்போது அவர் சொன்னார்; ஆந்திரர்கள் இந்த நாட்டை விட்டுப் போகிறோம் போகிறோம் என்று சொல்லிக்கொண்டிருப்பது எப்படி இருக்கிறதென்றால், கம்பத்தை நானே இறுகப்பிடித்துக்கொண்டு நான் போகிறேன் போகிறேன் என்று சொல்லுவதுபோலத்தான் என்று. அவர் மறைந்தாலும் அவர் சொன்ன சொல் என் காதில் இன்றும் ரீங்காரமிட்ட வண்ணமாய் இருக்கிறது.

இதை எதற்காகக் கூறுகிறேன் என்றால், தங்களது ஊரில்மட்டும் சமயத்துறையைப் பரப்பிக் கொள்வதோடல்லாமல், சென்னையிலும் - ஏன் குறுகிய நோக்கம் இல்லாமல் உலகத்திலேயும் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகவே. ஏதோ என் மனத்தில் பட்டவைகளைக் குறிப்பிட்டேன். புலவர்கள் மூன்று நாளும் திருமந்திரம்பற்றி விளக்கிக் கூறப்போகிறார்கள். ஆகவே அது பற்றி அதிகம் தெரியாத நான் பேசாமல் இருப்பதுதான் நல்லது. ஆகவே இந்த அளவில் என்னுடைய பேச்சை நிறுத்திக்கொண்டு, புலவர்கள் பேசுவதேபொருத்தமென நினைத்து, அமர்கிறேன்.

## நூல் வெளியீட்டுரை :

திருவாவடுதுறை ஆதீன வித்துவான், சித்தாந்த சைவமணி

### திரு. த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானமாக இங்கு வீற்றிருக்கும் பரமாசாரிய சுவாமிகளின் பொன்னார் திருவடிகளுக்கும், மும்மொழிப் புலவராய் விளங்கும் தலைவர் அவர்கட்கும், சிவநேயச் செல்வர்கள் அனைவர்க்கும் என்னுடைய தாழ்மையான வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன். எங்கள் குருமகாசந்நிதானம் அவர்களே இன்று தமிழ்நாட்டில் அவ்வப்போது பல மாநாடுகள் கூட்டிச் சைவ சமயத்தை வளர்க்க முன் வந்துள்ளார்கள். அதிலே ஒன்றுதான் இந்தத் திருமந்திரமாநாடு. அதோடுமட்டும் அல்லாமல் ஒவ்வொரு திருமந்திர மாநாட்டின் துவக்க விழாவிலும் திருமூலதேவர் திருமந்திரத்தின் ஒருபகுதியை உரையுடன் அச்சிட்டு வெளியிட வேண்டுமென்றும் பணித்துள்ளார்கள். அதன்படியே சென்ற ஆண்டு கயிலாய சித்தர் உரையுடன் நூறு பாடல்கள் அடங்கிய ஒரு பகுதி வெளியிடப்பெற்றது. இப்போது திருமந்திரத்தில் **சிவயோகப் பகுதி உரையுடன்** வெளி வருகின்றது. இவைகளுக்கெல்லாம் எங்கள் குருமகாசந்நிதானத்தைப் போற்றாமல் இருக்கமுடியாது. எல்லாவற்றிற்கும் மூல காரணமாகிய நமச்சிவாயமூர்த்தியின் திருவடிகளை என்றும் மறக்க முடியாது. அவருடைய திருவருளாலே இன்றுவரையில் சிவனருள் பொங்கி வழிந்து வருகிறது.

இவ்வாதீனந்தான் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களைப் பாதுகாத்துவந்தது. அதன் பின்னர் டாக்டர் மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாத ஐயர் அவர்களைப் பெற்று வளர்த்தது. இவ்வாதீனத்தின் பெருமையைக் கூறிக்கொண்டேபோனால் அவைகட்கு நேரமில்லை; காலமும் கடந்துவிடும்.

சென்ற ஆண்டு வெளியிட்ட திருமந்திர மாநாட்டின் மலரும், உரையோடுகூடிய திருமந்திர நூலும் மூன்று நான்கு மாதங்களுக்குள் செலவாகிவிட்டன. தமிழ்நாட்டிலே திருமந்திரத்திற்கு மக்களிடையே எவ்வளவு வரவேற்பு இருக்கிறதென்பதற்கு இதுவே சான்றாகும். மேலும் அடுத்தடுத்து வெளியிட வேண்டும் என்று ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் கட்டளையிட்டருளியிருக்கின்றார்கள். இன்று வெளியிடப்படும் இந்தச் சிவயோகப் பகுதியில் கலாந்தம், நாதாந்தம்போன்ற ஆறு அந்தங்கள் அடங்கியிருக்கின்றன. இவ்வுரை ஆதீன வித்துவானாக இருந்த சுப்பிரமணியக் கவிராயர் அவர்களால் எழுதப்பெற்றதும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் இருந்ததுமாகிய ஏடுகளைத் துணைக்கொண்டு செம்மைப்படுத்தப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டதாகும். மேலும், இந்த ஆதீனமானது மெய்கண்ட சாஸ்திரத்திற்கு ஒரு சிறந்த இடமாக விளங்கிவருகிறது. இதுபோல் இவ்வாதீனம் இன்னும் பலவகையான துறைகளுக்கும் சிறந்த இடமாகவேவிளங்கிவந்திருக்கிறது. மேலும் சிறப்புற, ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவருள் வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, அவர்களுடைய திருவடிகளை வணங்கி, அப்பொன்னார் திருவடிகளில் இந்தத் **திருமந்திரம் சிவயோகப் பகுதி உரை** நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.



அலங்கரிக்கப்பட்ட கொலுமண்டபத்தில் மாநாடு நடக்கும் காட்சி

**முதல் தந்திரம்:** பொருள்: **'ஒழுக்கநிலை'**

திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான்,

## திரு. கே. ஆறுமுக நாவலர் அவர்கள்

நாகர்கோயில்.

திருக்கயிலாய பரம்பரையில் வருகின்ற இந்தத் திருவாவடுதுறை ஆதீனத்தில் இருபத் தொன்றுவது குருமகா சந்நிதானமாக எழுந் தருளி வீற்றிருந்து, சைவச் செங்கோல் நடத்தி வரும் மகாசந்நிதானம் அவர்கள் பொன்னார் திருவடிகளுக்கும், செந்தமிழ் ஆக்கத்திற்கும், செந்தமிழ்ச் சிவ நெறிக்கும் இடைவிடாது உழைத்துவரும் தலைவர் அவர்களுக்கும், இங்குக் கூடியிருக்கின்ற பெருமக்கள் அனை வருக்கும் எனது தாழ்மையான வணக்கம் உரியதாகுக.

திருமூல தேவர் வீற்றிருந்து, திருமந்திரத் தைப் பாடியருளிய இத் திருவாவடுதுறை யிலேயே திருமந்திர மாநாடு நடைபெறுவ தாலும், அதில் சொற்பொழிவு ஆற்றும் பேறு அடியேனுக்கு வாய்த்ததாலும் நான் மிகமிக மகிழ்கின்றேன். திருத்தொண்டத் தொகை யில் திருஞானசம்பந்தமூர்த்திகளை 'எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் உரைத்தருளினார். ஆனால் திருமூலதேவரைப் பற்றிச் சொல்லும் போது 'நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்' என்கிறார். எம்பிரான் என்பதற்கு எங்கள் தலைவன் என்பது பொருள். நம்பிரான் என்பதற்கோ நமதுதலைவன் என்பது பொரு ளாகும். இதிலிருந்து திருமூலர் எல்லோருக்கும் தலைவர் என்பது புலப்படுகின்றது. திருமூலரது வாழ்க்கை வரலாற்றைத் திருமந்திரத்தில் தற் சிறப்புப் பாயிரத்திலே உள்ள அகச்சான்று களால் அறியலாம். ஒருவரது வரலாற்றைப் பிறர் கூறுவதைவிட அவ் வரலாற்றிற்குரிய வரே உரைப்பது மிக மிக உண்மையாய் இருக்கும். திருமூலதேவர் ஸ்ரீகண்ட பரமேஸ் வரருடைய உபதேசம் பெற்று, சனகர்—சனந்தனர்—சனாதனர்—சனத்குமாரர் என்ற நால்வரோடும், சிவயோக மாமுனி, பதஞ்சலி, வியாக்ரபாதர் இவர்களுடனும் உடனிருந்து சைவசித்தாந்த சாத்திர உபதேசம் பெற்றவர் என்பதை,

> நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடின்
> நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
> மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
> என்றிவர் என்னோடு எண்மரு மாமே

என்ற பாடலால் நன்கு உணரலாம். அதனா லேயே சேக்கிழார் சுவாமிகள் இவரை 'கயிலா யத்தொரு சித்தர்' எனக் கூறியருளினார். திரு மூலதேவர் திருவாவடுதுறையைச் சிவனருள் பெறுவதற்கு ஏற்ற இடமாக் கொண்டு இங்கு ஒரு அரச மரத்தடியில் தங்கி, சிவநாமங்கள் ஓதி, சிவத்தியானங்கள் செய்து, சிவனருளால் திருமந்திரம் பாடியருளினார் என்பதை,

> சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
> சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்துறை
> சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில்
> சேர்ந்திருந் தேன்சிவ நாமங்கள் ஓதியே

என்ற பாடலால் நன்கு உணரலாம்.

இறந்து கிடந்த மூலன் உடலில் இவர் புகுந்ததும், இவர் உடம்பு காணாமல் போன தும், கடவுள் திருவருளே ஆகும் என்பது,

> நந்தி அருளாலே மூலனை நாடி....
> நந்தி அருளாலே நானிருந் தேனே

என்ற அடிகளால் விளங்குகின்றது. தான் பாடிய திருமந்திரம் தனது ஆற்றலால் பாடி யன அல்ல என்பதையும், அரனடியை அனு தினமும் பூசித்ததன்பயனாகத் தோன்றியனவே யாகும் என்பதையும், திருமந்திரமே ஆகம சாரம் என்பதையும்,

நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றி
அந்தி மதிபுனை அரனடி நாள்தொறும்
சிந்தைசெய் தாகமம் செப்பலுற் றேனே

என்ற பாடலால் நன்கு விளக்குகின்றார்.

தன்னை ஆண்டவன் செம்மையுறப் படைத்து, செந்தமிழ்ப் பாடல்களைப் பாடச் செய்தான் என்பதை,

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச்செய்யு மாறே

என மகிழ்ச்சியோடு கூறுகின்றார். திருமந்திரப் பாடல் தொகையை 'மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ்' என்னும் திருமந்திரம் நன்கு விளக்குகிறது. இத்தகைய பற்பல அகச் சான்றுகள் தற்சிறப்புப்பாயிரத்தில் உள்ளன.

பொதுப் பாயிரத்தில் முதலில் விநாயகர் வணக்கம் கூறுகிறார். திருமூலர் காலம் 8000 வருஷங்கட்கு முற்பட்டது எனத் தற்கால ஆராய்ச்சிகளால் விளங்குகின்றது. இதிலிருந்து விநாயகர் வழிபாடும் நீண்டநாட்களாக இருந் திருக்கிறது என்பது புலனாகின்றது. தற்காலத் தில் சிலர் விநாயகர் வணக்கம், விநாயகர் வழி பாடு இடைக்காலத்தில்தான் வந்தது எனவும், அது தமிழர்கள் வழிபாடு அல்ல எனவும், வடநாட்டு மரபு எனவும் பிதற்றுகின்றார்கள். காலத்தால் முற்பட்ட திருமந்திரத்தில்,

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே

என்பதால் விளக்குகின்றார். ஆதலால் அவர் காலத்திற்கு முன்னரே தமிழகத்தில் விநாயகர் வணக்கம் இருந்ததென்பது நமக்கு நன்கு விளங்குகின்றது.

அதன்பின் பொதுப்பாயிரம் முதற் பாட லிலேயே இறை இலக்கணம் அனைத்தையும் விளக்கியிருக்கிறார். தற்கால மக்களில் சிலர், 'சைவர்கள் பலதெய்வ வழிபாடுடையவர்கள்' எனக் குறை கூறுகின்றனர். திருமூலரோ அவர்களுக்கு விடையாக 'ஒன்றவன்தானே' அதாவது 'அவன்தானே ஒன்று' என்ற சொற் றொடரால் கடவுள் ஒருவரே என உறுதி கட்டி விட்டார். சைவ வழிபாட்டில் அம்மை வழிபாடும் இருக்கிறதே, அப்போது இரண்டு தெய்வங்கள் உள்ளனவே என்பாருக்கு அம்மை என்பது இறைவனது அருளே ஆகும் என்கிறார். அதாவது கதிரவன் வேறு, அவன் கிரணம் வேறு ஆகாததுபோல 'கதிரவன் இன்றிக் கிரணம் இல்லை, கிரணம் இன்றிக் கதிரவன் இல்லை' என்றிருப்பதுபோல 'இறை யின்றி அருள் இல்லை, அருளின்றி இறையில்லை' என்பதை விளக்க 'இரண்டவன் இன்னருள்' எனக் கூறுகின்றார். அருளே அம்மை வடிவ மாகும். இதனை 'அருளது சத்தியாகும்' எனச் சித்தியார் கூறுகின்றது. 'இருமையினின்றி இயங்காது உலகு' என்பது விஞ்ஞானம். Positive, Negative = Matter of energy. என்பன இரண்டாகவே இருந்து விளங்கு கின்றன. ஒன்று நிகழ இரண்டு வேண்டும் என்பது விஞ்ஞானம். மெய்ஞ்ஞானமோ அம்மையப்பராய் ஆண்டவன் விளங்குகிறான் எனக் கூறுகின்றது. விஞ்ஞானமும் மெய்ஞ் ஞானமும் இதில் ஒற்றுமைப்படுவதை நன்கு காணலாம்.

பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளை விளக்குவது சைவம். எல்லாச் சைவ சாத்தி ரங்களின் முடிந்த முடிபும் இதுவே. ஆதலால் இறைவன் இம்மூன்றிலும் வியாபகமாக விளங்குகிறான் என்பதை 'நின்றனன் மூன்றி னுள்' எனக் கூறுகிறார். சாத்துவிகம், ராஜசம், தாமசம் என முக்குணங்களையும் கூறுவதாக வும் கூறுவர். நான்கு வேதங்களும் இறைவ னாலேயே வெளிப்படுத்தப்பட்டன என்பதை 'நான்கு உணர்ந்தான்' என்பதும், இறைவன் பொறிகளை வென்றவன் என்பதை 'ஐந்து வென்றவன்' என்பதும், ஆண்டவன் பதம் எழுத்து, மந்திரம், கலை, தத்துவம், புவனம் ஆகிய ஆறு அத்துவாக்களிலும் வியாபித்து விளங்குகிறான் என்பதை 'ஆறு விரிந்தனன்'

என்பதும் விளக்குகின்றன. இன்னும் இதற்குச் சைவம், வைணவம், சாக்தேயம், காணுபத்யம், கௌமாரம், சௌரம் என்னும் அறு சமயப் பொருளாய் விளங்குகின்றவன் இறைவன் ஒருவனே எனவும் பொருள் கொள்ளலாம். ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி முதலிய ஏழு அண்டங்களையும் கடந்தவன் என்பதை 'ஏழும்பர் சென்றனன்' என்ற தொடரும் இறைவன் எண்குணத்தான் என்பதைத் 'தானிருந்தான் உணர்ந்து எட்டே' என்ற சொற்றொடரும் நன்கு விளக்குகின்றன. ஆகவே இம்முதற்பாட்டு ஒன்றே, சைவ சமயக் கருத்துக்கள் அனைத்தையும் அடக்கி மிளிர்கின்றது என உறுதியாகக் கூறலாம்.

'நாற்றிசைக்கும் நல்ல மாதுக்கும் நாதன்' என்பது ஒரு சிறந்த பகுதி. இறைவன் போக வடிவில் நின்று எல்லா உயிர்க்கும் போகத்தை அருளுகிறவனுதலால் உலகத்தில் மனிதராய்ப் பிறந்தவர் அனைவரும் அவனை வழிபட்டு உய்வினைப் பெறலாம். உலக மக்கள் மிகவும் அஞ்சி நடுங்குகிற யமனுக்கு, இறைவன் அடியார்கள் அஞ்ச வேண்டியதில்லை. ஏனென்றால் இவர்கள் வணங்கும் கடவுள் 'கூற்றுதைத்தான்' ஆவான் எனக் கூறுகின்றார். இறைவனை வெளிப்படையாகமாத்திரம் வழிபடுவது பயனில்லை; உள்ளத்தாலும் வழிபடுதலே உயர்வுடையது; ஆதலால் அந்தப் பரமனைப் 'புக்கு நின்று உன்னி யான் போற்றி செய்வேனே' என்றருளுகிறார். அந்தக் கடவுள் யாரெனில் சிவபெருமானே ஆவார். அவருக்கு ஒப்பான கடவுள் வேறு இல்லை.

> சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை
> அவனொடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை.

சிவனை வணங்குதலே சிறப்புடையது. அவன் நமது பாவங்களை எரிப்பதில் 'தீயினும் வெய்யன்'. நம்முடைய வெப்பங் கொண்ட மனத்தைக் குளிரச் செய்வதில் 'புனலினும் தண்ணியன்'. அவன் நம்மை, தன் குழந்தைக்குப் பால் நினைந்தூட்டும் ஒரு நற்றாயினும் சாலப் பரிந்து, நல்லுயைத் தண்ணளி புரிகின்றான். தாயினிடத்துக் குழந்தை பிறந்த நாளில், அந்தக் குழந்தையின் உடம்புக்குத் தக்க உணவுச் சத்துக்களைக் கொண்ட பாலை ஊறச் செய்பவன் அந்தப் பரமனுதலால், அவன் 'தாயினும் நல்லன்' என்பதைத் தயங்காது கூறுகின்றார்.

சில தெய்வங்கள் சில காலத்தில் தோன்றி மறைகின்றன. எங்கள் பெருமானின் திருப்பெயரோ நந்தி என்று பேசப்பெறுகின்றது. நந்தி என்றால் தோன்றுதல், இறத்தல் இல்லாதவன் என்பது பொருள். ஆதலால் நாங்கள் வணங்கும் கடவுள், உயிர்களைப் போல் போக்கு வரவு இல்லாதவனுகப் பொலிகின்றவன். சில தெய்வங்கள், வேறு தெய்வங்களை வணங்கும். நாம் தொழுகின்ற கடவுளோ, வேறு எவரையும் வணங்காத ஒப்பற்ற தலைவராவார் என்கின்றார்.

> என்னால் தொழப்படும் எம்இறை மற்றவன்
> தன்னால் தொழப்படு வாரில்லை தானே.

எல்லாவற்றையும் கடந்து அதற்கப்பால் நிற்கின்ற கடவுளுக்கு உலகில் நிகழ்கின்ற எல்லா நிகழ்ச்சிகளையும் நாம் செய்கின்ற நன்மை, தீமைகளையும் காண இயலுமோ என நீங்கள் கருதவேண்டாம். 'கடந்து நின்றான் எங்கும் கண்டு நின்றானே'. அதாவது கடந்து நிற்கின்ற அவனே எல்லாவற்றையும் கண்டு கொண்டு நிற்கின்றான். புதிய புதிய தேசங்களில் பெரும்பான்மையினர் பல புதுப்புதுக் கடவுளர்களைக் காலந்தோறும் உண்டுபண்ணி, அவரே கடவுள், மற்றவர் கடவுள் அல்லர் எனக் கூறுவர். இது காயத்தைவிட கஸ்தூரி மணம் விஞ்சுவதுபோல், தேச மக்கள் பெரும் பான்மையினர் கூடி, ஒரு தேவனை உண்டுபண்ணினாலும், எங்கள் ஈசனிடம் அவர்கள் அடங்குவர் என்கின்றார்.

சிலர் இக்காலத்தில் கடவுளே இல்லை என்கிறார்கள். அவர்களை நோக்கி 'இல்லென வேண்டா, இறையவர்' என்கின்றார். அவர்

அல்லும் பகலும் நமக்கு அருள்புரிவதைக் கொண்டு கடவுள் உண்டெனக்கொண்டு, அவரை வழிபடுங்கள். 'போற்றி, புகழ்ந்து, புனிதன் அடி ஏத்துமின்' என மயலுற்ற சிந்தையை மாற்றுகின்ருர். இறைவன் பிறப்பு இல்லாதவன்; அவன் அருளாளன்; அவனுக்கு இறப்பும் இல்லை; எல்லோருக்கும் இன்பம் தருகிருன்; ஆதலால் அவனைத் தொழுங்கள்; தொழுதால் உங்களுக்கு எல்லா நன்மையும் உண்டாகும்; நான் அவனை என் கண்ண கத்தே நின்று காதலிக்கின்றேன்; நீங்கள் அந்த அப்பனை உங்களுக்குத் தெரிந்த எந்த வழியி லாவது வழிபடுங்கள்; அதற்குத் தக்கவாறு அருள்பெறலாம் என்பதை,

அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை
எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினல்
அப்பரி சீசன் அருள்பெற லாமே

என்ற பாடலால் விளக்குகிருர்.

மும்மூர்த்திகளையும் சோதித்துப் பார்த்து, மூன்றிற்கும் தொடர்ச்சி ஓரிடமேயாகும்; உலக மக்கள் இதனைப் பேதித்துப் பேசிப் பிணங்குவது முறையல்ல என்கிருர். 'ஆதிப் பிரானும், அணிமணி வண்ணனும்' என் இறை நிலை எடுத்துரைத்து, பின் வேதாகமச் சிறப்புப் பேசுகின்ருர். வேதத்தைவிட அறம் இல்லை; வேதத்தை ஓதியே நமது ஞானிகள் வீடு பெற்ருர்கள் என்றும், ஆகமம் இருபத்தெட்டும் அண்ணல் அருளால் அருளப்பட்டன என்றும் கூறி, அவற்றின் பெயரைக் காமிகம் முதல் வாதுளம் ஈருக 28 என்பதை விளக்குகிருர். வேதாகமங்களைக் கூறுதற்கு உரிய அந்தணர் களை, 'அறுதொழில் பூண்டுளோர்' என்றுகூறி, அவர்கள் சத்தியம், ஞானம், உணர்வு, பக்தி, பரனுண்மை முதலிய பண்பாடுகள் வாய்ந்த வராய் விளங்கவேண்டுமென விளக்குகிருர். அந்தணராயினும், அடியாராயினும், அரசரா யினும், யாவரேயாயினும் அவர்களுக்குரிய வேடங்களைப் புனைவதால்மட்டும் பயனில்லை, அவ்வேட நெறியில் நிற்றல் வேண்டும் என்பதை,

வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்
வேட நெறிநிற்போர் வேடமே மெய்வேடம்
வேட நெறிநில்லார் தம்மை விறல்வேந்தன்
வேட நெறிசெய்தால் வீடது வாகுமே

என இப்பாடலால் நன்கு விளக்கிக் காட்டு கின்ருர். உலகத்திலுள்ள நமக்குச் சில ஒழுக் கங்களை வரையறை செய்வதே முதல் தந்திரத் தின் உயரிய நோக்கமாய் அமைந்துள்ளது. இறைவனை நாள்தோறும் ஒரு பச்சிலையேனும் இட்டு வணங்கவேண்டும். இது யாவருக்கும் எளிதில் இயலும். அதுபோலவே ஒரு பசுவுக்கு ஒருபிடி புல் உதவுதல் யாருக்கும் எளிதே. நாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி உணவை மற்றவருக்குக் கொடுத்து உண்ணவேண்டும். எல்லோரிடத்தும் இன்னுரைபேசி வாழ்வதே சிறப்புடையது என்றும் உபதேசிக்கின்ருர்.

முதல் தந்திரம் காரணுகம சாரம் என்பர். சித்தாந்தம் கூறும் முப்பொருள்கள் பதி, பசு, பாசம் ஆகும். பதி எவ்வாறு அநாதியோ, அது போலவே பசு, பாசங்களும் அநாதியே யாகும். சிலர் ஆன்மாவை ஆண்டவன்தான் படைத்தான் என்பார்கள். அவ்வாருயின் ஆண்டவனை யார் படைத்தார்கள் என்னும் கேள்விக்குப் பதில் கூற முடியாது இடர்ப் படுவர். உண்மையில் நம்மைக் கடவுள் படைக்கவில்லை. அவரைப் போலவே நாமும் அநாதியாகவே இருக்கிருேம். செம்பிற் களிம்பு போன்ற நம்மைப் பாசங்களும் அநாதியாகவே பற்றி நிற்கின்றன. பாசம் ஆன்மாவைப் பற்றுமேதவிர, இறைவனைப் பற்ருது. சூரியன் போல் கடவுள். இருளைப் போன்றது பாசம்; சூரியனையும் இருளையும் பார்ப்பது ஆன்மா. ஆதலால் ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய், பதியைச் சார்ந்து பதியேயாகவும், பாசத்தைச் சார்ந்து பாசபந்தம் உடையதாகவும் இருக் கிறது. சூரியனுக்கு இருள் தெரியாது. இருட் டுக்கோ சூரியனைத் தெரியாது. நமக்கோ இரண் டினையும் தெரியும். இதுதான் நமது பெருமை.

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு பாசம் அனுதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கில்பசு பாசம் நிலாவே

சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவில் சிகாகோ சமய மாநாட்டில் பேசும்போது ஒருவர் நமது உருவ வழிபாட்டை இகழ்ந்துரைத்தார். மற்றொருவர், நீங்கள் விக்கிரகங்களை ஏன் வழிபடுகிறீர்கள்? எனக் கேட்டார். அதற்கு விவேகானந்தர் சிறிது பஞ்சை எடுத்துக் காட்டி, "சூரியனில் இருக்கிற தீயைக் கொண்டு இந்தப் பஞ்சைக் கொளுத்த யாருக்காவது முடியுமா?" என்று கேட்டார். அவர்கள் முடியாது என்று சொன்னார்கள். "நான் கொளுத்துகிறேன், பாருங்கள்" எனக் கூறிப் பஞ்சைச் சூரியனுக்கு நேராகப் பிடித்துக்கொண்டு, மற்றொரு கையில் சூரிய காந்தக் கண்ணாடியைப் பிடித்தார், கண்ணாடி சூரியனுடைய வெப்பத்தை எடுத்துப் பஞ்சைத் தீப்பற்றச் செய்தது. பஞ்சில் தீப்பிடித்து எரிவதை எல்லோரும் கண்டார்கள். "இப்படிச் செய்துகாட்ட எங்களுக்கும் தெரியுமே" என்றனர் சபையினர். உங்களுக்குத் தெரியும், ஆனால் அதில் அனுபவம் இல்லை; அனுபவம் இருந்தால் விக்கிரக வழிபாட்டைக் குறை கூறி இருக்கமாட்டீர்கள்; சூரியன் கடவுளைப் போல் விளங்குகிறான்; பஞ்சைப் போல் ஆன்மா விளங்குகிறது; ஆன்மாவுக்குக் கடவுள் அருளை நேரிலே பெற்றுக் கொள்ள முடியவில்லை; சூரியகாந்தக்கண்ணாடி போல் எங்களுடைய திருவுருவங்கள் விளங்குகின்றன; அத்திருவுருவங்கள், கடவுளின் சக்தியை எடுத்து வழிபடுபவர்களுக்குத் திருவருளை வழங்குகின்றன என்று கூறினார். அப்பொழுதுதான் திருவுருவ வழிபாட்டின் அவசியத்தை மேலைநாட்டார் அறிந்து வியந்தனர். இக்கருத்தை நமது திருமூலதேவர் வெகுகாலத்திற்கு முன்னரே,

> சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே
> சூரிய காந்தம் சூழ்பஞ்சைச் சுடமாட்டா
> சூரியன் சந்நிதி யில்சுடு மாறுபோல்
> ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே

என்ற பாட்டில் உவமையால் விளக்குகின்றார். இவ்வாறு இறைவன் தன்மையையும், அதனை வழிபடும் முறைகளையும் விளக்கிய திருமூலர், ஆன்மாக்களைப் பற்றிச் சில அருமையான கருத்துக்களைப் பேச முற்படுகிறார். உயிர்கள் நல்லொழுக்க நெறி கடைப்பிடித்து ஒழுகினால் இறையருள் பெறலாம் என்பதை வலியுறுத்தி வந்த திருமூலர், நாம் சிறப்பாகக் கொண்டிருக்கும் யாக்கையும் செல்வமும் இளமையும் நிலையாமையுடையன என்னும் உணர்ச்சியை ஊட்டுகின்றார். யாக்கை நிலையாது. உடம்பினுள் ஆன்மா நின்று உடம்பை இயக்குகின்றது. நம் நாட்டுத் திருவிழாக்களில் சுவாமி எழுந்தருளும்போது பூதங்கள் என்னும் சில கூடுகளைத் தூக்கிக் கொண்டு வருகிறார்கள். பல வடிவங்கள் கொண்ட அக்கூடுகளினுள் சில பையன்கள் மறைந்து நின்று அதனை இயக்குகிறார்கள். பையன்கள் பூதங்களினின்று வெளிப்பட்டு விட்டால், பூதங்கள் ஆடாமல் அசையாமல் கிடக்கின்றன. அதுபோல் நம் உடம்பினுள் ஆன்மா விளங்குகின்றது. அது இன்ன வேளை உடம்பை விட்டுப் போகும் என யாருக்கும் தெரியாது. முட்டைத் தோட்டினுள் இருந்து குஞ்சு வெளிப்படுவது போலவும், சட்டையைக் கழற்றிவிட்டுப் பாம்பு போவது போலவும் ஆன்மா உடம்பை விட்டுப் போய் விடும். அதைத்தான் மரணம் என்கிறோம். மரணம் எதிர்பாராமல் வருவதை வேடிக்கையாகக் காட்டுகிறார்.

ஒருவர், வீட்டில் அறுசுவை உண்டி சமைக்கச் சொன்னார்; சமைத்த உணவை நன்றாய் உண்டார்; அழகிய தன் மனைவியோடு ஆனந்தம் அனுபவித்தார்; இவ்வாறு இருக்கும் போது இடப்பக்கம் நோகிறது என்றார்; படுக்கையில் கிடந்தார்; கிடந்தவர் இறந்தொழிந்தார். இதனை,

> அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
> மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
> இடப்பக்க மேஇறை நொந்தது என்றார்
> கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே

என்ற பாட்டால் விளக்குகின்றார். அப்படி இறந்தபோது ஊரார் எல்லாம் கூடி அழுவர். இறந்தவன் பேரினை நீக்கி, அவன் உடம்பைப் பிணம் என்று பேசுவார். மயானத்துக்குக்

கொண்டு சென்று ஈமத்தீயை மூட்டிப் பொடி படச் சுடுவார். அதன்பின் நீரினில் மூழ்கி இவனைப் பற்றிய நினைவுகள் அனைத்தையும் கழுவிவிட்டு வீடு திரும்புவர். இதனை,

ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூறையங் காட்டிடை கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே

என்று விளக்குகின்றார். அப்படி உயிர்போன உடம்பையும் காக்கை கொத்தித் தின்றால் என்ன? கண்டார்கள் இகழ்ந்தால் என்ன? பாலை வார்த்தால் என்ன? பல்லோர் பழித்தால் என்ன? இவற்றில் ஒன்றும் பயனில்லை. இதனை,

காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்
பால்துளி பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டுப் போனஇக் கூட்டையே

என்ற பாடலால் கூறியருளுகின்றார்.

இவ்வாறு யாக்கை நிலையாமை போல, நமது செல்வமும் நிலையாததே ஆகும். செல்வம் அருட்செல்வம், பொருட்செல்வம் என இரு வகைப்படும். பொருட்செல்வம் உடலைப் பேணும். அருட்செல்வம் உயிரைப் பேணும். தேன்கூட்டில் தேனைச் சிறிது சிறிதாகப் பெருக்கி, அப்படிப் பெருக்கிய ஈக்கள் தேனை உண்ணக் காத்துக் கொண்டிருக்க, வலியுடைய மனிதன் ஒருவன் அக்கூட்டிலுள்ள தேனைத் தன் ஆற்றலால் கவர்வது போல, நமது செல்வத்தை வலியுடையார் ஒரு காலத்தில் கவரக்கூடும். அருட்செல்வமோ எவராலும் கவரமுடியாத செல்வம், ஆகவே அப்பொருட் செல்வத்தை நமக்குத் தந்தது இரப்பவர்க்கு ஈயவே. ஆதலால் யார் நம்மிடம் வந்து இரந்தபோதிலும், அவர்களுக்குக் கொடுங்கள். அவர் இவர் என்று இரப்பவரை ஆராய்ச்சி செய்யாதீர்கள். பசித்தவர்களுக்குக் கொடுத்து உண்ணுங்கள். பழமையானதாய்க் கெட்டுப்போன உணவுப் பொருள்களை உண்ணுதீர்கள். நல்லுணவை விருப்பத்தோடு சாப்பிடுங்கள். விரைவாக உண்ணுமல் மெதுவாகச் சாப்பிடுங்கள். காக்கைக்குச் சிறிது இரை கொடுங்கள். காகம் தன் இனத்தைக் கூவி அழைத்து இனத்தோடு உண்பதைக் கண்டு, நாமும் இனத்தோடு சேர்ந்து உண்ணவேண்டும் என்ற அறிவைப் பெறுங்கள்.

என்றைக்காவது ஒருநாள் யமன் வருவான். அப்போது அவனிடம் உங்களை மறைக்க முடியாது. வறிஞன் என்றோ, செல்வன் என்றோ அவன் நினைக்கமாட்டான். இளைஞன் என்றோ, முதியன் என்றோ அஞ்சான். அவன் வருவதற்கு முன்னரே நல்லறம் செய்யுங்கள். இதனை,

வன்மையில் வந்திடும் கூற்றும் வருமுன்னம்
தன்மையு நல்ல தவம்செய்யும் நீரே

என்ற அடிகளால் விளக்குகிறார்.

நல்ல தவத்தில் மிக்க பெரியோர்களுக்கு உணவு கொடுப்பது மூன்று புவனமும் உண்டதை நிகர்க்கும். செல்வம் நிலையாதது போல், நமது இளமையும் நிலையாதது. கீழ்த் திசையில் செங்கதிர் பரப்பி வீறுடன் எழுந்து விளங்கிய சூரியன், மேற்கே தவழ்ந்து வீழ்ந்து மறைவதையும், கன்று பிறந்து எருதாய் முதிர்ந்து கிழமாய் மடிவதையும் நாம் நேரிலே பார்க்கின்றோம். அதுபோல் நாமும் பிறந்து, வளர்ந்து, செழித்து, வாழ்ந்து, மடிவோம் என்பதை நினைக்காமல் வாழ்கிறோம்.

காளைப் பருவத்தில் மெல்லியல் மாதர் தம் காதலரைக் கரும்புபோல் கருதி விரும்பிச் சேர்ந்து, பின் முதிர்ந்த நிலையில் காஞ்சிரங்காய் போல் கருதி விலகுகின்றனர். இந்நிலையாமைகளை உணராமல் சிற்சில மாந்தர் கொலை, களவு, கள், காமம், பொய் முதலிய பாதகங்களைச் செய்து இறையருளுக்கு இலக்காகாமல் மாண்டொழிகின்றனரே; இது எவ்வளவு மதியீனம்.

விரும்புவர் முன்எனை மெல்லியன் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போல்
அரும்பொத்த மென்முலை ஆயிழை யார்க்குக்
கரும்பொத்துக் காஞ்சிரங் காயும்ஒத் தேனே

என்பது திருமந்திரம்.

சிலர் உயிர்களைக் கொன்று தின்கிறார்கள். புலால் உண்பவர் புலையர்களே, இவர்களை யமனுடைய தூதுவர் நரகத்தில் தள்ளித் துன்புறுத்துவர்.

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றிய தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே.

கொல்லாதவர்களைக் கொல்லச் செய்தவர்களும், தின்னாதவர்களைத் தின்னச் செய்தவர்களும், பன்றி முதலிய இழிந்த பிறப்புக்களை எடுத்துழல்வர். பிறர் மனைவியை விரும்புவதை அழகிய உவமையால் கூறுகின்றார். பிரியமுள்ள தமது மனைவி வீட்டிலிருக்க, அயலான் மனைவியை விரும்புகிறவர்கள் பலாப்பழத்தை உண்ணத்தெரியாமல், ஈச்சம்பழத்தை விரும்பி அலைகின்றவர்களே ஆவார்கள். இதனை,

ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனிஉண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே

என்ற பாடலால் விளக்குகின்றார். மேலும், இவர்கள் தேமாங்கனியை அறையிற் புதைத்து வைத்து, புளிய மரமேறி புளியறுத்து உண்பவரோடு ஒப்பாவர் என்றும் கூறுகின்றார்.

இவ்வாறே கள்ளுண்டு களித்தலும் ஒரு பெரிய தீய ஒழுக்கமேயாகும் என்று குறிப்பிடுகின்றார். ஆதலால் கொலை, களவு, கள், காமம், பொய் முதலிய பாதகங்களை விட்டு, யாரிடத்தும் அன்புடையராய், நல்லொழுக்கம் கடைப்பிடித்து நாம் நடக்கவேண்டும். நான் நீண்டநேரம் பேசிவிட்டேனாதலால் ஒன்று மட்டும் சொல்லி முடித்துக்கொள்ளுகிறேன்.

அன்பு வேறு; சிவம் வேறு அல்ல. அன்பே சிவம் என்பதை,

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமான தாரும் அறிகிலார்
அன்பே சிவமான தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே

என்னும் பாடலால் கூறுகின்றார். அன்போடு உருகி, அகம் குழைந்தால் இறைவனை அடையலாம் என்பதைக் கூறி, பின் கல்வி கேள்வி நடுநிலைமை முதலிய நல்ல குணங்களை அணிகலன்களாகப் பூண்டு மனிதர்கள் வாழ வேண்டுமென்று அவர்கள் வற்புறுத்தியிருக்கிறார்கள் என்பதைக் கூறிக்கொண்டு, திருவாவடுதுறை ஆதீன குருமகா சந்நிதானம் சமய நலங் கருதி ஆற்றி வரும் இத்தகைய மாநாடுகள் பல நடத்திச் சிறந்தோங்க இறைவன் திருவருள் புரிய வேண்டுமெனப் பிரார்த்தித்துக் கொண்டு, எனக்கு இந்த வாய்ப்பைத் தந்தருளிய ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுக்கு என்னுடைய நன்றியை வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்,

**இரண்டாந் தந்திரம்:** பொருள் : **'ஐந்தொழில்'**

சித்தாந்தப் புலவர்மணி,

## பாலகவி, திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்

தேவகோட்டை

கண்ணுதலும் கண்டக்கறையும் கரந்தருளி, மண்ணிடையில் மாக்கள் மலமகற்ற எழுந்தருளி வீற்றிருக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் திருவடிக் கமலங்களுக்கு என்னுடைய தாழ்மையான வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். அறிவு சான்ற தலைவர் அவர்களே! அன்பு சான்ற பெருமக்களே! வணக்கம்.

இந்த நல்ல நாளிலே திருமூலதேவநாயனாரது சிறந்த திருவருளைப்பற்றி நின்று, உங்களிலே ஒருவனாக அடியேன் ஆகும்படிச் செய்த ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்கு மீண்டும் எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இப்பொழுது எனக்குத் திருமூலரின் திருமந்திரத்திலே இரண்டாந் தந்திரத்திலுள்ள ஐந்தொழிலைப் பற்றிப் பேச மகாசந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டுள்ளார்கள். அதனை நிறைவேற்றுவதே என் கடமையாகும்.

தமிழ் நாட்டிலே இன்று பல்வேறான தமிழ்ப் பாடல்கள் ஒளிந்து கொண்டிருக்கின்றன. சிறப்பு மகரம் போட்டுக் கூற எனக்கு இஷ்டமில்லை. அப்படி ஒளிந்தது போக எஞ்சியிருக்கும் நூல்களைப் பார்த்தால் நாம் எந்த நூலைப் படிக்கிறோமோ அதிலேயே ஆழ்ந்த சிந்தனையைச் செலுத்திவிடுகின்றோம். சங்க நூல்களை எடுத்துக்கொண்டால் அதிலே புகுந்தோர் மீண்டும் எழுந்துவர இயலாது அதிலேயே மூழ்கி விடுகின்றனர். இம்மாதிரியாக ஒவ்வொரு துறையிலும் பல சிறந்த நூல்கள் நமக்கு எஞ்சியவற்றில் கிடைக்கின்றன. அப்படிப்பட்ட சிறந்த பல நூல்களில் சமயத் துறையில் நமக்கு முன்னணியாக இருப்பது திருமூலர் திருமந்திரமேயாகும். திருவாவடுதுறையில் இத்திருமந்திர மாநாட்டில் பேசுவதனால் திருமந்திரத்தை உயர்த்திப் பேசவேண்டுமென்கின்ற எண்ணமில்லை. ஓராண்டு தவம் கிடந்து ஒரு பாட்டு வீதம் மூவாயிரம் ஆண்டு மூவாயிரம் பாட்டு இயற்றினார் என்பதை எண்ணும்போது அவருடைய காலம் கி. மு. வா? அல்லது கி. பி. யா? என்ற இடர்ப்பாடு எழும். அதைப்பற்றி நமக்குக் கவலையில்லை. அவருடைய பாடல்களுக்கு உண்மை உரை காணவேண்டுமானால் அவரே இங்கு நேரில் வந்து சொன்னாலொழிய நம்மவர்களில் எவரோ ஒருவர் உரை எழுதினார் என்றால் அது ஆராய்ச்சி அளவிலும், மக்களுடைய அறிவு வளர்ச்சிக்குத் தக்கபடியும் இருக்குமேயொழிய திருமூலரின் உள்ளக் கிடக்கைகள் அனைத்தையும் அந்த உரையிலே காணமுடியாது.

திருமுறைகள் பன்னிரண்டு, அவற்றில் திருமந்திரம் பத்தாவது திருமுறையாக விளங்குகின்றது. சிவஞானபோதச் சூத்திரங்கள் பன்னிரண்டு; அவற்றில் பத்தாவது சூத்திரம்,

> 'அவனே தானே யாகிய அந்நெறி
> ஏகனாகி இறைபணி நிற்க
> மலமாயை தன்னொடு வல்வினை இன்றே'

என்பது. பன்னிரு திருமுறைக் கருத்துக்களும் முறையாகப் பனிரண்டு சிவஞானபோதச் சூத்திரங்களில் தொகுத்துக் கூறப்பெற்றுள்ளன என்று பெரியவர்கள் சொல்லுவார்கள். அந்த முறையில் உயிர்கள் மலம் மாயை முதலிய அழுக்குப் பொருள்களிலிருந்து நீங்கி, சிவப்பேறு பெறுதற்குரிய பெருநிலையைச் சொல்லும் பத்தாஞ் சூத்திரப் பொருள், திருமந்திரமாக அமைந்திருக்கிறது ஓர் சிறப்பு. அதிலும் குறிப்பாக உயிர்களின் மல நீக்கத்திற்கு

இடமாய் இருக்கின்ற ஐந்தொழில்களைப் பற்றிய குறிப்பு அதன் இரண்டாந் தந்திரத்தில் அமைந்திருக்கிறது என்பதையும் நாம் நினைவு கொள்ளுதல் வேண்டும். இப்பொழுது திரு மந்திரப் பதிப்புக்களில் 3069 பாடல்கள் காணப்பெறுகின்றன. 3000 பாடல்களே அவர் பாடினார் என்று அகச்சான்று கிடைக்கிறது. அதிகப்படியான 69 திருப்பாடல்கள் பூவோடு சேர்ந்த நார் மணம் பெறுவதுபோல அவருடைய பாடல்களோடு இயைந்து வருவதாலும், நாம் அந்தச் செருகு பாடல்களைக் கண்டு பிடித்துப் பிரிக்க முடியாத நிலையில் அவைகள் உண்மைப் பாடல்களோடு ஒன்றி விட்டபடியாலும், அவைகளையும் சேர்த்து நாம் ஏற்றுக் கொள்ளுவதில் நமக்கு ஒன்றும் குறை வராது.

படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் உயிர்களிடத்து வைத்த கருணையால் ஆண்டவன் ஒருவனே செய்துகொண்டிருக்கிறான், இந்த ஐந்து தொழில்களும் அவன் கருணையிற்பாற் பட்டன என்று குறிக்கும்பொழுது, படைத்தலும், காத்தலும், அருளலுமாகிய மூன்றை அருட்செயல் என்று சொல்லுவது ஒருவாறு பொருந்தும். ஆனால் அழித்தலும், மறைத்தலுமாகிய இரண்டையும் அருட்செயல் என்று சொல்லுவது எவ்வாறு பொருந்தும் என்ற வினா எழுகின்றது. இந்த வினாவிற்கு விடை கூறுவோர் போன்று, சிவஞானபோதத்தின் வழிநூலாசிரியராகிய ஸ்ரீ அருணந்திசிவாசாரிய சுவாமிகள், தமது சிவஞான சித்தியாரில் அழிப்புத் தொழிலும் கருணையின்பாற்பட்டது என்று விளக்குகிறார். ஒரு பொருளைப்பற்றி ஐயம் நிகழ்ந்ததாகில் அவ்வாறு நிகழ்ந்த ஐயம் அறிவுக்குப் பொருந்துவதா? வேறானதா? என்பதைச் சிந்தித்துப் பார்த்து அந்த ஐயம் கொண்டவரது கருத்தைப்பற்றி முடிவுசெய்து கொள்ளும் வழியைச் சிவஞான சுவாமிகள் தமது பாஷ்யத்தில் காட்டியுள்ளார்கள், சில வினாக்களை எழுப்பிக்கொண்டு அவற்றிற்கு விடை தேடத் தொடங்கும்போது "நன்றே கடாயினாய்" எனத் தொடங்கியும்; வேறு சில வினாக்களை எழுப்பிக்கொண்டு அவற்றிற்கு விடைதேடத் தொடங்கும்போது "அறியாது கடாயினாய்" என்று தொடங்கியும் அந்தச் சங்கையை நீக்குவார்கள். எந்த முறையில் அழித்தலும், மறைத்தலுமாகிய தொழில்கள் அருளிப் பாட்டிற்கு உரியன என்று வினவுவது "நன்றே கடாயினாய்" என்று சொல்லிக்கொண்டு விடை இறுக்க வேண்டிய விஷயமாகும்.

காலையிலிருந்து மாலைப் பொழுதுவரை ஓயாது உழைத்த ஒருவனுக்கு அயர்வு நீங்கும் பொருட்டுப் பஞ்சணை மெத்தை கொடுத்து அவனைப் படுத்து உறங்கச் செய்வானானால் அவன் செய்த உதவியை அந்த உழைப்பாளி எவ்வாறு பாராட்டுவான் என்று சிறிது சிந்தித்துப் பார்க்கவேண்டும். இடைவிடாது பிறப்பு இறப்புக்கள் ஏற்பட்டு, அதனால் வருகின்ற இன்பத் துன்பங்களில் உழல்கின்ற ஆண்டவனின் பேருதவி அப்பொழுதுதான் நன்கு விளங்கும். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களும் பிரமன், விஷ்ணு, ருத்ரன் ஆகிய மூவரும் செய்யும் தொழில்கள் என்பது எல்லோருக்கும் தெரியும். அத்தொழில்களை அவரவர்கள் தங்களுடைய சுதந்திரத்தால் செய்கின்றார்களா என்பது தெரிந்து கொள்ளவேண்டிய விஷயம். வேதங்களில் சதுர்த்தப் பிரமம் என்று குறிக்கப் பெறுகின்றது துரியமூர்த்திதான். சித்தாந்த சாத்திரங்களில் பரசிவம் என்று குறிக்கப் பெறுகின்றது. அவரது அனுமதி பெற்றே அவருடைய சன்னிதியில் இருந்துகொண்டு மும்மூர்த்திகளும் முத்தொழில்களைச் செய்கின்றார்கள் என்பது பெரியோர்கள் கண்டிருந்த உண்மை. இதனைப் பரஞ்சோதிமுனிவர்,

> 'மூவண்ணல் தன் சன்னிதி முத்தொழில் செய்ய
> வாளா மேவு அண்ணல்'

என்று கூறுகிறார். ஐந்தொழில்களில் முதல் மூன்றுக்கும் மும்மூர்த்திகள் கர்த்தாக்களாக, பின்னே குறிக்கப்பெறுகின்ற இரண்டுக்கும்

கர்த்தாக்களாக மகேஸ்வரன், சதாசிவன் என்ற இரண்டு மூர்த்தங்கள் குறிக்கப் பெறுகிறார்கள். இறைவன் உலகப் படைப்பிற்குக் கர்த்தாக்களாக யாரையும் கொள்ளவில்லை. இச்சாமாத்திரம் பிரபோ சிருஷ்டி: என்று நினைத்த மாத்திரத்திலே ஆண்டவனுடைய படைப்பு நிகழ்கின்றது என்பதைச் சொல்லுவார்கள். பெருமான் உலகப் படைப்பு நிகழ்தற்கு வேத பஞ்சாதியை ஓதிக்கொண்டிருக்கிறார் என்று வைணவச் சான்றோர்களும் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

மும்மூர்த்திகளும் முத்தொழில்கள் செய்கின்ற உரிமை அவரவர்களுக்கு எப்படிப் பட்டது என்பதை விளக்கமாகச் சொல்ல வேண்டுமென்றால் இன்று பகல் நான் இங்கு வந்த பிறகு எனக்கு ஆதீனச் சிப்பந்திகள் சிற்றுண்டி தந்து உபசரித்ததுதான் எனக்கு நினைவுக்கு வருகிறது. தந்தவர்கள் ஆதீனச் சிப்பந்திகள் என்றாலும் அவர்கள் தந்தது அவர்களுடைய சுதந்திரத்திலே இல்லையென்பதும், ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுடைய கட்டளைப்படி தந்தார்கள் என்பதும் நான் உங்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டியதில்லை. அதுபோலத்தான் செய்யும் க்ர்த்தாக்களாக மும்மூர்த்திகளும், செய்விக்கும் கர்த்தாவாகச் சிவபெருமானும் இருக்கின்றார்கள் என்பதை அறிந்துகொள்ளுதல் வேண்டும். இறைவனுடைய திருவுருவங்களில் ஐந்தொழிலுக்கும் உரியதாகச் சொல்லப்பெறுவது அம்பலவாணர் திருவுருவம். அந்த அம்பலவாண மூர்த்தியை ஆன்மார்த்த மூர்த்தியாகக் கொண்டு பூசனை செய்து வருகின்ற திருவாவடுதுறையிலல்லாமல் வேறு எந்த இடத்திலும் இந்த ஐந்து தொழிலைப்பற்றிப் பேச உரிமை கிடையாது.

சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணம் செய்யும்நாளில் தங்கும் இடமாகச் சிதம்பரத்தைக் கொண்டிருந்தார். தென்னாட்டில் எவ்வளவோ திருத்தலங்கள் இருக்கின்றன. அப்படி இருந்தும் சிதம்பரத்தை அவர் தேர்ந்தெடுத்திருக்கச் சிறந்த காரணம் உண்டு. அது திருத்தொண்டர்களாகிய நாயன்மார்கள் பாசத் தளையினின்றும் விடுபட்டுச் சிவப்பேறு பெற்றதாகிய வரலாற்றைக் கூறுதற்கு, அப்பேறு பெறுவதற்கு வழிசெய்து தருகின்ற ஐந்தொழில்நடனம் ஆடுகின்ற அம்பலவாணரது நல்லிடமே ஏற்றது எனக் கொண்டதாகும். அந்த நடராஜப் பெருமான் உமாபதி சிவத்தின் பெருங்கருணையால் இந்தத் திருவாவடுதுறைத் திருத்தலத்தில் எழுந்தருளி இருக்கின்றாராதலின் அந்த ஐந்தொழிலைப்பற்றி இங்கே பேசுவதற்குப் பெரிதும் இயைபு உண்டு.

எந்தப் பொருளையும் அறிவுகொண்டு ஆராய்ந்து காண்கின்ற முடிபு முடிந்த முடிபாக இருக்கமுடியாது. அதற்குத் தக்க சான்று இன்றைய மேலைநாட்டு விஞ்ஞான ஆராய்ச்சி. நேற்றுக்கண்ட ஒன்றை பிழை உள்ளது என இன்று முடிவு செய்கிறார்கள். அருளால் காண்கின்ற முடிபே முடிந்த முடிபாக அமைந்திருக்கும். ஆகவே இதனை 'அறிவறிந்ததெல்லாம் அசத்தாகும்' என்று ஞானசாஸ்திரம் கூறுவதால் அறியலாம். திருமூலதேவரது திருமந்திரக்கருத்துக்களை அறிவுக் கண்கொண்டு அறிகின்ற முறையை ஒரு புறத்தே வைத்துக்கொண்டு, அருட் கண் கொண்டு பெறுகின்ற முறையை நாம் மேற்கொள்ளுதல் வேண்டும். அதற்குத் திருக்கயிலாய மலையிலிருந்து வருகின்ற ஞான பரம்பரையாகிய திருவாவடுதுறை ஆதீனம் நமக்கு ஒரு சிறந்த பற்றுக்கோடாக அமைந்துள்ளது.

'தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு'

என்பது உண்மை விளக்கம். இதில் கூத்தப் பெருமானிடத்துத் திருக்கரத்தில் இருக்கின்ற உடுக்கையே படைப்பிற்குக் காரணமாக இருப்பது என்பது அறிவிக்கப்பெறுகின்றது. நாததத்துவத்திலிருந்து உலகம் தோன்றியது என்பதும் இங்கே சிந்திக்கத் தக்கதாகும்.

சுத்த மாயையில் நாத தத்துவமே முதலில் தோன்றுகின்றது என்னும் சைவ சித்தாந்த உண்மையும் இங்கே நினைவுகூரத் தக்கது.

அருவம் எப்படி உருவமாகி வரும் என்பதைச் சிவஞானபோதத்தில் ஆசிரியர் விளக்கிக்காட்டுகிருர். இறைவனது நிலைகளைச் சொரூபம், சுத்தம், லயம், போகம், அதிகாரம் என்று ஐந்து வகையாகக் கூறுவார்கள். சொரூபநிலை என்பது பரசிவம் பராசக்தியோடு கலந்து உயிர்களைப்பற்றிக் கருத்துக் கொள்ளா திருக்கிற நிலை. அது உயிர்களிடத்துக் கருணை நோக்கம் செலுத்துகின்றபோது மற்றைய நான்கு நிலைகளையும் அடைகிறது. அப்படி அடைவதற்கு ஆயிரத்தில் ஒரு கூற்றிலிருந்து அருள் சக்தியையும், அதில் ஆயிரத்தில் ஒரு கூற்றிலிருந்து இச்சா சக்தியையும், அதில் ஆயிரத்தில் ஒரு கூற்றிலிருந்து ஞான சக்தியையும், அதில் ஆயிரத்தில் ஒரு கூற்றிலிருந்து கிரியா சக்தியையும் ஆக்கிக்கொண்டு உலகத்து உயிர்களின் உய்தியில் ஆண்டவன் கருத்துக் கொள்கிருன். காணப்படுகின்ற இந்த உலகம் எப்போதும் இப்படியே இருப்பதில்லை. மழைத் தண்ணீர் இன்று உருவம் பெற்றுக் காணப் பட்டாலும் இதற்கு முன் ஒரு காலத்தில் உருவமற்ற அருவப் பொருளாகக் காண முடியாத நிலையில் இருந்தது என்பதை மேலை நாட்டு விஞ்ஞானிகளும் ஏற்றுக்கொண்டு பேசுகிருர்கள். அதுபோலவே இந்த உலகம் ஒரு காலத்தில் மாயை என்று சொல்லப்படுகின்ற அறிவுப்பொருளில் அடங்கி, உருவம் காட்டாதிருந்தது. அவ்வாறு உருவம் காட்டா திருந்த உலகத்தை மாயையை விளக்கி மூன்று பகுதியாகச் செய்து உலகம் ஸ்தூல வடிவம் அடையும்படி இறைவன் செய்தான். அவ்வாறு அவன் படைத்த படைப்பு மூன்று நிலையினது என்று ஞான நூல்கள் கூறுகின்றன. முதல் படைப்பும் இறுதிப் படைப்பும் ஆகிய இரண்டுக்கும் இடையில் இடைக் காலப் படைப்புகளும் நிகழும் என்பது ஐந்தொழிலைப்பற்றிச் சொல்லும் நூல்களால் அறியப்படுகிறது. ஓர் உயிருக்குப் படைத்தலும், காத்தலும், அழித்தலுமாகிய மூன்றும் மாறிமாறி நிகழ்தலும், மறைத்தலும் அருள்தலும் ஆகிய இரண்டும் ஒரே ஒரு தடவை நிகழ்தலும் உண்டென்பதை அறிந்துகொள்ளுதல் வேண்டும்.

இப்பொழுதுதான் மார்கழி கடந்து தை வந்திருக்கிறோம். திருவெம்பாவையை இந்த இடத்திற்கு நினைவு கொள்ளுவது பொருந்துவதாகும். திருவெம்பாவையின் இறுதிப் பாடல் ஐந்தொழில்கள்பற்றிப் பேசுகின்றது. ஆண்டவனுடைய திருவடி எல்லா உயிர்களுக்கும் தோற்றமாக, போகமாக, ஈருக, காணப்பெருததாக, அருள் தருவதாக அமைந்திருக்கிறது என்று மணிவாசகப் பெருந்தகையார் அருளிச்செய்தார். அந்த ஐந்தொழில் பற்றிய திருப்பாடல் திருமூலதேவரது ஐந்தொழில் விளக்கத்தை அடி ஒற்றி எழுந்தது என்று சொன்னால் அதனை ஏற்றுக்கொண்டே ஆகவேண்டும். மேலும் ஆதியும் அந்தமும் இல்லாத ஆண்டவனைப்பற்றி 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி' என்று மாணிக்கவாசகப்பெருமான் தொடங்கியது திருமந்திரத்தின் படைப்புப்பகுதியிலுள்ள,

ஆதியோ டந்தம் இலாத பராபரம்
போதம தாகப் புணரும் பராபரை
சோதி யதனிற் பரந்தோன்றத் தோன்றுமாம்
தீதில் பரையதன் பால்திகழ் நாதமே

என்ற பாடலில் 'ஆதியோடு அந்தம் இலாத பராபரம்' என்ற அடியை ஒத்திருக்கிறது. ஆகவே அவன் அம்மையை நோக்கினலன்றி உயிர்களுக்கு நாதமில்லை என்பதைக் குறிக்கப் புகுந்த ஆசிரியர் திருமூலர் 'போதமதாகப் புணரும் பராபரை' என்று கூறினர்கள். ஆண்டவன் அம்மையோடு கூடியவழியன்றி உயிர்க்கு நலம்கிடைக்க ஏதுவில்லை. அதனைக் கூத்தப்பெருமான் அம்மையை நோக்கி ஆடுகின்ருர் என்ற சேக்கிழார் பெருமான் திருவாக்கும், அம்மை கூத்தப்பெருமானை நோக்கி மகிழ்கின்ருர் என்னும் அப்பர் சுவாமிகள் திருவாக்கும் அறிவுறுத்துகின்றன. ஆண்டவன்

உயிர்களுக்கு அருள்செய்ய விரும்பிஞல் அம்மையே அதற்கு வாயிலாக இருக்கின்ருள் என்பதற்கு ஞானசம்பந்தப் பெருமானுக்குப் பாலூட்டிய வரலாறு சான்று தருவதாகும். ஆகவே அவர்கள் இருவருங்கூடிச் செய்கின்ற செயல்களே உயிர்களின் நற்பேற்றிற்கு இடமாதலால் அதனை 'ஒருவன் ஒருத்தி விளையாடலுற்ருர்' என்று திருமூலர் கூறிஞர். நாம் விளையாடுகின்ற விளையாட்டுக்கும் அவர்கள் விளையாடுகின்ற விளையாட்டுக்கும் மிக மிக வேறுபாடு உண்டு. நம்முடைய விளையாட்டால் நமக்கோ, பிறர்க்கோ ஏதும் பயனில்லை. அவர்களுடைய விளையாட்டு, எல்லாம் விளைக்கும் என்று அவர் கூறுகிருர். அந்த இறை செயலால் சேதனம். அசேதனம் என்று சொல்லப்படுகின்ற இருவகை உலகங்களும் உண்டாகின்றன என்பதைத் 'திரு ஒன்றின் செய்கை செகமுற்றுமாமே' என்பதால் விளக்கிஞர். இக்கருத்தமைந்த பாடல் வருமாறு:-

> ஒருவன் ஒருத்தி விளையாடல் உற்ருர்
> இருவர் விளையாட்டும் எல்லாம் விளைக்கும்
> பருவங்கள் தோறும் பயன்பல வான
> திருவொன்றிற் செய்கை செகமுற்று மாமே

'மரம் வைத்தவன் தண்ணீர் விடுவான்' என்பது நமது நாட்டுப் பழமொழி. உயர் திணையும், அஃறிணையுமாகிய பொருள்களைச் சுத்தமாயையை அடிப்படையாகக்கொண்டு படைத்த இறைவன் அவற்றின் வளர்ச்சியில் கண்ணுங் கருத்தும் கொண்டு அவை வளர்தற்கு ஏற்ற செயல்செய்வதும் இயல்பாகும். அந்தமுறையில் அவைகளைக் காப்பாற்றுகின்ற பெரும் பொறுப்பையும் அவனே ஏற்றுக் கொள்கிருன் என்பதனைத் திருமூலர் சொல்கின்ருர். மாணிக்கவாசக சுவாமிகள் சேதனு சேதனப் பிரபஞ்சங்களில் அவனுடைய கலப்பும், நுழைவும் இருக்கிறதென்பதை 'ஊனுர் உயிர்கலந்தான் உடல் புகுந்தான்' என்று விளக்குகிருர். திருமூலர்,

> புகுந்துநின் ருன்வெளி யாய்இரு ளாகிப்
> புகுந்துநின் ருன்புகழ் வாய்இகழ் வாகிப்
> புகுந்துநின் ருன்உட லாய்உயி ராகிப்
> புகுந்துநின் ருன்புந்தி மன்னிநின் ருனே

என்ற பாடலால் அறிவுறுத்துகின்ருர், எல்லாப் பொருள்களிலும் ஆண்டவனுடைய கலப்பு இருத்தலிஞலே அவைகள் அவ்வவற்றின் தொழில்களை மாறுபாடின்றி நிகழ்த்திக்கொண்டிருக்கின்றன. எனவே அவற்றைக் காக்கின்ற கடமையும், அவனுடையதாக இருப்பதை நாம் அறிந்துகொள்ளலாம்.

இனி மூன்ருவதாகச் சொல்லப்படுகின்ற அழித்தல் நான்குவகையாகத் திருமூலதேவரால் பேசப்படுகின்றது. திருவள்ளுவர் இறப்பையும் பிறப்பையும் விளக்குமுகமாக,

> 'உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
> விழிப்பது போலும் பிறப்பு'

என்று கூறிஞர். உறக்கமும் விழிப்பும் நாள் தோறும் நம்மிடையே நிகழ்கின்றவை. அந்த நிகழ்ச்சிகளை இடையருது அனுபவிக்கின்ற நமக்கு அவை போன்றனவாகிய இறப்பும், பிறப்பும் ஆகிய இரண்டின் உண்மை விளங்காமலிருக்க இடமில்லை. இதனை அவத்தைகள் ஐந்தனுள் மூன்ருவதாகக் குறிக்கப் பெறுகிற சுழுத்தி அவத்தையும் முதலாவதாகக் குறிக்கப்பெறுகின்ற ஜாக்ராவத்தையும், அவற்றில் தொழிற்படுகின்ற கருவிகரணங்களும் ஆகியவைபற்றி விளக்கம் அறிந்தவர்கள் நன்கு உணருவார்கள். அந்த முறையில் நாள்தோறும் நிகழ்கின்ற இறப்பை 'நித்த சங்காரம் உறக்கத்து நீண் மூடம்' என்பர் திருமூலர்.

இனி அடுத்தபடியான சாக்கிராவத்தைக்கு அப்பாற்பட்ட நிலையை வைத்த சங்காரம் என்றும், கருவிகரணங்கள் தொழிலற்று உயிர் சடம்போலக் கிடக்கின்ற கேவலாவத்தை நிலையைச் சுத்த சங்காரம் என்றும் குறித்தார். அதற்கு அப்பாற்பட்டதாக இருக்கின்ற உய்த்த சங்காரம் என்பதுதான் 'மீண்டு வாரா நெறி' என்று மணிவாசகப் பெருந்தகையால் குறிக்கப்பெற்றது. அங்கே ஆண்டவனுடைய திருவருள் உண்மையாக ஆன்மாவைச் சார்ந்து, அது என்றைக்கும் அழியாதபேரின்ப நிலையை அடையும்படிச்செய்வதாகும். அதனை உய்த்த சங்காரம் என்று திருமூலதேவர்

கூறியுள்ளார். 'உய்த்தசங்காரம் பரனருள் உண்மையே' என்பது திருமந்திரப்பகுதி. நான்காவதாகிய மறைத்தல் உயிர்களைப்பற்றித் தொழிற்படுத்துகின்ற திரோதான சக்தியின் தொடர்பினால், அவ்வுயிர்கள் உண்மை அறியாது மயங்குவதைக் காட்டுவது, அத்தகைய திரோதான சக்தியானது மறைப்புக் காலத்திலுங்கூட இறைவனுடைய கலப்பு உயிர்களை விட்டு நீங்குவது இல்லையாதலின் அவனை 'உள்ளத்து ஒருவன்' என்றும், 'உள்ளூறு சோதி' என்றும், 'உள்ளம் விட்டு ஓரடி நீங்கா ஒருவன்' என்றும் ஆசிரியர் கூறினார். இறைவன் உயிர்களோடு ஒன்றாக, வேறாக, உடனாக இருக்கும் நிலை இம்மூன்று தொடர்புகளாலும் புலப்படும். அப்படி மூன்று நிலையிலும் உயிர்களுடைய தொடர்புகொண்ட ஆண்டவன் உள்ளத்தோடு உடனாக இருந்தாலும், அவனுடைய உருவத்தை உள்ளம் அறிவதில்லை. அது கண் எல்லாப் பொருள்களையும் கண்டாலும், அது தன்னைக் காணாதிருப்பது போன்றதாகும். இது,

> கண்ணொன்று தான்பல காணும் தனைக்காணா
> அண்ணலும் அவ்வண்ணம் ஆகி நின்றானே

என்று திருமூலதேவரால் விளக்கப்படுகிறது.

> 'எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்
> பழிகாணேன் கண்ட இடத்து'

என்ற திருவள்ளுவப் பெருந்தகையாரது குறளில் கண்ட உவமையை, இவ்வுவமையோடு ஒப்பிட்டுக்காணுதல் வேண்டும்.

ஐந்தாவது தொழிலான அருளல், சிவமாம் தன்மைப் பெருவாழ்வு என்று சொல்லப் பெறுகின்ற பரமுக்தியை உயிர்கள் அடைகின்றதாகும். அப்படி முத்தி அடைகின்ற உயிர்களின் நிலைகளைப்பற்றிப் பல்வேறுசமயங்களும் பல்வேறு உவமைகளைக்காட்டுகின்றன. சைவசித்தாந்தம் பாலொடு நீர் கலந்தாற்போல் இறைவனோடு உலர் கலப்பதே பரமுக்தி நிலை என்று சொல்லுகிறது.

பதி, பசு, பாசம் என்று சொல்லப்படுகின்ற மூன்று பொருள்களில் இறைவனும் உயிரும் ஒருபுடைப் பொருள்கள். பாசம் ஒருபுடையில்லாத பொருள், இனி ஒற்றுமை பற்றிக் கடவுளும் உயிரும் ஒன்று கூடுமாயினும், கடவுள் இன்பத்தை உயிர்களுக்கு ஊட்டுகின்றவனாக, உயிர்கள் கொடுப்பவனிடத்து உண்பனவாக இருக்கும், அதுபோல் தன் இனமாகிய பாலும் நீரும் சேர்வதையும், தனக்கினமில்லாத எண்ணெய் முதலியன சேராமல் திரிந்து இருக்கின்ற அமைதியையும் நினைத்துக்கொண்டு முடிவு கொள்ளத்தக்கதாகும். இந்த முறையில் ஐந்தாவது தொழிலாகிய அருளல்தொழில்,

> " நீரினிற் பால்போல் நிற்கின்ற நேர்மை "

என்று திருமூலரால்குறிக்கப்பெற்றது. அதனைச் " சேராமற் காணும் சுகமறிந்தேனே " என்று இறுதியில் வைத்துக் கூறி முடிக்கின்றார். நம் சைவசமய ஆசாரியர்களுக்கும் ஏனைய மதாசாரியர்களுக்கும் உள்ள ஒரு பெரிய வேறுபாடு இங்கே நினைவுகூரத்தக்கதாகும். மற்ற மதாசாரியர்களெல்லாரும் ஆண்டவனுடைய திருவருள்பெற முயலுங்கள் என்று எதிர்காலத்திலேயே குறிப்பிட்டார்கள், நம்முடைய சமயாசாரியர்களோ " தாம் பெற இருக்கின்ற பேற்றைப் பெற்றேன் " என்று இறந்தகாலத்தில் கூறுகிற திட்பம் பெற்றிருந்தார்கள். இதனைப் " பெற்றலும் பிறந்தேன் இனிப் பிறவாத தன்மை வந்தெய்தினேன் " என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும், " மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடு உற்றேன் " என்று மாணிக்கவாசக சுவாமிகளும் அருளியுள்ளதால் அறியலாம்.

எவ்வளவு பெரிய சமயநூல்களைப்படித்த அறிஞனானாலும் சைவ பரம்பரையில் வந்த குருமார்களிடத்தில் உபதேசம் பெற்றாலன்றி அவர்களுடைய அறிவு உயர்ந்தது எனச் சம்பிரதாய முறையில் பாராட்டப் பெற மாட்டாது. அந்த முறையில் திருமூலதேவரது உயர்ந்த உபதேசங்களை நமது குருமகா சந்நிதானத்தின் அருள்நோக்கம் பெற்று ஓத முற்பட்டால் சிவஞானம் சித்திக்கப்பெற்று, திருவருட் பேற்றையும் அடைய ஏதுவாகும் என்பதை விநயத்தோடு தெரிவித்துக்கொண்டு இந்த அளவில் அமைகின்றேன்,

மூன்ருந் தந்திரம் : பொருள் : 'அட்டாங்க யோகம்'

திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான்,
## திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்
அண்ணுமலைநகர்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுடைய பொன்ஞர் திருவடிகளைப் பன்முறை வணங்கித் தெரிவித்துக்கொள்கிறேன். அறிவு உருவாக அமர்ந்திருக்கும் அவைத் தலைவர் அவர்களுக்கும், அறிவுடைப் பெரியோர்களுக்கும், தாய்மார்களுக்கும் எனது வணக்கம் உரியதாகுக.

யோகம் மனிதனுடைய மனநிலையை உயர்த்துகிறது. மனம் உயர்ந்தால் மனிதன் உயர்கிருன். மனிதன் ஒருமனப்பான்மையிலே உயர்கிருன். ஒருமனப்பான்மை யோகத்தின் அடிப்படை. யோக மதம் என்ற ஒன்று பதஞ்சலியிஞல் நிறுவப்பெற்றது. யோக மதத்தின் அடிப்படை நோக்கம்; யோகமே மோக்ஷ ஹேது என்பது. இருபத்தைந்து தத்துவங்களையும் கடந்து இருபத்தாரும் தத்துவமுமாக இறைவன் இருக்கிருன் என்பது அந்த மதத்தின் அடிப்படைக் கொள்கை. இறைவன் நிரம்பிய அறிவை உடையவஞக மக்களுக்கு சாஸ்திரங்களைச் செய்து கொடுத்திருக்கிருன் என்பது அவருடைய முடிந்த முடிபு. நாம் நடக்கின்ருேம் உண்கின்ருேம்; இவைகளும் தொழிலே. அதுபோலவே இயமம் நியமங்களாகிய யோக உறுப்புக்களும், தொழிற்பாகுபாடுகளே. அவை முக்தியாகமாட்டா. ஆதலால் யோகம் ஞானவாயில் என்ற சைவ சித்தாந்தமே அடிப்படை உண்மை.

யோகத்தின் பயனறிவார்க்கு இந்த ஆதீனத்து ஸ்ரீ மாதவச்சிவஞான சுவாமிகள் "யோகம் மனத்தைப் பரிபக்குவப்படுத்துகிறது; அதஞல் அதிசூக்குமமான உணர்ச்சி உண்டாகிறது. உருவமற்ற அறிவே வடிவான ஆண்டவனை அடைய வழியாகிறது" என்று பாஷ்யத்தில் கூறியிருக்கிருர்கள். ஹடயோகப் பிரதீபிகையில் அளவை, எல்லை, வேறுபாட்டு உணர்ச்சி, துக்கம், நினைவு என்ற ஐந்தொழில்களையும் நீக்கி ஒன்றையும் பற்ருமல் மனம் அறிவாக நிலைபெறுதலே யோகம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதஞல் மனச்சாந்திக்கு யோகம் வாயில் என்பது பெறப்படுகிறது. இந்தச் சாதனையோகம் மந்திர யோகம், ஹடயோகம், லயயோகம், ராஜயோகம் என நான்கு வகைப்படும். மந்திர யோகம், மந்திரங்கள் வாயிலாக உபாசஞ மூர்த்தியைத் தியானித்தல். ஹடயோகம், முரட்டுக் குதிரையை அடக்குவதுபோல இந்திரியங்களின் வழியிலே செல்லும் மனத்தைத் தடுக்கக் கையாளப்படும் உபாயங்கள். லயயோகம், மனம் சுத்த சைதன்யத்தில் அசையாதபடி லயிக்கச்செய்வது. புயற்காற்றின் முன் ஓவிய விளக்கைப் போல் அசையாமல் இருப்பதை இதற்கு உபமானமாகச் சொல்லலாம். ராஜயோகம் என்பது உடலுக்கும் உள்ளத்திற்கும் வருத்தம் தோன்ருதபடி அனுபவிக்கும் எல்லாச் சுகங்களையும் இறைவன் சுகமாக எண்ணுவதால் விளைவது. பொதுவாக இந்த நான்குமே மன ஒருமைப்பாட்டிற்கு வாயிலாஞலும் வலிந்து மேற்கொள்ளப்படுவன.

சிவயோகம் என்பது இந்த நான்கிலும் மேலானது. அதுவே சைவசித்தாந்தத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனைத்தான் திருமூலர் ஐந்தாந் தந்திரத்தில் சரியை முதலிய நான்கினைச் சொல்லும்பொழுது குறிப்பிடுகிருர். மூன்ருந் தந்திரமாகிய இதில் குறிப்பிடப் படுவது அட்டாங்கயோகம் ஆகிய ஹடயோகத்தில் விஞ்சிய ஒரு முறை. ஆகவே அட்டாங்கயோகம் சிவயோகத்திற்கும் ஹடயோகத்திற்கும் இடைப்பட்டதாக

யோக வாயிலாக இருக்கின்றது. இந்தக் குறிப்பை லட்சுமி உபநிஷத்தும் குறிப்பிடுகிறது 'யோகத்தால் யோகம் அறியத்தக்கது' என்று. 'யோகேந யோக ஞாதவ்ய:' என்ற மந்திர யோகத்தால் ராஜயோகம் சித்திக்காது; ஹடயோகத்தால்தான் சித்திக்கும். சித்தாந்த பத்ததியில் ஹ என்பது சூரியன். ட என்பது சந்திரன். இரண்டையும் இணைப்பதே ஹடயோகம் என்று கூறப்பட்டுள்ளது. இதன் கருத்து சூரிய, சந்திர கலையாகிய இடை பிங்கலைகளை இணையச் செய்து, நடுவிலுள்ள சுழிமுனை நாடியைத் திறக்கச் செய்து, என்றும் அழியா இன்பத்தில் இருத்துவது என்பதாம்.

திருமூலர் நன்னெறி, புன்னெறி என்று இரண்டைச் சொல்லுகின்றார். நன்னெறி சிவயோகத்திற்கு வாயிலாகிய இந்த அட்டாங்க யோகம். புன்னெறி ஹடயோகத்தின் உறுப்பாகிய அட்டாங்கயோகம். இந்த இரண்டில் ஞானவாயிலாகிய நன்னெறியேதாம் தக்கது என்பதை,

'நன்னெறி செல்வார்க்கு ஞானத்தில் ஏகலாம்'

என்று குறிப்பிடுகின்றார். அட்டாங்கங்களாவன நியமம் முதலாக சமாதி ஈறாக எட்டு உறுப்புக்கள். அவற்றில் முதல் மூன்று உறுப்புக்களையும் அவற்றின் பயனையும் பற்றிச் சென்ற ஆண்டு முதல்திருமந்திர மாநாட்டிலே தெரிவித்துக் கொண்டமையால், நான்காவதான பிராணயாமத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டியது அவசியமாகிறது.

பிராணயாமம் என்பது மூச்சுக்காற்றைக் கட்டுப்படுத்துதல். நம்முடைய மூச்சுக் காற்றை ஒரு அடங்காத குதிரைக்கு ஒப்பிடுகிறார் திருமூலர். நம்முடைய கண், காது, மூக்கு முதலான ஐந்து கருவிகளையும் ஐந்து மந்திரிகளாகவும், அவைகளுக்கு உயிர்களாகிய நம்மைத் தலைவனாகவும் உரைக்கிறார். உயிராகிய நமக்கு ஒரே ஒரு குதிரை இருக்கிறதாம். அதை உண்மையாக அடக்கியாள வேண்டுமென்று எண்ணுகிறவர்களுக்கு அடங்கி நடக்குமாம். அடக்கி ஆளுவோம் என்று பொய்யாக நடிப்பவரைத் துள்ளிக் குதித்துக் கீழே விழச்செய்துவிடுமாம். ஆகவே பிராணயாமத்தை நாள்தோறும் இடைவிடாமல் பயில்பவர்க்குத்தான் பயன் கொடுக்கும் என்பது இதன் கருத்து. இது திருமூலர் திருமந்திரத்தில்,

ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்
உய்யக்கொண் டேறும் குதிரைமற் றொன்றுண்டு
மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்கும் கொடாதுபோய்ப்
பொய்யரைத் துள்ளி விழுத்திடுந் தானே

என்ற பாடலால் விளக்கப்பெறுகிறது.

ஆரிய னல்லன் குதிரை இரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
கூறிய நாதன் குருவின் அருள்பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந் தானே

என்றபாடலால், தலைவன் ஒருவன்; அவனுக்கு இரண்டு குதிரை; அவற்றைப் பிடிக்க குரு அருள் வேண்டும்; முறைப்படி பிடித்தால் அவை வசப்பட்டு நின்றுவிடும் என்கிறார். குதிரை இரண்டு என்பது இடைகலை வழியாகச் செல்லும் மூச்சுக்காற்றும், பிங்கலை வழியாகச் செல்லும் மூச்சுக்காற்றும் ஆகிய இரண்டுந்தான். இதன் பயன் ஆயுள் நீடிக்கும். நரை, திரை நீங்கும். உறுப்புக்கள் எல்லாம் சிவக்கும். மயிர் கறுக்கும். இதனை,

புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட உள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமம் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே

என்ற திருப்பாடலால் இனிது எடுத்துப் பேசுகின்றார்.

அடுத்து, பிராணயாமத்தின் பயனாகப் பிரத்தியாஹாரம் என்ற ஆதாரயோகம் சித்திக்கிறது. அதனால் இடைவிடாது மனத்தை நிறுத்தும் தாரணை உண்டாகிறது. இந்தத் தாரணையைப் பற்றி, அழகான ஒரு பாடலில் விளக்கியுள்ளார்.

கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணாத்தண் டூடே வெளியுறத் தானோக்கிக்
காணாக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணாள் அடைக்கும் வழியது வாமே.

மூலாதாரத்தில் ஒரு ஆண் மகன் இருக்கிறன். கபாலத்தில் பராசக்தி என்கிற பெண்பிள்ளை இருக்கிருள். மூலாதாரத்தில் உள்ள மூர்த்தியை எழுப்பி, பிரமரந்திரம் வரையில் கொண்டுசென்று அவளோடு சேர்த்துவிட்டால் இவன் இளைஞன் ஆகிருன் என்பதே இதன்கருத்து. இதனைப் பின்வரும் பாடல் நன்கு விளக்கும்.

மேலை நிலத்தினுள் வேதகப் பெண்பிள்ளை
மூல நிலத்தில் எழுகின்ற மூர்த்தியை
ஏல எழுப்பி இவளுடன் சந்திக்கப்
பாலனும் ஆவான் பார்நந்தி ஆணையே.

தியானந்தான் இந்த நாட்டின் சொந்தச் சொத்து. தியானம் என்ருல் பாவனை, பாவனை முற்றி மனிதன் பாவிக்கப்படும் பொருளாகவே ஆகிருன். அவசமாகிப் பிரியாது ஒன்றியிருப்பது சமாதி நிலை. சமாதி நிலை சித்தித்தால் அஷ்டமாசித்திகள் கைவரும். யோகத்தால் உண்டாகிய பொதுப்பயன் உடம்புக்கு அழிவு இல்லை. உடம்பு திடமாகும். உடம்பு உறுதிப்பட, திடமான ஞானம் சித்திக்கும். இதனைத்தான் சிவஞான சித்தியார் சகமார்க்கம் என்று தெரிவிக்கிறது. சகமார்க்கத்தைப் பெற்றவர்கள் சாலோக நிலையைம் அடைவார்கள் என்பது ஞானசாத்திரத் துணிபு.

இனி ஆதாரயோகங்களைப் பற்றி ஆதாரங்களின் உருவம், அவற்றில் வசிக்கும் கடவுள் அக்ஷரங்கள் இப்படி விரிவாக மூன்ருந் தந்திரத்தில் சொல்லப்படுகின்றன. அவை உருவமிட்டு விளக்கவேண்டுவன. அந்தந்த ஆதாரத்தில் தியானம் சித்திப்பதால் மனிதன் இறைவனும் தன்மை எய்துகிருன். அதனுல் இன்பம் நிலைபெறுகிறது. அதற்கு இன்றியமையாதது திருமந்திரபாராயணமும், அனுபவமும். அனுபவத்தால் மிகுந்தவர்களே இவ்வாதீனத்து முனிபுங்கவர்கள். இத்தலம் சித்தர்புரம் என்று பேசப்படும். சித்தர்களும் இந்த நிலையில் இருந்து சிவயோகத்தைப் பயின்றவர்களே. அதனுல்தான் சிவயோகியாக இருந்த ஒருவர் நமக்கு இந்த உண்மைகளை உணர்த்த, இத்தலத்தில் இடையன் உடலில் புகுந்து, திருமூலராயினுர். தெய்வீகக்கருணை மக்களாகிய நமக்குப் பயன்பட மக்கள் உடல் வழியாகத்தான் வரவேண்டும். அந்த உண்மையையே திருமூலர் வரலாறு தெரிவிக்கின்றது. நேரமின்மையால் இத்துடன் நிறுத்திக் கொண்டு, இவ்வாய்ப்பினை எனக்கு அளித்த ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கு மீண்டும் என் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு அமைகின்றேன்.

**உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்**
**உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்**
**உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான்என்**
**உடம்பினை யான்இருந்து ஓம்புகின் றேனே.**

— *திருமந்திரம்.*

பொருள்; '**சிவஞான போதம்**'

## செல்வி வயிநாகரம் இராம. மீனாட்சி.

தேவகோட்டை

**சிவநெறிச் செல்வர்களே! செல்விகளே! வணக்கம்.**

உலகத்திலே நிலவுகின்ற சமயங்கள் பல. அவற்றின் பொருள் இயல்புகளைக்கூறும் நூல்களும் பல. இவற்றுள் கடவுள், உயிர், உலகம் என்னும் முப்பொருள்களைப்பற்றி முடிந்த முடிபுகளைத் தெளிய அறிவுறுத்தி மெய்யுணர்வைத் தரவல்லது சைவசமயமே ஆகும்.

முன்னை நல்வினைப் பயனால், மெய்ச் சமயமாகிய சைவ சமய வாழ்வில் நிற்கும் பேறு உண்டாதல்கூடும். இடையிடையே வேற்றுச் சமயச் சார்பினால் உண்மையறியாது, மக்கள் மயங்கி நின்ற வேளைகளில் ஆண்டவன் அருளாசிரியர்களை உலகிற்கு அனுப்பி அவர்களைக்கொண்டு பண்டைப் பெருமையும், விளக்கமும் உண்டாகும்படிச் செய்ததை வரலாற்று நூல்கள் நமக்கு அறிவிக்கின்றன.

ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் புத்த சமயச் சார்பினால் மக்களுக்குக் கடவுள் உணர்ச்சி மங்கியிருந்த காலத்து, இறைவனருளால் மணிவாசகப் பெருந்தகையார் தோன்றிச் சமயத்தை நிலைநாட்டினார். அதனை யடுத்துச் சமண சமயச் சார்பினால் மக்கள் குறையுடையவர்கள் ஆனபோது ஞானசம்பந்தப்பெருமானும், அப்பர் அடிகளும், ஆண்டவன் அருளால் வந்து உதவிபுரிந்தார்கள். அவர்களுக்குப் பின் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தோன்றியருளி இறைவனது பெருங் கருணைத் திறத்தையும் அடியார்களது பெருந் தகைமையையும் விளக்கியருளினார். இந்நான்கு பெருமக்களும் சமய குரவர்கள் என்று பாராட்டப் பெறுகிறார்கள்.

இவர்களால் அருளிச் செய்யப்பெற்ற தேவார, திருவாசகங்களும் இவர்களுக்கு முன்னும் பின்னும் இருந்த சிவானுபூதிச் செல்வர்களால் அருளிச் செய்யப்பெற்ற திருப்பாடல்களும் பன்னிரண்டு திருமுறைகளாகத் தொகுக்கப் பெற்றுள்ளன.

திருமுறை ஆசிரியர்கள் காலத்திற்குப் பிறகு வேதவியாசர் இயற்றிய பிரமசூத்திரம் நீலகண்ட சிவாசாரியார், சங்கரர், ராமானுஜர், மாத்வர் ஆகியோரது பேருரைகளுடன் தமிழ் நாட்டில் நிலவத் தொடங்கியது. அவ்வுரைகளால் சமயக் கொள்கைகளைப்பற்றிப் பெருங் குழப்பம் விளைவதாயிற்று, உண்மை அனுபவமே, கடவுள்நெறியில் மெய்யுணர்வு பெறுவதற்குச் சாதனம் என்பதை மக்கள் மறந்தார்கள். பொதுவாக நூலறிவும் சிறப்பாகத் தருக்கவாதமுங்கொண்டு, சமயம் சாதிப்பவர்களே மதாசாரியர்களாகப் போற்றப்பட்டார்கள்,

பந்தம், வீடு ஆகிய இருநிலைகளிலும் ஆண்டவன் உயிர்களோடு கலந்து உடனாய் நின்று உபகரிக்கும் நிலையைத் தெரிவிக்க உபநிடதங்களில் எழுந்த அத்துவிதம் என்ற சொல்லின் இயல்பும் பொருளின் இயல்பும் அறியாது மக்கள் தயங்கினார்கள். அந்த மயக்கம் நீங்குதற்பொருட்டும் வேதாகமசாரமாகிய திருமுறையின் பெருமை நிலவுதற்பொருட்டும் இறைவனருளால் மெய்கண்ட சந்தானம் இத்தமிழ்நாட்டில் தோன்றியது.

ஞானசூரியனாகிய மெய்கண்ட தேவர் நமது தவத்தின் பயனாக வந்து அவதரித்தார். திருக்கயிலாய மலையில் தென்முகக் கடவுள் உபதேசிக்கத் திருநந்தி தேவர் சிவாகமங்களின் ஞானபாதப்பொருள் உண்மையை அறிந்தார். அவர்பால் சனற்குமார முனிவரும் அவரிடம் சத்தியஞான தெரிசனிகளும் அவரிடம் பரஞ்சோதி முனிவரும் உபதேசம் பெற்றார்கள். இந்த நால்வரும் அகச்சந்தான குரவர்கள் என்று அழைக்கப் பெறுவர்.

அகச்சந்தானத்தின் இறுதிக் குரவராகிய பரஞ்சோதி முனிவர் நிலவுலகத்திற்கு வந்த போது, இரண்டாண்டு நிறைந்திருந்த சாமு சித்தராகிய மெய்கண்ட தேவரது பரிபக்குவ நிலைகண்டு, அவருக்கு ஞானோபதேசம் புரிந் தருளினார்.

திருக்கயிலாய பரம்பரையிலிருந்து வந்த - சிவஞானம் கைவரப்பெற்ற ஸ்ரீ மெய்கண்ட தேவர் சைவசமய முடிபுகள் அனைத்தையும் தெளிவுற விளக்கிப் பிற சமயங்களின் நிலை களையும் காட்டுகின்ற சிவஞான போதம் என்னும் தலைமணி நூலை அருளிச் செய்து அதற்குக் கருத்துரை பொழிப்புரை முதலியன வும் இயற்றியருளினார்.

பின்பு அவரது குலகுருவாக இருந்து அவரால் ஆட்கொள்ளப்பெற்ற சகலாகம பண்டிதர் என்னும் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள், சிவஞான சித்தியார் என்னும் ஒருபெருநூலைப் பரபக்கம், சுபக்கம் என்னும் இரண்டு பிரிவுகளுடன் அருளிச்செய்தார். இவரது மற்றொரு நூல் இருபா இருபஃது என்பதாகும்.

மெய்கண்ட தேவரின் இன்னொரு மாணாக்கர் திருவதிகை மனவாசகங்கடந்தார் என்பவர். இவர் உண்மை விளக்கம் என் னும் நூலை இயற்றியருளினார்.

அருணந்தி சிவாசாரியாரது சீடர்களுள் மறைஞானசம்பந்த சிவாசாரியாரும் அவர் சீடருள் உமாபதி சிவாசாரியாரும் சிறந்தவர் கள். உமாபதி சிவம் சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்ப நிராகரணம் என்னும் எட்டு நூல்களை இயற்றியருளினார்.

ஸ்ரீ மெய்கண்டசிவம் முதல் ஸ்ரீ உமாபதி சிவம்வரை நால்வரும் புறச்சந்தான குரவர்கள் ஆவார்கள். இவர்கள் இயற்றிய பதினொரு நூல்களும் உண்மை விளக்கமும் இவற்றிற்கு முன் தோன்றியிருந்த திருவுந்தியார், திருக் களிற்றுப்படியார் என்னும் நூல்களும் ஆகிய பதினான்கையும் மெய்கண்ட நூல்கள் எனவும் சித்தாந்த சாத்திரம் எனவும் வழங்குவர்.

வேதசிவாகமங்களின் உண்மை முடிபு களை விளக்கி, அருள் நூல்களாகிய திருமுறை களில் காணப்பெறும் அனுபவப் பயன் களுக்கு மரபு உணர்த்துவனவாய் மெய்கண்ட நூல்கள் இருக்கின்றன. மெய்ஞ்ஞான விளக் கத்திற்கு ஏதுவாகிய சித்தாந்த சாத்திரம் எல்லா நூல்களுள்ளும் சிறந்து முதலிடம் பெற்றிருக்கின்றது.

இவற்றுள் சிவஞானபோதம் காப்புச் செய்யுளும் அவையடக்கமுமாகிய பாயிரத் தைக் கொண்டு பன்னிரண்டு சூத்திரங்களால் ஆகியது. இறை, உயிர், தளை என்னும் முப் பொருள்களின் பொதுவியல்பைப் பிரமாணம் இலக்கணம் என்னும் வகையில் முதலாறு சூத்திரங்களிலும் அந்த முப்பொருள்களின் சிறப்பியல்பைச் சாதனம் பயன் என்னும் வகையில் கடைசி ஆறு சூத்திரங்களிலும் இந் நூல் விளக்குகின்றது.

காப்புச் செய்யுளால் ஆல்நிழல் அமர்ந்த ஆண்டவனே பரம்பொருள் என உணர்கின் றோம். அவையடக்கச் செய்யுள், உயிரியல்பை உணர்ந்தவர்க்கே இறைவனியல்பு உணரவரும் என்பதையும் அவ்வாறுணர்ந்த அருட்செல்வர் களே எதனையும் உணர்த்த வல்லவர் என்பதை யும் அறிவிக்கின்றது.

முதற்சூத்திரம் உலகத்தைப் படைத்து, காத்து, ஒடுக்குகின்ற ஒரு முதல்வன் உளன்; அவன் அனைத்தையும் ஒருங்கே ஒடுக்கி ஒருங்கே படைக்க வல்ல பரமசிவனே என் பதை உணர்த்துகின்றது.

இரண்டாஞ் சூத்திரம், அப்பரமசிவன் உயிர்களோடு ஒன்றாய், வேறாய், உடனாய் நின்று அவை செய்த வினைகளுக்கேற்பப் பயன் நுகரும்படி செய்வான்; தானும் தனது

சத்தியும் என இருவகைப்பட நின்று உலகத்தை நடத்துவன் என்பதைக் கூறுகின்றது.

ஆணவ மலத்ினது உண்மை முதற் சூத்திரத்திலும் கன்மம் மாயாமலங்களின் உண்மை இரண்டாஞ் சூத்திரத்திலும் உணர்த்தப்பெற்றன.

மூன்ருஞ் சூத்திரம் உயிரானது உடம்பை ஐம்பொறிகள், பிராணவாயு, கருவிகள் ஆகியவற்றிற்கு வேருய், நான் என்னும் உணர்விற்கு இடமாய் இருப்பது என்பதை இயம்புகின்றது.

நான்காஞ் சூத்திரம் உயிர் ஆணவ மலத்தால் கட்டுண்டு ஐந்து அவத்தைகளை அடையும் எனவும் அவ்வுயிர் அந்தக்கரணங்களுக்கு வேருயது எனவும் சொல்லும்.

ஐந்தாஞ் சூத்திரம் இறைவன் உயிர் தன்னை உணராதிருந்தும் அதன் உணர்விற்கு முதலாய் இருந்து உணர்த்துகின்ருன் என்பதை விளக்குகின்றது.

ஆருஞ் சூத்திரம், இறைவன் உயிரால் அளந்தறியப் படாத சித்துப்பொருள் எனவும் திருவருள் ஒற்றித்து நின்றுணரும் அனுபவ ஞானத்திற்கு விடயமாகும் சத்துப் பொருள் எனவும் புலப்படுத்துகின்றது.

ஏழாம் சூத்திரம் உயிர் உலகியலில் அசத்தை அசத்தால் அறிவதுபோல இறை இயலில் சத்தை சத்தால் அறியும் எனவும், நான் உடம்பு என்னும் உணர்வு விபரீத உணர்வு ஆதல்போல நான் பிரமம் என்னும் உணர்வும் விபரீத உணர்வே எனவும் தெளிவிக்கின்றது.

எட்டாஞ் சூத்திரம், முத்திக்குரிய சாதனம் ஞானமே எனவும், அது முதல்வன் குருவாய் வந்து உணர்த்த உணரப்பெறும் எனவும், முதல்வன் குருவாய் வருவதற்குச் சரியை கிரியை யோகங்களைச் செய்துவருதல் வேண்டும் எனவும் மொழிகின்றது.

ஒன்பதாம் சூத்திரம், இறைவன் பாச ஞான, பசுஞானங்களால் அறியப்படாதவன் எனவும், அசத்தாகிய பாசத்தைவிட்டு, தான் யார் எனச் சிந்தித்து உணர்ந்தால் அங்கே சிவ ஞானம் தோன்றும் எனவும், அச்சிவஞானத்தால் இறைவனை உயிரின்கண்ணே நாடி அந்த நிலை நெகிழாதிருக்க எனவும் அறிவிக்கின்றது.

பத்தாம் சூத்திரம், உலகியலில் இறைவன் உயிராய் நின்றமுறைபோல உயிர் இறைவனுய் ஏகனுகி இறைபணி நிற்க மும்மலங்களும் பற்றறக்கழியும் எனத் தெரிவிக்கின்றது.

பதினெராம் சூத்திரம், இறைவன் உலகியல், இறையியல் ஆகிய இரண்டிலும் உயிர்க்குயிராய் நிற்கும் பேருபகாரத்தை உயிர் மறவாது உணர்ந்தால் அவ்விறைவன்மீது அன்பு மிகுதிப்பட அவ்வன்பால் இறைவன் வெளிப்பட, அவனில் அழுந்தி நிற்றலே பரமுத்திநிலை எனச் சாற்றுகின்றது.

பன்னிரண்டாம் சூத்திரம் சீவன்முத்தர்களுக்கு மெய்யுணர்வு நிலைபெற அடியார் கூட்டுறவோடு, திருவேடத்தையும் திருக்கோயிலையும் இறைவன் எனவே கண்டு வழிபடுதலும் இன்றியமையாதன என்பதை வலியுறுத்துகிறது. சிவஞானபோதநெறி என்றும் நின்று நிலவ இறைவனை வேண்டுகிறேன்.

**உந்தி களிறு உயர்போதம் சித்தியார்**
**பிந்திருபா உண்மை பிரகாசம் — வந்தவருட்**
**பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு**
**உண்மைநெறி சங்கற்ப முற்று.**

உ

சிவமயம்

**திருவடி யேசிவ மாவது தேரில்**
**திருவடி யேசிவ லோகம் சிந்திக்கில்**
**திருவடி யேசெல் கதியது செப்பில்**
**திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே.**

— *திருமந்திரம்.*



இரண்டாவது திருமந்திர மாநாடு - இரண்டாம் நாள்

# இரண்டாவது நாள் பேச்சு

தலைமையுரை:

## திரு. A. இராமநாதன் பிள்ளை M. A., அவர்கள்

உதவித்துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

தவநெறிச் செல்வர்களே! பெரியோர்களே! தாய்மார்களே!

உங்கள் அனைவர்க்கும் எனது அன்பு கலந்த நன்றி உரியதாகுக.

சோழவளநாட்டிலே, சைவமும் தமிழும் தழைக்கத்தோன்றிய சைவ ஆதீனங்களுள்ளே இத் திருவாவடுதுறை ஆதீனம் பழமையும் பெருமையும் வாய்ந்தது. இந்த ஆதீனத்தை இற்றைக்குச் சுமார் ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னர்த் தோற்றுவித்த பேரருளாளர் ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகள். இப்பெருந்தகையார் திருக்கயிலாய பரம்பரையில்—நந்திமரபில்—மெய்கண்ட சந்தானத்தில், ஸ்ரீ சித்தர் சிவப் பிரகாசரிடம் திருவருள்ஞானம் பெற்றவர். இக்குருமூர்த்திகளை ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர் என்று அழைப்பதும் மரபாகும். இவர் தோற்றுவித்த ஆதீனம் இலட்சக் கணக்கான மக்களுக்குச் சமயப்பற்றையும், அறிவையும், ஒழுக்கத்தையும் வளர்ப்பதற்கு உதவிவருகின்றது. அடியார்களுக்கு அமுது அளிப்பதற்காக நமசிவாயமூர்த்திகளால் சமையலறை அடுப்பில் இடப்பெற்ற நெருப்பு இன்றும் அவியாது இருந்து வருவது உலகினர் அறிந்த உண்மையாகும்.

இக்குருமூர்த்திகளின் மரபில் தோன்றிய ஒரு மகாசந்நிதானம் அவர்கள் இராமேசுவரத்திற்கு எழுந்தருளியபோது. பாண்டி வளநாட்டில் மழை இன்மையை அறிந்து, மக்களின் வேண்டுகோளின்படி, சைவ சமயம் உண்மைச் சமயமானால் 'மேகங்காள் பெய்க மழை' என்றருளினார்கள். உடனே மழை பெய்தது; நாடு செழித்தது; அத்தெய்விகத் தன்மையை அறிந்து இராமநாதபுரம் சேதுபதி மன்னர் பல நிவந்தங்களை அளித்ததாகவும் உண்மை வரலாறுகள் உண்டு. இவைபோன்று எத்தனையோ தெய்வத்தன்மை பொருந்திய நிகழ்ச்சிகள் உள்ளன. சுருங்கக் கூறுவோமானால், சிவஞானபோதத்திற்குச்சிற்றுரையும் பேருரையும், சிவஞானசித்தியார்க்குப்பொழிப்புரையும், ஏனைய மெய்கண்ட நூல்களின் உரை பலவும் வெளிவருவதற்குக் காரணமாய் இருந்ததும், இருந்து வருவதும் இவ்வாதீனமேயாகும். கருவிலே கவித்திரு அமைந்தவரும் (Born Poet) பிற்காலக் கம்பன் என்று அழைக்கப் பெற்றவருமாகிய, திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களை ஆதரித்ததும் இங்குதான். பல அரிய தமிழ் நூல்களின் ஏடுகளைத் தேடி, எழுத்துக்களைத் துருவிப் பதிப்பித்துத் தந்தவரும், தமிழ்நாட்டில் பழைய நிகழ்ச்சிகளைத் தமிழ் நாட்டிற்கு உபகரித்தவரும், மக்களால் தமிழ் தாத்தா என்று அழைக்கப் பெற்றவருமாகிய மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்களை உருவாக்கி, வளர்த்து, பல உதவிகள் செய்து பெரிதும் ஆதரித்ததும் இவ்வாதீனமேயாகும்.

இங்ஙனம் சைவ சித்தாந்த மணத்தையும், தமிழ் மணத்தையும் கமழச் செய்துவரும் இந்த ஆதீனத்தில் இப்பொழுது இருபத்தொன்றாம் பட்டத்தில் இனிது எழுந்தருளி அருளாட்சி நடத்திவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள், தூய உள்ளம் படைத்தவர்கள்; மிக்க நிர்வாகத்திறமை வாய்ந்தவர்கள்; பிற்காலச் சோழ மன்னர்களைப் போல் தங்கள் ஆதீனக் கோயில்களுக்குத் திடீரென்று எழுந்தருளி, நித்தியநைமித்யங்கள் சரியாக நடைபெறுகின்றனவா என்று கவனித்தும் வருகிறார்கள்; பட்டம் எய்திய சில

ஆண்டுகளுக்குள் திருவெண்ணெய்நல்லூரில் சைவ சித்தாந்த மகாநாட்டை மும்முறை கூட்டிச் சைவ சித்தாந்தத்தின் பெருமையை உலகறியச் செய்துள்ளார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ குரு மகா சந்நிதானத்தின் இத்தகைய அருஞ் செயல்களைப் பாராட்டுகின்றேன்.

திருமந்திரம் என்னும் நூல், சைவ சமயத்திற்கு மிகவும் சிறந்ததொரு நூலாகும். இது மூவாயிரம் பாடல்களைக்கொண்டு விளங்குவது. சைவத் திருமுறைகளுள் பத்தாவதாக வைத்து எண்ணப்படும் சிறப்புடையது. சைவ ஆகமங்களில் உணர்த்தப்பட்ட, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களையும்பற்றி இந்நூலில் சொல்லப்பெற்றுள்ளது. இது ஒன்பது தந்திரங்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது. இது சாத்திரமாகவும் தோத்திரமாகவும் விளங்கும் பெருமை வாய்ந்தது.

திருக்குறள், நான்கு வேதங்கள், மூவர் தேவாரங்கள், மாணிக்கவாசக சுவாமிகளின் திருவாசகம், திருக்கோவையார் ஆகிய இவைகளோடு ஒப்பவைத்து எண்ணப்படுவது திருமந்திரம். திருமந்திரத்தில் உள்ளதும், என் உள்ளத்தில் எப்பொழுதும் இருந்து கொண்டிருப்பதுமாகிய ஒரு திருப்பாடலை இங்குக் குறிப்பிடாமல் இருக்கமுடியவில்லை.

யாவர்க்குமாம் இறைவற்கு ஒரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரை தானே.

இறைவனுக்கு ஒரு பச்சிலையை இடுதலும், பசுவுக்கு ஒருவாய் அறுகம்புல்லைக் கொடுத்தலும், உண்ணும்போது வறியவர்க்கு ஒரு கைப்பிடி உணவு கொடுத்தலும், எவரிடத்திலும் இனிய வார்த்தை சொல்லுதலும், பொருட்செலவு இல்லாமல் யாவரும் செய்யும் அறங்களாகும்.

திருமந்திரமாகிய உயர்ந்த அருணூலை ஆக்கித்தந்தவர் நந்திதேவருடைய திருவருளைப் பெற்ற ஒரு சிவயோகியார். அவர் அகத்திய முனிவரைப் பார்ப்பதற்குப் பொதிய மலைக்கு எழுந்தருளுகிற வழியில், திருவாவடுதுறை இறைவனை வழிபட்டுச் செல்லுகையில், காவிரி யாற்று வனத்தில் மேயும் பசுக்கூட்டங்கள் அழுதலைக் கண்டார். அங்குபசுக்களை மேய்த்து வந்த மூலன் என்னும் பெயரை உடைய ஓர் இடையன் இறந்து கிடந்தான். அதன் பொருட்டுப் பசுக்கள் கதறின. பசுக்களின் துயரத்தைப்போக்க, மூலனுடைய சரீரத்தில் பிரவேசித்துத் திருமூலராய் எழுந்தார். உடனே பசுக்கள் அவரை மோந்து, கனைத்துக் களிப்பினாலே துள்ளி மேய்ந்தன. அன்று மாலை நேரம் கழித்தவுடன் பசுக்களுடன் சாத்தனூர் அடைந்தார். பசுக்கள் வீடுகளில் செல்லத் தாம் வெளியே நின்றார். அவர் மனைவியார் விரைந்து வந்து அவர் உடலைத் தொட்டு ஏன் நேரமாகி விட்டது என்று கேட்கவும், உனக்கு என்னோடு சம்பந்தம் இல்லை என்று சொல்லி, அவ்வூரிலிருந்த பொதுமடம்சென்று சிவயோகத்தில் இருந்தார். இவரது நிலையைக் கண்டு மனைவியும் வீடு சென்றார். பின் தான் வைத்திருந்த சரீரத்தைக் காணாது, திருவாவடுதுறைக்குப் போய், கோயிலின் மேல்பால் இருந்த ஒரு அரச மரத்தின் கீழ் சிவயோகம் இருந்தார். ஒரு வருஷத்திற்கு ஒரு பாடலாக மூவாயிரம் பாடல் செய்தருளினார். இவ் வரலாற்றை இக்கால இளம் பிள்ளைகள் நம்புவது இல்லை. சேக்கிழார் ஒரு பெரிய சரித்திர ஆசிரியர். அவர் ஆதாரம் இல்லாது எதையும் சொல்லமாட்டார் என்பதை உணர்தல் வேண்டும். திருமூலர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். திருத்தொண்டத் தொகையை அருளிச்செய்த சுந்தரமூர்த்தி சுவாமிகள், ஞானப்பால் உண்ட ஞானசம்பந்தப் பெருந்தகையாரை,

'எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்'

என்று கூறியதுபோல, திருமூலதேவரை,

'நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்'

என்று குறிப்பிட்டிருப்பது நமக்குப் பெருமகிழ்ச்சியை அளிப்பதாகும். இவ்வளவு பெருமைபெற்ற திருமூலருடைய விழாவை

எவரும் இதுகாறும் சிறப்பாகக் கொண்டாடினுர் அல்லர். இதைச் சென்ற ஆண்டு தொடங்கி, நமது மாண்புமிக்க ஸ்ரீ-லஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் நடத்திவருகின்றது நமக்கெல்லாம் மிகப்பெருமை அளிப்பதாகும். இன்று நிகழ்த்தப்பெறும் திருமந்திர மாநாட்டின் இரண்டாம் நாள் விழாவில் தலைமை ஏற்று நடத்தித்தரும் ஆற்றல் எனக்கு இல்லையாயினும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் திருவருளாணையை மறுத்தற்கு அஞ்சி ஏற்றுக்கொண்டேன். குரு மகா சந்நிதானத்தின் திருவருள் இருந்தால், என்போன்றவர்கள் இதுபோன்ற பன்மடங்கு மிகப் பெரிய பணியையும் தாங்கி ஏற்று நடத்தும் ஆற்றல் உடையவர் ஆவார்கள். இப்பணியில் கலந்து கொள்ளும் பேற்றை அளித்தருளிய குருமகா சந்நிதானமவர்களின் பொன்னுர் திருவடிகளை வணங்குகின்றேன்.

இங்கு வந்தவுடன் என்னுடைய சிந்தனையானது வெளிநாடுகளில் சென்று உலவி வந்தது. நான் சென்ற ஆண்டு ரோமாபுரி நகரத்தில் போப்பாண்டவரைக் காணவேண்டுமென்று சென்றிருந்தபோது, அங்குக் கண்ட காட்சி, இன்று இவ்விடத்தில் காண்கின்ற காட்சியைப் போன்றே இருந்தது. ஆயினும் அங்கு இங்கில்லாத வேறு ஒருசில நிகழ்ச்சிகள் நடந்தன.

நம்நாட்டிலே பெரியபுராணம் போன்ற நூல்களை வாழ்க்கையின் பிற்பகுதியிலே உபயோகப்படுத்தி வருகின்றோம். மாணவப் பருவத்தில் அவைகளைப் பயன்படுத்துவதில்லை. ஆனுல் அங்கோ நகரந்தோறும் ஒவ்வொரு கலாசாலையிலும் ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் மாணவ மாணவிகள் முதன்முதலாகச் செல்லவேண்டிய இடம் ஒரு சர்ச். அதை நான் கண்டபோது மிகப் பெரிய ஆச்சரியம் அடைந்தேன். ஏன் என்ருல், நம்முடைய நாட்டிலோ மாணவ மாணவிகளை ஆரம்பத்தில் ஏதோ ஒருசில நிமிடங்கள் பாடச்சொன்னுல் அதற்குப் பல இடங்களிலிருந்து எதிர்ப்பு வருகிறது. சில சமயங்களில் மாணவர்களின் பெற்றோர்களே எதிர்க்கிருர்கள். சொல்லப்போனுல் நமது சர்க்காரே எதிர்க்கின்றது. அதன் காரணம், அதில் அதிக கவனம் செலுத்தாததே. ஆனுல் அங்குள்ள பள்ளிக்கூடங்களிலோ சிறு சிறு மாணவர்கள்முதல் காலை 9-மணிக்குப் பள்ளிக்கூட மணி அடித்ததும் பைபிளைக் கையில் எடுத்துக்கொண்டு சர்ச்சுக்குத்தான் போகவேண்டும். அப்படிச் செய்வோரில் வேறுபல மதத்தினரும் இருக்கின்றனர்கள். வேறு மதத்தினராக இருந்தாலும் அவர்களும் கையில் பைபிளை எடுத்துக்கொண்டு பிரார்த்தனைக்குச் சென்று அங்கு அரைமணி நேரமாவது இருந்தேதீரவேண்டும். அதற்கு ஏதாவது ஆட்சேபனை ஏற்பட்டால் அதைத் தீர்க்க ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது மாணவர் பள்ளியைவிட்டு விலக வேண்டியதுதான். அதைப் பார்த்தபோது, மேல் நாட்டினர் இப்படிச் செய்து கொண்டிருக்கும்போது, நம்முடைய சைவசமய ஆசாரியர்கள் அப்பணியை மேற்கொண்டு இங்குள்ள பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் ஏன் அப்படிப்பட்ட ஒரு வாய்ப்பை அளிக்கக்கூடாதென்று கருதினேன். அதை இங்குச் சொல்ல விரும்புகிறேன்,

இன்னும் ஒரு நிகழ்ச்சி. சுவீடனில் ஒரு பெரிய நூல்நிலையம் இருக்கிறது. அந்த நூல்நிலையத்திற்கு நான் சென்றபோது அங்குத் திருவாசகம் வைக்கப்பட்டிருந்ததைக் கண்டு பெருமகிழ்ச்சி அடைந்தேன். ஆனுல் நம்மில் எத்தனைபேர் நம்முடைய வீடுகளிலும், நூல் நிலையங்களிலும் திருவாசகத்தை வைத்திருக்கின்ருேம் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஆனுல் ஒவ்வொரு கிறிஸ்தவர்களும் தங்கள் தங்கள் வீடுகளில் ஒரு பைபிள் வைத்திருப்பதை இன்றும் நாம் காணலாம், தவிர, ஒவ்வொரு கிறிஸ்தவக் குடும்பத்தினரும் சிறு குழந்தையாக இருந்தாலும் கையில் எடுத்துக்கொண்டு ஒவ்வொருஞாயிறும் சர்ச்சுக்குப் போவதைக் காணலாம். நம் குடும்பத்தினரில் ஏதோ பண்டிகை தினங்களில், அதுவும்

ஓரிரண்டு பேர்தான் அவ்வாறு கோயிலுக்குப் போவதை நாம் காண்கின்றோம். நாம் எப்பொழுதும் வேலை செய்வதிலும், பொருள் சேர்த்து வைப்பதிலுமே கண்ணுங் கருத்துமாக இருக்கிறோம். கடவுளை ஒரு நாளில் அதாவது 24 மணிநேரத்தில் ஐந்து நிமிடங் கூட நினைப்பதில்லை. நமக்குக் கடவுளிடத்தில் நம்பிக்கை வேண்டியது அவசியம்.

நமக்கு, நூல்கள் பெரும் பொக்கிஷம். அதைப் படிக்கப் படிக்கப் பெரும் பொருள் நமக்குக் கிடைக்கின்றது. இப்பொழுது நம்முடைய ஆதீன கர்த்தர்கள் தமிழில் பல புத்தகங்கள் வெளியிட்டிருக்கின்றனர். அவற்றை இலவசமாகவே வழங்குகின்றனர். இதை நம் நாட்டுச் சிறுவர்கள் முதலில் பயன்படுத்திக் கொள்ளல்வேண்டும். அதுமட்டுமல்லாமல் உலகத்தாரும் அதை அனுபவிக்கச் செய்ய வேண்டியது நம் கடமையாகும். எப்படி நம் திருவாசகமானது சுவீடன் நூல்நிலையத்தில் வைக்கப்பட்டிருப்பதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறோமோ, அம்மாதிரியாகப் பிற நூல்களும் நூல் நிலையங்களில் இடம்பெற முன்வர வேண்டும். அப்போதுதான் வெளிநாட்டாருடைய மதிப்பையும் நாம் பெறமுடியும். அம்மாதிரியான ஒரு வாய்ப்பை நாம் உண்டு பண்ணிக் கொள்ளல்வேண்டும். நம்நாட்டில் சிலர் புத்தகங்களை வாங்கி, அழகாக அலமாரியில் அடுக்கிவைத்துக் கொள்ளுகின்றனர்; அது பிரயோஜனமில்லை. அதைப் பயன்படுத்திக் கொள்ளல்வேண்டும். திருவாசகம், திருக்குறள், திருமந்திரம் போன்ற நூல்களை வேறு மொழிகளிலும் மொழிபெயர்க்க வேண்டும். இது என்னுடைய நெடுநாளைய கனவாகும். ஆகவே என் கருத்தை இங்குத் தெரிவித்து விட்டேன். எனக்கு இச்சந்தர்ப்பத்தை அளித்ததற்காக மீண்டும் ஒருமுறை ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களுக்கு வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

மாநாட்டின் இரண்டாம் நாள் விழாவாகிய இன்று, நான்கு ஐந்து ஆறு என்ற மூன்று தந்திரங்களின் சிறப்புக்களை, மூன்று சிறந்த அறிஞர்களின் வாயிலாகக் கேட்டு மகிழ இருக்கின்றோம். மூவரும் சித்தாந்தத் துறையில் புலமை உடையவர்கள் என்பதை மட்டும் குறிப்பிட்டு எனது முன்னுரைக்குச் செவிசாய்த்த உங்களுக்கு மீண்டும் என் நன்றியைச் செலுத்திக்கொள்ளுகிறேன்.

தென்னாடுடைய சிவனே போற்றி,

**மந்திர மாவதும் மாமருந் தாவதும்**
**தந்திர மாவதும் தானங்க ளாவதும்**
**சுந்தர மாவதும் தூய்நெறி யாவதும்**
**எந்தை பிரான்றன் இணையடி தானே.**

— திருமந்திரம்.

**நான்காந் தந்திரம்:** பொருள்: **'யந்திரமும் மந்திரமும்'**

சித்தாந்த சரபம், மகாமகோபாத்தியாய
## சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள்
பழநி.

அன்புருவாய் இங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கும், தலைமை வகிக்கும் தலைவர் அவர்கட்கும், மற்றுமுள்ள சிவனடியார்களுக்கும் எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்,

கடவுளுக்குச் சொரூபம், தடத்தம் என்னும் இரண்டு இயல்புகள் உள்ளன. அங்ஙனமே திருமூலரையும் கயிலாயத்து ஒரு சித்தர் எனவும், திருமூலர் எனவும் அவரைப்பற்றி ஆசிரியர்கள் தெரிவித்துள்ளார்கள். இறைவன் சொரூப நிலையில் ஓர் நாமம், ஓர் உருவம், ஓர் குணம், குறி, செயல் இல்லாதவராயினும் ஆன்மாக்களுக்கு வினைவசத்தால்வந்த ஊரும் பேரும், குணமும் குறியும் என்ற இன்னோரன்னவைகளை ஒழிக்கும்பொருட்டு, ஊரும் நாமமும் அறிய ஒரு அந்தணனாய் ஆண்டு கொண்டான் என்பது பிரமாணம். அதுபோல் கயிலாயத்து ஒரு சித்தராய், பின்பு திருமூலராய்த் தோன்றி அருளிச்செய்தவை சிந்திக்கத் தக்கன. அருவமாய் நிஷ்களராய் உள்ள சிவபெருமான் சகள உருவம் உடையவராய் இங்ஙனம் எழுந்தருளிவந்து வேதாகமங்களை அருளிச் செய்யாராயின், பதி பசு பாச இயல்புகளை அறிந்து பாசத்தை நீக்கும்பொருட்டுப் பரமேஸ்வரனை வழிபட்டுப் பாசம் நீங்கி, பதியை அடைந்து இன்ப வாழ்வு நுகர்வோரும் இலராம். ஆதலால் சிவபெருமானே குருவடிவாகி எழுந்தருளிவந்து நம்போல்வாரை நன்னெறிப்படுத்துவார். அங்ஙனம் தோன்றி வேதாகமங்களைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் அருளிச்செய்யவந்த குருபரரே திருமூலர். அவரது தெளிந்த பேரறிவும், அருளுணர்வும் புலப்பட்டவழியல்லாது அவரால் அருளிச்செய்யப்பட்ட நூலின் மாட்சியும், அதில் பிரவேசிக்க மனஎழுச்சியும் நமக்கு உண்டாகா. ஆதலின் அவரது திருவருள் உணர்வை சிந்தித்தல் நமது முதற்கடன். அவரது சிவானுபவ நிலையை நாம் அறிந்து உய்வதற்குச் சான்றாக உள்ளவை திருத்தொண்டத்தொகையும், நம்பியாண்டார்நம்பி திருவந்தாதியும், சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்த பெரியபுராணத்திலே திருமூல நாயனார் புராணமும் ஆகும்.

பெரியபுராணத்திலே இவருடைய வரலாறு கூறுமிடத்துச் சிதம்பர தரிசனத்திலே இவருக்கு விளைந்த சிவானுபவ நிகழ்ச்சியிலே வைத்து இவர்களுடைய இயல்புகள் சேக்கிழார் சுவாமிகளாலே நன்கு தெரிந்துணர்த்தப் பட்டன. சிவஞானிகள் எல்லோரையும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நாற்பாதங்களுள் வைத்து, சரியையிற் சரியை முதலியனவாக விவரித்து உணர்த்தப்படும், ஞானத்துச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நிலைகளில் நின்று நமக்குச் சிவபெருமானது அருள் நிலைகளைத் தெளிவு செய்வோர் சிவஞானிகள் ஆவார்கள். அங்ஙனம் திருமூல தேவரும் சிதம்பர தரிசனத்தில் ஞானயோக நெறியில் தலைப்பட்டுப் பரன் உணர்வாகிய ஞானபோதத்தைத் திருமந்திரமாக நமக்கு வழங்கினார் எனச் சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்கின்றார்கள். பசுபோதம் கழன்று அருட்போதத்தால் பரானந்த நடன தரிசனத்தைத் திருமூலர் கண்டு அந்த ஆனந்த நடனத்தினால் விளையும் பேரானந்தத்திலே திளைத்தார். அந்த நடன தரிசனத்தின் இயல்பு, சுந்தரர் சிதம்பரதரிசனம் செய்தபோது சேக்கிழார் சுவாமிகளால் 'ஐந்துபேரறிவும் கண்களே கொள்ள' என்ற திருப்பாடலில் நன்கு தெளிவுசெய்யப்பட்டுள்ளது.

அந்தத் தெளிவின் குறிப்புக்களை மனத்திலே பதித்துக்கொண்டால் திருமூலருடைய சிதம்பர தரிசனத்தின் தன்மையும், அதன் நன்மையாகிய அவரது பேருணர்வின் இயல்பும், அந்தப்பேருணர்வினை முழுதொருங்கு

பெற்ற திருமூலநாயனரின் சிறப்பும், அவரால் அருளிச்செய்யப்பட்ட திருமந்திரத்தின் சிறப்பும் நமக்கு நன்கு புலனுகும்,

'எவ்வுலகும் உய்யஎடுத் தருளியசே வடியாரைச்
செவ்வியஅன் புறவணங்கிச் சிந்தைகளி வரத்திளைத்து
வவ்வியமெய் யுணர்வின்கண் வருமானந் தக்கூத்தை
அவ்வியல்பிற் கும்பிட்டங் காராமை அமர்ந்திருந்தார்'

என்ற திருப்பாடலால் திருமூலரின் இயல்பு நன்கு தெளித்துணர்த்தப்பட்டது. எங்ஙனம் எனில் 'எவ்வுலகம் உய்ய எடுத்து அருளிய சேவடியார்' என்றதனுல் படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல் என்னும் ஐந்தொழில் நடன வாயிலாகவே நடராசப் பெருமான் இந்த உலகத்தை உய்யக் கொள்கிருர் என்பதும், அவரது ஆனந்த நடனத்தின் சிறந்த பயன் அனுக்கிரகம் என்பதும், அனுக்கிரகமாகிய அதுவே அருளல் என்பதும், அது பேரானந்தத்தை ஆன்மாக்களுக்கு ஊட்டுவது என்பதும் நன்கு புலப்படும். அவரை வணங்கும்போது நிஷ்களங்க பக்தியினுலே வணங்கவேண்டும் என்பது 'செவ்விய அன்புற' என்பதனுல் உணர்த்தப்பட்டது. அந்நெறியிலே திருமூலர் நடராசப்பெருமானை வணங்கினமையால் சிந்தை களிவரத் திளைத்தார். அங்ஙனம் முத்தி பெறுவாருக்கு அந்த ஆனந்தக் கூத்து, அவரது உயிர்ப்போத மாகிய பசு போதத்தினை விழுங்கி, அதன்மேல் விளங்கும் மெய்யுணர்வாகிய சிவபோத நிலையில் வெளிப்படும். சிவானந்தத்தைத் திருமூலருக்கு ஜனிப்பித்து, அந்த ஆனந்தத்தில் அவர் அமிழ்ந்து இன்புறும்படி அப்பெருமான் அருள் புரிந்தார் என்பது 'வவ்விய மெய்யுணர்வின்கண் வரும் ஆனந்தக் கூத்தை அவ்வியல்பில் கும்பிட்டு' என்பதால் உணர்த்தப்பட்டது.

அந்த ஆனந்தக்கூத்தை ஏனைய உலகவர் போல் கும்பிடாது பசுபோதம் முற்றும் நீங்கி, சிவபோதம் முற்றும் பெற்று, அவனருளால் அவன்தாள் வணங்கி நின்ருர் என்று கூறுவார் 'அவ்வியல்பில் கும்பிட்டு அங்கமர்ந்திருந்தார்' என்ருர். இதனுல் திருமூலதேவ நாயனுருடைய சிவானந்த அனுபவநிலை நன்கு புலனுகின்றது.

இந்தத் திருப்பாடலினுல் அனுதியே ஆணவாதி மலங்களிலிருந்து நீங்கிய சிவபெருமானது திருவருளால், அங்ஙனம் மல மாயா கன்மங்களிலிருந்து நீங்கிய சிவஞானிகள் இயல்பும் அவரால் அருளிச் செய்யப்பட்ட நூலின் சிறப்பும் நன்கு புலனுகின்றன,

ஆணவ மலத்தினுல் தடுக்கப்பட்ட அறிவு இச்சைகளை உடையவர்கள் ஆன்மாக்கள். அவற்ருல் தடுக்கப்படாத செயல்களை உடையவர் சிவபெருமான். ஆன்மாக்களின் அறிவைத் தடுத்து நிற்கும் பாசபந்தம் அனுதிகளுக்கே உடையவை. படைப்பாதி தொழில்களின் உட்பட்டுச் செல்லுகிற உயிர்களுக்குச் சிவபுண்ணிய முதிர்ச்சியினுலே, அந்தத் தடை, நீங்குவதற்குரிய பரிபாக காலம்வர, குருவின் அருளால் நீங்கப்பெறும். அங்ஙனம் அது நீங்கும்வரையில் உயிர்கள் கர்மானுபவத்தை அனுபவிக்கும்பொருட்டு மலத்தால் கட்டுண்ட உயிர்களுக்கு, மாயா மலத்தை இறைவன் கூட்டுவிப்பான். அதனுல் ஆன்மாக்களுக்குச் சிறிது அறிவு விளங்கப்பெறும், அந்த அறிவு ஒவ்வொன்ருகப் பார்த்து உணரும் இயல்பினதன்று. இங்ஙனம் அறியும் அறிவு ஏகதேச அறிவுக்காட்சி எனப்படும். இதுபற்றியே 'ஒவ்வொன்ருகப் பார்த்துணர்வார் உள்ளமே' என்று கூறப்பட்டுள்ளது.

நம் சிவபெருமான் ஆணவமல சம்பந்தம் இல்லாதவர், அதனுல் மாயா மலச் சம்பந்தத்தை வேண்டாதவர். ஞானமே பிழம்பானவர், அவர் எதனையும் ஒருசேர அறிவர். இது 'ஒன்ருகச் சிவனியல்பின் உணர்ந்திடுவன்' என்பதால் உணர்த்தப்பட்டிருக்கிறது. சிவபெருமானுடைய அருளால் அங்ஙனம் பேருணர்வுபெற்று, திருமந்திரத்தைத் திருமூலதேவ நாயனுர் அருளிச் செய்தார் என்பது இந்தப் பாட்டினுல் உணர்த்தப்பட்டதாகும், இனி அந்தத் திருமந்திரத்தில் உணர்த்தப்படும் பொருள் வேத சிவாகமங்களின் தாத்பர்யமேயாகும் என்ற அளவிலே சொல்லி அமைகின்றேன்.

ஐந்தாந் தந்திரம் : பொருள் : 'நால்வகைநெறி'

## வித்துவான் திரு. G. சுப்பிரமணிய பிள்ளை M. A., B. L., அவர்கள்

அண்ணுமலைநகர்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுடைய பொன்னர் திருவடிகளுக்குப் போற்றுதல் செய்து, இன்று இங்குத் தலைமை வகித்திருக்கும் தலைவர் அவர்கட்கும், பெரியோர்களுக்கும் என் தாழ்மையான வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அன்பர்களே! நான் இப்பொழுது இரண்டாவது நிகழ்ச்சி நிரலில் நடுவிலே குறிக்கப் பட்டுள்ள பொருளைப்பற்றிப் பேச முன்வந்திருக்கிறேன். எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்ற பொருளும் திருமந்திரத்தின் நடுவில் அமையப்பட்டது; ஒன்பது தந்திரங்களில் ஐந்தாவது தந்திரம். அதைப்பற்றிப் பேசும் படியாக ஆணை பிறந்துள்ளது, ஆகவே நான் நடுவில் வந்தவன். இதன் நடுவிலே நான் ஒன்று கூற விரும்புகிறேன். இன்று உலகிலே உள்ள உயிர்களுடைய நிலையைப் பார்த்தாலும் நடுவிலே இருக்கிறது. ஒரு பக்கம் அருள், மற்றொருபக்கம் மலமாயா கன்மங்கள். இடையில் உயிர் ஆணவத்தோடு அத்துவிதமாய் கிடக்கின்றது. இந்த உயிர் நடுவில் அகப்பட்டு ஆணவத்தோடு சம்பந்தப்பட்ட நிலை மாறி, சைவத்தோடு சம்பந்தப்பட்ட நிலை கூடினல் இன்பநிலை அடையமுடியும் என்று சமய நூல்கள் கூறுகின்றன. இந்த நிலையைக் கடந்து தெளிகின்றதற்குத் திருமந்திரத்திலே நடுத் தந்திரத்தில் துன்பத்தினின்றும் நீங்கி இன்பம் அடைவதற்கு வழி வகுத்துக் காட்டியுள்ளார், ஆகவே, முதலில் எது எது நிரம்ப முக்கியம் என்பதைத் தெரிந்துகொள்ளுதல் வேண்டும். அதற்கு வழிதெரியவேண்டும்.

முதலில், சிதம்பரத்திலிருந்து புறப்பட்டுத் திருவாவடுதுறைக்கு நாம் வரவேண்டுமானல் இப்படி இப்படியாக இந்த இந்த வழியிலே போகலாம்; போனல் அடையலாம் என்று வருகின்றோம். அதிலும் கைகாட்டி மரங்கள் உதவிகொண்டு வரும்போதே துன்பத்திற்கும் நாம் உள்ளாகிறோம். சுலபமாக ஒரு இடத்தை அடையவேண்டுமானல், அதற்கு முக்கியமாக வழிதெரியவேண்டுமல்லவா? அதுபோல,

ஆணவத்தினல் திசை தெரியாமல் இருக்கின்ற நிலைமாறி இன்பநிலை அடைவதற்கு ஒரு துணைவேண்டும். அதுவே ஞான நெறியாகும். ஆண்டவனை அடைவதற்கு நால்வகையான வழிகள் சைவ சித்தாந்தத்தில் வகுக்கப்பட்டிருக்கின்றன. ஒரு ஊருக்குப்போய்ச் சேருவதற்குப் பல நல்ல பாதைகள் உண்டு. ஆனல் அவ்வூர் சேருவதற்கு ஒரு குறுக்குப் பாதையும் இருக்கும். அம்மாதிரியாக இந்த நால்வகை நெறியை அடைவதற்கு நேரானவழிகள் பல இருக்கின்றன. ஆனல் மனிதன் எப்பொழுதும் குறுக்குப் பாதையை விரும்புகிருன், நேரான வழியிற் செல்லாமல் மற்றவழிகளில் சென்றல் அவை துன்பத்திற்கு ஆளாக்கும். அப்படியானல் நால்வகை நெறியை யடைய எது நல்ல வழி என்று கேட்கலாம்.

நால்வகை நெறியைப்பற்றித் திருமூலர் திருமந்திரத்தில் கூறியுள்ளார். அதாவது சுத்த சைவம், அசுத்தசைவம், மார்க்கசைவம், கடுஞ் சுத்தசைவம் என நால்வகைப்படும், அதற்கடுத்தாற்போல் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப்படும் நால்வகை நெறிகளைக் கூறுகின்றர். அதைத் தொடர்ந்து அவற்றின் பலனைச் சாலோக சாமீப சாரூப சாயுச்சியங்கள். இதன்வழியமைந்தன சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்ரமார்க்கம், தாசமார்க்கம். பின்னலே உட்சமயம் சிறந்தது. பின்னர் சத்திநிபாதம், மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கின் முதலாவதாகிய சரியை என்றல்

என்ன என்று கேட்டால் பலருக்குத் தெரியாது. இதைப்பற்றி நாம் ஆராய்வோம். இந்த உலகத்திலே மனிதப் பிறவி எடுத்ததன்பயன் நன்மையைச்செய்து முத்தி பெறுவதாகும். வள்ளுவர்பெருமான்,

> 'வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
> யாண்டும் இடும்பை இல'

என்ற குறளில் கூறுகின்றார்.

இவ்வாறு, பேறு அடைய என்ன வழி என்று பார்ப்போம். வெறும் சாத்திரங்களையும் சிவஞானபோத நூல்களையும் படித்துவிடுவதனால்மட்டும் கடவுளருளைப் பெற்றுவிட முடியாது. இவ்வளவையும் நான் கற்றுணர்ந்த பிறகு ஏன் எனக்கு அப்பேறு கிடைக்கவில்லை என்று கேட்கலாம். இது எப்படியென்றால் டாக்டர் ஒரு அவசரமான சிகிச்சை செய்வதற்கு வந்தால், ஒரு பை எடுத்துக்கொண்டு வருவார். அந்தப் பையினுள் சில மருந்துகள் வைத்திருப்பார், ஆனால் அவர் கொண்டு வரும் பையிலேயே எல்லாவிதமான வியாதிக்கும் மருந்து இருக்க முடியுமா? முடியாது, ஏதாவது வேண்டுமானால் மருத்துவச்சாலைக்கு வா என்று சொல்லிவிடுவார். அதுபோலவே சரியை என்பது திருவருளையடைய ஒரு முதற்படியாகும்,

தவம்தான் கடவுளை அடைவதற்குச் சிறந்த மார்க்கம். அதன் மூலமே யோகம் ஞானம் சித்திக்கிறது. அத்தவம்தான் சரியை. அதுவே கிரியை, யோகம், ஞானத்திற்கு வழி வகுக்கும். தவம் என்று சொன்னால் புண்ணியம் என்பது. புண்ணியம் செய்தால்தான் அருளைப் பெறமுடியும். புண்ணியம் என்ற தமிழ்ச்சொல் இருக்கிறதே அதற்குச் சரியான ஆங்கிலச்சொல் அகராதியிலே கிடையாது. பாவத்திற்குச் சுலபமாக Sin என்ற வார்த்தை இருக்கிறது. Righteousness, virtue என்ற வார்த்தைகளைத்தான் ஆங்கிலத்தில் கூறுகின்றனர். இது நேரானவார்த்தையன்று. ஆகவே, எவ்வளவு பெரும் புண்ணியம் செய்தது நம் தமிழ்மொழி. ஒரு கைப்பிடியளவு சோறு போட்டாலும் புண்ணியம் வருகிறது. புண்ணியம் செய்யாமல் வாழ்கின்றவன் எவனும் இல்லை, எல்லோரும் புண்ணியம் செய்தால் திருவருளைப் பெறலாம் எனக் கூறப்பட்டுள்ளது. அப்படிப் பார்க்கும்போது ஒருவன் செய்துள்ள புண்ணியத்தை எல்லாம் ஒன்று சேர்த்துப் பார்த்தாலும் அவன் செய்த பாவத்தின் அளவே அதிகமாக இருக்கிறது. இதற்கு ஆணவமே காரணம் என்று கண்டு பிடித்தது சைவசித்தாந்தம். உயிர்களிடத்தில் அன்புடன் இருந்தால் ஆண்டவன் அருள்கிடைப்பதோடு சிவலோகமும் நிச்சயம் கிடைக்கும், அப்படிப் பார்த்தாலும் புண்ணியம் செய்தோர் இல்லை. பெற்ற பிள்ளையைத் தந்தை அறைகூவி அழைப்பதுபோல் மறந்தும் யாராவது புண்ணியம் செய்து தன்னை வந்தடைய மாட்டார்களா என்று ஆண்டவன் அழைக்கப் பார்க்கிறான். 'மறந்தும் திருவடிகளை நாட மாட்டான்' எனத் திருநாவுக்கரசர் கூறுவதும்,

> 'அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
> புறங்கூறான் என்றல் இனிது'

என்ற திருவள்ளுவர் குறளும் பொருத்தமாக இருக்கின்றது. இப்பேர்ப்பட்டவர்களையும் தடுத்து ஆட்கொள்ள வேண்டும் என்பது எம்பிரான் ஆசை. ஒரு சிறு உதாரணம். நற்சாந்துப்பட்டியிலுள்ள ஒருவன் திருப்பூந்துருத்தியில் பெண் எடுக்கிறான்; அவனை அவன் ஊரார் 'நீ எங்கே போகிறாய்?' என்று கேட்கும்போது, 'திருப்பூந்துருத்திக்கு நான் போகிறேன்' என்று சொல்கிறான். அப்படி ஆண்டவனுக்கு விருப்பமான ஊரின் பெயரைச் சொல்பவனையும் ஆண்டவன் 'அவன் நம்முடைய அடியான்; அவன் புண்ணியம் செய்தான்' என்று எழுதிக்கொள்வாராம். "எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே" எனக் கூறுகிறார் அப்பர். காரணம் அது அவருக்கு உகந்த ஸ்தலமாம். பெயரைச் சொன்னாலே பிறவிநோய் தீருமாம்: ஆகவே சிவபுண்ணியம் பலதிறப்பட்டது. பசுக்கள் பல நிறமுடையதாக இருந்தாலும் அவற்றினின்று கிடைக்கும் பால் எப்படி வெண்மை

யாகவே கிடைக்கிறதோ, அதுபோல் செய்யும் புண்ணியம் பலவிதமாக இருந்தாலும் கிடைக்கும் பலன் ஒன்றேதான்.

சைவனில்லை; ஒரு புலையன். பசுக்களைக் கொன்றே வாழ்க்கை நடத்துபவன், ஒரு நாள் ஒரு பசுவைக் கொல்லுவதற்காக அதை விரட்டிக்கொண்டே சென்றான். பசுவானது பயந்து ஒரு சிவன்கோயிலினருகே சென்று அக்கோயிலைச் சுற்றிச் சுற்றி வந்தது. அவனும் அக்கோயிலைச் சுற்றுகிறோம் என்றெண்ணாது பசுவைப் பிடிக்கவேண்டுமென்ற ஒரேநோக்கத்தோடு அப்பசுவுடன் அக்கோயிலைச்சுற்றி வந்தான். அது ஒரு பிரகாரமாக அமைந்துவிட்டது. அதனால் அவனுக்குப் புண்ணியம் கிடைத்தது எனச் சொல்லப்படுகிறது. இப்படித் திருவருள் பெறப் பல வழிகள் அமைந்திருக்கிறது.

திருவருள்பெறுவதற்கு நான்கு மார்க்கத்தை நான்கு எல்லையாக அமைத்தார்கள். சரியை முதற்படி; கிரியை இரண்டாம்படி; யோகம் மூன்றாம்படி; ஞானம் நான்காம்படி. இந்நான்கையும் கடந்து கிடைப்பது முத்தி என்றும் கூறினர். அதாவது ஆண்டவன் திருவருள் கிடைக்கும் என்பதே. முதலாவதாகச் சொல்லப்படுகின்ற சரியை, தாசமார்க்கம் மூலமாகச் சித்திக்கும். அதாவது ஆண்டவனிடத்திலே அடியான் என்ற முறையிலே வழிபடுகின்ற முறை. பிறகு கிரியை; அதாவது சத்புத்திர மார்க்கமாகும். மகன் தந்தை முறைகொண்டு ஆண்டவனிடத்திலே வழிபடுவது. பின் யோகநெறி, அதாவது சகமார்க்கம். தோழனும் தோழனுமாக முறைகொண்டு வழிபடுகின்ற முறை. பிறகு ஞானமார்க்கம். ஞானமார்க்கத்திற்கு வழி சன்மார்க்கம். ஆனால் ஞானநெறி தொல்லை அதிகமுற்றது, இதிலே வெற்றி பெற்றால்தான் சன்மார்க்கம் சித்திக்கும். இதில் கிரியை முதற்படி, நான்கும் சோபானமாக அமைந்தன. நான்கும் சேர்ந்துதான் ஞான நெறியாகும். இதையே தாயுமானவர் கூறுகிறார்;

> 'விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
> அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே.'

பழம் சாப்பிடவேண்டுமென்ற எண்ணம் இருக்குமானால் சரியாகக் கனிந்த பழத்தையே சாப்பிடமுடியும். அரும்பு, மலர், காய், கனி ஆகிய பலபருவங்களுக்குப் பிறகுதான் நமக்கு உண்ணுவதற்கு உகந்த கனியாகப் பழுக்கிறது, ஆகவே அதற்கும் நான்கு பருவங்கள் இருப்பதைக் காணலாம். சரியை அரும்பு போன்றது; கிரியை மலர்போன்றது; யோகம் காய்போன்றது; ஞானம் கனிந்த பழத்தைப் போன்றது. ஆகவே இப்படிகளைக் கடந்து இவ்வழிகளை யெல்லாம் அடையும் விதம் திருமூலரது திருமந்திரத்தில் வெகு அழகாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இந்த ஐந்தாவது தந்திரத்தை வெகு நுட்பமாக ஆராய்ந்த போதிலும் பலவற்றிற்குப் பொருள் புரியவில்லை. பெரியோர்களுக்கே பல பாடலின் பொருள் விளங்கவில்லை என்றால் எனக்குத் தெரியாததில் குறையில்லை. அதில் நான் சற்று ஆறுதல் அடைவேன். ஆனால் அதை நினைத்து மகிழ்வதற்கல்ல. காலமே நிரம்ப மாறிக் கொண்டு வருகிறது, ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னிருந்த அறிவுநிலை ஐம்பது ஆண்டுகளுக்குப் பின் குறைந்திருக்கின்றது என்றுதான் சொல்லவேண்டும், இன்னும் ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு என்னநிலை ஏற்படுமோ என்பதை நினைக்கும்போது மிக வருத்தமாக இருக்கிறது. ஆகவே இந்த நிலையில் குருமகா சந்நிதானம் போன்றவர்கள் ஸ்ரீ சிவாசாரியார், ஸ்ரீ ஆறுமுக நாவலர் போன்றவர்களைக் கொண்டு திருமந்திரத்திற்குக் கூடுமானவரையில் கிடைக்கக்கூடிய கருவிகளைப் பயன்படுத்தி, ஒரு பாஷ்யம் எழுதி யமைத்தால் அது பெரிதும் உதவியாக இருக்கும். அப்படிச் செய்தால் ஐம்பது ஆண்டுகளுக்குப் பின் திருமந்திரம் என்று ஒன்று இருக்கிறது என்பதை நிலைக்கச் செய்யமுடியும். இல்லையேல் மக்கள் திருமந்திரம் என்ற ஒன்று இருக்கிறதா என்று கேட்கக்கூடிய நிலைக்கு வந்தாலும் வந்துவிடுவார்கள். அப்படி இந்த நூல் விரிவாக எழுதப்பெறுமாயின் அதனால்

நமக்கு ஒன்பான் சுவையும் கிடைத்ததற்கு ஒப்பாகும்.

உதாரணமாக ஒன்று சொல்லுகின்றேன். சிலப்பதிகாரத்தை இன்று நாத்திகர்களும் விரும்பிக் கேட்கின்றார்கள். காரணம் என்ன வென்று கேட்டால், முதலிலே அதனில் பிள்ளையார் வழிபாடு இல்லை என்பதாகும்; இயற்கையைத்தான் அவர் குறிப்பிட்டிருக் கிறார்; அதாவது 'திங்களைப் போற்றுதும்' என்று. ஆகையால்தான் நாங்கள் அதை வரவேற்கிறோம் என்று சொல்லுகின்றார்கள். அதற்கு நான் கேட்டேன்; இறுதிவரையில் படித்தீர்களா என்று. அதற்குச் சொன்னார் கள்; படித்தேன் அதில் ஒருவரிகூட இறை வணக்கமாக இல்லையே என்று. கேட்டவுடன் 'முழுவதும் படித்திருக்கின்றீர்களா? நூலின் இறுதிக்காதையில் வருகின்ற தெய்வம் தெளி மின் என்ற சொற்றொடரை எண்ணிப்பாருங் கள்' என்றேன். குறளிலும் கீழ்வருமாறு சொல்லுகின்றார்.

'கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்'

ஆகவே, எதையும் கண்டு, கேட்டு, சிந்தித்துத் தெளிவதே ஞானமார்க்கம் என்று சைவ சித்தாந்தம் கூறுகிறது. ஆனால் திருமூலர்,

சிவமல்ல தில்லை யறையோ சிவமாந்
தவமல்ல தில்லை தலைப்படு வார்க்கிங்கு
அவமல்ல தில்லை அறுசம யங்கள்
தவம்வல்ல நந்திதாள் சார்ந்துய்ய நீரே

என்கிறார். சைவசமயம் என்பது சிவமல்லாத வேறு எதுவும் இல்லை என்று கூறுகின்றார்.

ஆறு சமயமும் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் பயனில்லை
தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்
மாறுதல் அன்றி மனைபுக லாமே

என்று ஆறு சமயங்களைக் கூறி, அவற்றிற் கெல்லாம் முதற்பொருள் சிவனே என்று கூறுகின்றார். அவனைத் தொழுதாலே வீடு பெறலாம் என்றும் கூறுகின்றார்.

சரியை என்பது என்னவென்று கேட் டால்தான் எல்லோருக்கும் சங்கடம் வந்து விடுகிறது. இந்த நால்வகை நெறிகளிலும் தீக்ஷை பெறாமல் செய்கின்ற பணிகளுக்குப் பலன் குறைவு. சமயதீக்ஷை பெற்றுக் கடவுளை வழிபடுகிறதே மரபாக இருந்து வந்திருக்கின்றது. இதற்குச் சரியை என்று பெயர். கடவுள் அகண்டாகார நித்த வியாபகச் சச்சிதானந்தப் பரம்பொருள். அவனை வழி படுகின்றவர்களுக்கு இறைவன் ஸ்தூலம், சூக்ஷமம், அதிசூக்ஷமம் ஆகிய மூன்றுவித உருவத்திலே தோன்றி அருள்தருகின்றான். ஸ்தூலம் என்றால் வடிவம். அதாவது விக் கிரகத்தைவைத்துக் கடவுளாக நினைத்து வழி படுதல். இதுதான் சரியை. விசேட சமய தீக்ஷைபெற்று இறைவனுடைய வடிவத்தை அடைவதைக் கிரியை என்று சொல்லலாம். அடுத்தது பொது நிலை. ஆண்டவனை நிஷ்கள வடிவத்திலே வழிபடுதல் யோக நிலையாகும். இதற்கு ஸ்தூல வடிவத்தில் ஆண்டவனை வழிபட்டால் பயனில்லை. மனத்தால் எண்ணி இறைவனை வழிபடுதலே நடைமுறையில் ஞானமார்க்கத்தை அடையும்வழி.

சரியையின் பயனாக விளைவது இருவினை யொப்பு. கிரியையின் பயன் மலபரிபாகம். யோகத்தின் பயன் சத்திநிபாதம். ஞானத்தின் பயன் சத்குருதரிசனம், இதுபற்றிச் சைவசித் தாந்தம் படித்தவர்களும் கேட்டவர்களும் நன்கறிவர். இருவினையொப்பு என்பது உள் ளத்தைத் தராசுபோல் காண்பது. அதாவது ஒருவர் தவறு செய்துவிட்டால் அதற்குச் சமமாகப் புண்ணியம் செய்துவிடல். அப் புண்ணியம் எப்படிக் கிடைக்கிறதென்றால் பசித்தவர்க்குச் சோறு போடுதல். பசுவதை செய்யும் பாவத்திற்கு அசுவமேதயாகம் செய்தால் போதும். நன்மை தீமைகள் என்று நோக்கும் ஒரே மனப்பான்மை. விருப்பு வெறுப்பு இல்லாது பார்க்கின்ற ஒரு அறிவு நிலை. உயிர் தன்னைவிட்டு நீங்கி இறைவனடி சேர்வதற்கான வழியே மலபரிபாகமாகும். சத்திநிபாதம் என்பது சிவனுடையபாதம்

சத்தி நிபாதம்-சத்தியினுடைய வீழ்ச்சி என்று பொருள் கூறுகின்றனர். சத்குரு தரிசனம்-ஆண்டவனைக் காணும் நிலை. இதற்கு ஆசை அறவே ஒழிய வேண்டும். இந்த நிலை ஏற்படும்பொழுது உண்மையிலே ஒரு சத்தி ஏற்படுகின்றது. இதுவே யோகத்தினுடைய முதிர்ச்சியாகும். திருமூலர் விளக்குகிறார்:

பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போல உணர்ந்தறி வார்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே.

இதையே மணிவாசகரும் திருவாசகத்தில்,

'உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர்
எழுதரு நாற்றம்போல்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள்
அப்பொருள் பாராதே
பெற்ற வாபெற்ற பயனது நுகர்ந்திடும்
பித்தர்சொல் தெரியாமே
அத்தன் ஆண்டுதன் அடியரில் கூட்டிய
அதிசயம் கண்டாமே'

என்று பாடி இருக்கின்றார். கடவுள் எங்கே இருக்கிறார் என்று கேட்டால் அதற்கு அவர் "கண்ணால் யானும் கண்டேன் காண்க" என அருளிச் செய்கிறார். கடவுள் எப்படி இருக்கிறார்? ஸ்தூல உருவத்திலா? இல்லை.

ரோஜாப்பூ இருக்கிறது. அதன் நிறத்தை-வடிவத்தைக் கண்ணால் பார்க்கலாம்; ஆனால் மணத்தைக் கண்ணால் பார்க்க முடியுமா? பார்க்க முடியாது. அதுபோலத்தான் சீவனுக்குள்ளே சிவமணம் கமழ்வதும்.

இருட்டறை மூலை யிருந்த குமரி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி அவனை மணம்புரிந் தாளே.

பூவின் மணத்தை நுகர்ந்து அனுபவிப்பதுபோல், மறைந்திருக்கும் பரம்பொருளை அடைவதற்குக் குற்றம் நீங்கி குணம் காண வேண்டும். தேவாரத்தில் திருநாவுக்கரசர்,

'தன்னைச் சரணென்று தாளடைந்
தேன்றன் அடியடையப்
புன்னைப் பொழில்புக லூரண்ணல்
செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத்து என்வினை
கட்டறுத்து ஏழ்நரகத்து
என்னைக் கிடக்கவொட் டான்சிவ
லோகத் திருத்திடுமே'

என்று கூறுவதும் காணலாம்.

இவ்வாறாகப் பல்வேறான நூல்களில் கூறப்படுகின்ற கருத்துக்கள் திருமந்திரத்தில் நால்வகை நெறியாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது. ஆகவே இதை நாம் போற்றி வளர்க்க வேண்டுமென்று கூறிக்கொண்டு, இந்த நால்வகை நெறியினைக் கடைப்பிடித்தொழுகினால் இன்ப நிலையை அடையலாம் என்பதையும் தெரிவித்துக்கொண்டு அடியேனுக்கு இச்சந்தர்ப்பத்தை அளித்த ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுக்கு வணக்கம் கூறி முடிக்கின்றேன்.

நின்று தொழுவன் கிடந்தெம் பிரான்றன்னை
என்றும் தொழுவன் எழிற்பரஞ் சோதியைத்
துன்று மலர்தூவித் தொழுமின் தொழுந்தொறும்
சென்று வெளிப்படும் தேவர் பிரானே.

— *திருமந்திரம்.*

**ஆறுந் தந்திரம்:** பொருள்: **'சிவகுரு தரிசனம்'**

திருவாவடுதுறை ஆதீன வித்துவான், சித்தாந்த சைவமணி

## திரு. த. ச. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள்

இங்கே நம்முன் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுக்கும் சிவனடியார்களுக்கும், பெரியோர்களுக்கும், தலைவர் அவர்கட்கும் என் வணக்கம் உரியதாகுக.

திருமந்திரத்தின் தன்மை எப்படிப்பட்டதென்பதை நம்முடைய சிவாசாரிய சுவாமிகள் நன்கு விளக்கிக் கூறினுர்கள். திருமந்திரத்தை ஆராய்ச்சி செய்வதில் எவ்வளவு ஜாக்கிரதையாகக் கவனம் செலுத்தவேண்டுமென்பது அதிலிருந்து நன்ருகத் தெரிகிறது. அந்த அளவிலே எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் தலைப்பு இல்லை. எனக்கு ஆறும் தந்திரத்தில் 'சிவகுரு தரிசனம்' என்பது பற்றி விளக்கும்படி மகாசந்நிதானம் கட்டளையிட்டிருக்கிருர்கள். ஆகவே, எனக்குத் தெரிந்த அளவில் சிலவற்றை உங்கள்முன் சமர்ப்பிக்கின்றேன். பரம்பொருள் அனுக்கிரகம்பெற்று வந்தவர் திருமூலதேவர் என்று ஸ்ரீ சிவாசாரிய சுவாமிகள் சொன்னுர்கள், அது உண்மை. ஞானம் வரவேண்டுமானுல் பரம்பரைவழியே பெறுதல்வேண்டும். மெய்கண்ட நூலோ குரு அருளால் பெறத்தக்கது என்ற உண்மை சித்திக்கிறது. இதைத் திருமூலர் திருநந்திதேவரை வழிபடும்பொருட்டுச் சிந்திக்கின்ருர்.

> குருவே சிவமெனக் கூறினன் நந்தி
> குருவே சிவமென் பதுகுறித் தோரார்
> குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
> குருவே உரைஉணர் வற்றதோர் கோவே

என்பது திருமந்திரம். குரு வழியாக அருள் பெற்று ஒருவர் வரமுடியுமே தவிர வேறு எம்முறையாலும் உயர்ந்தவராய் வரமுடியாது என்பதைத் தெளிவாகக் கூறுகின்ருர். ஆனுல் நம்முடைய சமயநூலாகிய திருமந்திரத்திற்குச் சிறப்பாக உள்ளது என்னவென்ருல், இறைவனே குருவாக வந்து தன்னுட்டு மக்களுக்கு ஞானத்தை அளிப்பதாகும். இது வேறு எந்தச்சமயத்திற்கும் இல்லாததொன்று. நமக்கு சாஸ்திரத்திலே என்ன விதிக்கிறதோ அதை அப்படியே மடாலயங்களும் தேவாலயங்களும் செய்து வருகின்றன. இந்த இரண்டையுந்தான் நம்சமயத்திற்குத் தொடர்பாக வகுத்திருக்கின்ருர்கள்.

பெருமானே குருவாக இருந்தால் அந்த இடம் கயிலையாக இருக்கவேண்டும். இந்த விதத்திலே நம்முடைய சாஸ்திரம் இதற்கு இடம் தரவில்லை. நிஷ்களம், சகள இடமே கொடுக்கப்பட்டிருக்கிறது. சைவத்திற்கும், சாஸ்திரத்திற்கும், சமயத்திற்கும், செயலுக்கும் சம்பந்தமுடைய பல நூல்கள் உள்ளன. ஆனுல் இதுபற்றித் தெளிவு காண்பதற்கு எல்லா நூல்களும் பயன்படா. உயர்ந்த நூலை அறிவதற்கு உயர்ந்த குறிக்கோள் வேண்டும். இதைக் குருவேதான் அருள வேண்டும் என்பது முடியாது. ஆன்ம முயற்சியும் வேண்டும். மக்களுடைய நல்ல முயற்சி இருந்தால்தான் இவையெல்லாம் கைகூடும், இடைக்காலத்திலே திருவாவடுதுறை ஆதீனத்தார் எவ்வித பணியுமே செய்யவில்லையென்று கருதிவிட முடியாது. இந்த ஆதீனம் அருட்செல்வம் பெறுவதற்கான பணியை அதிகமாக மேற்கொண்டு நடத்திவருகிறது. மக்களுக்குத் தேவையான பணி என்ன என்பதைச் சம்பிரதாய முறையாகப் பார்த்துச் செய்யவேண்டும். அதற்குச் சூழ்நிலை நல்லதாக அமையவேண்டும். குறை கூறுவதினுல் ஒன்றும் பிரயோசனமில்லை.

ஆண்டவன் சத்தாய் விளங்குபவன். இங்கே இறைவன் ஆசாரிய வடிவத்திலே

வந்து நமக்கு அருள் செய்கின்றார் என்று திருமூலர் கூறுகின்றார். இதனை,

> சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய்
> தத்தனை நல்கருள் காணு அதிமூடர்
> பொய்த்தகு கண்ணுன் நமரென்பர் புண்ணியர்
> அத்தன் இவனென் றடிபணி வாரே

என்ற பாடலால் விளக்குகின்றார்.

புண்ணியம் உடையவர்களும், புண்ணியம் இல்லாதவர்களும் ஒன்றைத் தெரிந்து கொள்ளவேண்டும், ஆண்டவன் தவத்தில் மிக்கோரை உய்யக் கொள்கிறான். நம்மைப் போன்றே பிறரும் இருப்பார்களென்று நினைக்க முடியாது, தாய்செய்த தவத்தினுல் மகன் நல்ல பேற்றை அடையலாம். இப்பொழுது நம்முடைய குருமூர்த்தி இந்த பீடத்தில் எழுந்தருளுவதற்கு எண்ணந்தான் உண்டா? இல்லையே; பின்னர் எப்படி வந்தது? இதிலே தான் தெய்வத்தன்மை இருக்கிறது. இறைவன் அவர்களை உய்யக் கொள்கிறான். ஆன்மாக்களை ஆட்கொள்ளப் பலவிதங்களை அனுஷ்டிக்கின்றான். இந்த உண்மைக் கருத்தை நன்கு தெரிந்துகொண்டால் இன்றுள்ள விபரீத மனப்பான்மை நீங்கும்.

முன்னே தவம் செய்தார்க்குப் பின்னே தவம் என்று சேக்கிழார் சுவாமிகள் அருளிச் செய்தார்கள். முடிவிலா இன்பம் அடைவதற்கு அன்புவழி காட்டுகின்றார். தவம் இருந்தால்தான் புண்ணியம் கிடைக்கும். அதற்குத் தக்க சூழல்கள் அமையும். முன் செய்த தவமே ஒருவனுக்கு வேலிபோல் அமையும். இதைப்பற்றித் தகுதியில்லாதார் கூட்டுறவை ஒழித்தல் வேண்டும்; தக்காருடன் கூடுதல் வேண்டும்; ஆணவமலத்தை விடவேண்டும் என்று சொல்லுகின்றார். ஆணவமலம் ஒழிந்தால் துன்பம் நீங்கும், திருவருள் சித்திக்க வழியுண்டாகும் என்றும் கூறுகிறார். கண்டதைக் கொண்டு, காணுததைப் பற்றித் தெரிந்து கொள்ளல்வேண்டும் என்று எண்ணுகின்றோம். இதுவே உலக இயல்பு. ஆனுல் அதைக் கண்டு தெளியச் சிந்திப்பதற்கு வாய்ப்பு அளிப்பதேயில்லை.

சிவஞானம் மிகவும் போற்றுதற்குரியது என்றும், அந்த ஞானம் மூன்று உலகத்திற்கும் பயன்படுமென்றும் கூறப்படுகின்றது. அதனைப் பெறுவதற்கு எல்லோருமே முயல வேண்டும். ஆன்மாக்களுக்குப் பக்குவத்தை உண்டுபண்ணுவதற்கு இறைவன் என்ன செய்கின்றான் என்பதைத் திருமூலர்,

> பாசத்தைக் கூட்டியே கட்டிப் பறித்திட்டு
> நேசித்த காயம் விடுவித்து நேர்நேரே
> கூசற்ற முத்தியிற் கூட்டலா நாட்டத்த
> தாசற்ற சற்குரு அம்பல மாமே

என்ற பாடலால் விளக்குகின்றார். பராசக்தி வடிவாக அம்மையும், அருள்சக்தி வடிவாக அப்பனும் காட்சியளிக்கின்றனர். ஆன்மாக்களாகிய நம்மைப் பாசத்தோடு கூட்டுகிறார்கள். பிறகு அந்தப் பாசத்தையே வேரறச் செய்யவேண்டும் என்றும் சொல்லப்படுகின்றது. இதனைத் துருவித் துருவி ஆராய்ந்த நமது கவிராக்ஷஸ கச்சியப்பமுனிவர் என்ன சொல்கிறார் என்பதைக் கவனிப்போம்.

குருவாக வருவதற்கு ஆன்மாக்களுக்குத் தகுதியில்லை; இறைவனேதான் குருவாக வடிவம் எடுத்து நமக்கு அருளுகிறார் என்ற கருத்தை,

> குருவாய் அருளல் உயிர்க்கின்மை
>     யாரும் குறிக்கொடுய்ய
> அருவாய் அருவுரு வாய்உரு
>     வாய் அவை தானெனநற்
> பெருவான் பொருடன் பெரும்பெய
>     ரேபெய ராகவந்த
> ஒருவாய்மை தன்னை நினையினும்
>     உள்ளம் உருகுவதே.

என்ற பாடலால் விளக்குகின்றார். திருவருள் பெற என்னென்ன பாடுபடுகிறோம்; அதனுல் என்னென்ன இன்னல்களை அடைகின்றோம் என்பதையும் சொல்கின்றார்.

ஆணவம் அடக்கப்பட வேண்டுவது. அறியாமலேயே ஆணவம் வந்து விடுகிறது. அப்பொழுது நானே தலைவன் என்ற ஒரு கர்வம் ஏற்படுவதைக் கண்கூடாகக் காண் கிறோம். இன்பத்தை அனுபவிப்பதில் மகிழ்ச்சி யடைகிறோம். ஆனால் துன்பத்தைக் காதால் கேட்கவும் அஞ்சுகிறோம். இந்த உலகத்திலே பிறந்தவர்கள் எல்லாம் நல்ல புண்ணியஞ் செய்தவர்களே. நம் இந்திய நாடே புண்ணி யம் செய்த பூமிதான். அதிலே நம் தமிழ் நாட்டிலே தோன்றியவர்கள் மிக்க புண்ணியம் செய்தவர்கள். அதைவிடப் புண்ணியம் செய் தவர்கள் இத்திருவாவடுதுறையில் பிறப்பவர் கள் அடைகிறார்கள். எல்லாவற்றையும்விட இந்தத் திருவாவடுதுறைக்கு வந்து திரும்பிப் போகிறவர்களுக்குப் பெரும் புண்ணியம் கிடைக்கின்றது. பிறவி ஒழியவேண்டுமானால் கச்சியப்ப முனிவர் கூறுவதைச் சற்று ஆராய வேண்டும்.

காசினி மீது பிறந்தவர் தம்முளுங் காவிரிசூழ்ந்
தாசிறு நாட்டுற் பவித்தவர் தூய ரவர்களுள்ளும்
மாசறு பஞ்சாக் கரவன் வதியர சூரினுற்றோர்
தேசுறு தூய ரவருளுந் தூயர்சென் றேத்துநரே.

என்று ஆண்டவனை அடைகிற மேலான ஒரு நிலையை எடுத்து இப்பாடலால் விளக்கு கின்றார்.

வருவதும் போவது மாயுழல்
வீர்வம்மின் வந்தனிரேல்
தருநிதி சிந்தா மணிகாம
தேனுவும் தந்தருளும்
பொருவறு போக மெலாந்தரும்
போகமெ லாம்வெறுத்தால்
ஒருவரு முத்தியும் நல்கும்பஞ்
சாக்கர ஒள்ளொளியே.

என்ற இப்பாடலால் இம்மை மறுமைப் பிறவி கள் மாறி மாறி வந்துகொண்டே இருக்கும். ஆகவே பிறவியைத் தீர்ப்பதற்கு என்ன வழி இருக்கிறது என்பதனையும் விளக்குகின்றார். மற்றொரு இடத்தில்,

விக்குள் இருமல் முயலகன்
குட்டம்வெப் புப்பெருநோய்
தொக்கு வயிற்றுறு நோய்சூலை
நோயொடு சூழ்ந்தடினும்
நக்கு நலத்தகு பஞ்சாக்
கரவன் நளினபதம்
புக்கு விடினங்க ணெல்லாமின்
பாகப் பொலிதருமே.

என்ற பாடலால், உடம்பிலே பல நோய்கள் வந்தாலும், அவைகளையெல்லாம் தீர்த்து விடலாம். ஆனால் 'பிறவிப்பிணி போகாதிருக் கும்போது உடம்புப் பிணியைப்பற்றிக் கவலைப்பட இடமேது?' என்பதைக்கூறி, பிறவிப் பிணியைத் தடுக்க வழிகூறுகின்றார்.

தேசிக நாதன் சிவஞான
தேவன்செங் கைத்தலமுன்
வீசிநின் றாடிய அம்பல
வாணன் வியனுலகம்
பேசிய பஞ்சாக் கரவன்
பிறங்கருள் தாள்மலரைக்
கூசிநின் றேத்திய மாதவத்
தார்க்கென் குறையுளதே.

என்ற பாடலினால் குருமூர்த்திகளாகிய ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக சுவாமிகள் திருவடிகளைத் துதிக்கும் மாதவம் உடையவர்கட்கு குறை என்ன இருக்கப்போகிறது? ஒன்றுமே இருக் காது என்பதை எடுத்துக் காட்டுகின்றார் என்பதைமட்டும் சொல்லி இதோடு முடித்துக் கொண்டு அமைகின்றேன்.

**காலினில் ஊறும் கரும்பினிற் கட்டியும்**
**பாலினுள் நெய்யும் பழத்துள் இரதமும்**
**பூவினுள் நாற்றமும் போலுளன் எம்இறை**
**காவலன் எங்கும் கலந்துநின் றானே.**

— *திருமந்திரம்.*

# மூன்றாவது நாள் பேச்சு

**தலைமையுரை:**

சித்தாந்த சரபம், மகாமகோபாத்தியாய

**சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள்**

பழநி.

கருணையின் கடலாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கட்கும், மற்றுமுள்ள ஆன்றோர்களுக்கும் என்னுடைய வணக்கம் உரியதாகுக.

திருமந்திரத்திலே எடுத்த எடுப்பிலே பேசப்புகுவது என்பது அவ்வளவு எளிதானதன்று. கருணையே உருவாய் எழுந்தருளியுள்ள குருமகாசந்நிதானம் அவர்கள் நமக்கெல்லாம் இந்தப் பேற்றை அளித்துள்ளார்கள். இம்மாதிரித் தொடர்ந்து கேட்டு அனுபவிக்கத்தான் என்னைத் தலைமை வகிக்கப் பணித்துள்ளார்கள் எனத் தெரியவருகின்றது. இவ்விதமான மகாநாடுகளைக் கூட்டியது நம் சைவம் வளர்ந்தோங்குவதற்கே யாகும். மக்கள் அறிவுநிரம்பி நன்னெறியிற் செல்ல இது பெரிதும் உதவுகின்றது. அதோடு சைவ நெறியானது நூல்வாயிலாகவும், மொழி வாயிலாகவும் பெரிதும் பரப்பப்பட்டு வருகின்றது. மலமாகிய பாசத்தை அறுத்து, ஆண்டவனுடைய திருவருளைப் பெற்று எல்லோரும் உய்வோமாக.

மேலும், இந்த நிலையத்தை மற்ற நிலையங்களுக்கு ஒப்பிட்டுக் கூறல் தவறானதாகும், இது சைவத்தை நன்னெறியில் பரப்பப் பெரிதும் உதவுகின்றது. நாமும் இப்பணிகள் யாவற்றையும் வாழ்த்துவோம்; வணங்குவோம். இந்தத் திருப்பணி செய்துவரும் நம் குருமகாசந்நிதானம் அவர்களுக்கு நாம் நன்றி செலுத்தப் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம். இந்த நிலைமை - இந்த அமைப்பு மேலும் மேலும் உடையதாக இருக்குமானால் அது எவ்வளவு சிறந்ததாகும். நம்முடைய சமயம் ஸ்தூல உறுப்புள்ளதாக இருக்கிறது. இதற்கு அடிப்படை ஞானயோகமேயாகும். இதை அப்படியே பருகத் தலைப்படுவோமானால் அது நம்மால் முடியாததாகும்.

ஒன்றை ஆராயப்புகுமுன் அதுபற்றிக் கேள்விமேல் கேள்வி கேட்டு, அக்கருத்தைப் புலப்படுத்துவதற்கு உபமான உபமேயத்தை விளக்கி வேறுபாடுகளைக் காணுதல்வேண்டும், பெருங்கடலிலே ஒருவனைக்கொண்டு போய் விட்டு நீர் பருகு என்றால் அது இயலுமா? அப்படிப் பருகினால் அவனது தாகம் தீருமா? தீராது; தாகம் மிகும். அதுபோல ஞான சாஸ்திரத்தைத் தெளிவுபடுத்தி நன்னீரைப் பருகுதல்போல எல்லோரும் பருகுவோமாக.

திருமந்திரத்தில் உள்ள உண்மைக் கருத்துக்கள் நமக்கு எளிதிலே விளங்கவேண்டும் என்றால் அதற்கு நாம் பெரிதும் பாடுபடல் வேண்டும். அதற்குப் பெரிதும் செலவிட்டு அதில் ஓரளவே வெற்றிகண்டுள்ளோம். இது பற்றி வேறு யாராவது, இதில் நான் வெற்றி கண்டுவிடுவேன் கண்டுவிட்டேன் என்றெல்லாம் சொல்லுவதில் யாதும் பயனில்லை. இப் பயிற்சி எல்லோருக்கும் வரவேண்டும். இது படிப்பதினால்மட்டும் வாராது; அநுபவத்தில் இருக்கவேண்டும்.

இத்தகைய உண்மைகளை மக்களறிந்து ஒழுகவே ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் பல மாநாடுகளை நடத்திவருகின்றார்கள். இந்த நிகழ்ச்சிகள் நமக்குச் சிறந்த வழிகோலியாகும். இதனை நாம் மெய்ப்பற்றோடு செவிசாய்த்துப் பயன்பெறுதல் வேண்டும்.

பெரிய பெரிய நூல்களைப் படிப்பதினால் மட்டும் அறிவு வளர்ந்துவிடாது. சாதன அறிவு வேண்டும். அதாவது அவைகளை நடைமுறையில் அனுஷ்டிக்கவேண்டும். மேலும், சமயம் பரவ வேண்டுமானால் சாதனை அறிவினால்தான் அதிகமாகப் பரப்பமுடியும். அதை இந்த ஆதீனம் செய்து வந்திருக்கின்றது. மேலும் அந்நிலையைப் பாதுகாத்துக்கொண்டு வருகிறது. எதையும் மனவெழுச்சியோடு விட்டுவிடாமல், அதனைச் சாதனை வாயிலாகச் சிந்திக்க வேண்டும். அப்போது நம் ஆன்மா சிறந்து விளங்குவது உறுதியாகும்.

கடந்த இரண்டு நாட்களாக ஆறு தந்திரங்களைப்பற்றிப் பலஅறிஞர்கள் விளக்கி விரிவுரையாற்றக் கேட்டு மகிழ்ந்தீர்கள். இன்னும் மூன்று தந்திரங்களே பாக்கியுள்ளன. அவைகளை மூன்று அன்பர்கள் இன்று விளக்க இருக்கின்றார்கள். அவைகளை நாமெல்லாம் கேட்டு ஆனந்திப்போமாக.

ஒன்று கண்டீர் உலகுக்கொரு தெய்வமும்
ஒன்று கண்டீர் உலகுக்குயி ராவதும்
நன்று கண்டீர் இனி நமசிவா யப்பழம்
தின்று கண்டேற்கிது தித்தித்த வாறே.

— திருமந்திரம்

**ஏழாந் தந்திரம்:** பொருள் : **'ஆன்மாவும் இறைவனும்'**

திருவாவடுதுறை ஆதீன வித்துவான்

## ஸ்ரீ தே. ஆ. ஸ்ரீநிவாசாசாரியார் அவர்கள்

கடலூர்

ஸ்ரீ நமசிவாயமூர்த்தி மரபினில் தோன்றி இங்கு இன்று எழுந்தருளியிருக்கும் குருமகா சந்நிதானத்தின் உபய சரணுரவிந்தங்களேயும் அடியேன் வணங்குவதோடு, மற்றுமுள்ள முனிபுங்கவர்களேயும் வணங்குகின்றேன். மற்றும் ஆகமத்தின் வடிவாக எழுந்தருளியிருக்கும் தலைவர் அவர்களுடைய பாதகமலங்களேயும் நமஸ்கரிக்கின்றேன், எனக்கு இடப்பட்டுள்ள ஆணேயை நிறைவேற்ற முன்வருகிறேன். திருவருள் துணே செய்வதாகுக.

அடியேனுக்கு இடப்பட்டிருக்கின்ற ஆணேயைச் சொல்லுவதற்குக்கூட அருகதையற்றவன். காரணம் திருமந்திரமானது ஒரு பெரும் சாத்திரக்கடல். அதிலே எனக்கு ஏழாவது தந்திரம்பற்றிப் பேச ஆணேயிடப்பட்டுள்ளது. கடந்த இரண்டு நாளாக இச் சாத்திரக் கடலிலே மூழ்கி வந்திருக்கிறீர்கள். நாம் எதையெதை யெல்லாம் எண்ண வேண்டுமோ அவைகளேயெல்லாம் நினைக்கச் செய்து, எதை உண்மையில் அறியவேண்டுமோ அதை அறியச் செய்கிறது இந்தத் திருமந்திரம். இதையெல்லாம் நாம் மனனம் செய்து கொள்ளவேண்டும்; மந்திரத்தைத் தான் மனனம் செய்து கொள்ளுகிருேம். ஆகவேதான் இதற்கும் மந்திரம் என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. இந்தத் திருமந்திரம் என்னும் சொல் அறிவாற்றலைப் பெருக்கும் கருத்தோடு அமைந்திருப்பதைப் பார்க்கலாம். ஆகவே இதை மனத்தில் தியானம் செய்தால் அவலக் கடலாகிய துன்பத்தை எல்லாம் போக்கி, இன்பக் கரையிலேற்றி, இறைவன் திருவடிகளிலே சேர்க்கும். இந்நூலுக்கே இவ்வளவு பெருமை இருக்குமானல், இத்திருமந்திரங்கள் கூறுவதுபோல் வாழ்க்கையில் அனுஷ்டித்தால் பேரின்பப் பேற்றை அடையலாமல்லவா?

இந்தத் திருமந்திரத்தைத் தந்திரம் என்ற பெயர்களால் ஒன்பது பகுதிகளாகப் பிரித்துப் பாகுபடுத்தி வைத்திருக்கிருர்கள். ஒவ்வொரு தந்திரத்தையும் விரும்பிக் கற்போர் உள்ளம் களங்கமின்றி இன்பக் கடலை அடைவதற்கு வழி செய்யும். ஒவ்வொரு தந்திரத்திலும் பல தத்துவங்கள் நிறைந்திருக்கின்றன. நமக்கு வாழ்க்கையில் என்னென்ன உண்டோ அவற்றையெல்லாம் விளக்குகிறது. எனவே, தந்திரமென்ற சொல்லிற்குத் தன்னே அடைந்தவரைக் காக்கின்றது என்று பொருள் கொள்ளலாம். இன்று இதைத்தவிர வேறு நம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்குச் சிறந்த நூல் இல்லை என்றுகூடச் சொல்லலாம். உலகம் இன்று சென்றுகொண்டிருக்கும் வழியைப் பார்த்தால் நாம் எங்குச் செல்லவேண்டுமென்று நினேக்கிருேமோ அதைவிட்டு அதற்கு எதிரிடையான வழியிலேயே சென்றுகொண்டிருக்கிறது என்று சொல்லலாம். அதாவது அணுக்களை ஆராய்கின்ற அளவுக்கு மக்களுடைய அறிவு சென்றிருக்கிறது. இந்த ஆராய்ச்சி எங்குபோய் முடியும் என்பதனே ஆழ்ந்த அறிஞர்கள்கூடத் தெரிந்துகொள்ள முடியாத நிலேயில் இருக்கிருர்கள்.

ஒவ்வொரு அணுவும் ஒரு நிலேத்த இயங்குகோள். அதனைச் சுற்றிலும் பல கோள்கள் திரிந்துகொண்டிருப்பதாகக் கண்டுபிடித்திருக்கிருர்கள். அதுவரைக்கும் வந்துவிட்டு அதற்குமேல் ஆராயமுடியாதபோது, காரணம் என்னவென்பதைத் தெரிவிக்கமுடியாத நிலேயில் இருக்கிருர்கள். நிலேத்த அந்தக் கோளேச் சுற்றிப் பல இயங்குகோள்கள் சுற்றுவானேன். நிலேத்த ஒரு தன்மையில் இருக்கின்ற பொருளே மற்றக் கோள்கள் இழுத்துப் பிடித்துக் கொண்டிருக்கும் ஒரு ஆற்றல் இருக்கின்றது. அந்த ஆற்றல்தான் என்ன

என்பதைத் துருவித்துருவி, ஆராய்ச்சிசெய்து, பார்த்து, அதைக் காண்பது சிரமமாக இருக்கிறதென்பதை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். அந்த நிலையில்தான் நம்முடைய சமய நூல்கள் அதற்கு விடையளிக்கின்றன. அதுவே கடவுள் நிலை என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக் கடவுள்நிலைதான் இவ்வாறு புறத்தாலும் அகத்தாலும் தன்னைச் சூழ்ந்திருக்கின்ற எல்லா உயிர்களையும் இயக்கி வருகின்றது. இதனை விளக்குகின்ற பகுதியாகிய ஏழாந் தந்திரமே அடியேனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

ஏழாந் தந்திரம் என்று சொல்லும்போது அதிலே சிவயோகமே இடம் பெற்றிருக்கிறது. யோகம் என்பது தொடர்பு. ஆகவே சிவன் திருவடியில் ஆன்மாவை இணைப்பதற்கு ஒரு தொடர்பு ஏற்படுத்துவதையே கூறுகின்றது. ஆணவத்தினால் அடிமைப்பட்டிருக்கின்ற ஆன்மாவானது சிவயோக வாயிலாகச் சுலபமாக இன்பம் அடைவதற்கு வழி உண்டு. இப்படிப்பட்ட ஒரு நல்வழியை மக்களுக்கு எடுத்தியம்ப ஞானபரம்பரையில்வந்த நமது குருமகா சந்நிதானம் அவர்கள் இங்கு எழுந்தருளி, அன்பு மூலமாக அறிவிக்க, நம் முன் வீற்றிருக்கின்றார்கள். ஆகவே அத்துறையில் பயின்று, நின்று, தெரிந்துகொள்ளவேண்டும். ஏழாம் தந்திரத்தில் முப்பத்தொன்பது அதிகாரங்களில் நானூற்றுப்பதினெட்டு செய்யுள்கள் இருக்கின்றன. நேரமின்மையால் அவற்றில் ஒரு சிலவற்றை மட்டும் ஈண்டு விளக்குகின்றேன்.

இந்த ஏழாவது தந்திரத்தைச் சொல்லும்பொழுது ஏழாவது திருமுறையாகிய சுந்தரமூர்த்திசுவாமிகளது வரலாறு நம் நினைவுக்கு வருகிறது. ஆண்டவன் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு இடத்திலேதான் தன்னுடைய திருவிளையாடல்களை நிகழ்த்துகின்றான். சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு மணவாழ்க்கையிலேயே திருவிளையாடல் நிகழ்த்தியிருக்கிறான். அதனால் திருமணம் அவரைச் செல்வனாக்கிவிட்டது. இவ்வாறு ஆண்டவன் அவ்வப்போது தம் அடியவர்களைத் தடுத்தாட் கொள்ளுகின்றான் என்பதைக் காண்கின்றோம்.

மாபெரும் திருமந்திரம் பத்தாந் திருமுறையாக இருக்கிறது. இதனை இயற்றிய ஆசிரியர் திருமூலராவர். இவர் சிவானுபூதி பெற்றவர். ஆன்மா பந்தத்தோடு கூடி இருக்கின்றது; அந்தப் பந்தத்தை நீக்கமுடியாது. இதனை அவரது வாழ்க்கைவாயிலாகக் கருத இடமிருக்கிறது. அப்படியிருந்தும் பாசம் கழற்றத்தக்கதென்பதை அவரே விளக்குகின்றார். அவ்வாறு கழற்றிப் பாசத்தைக் கவரும் ஆன்மா அருள் பெறுவதாக இருப்பதைக்காணலாம். ஆன்மா பாசத்தை ஒழித்துக் கொள்வதற்குக் கடமைப்பட்டிருக்கிறது. தத்தம் ஆற்றலுக்கு ஏற்ப நடந்து தன்னையும் பிறரையும் பாதுகாத்துக் கொள்ளுதற்கும் கடமைப்பட்டிருக்கிறது. பாசம் நீங்குவதால் ஆன்மா சிவப்பேறடைவதைக் காணலாம். அடுத்தபடி அதன்மூலம் சரியை, கிரியை, யோகம் ஆகியவைகளைநீக்கி ஞானத்தை அடைய முடிகின்றது. இதனைச் சிவயோகம் என்றே பேசுகிறது. சிவயோகம் அடைவது எப்படி? யோகத்தால் சரியை இருக்கின்ற ஒரு அந்தம், யோகத்தால் யோகம் இருக்கின்ற ஒரு அந்தம். யோகத்தால் கிரியை இருக்கின்ற ஒரு அந்தம், யோகத்தால் ஞானம் இருக்கின்ற ஒரு அந்தம் ஆகிய இந்த நான்கு அனுஷ்டானங்களையும் பையக் கொண்டு வருகிறார். ஆன்மா சிவயோகத்தை அடைவதற்கு ஆரம்பத்திலே யோகத்தால் சரியையில் புகுந்து, பின் கிரியையிற் புகுந்து, பின்னர் யோகத்தில் புகுந்து, ஞானத்தை அடையவேண்டும். இந்த நான்கு சோபானங்களையும் யோகத்தின் வாயிலாகத் திருமூலர் ஆதாரத்தோடு விளக்கிக் காட்டியுள்ளார். இந்த ஆதாரங்களை ஆறு நிலையாகப் பிரித்து, ஆறு அதிகாரமாகவும், முதலில் அண்டலிங்கம் என்பதைச் சொல்லி ஏழாகச் சேர்த்திருக்கிறார், ஒவ்வொன்றையும் யோகத்தால் அமைத்திருக்கிறார். ஒவ்வொரு யோகத்திற்கும் கட்டுப்பாடு கொடுத்திருக்கின்றார். சாதாரணமானவர்கள்

இதைப் பயின்ருல் அவர்களுக்கு ஆபத்து ஏற்படலாம், சம்பிரதாயப்படி ஆராய்ந்து, அறிந்து பயிலுதல்வேண்டும். அப்படிப் பயில்கின்றவர்களுக்கே, சூரியன் கிளம்புவதற்கு முன் அதன் நெருப்பாகிய ஒளி கிளம்புவது போல் ஞானம் உதிக்கிறது. அதுவே ஆதித்த நிலே. இவ்வாறு படிப்படியாக, பையப் பையச் சென்ருல் சிவயோகத்தில் ஞானபாகமாகிய அகண்ட ஒளி சித்திக்கின்றது. ஞானபாகம் முற்றிஞல் சிவனருள் அதிலே தேங்கிக் கிடக்கும். இதையெல்லாம் இந்தத் தந்திரத்தில் கூறியிருக்கின்ருர். அதில் சில பகுதிகளேத் தான் இப்போது நான் குறிப்பிட்டுக்கொண்டு வருகிறேன். நம்மை எவ்வளவுதூரம் சிவனேப் பற்றி நினைக்கச் சொல்லமுடியுமோ அவ்வளவு தூரம் சிந்தித்துச் சித்தம் சிவயோகநெறியை அடைய வழிசெய்திருக்கிருர்.

அடுத்ததாகத் திருமூலர்பெருமான், ஒவ்வொன்றையும் காலத்தால் பேசுகின்ருர். இதனே இத் தந்திரத்தில் முதல்பாடலிலேயே கூறுகின்ருர்:

> காலங்கண் டானடி காணலும் ஆமே.

பின் உள்ளவற்றைப் பார்க்கும் பொழுதும் நாட்கள் போன்ற கால அளவை நிரம்பச் சொல்லியிருக்கின்ருர். காலக் கடவுளாகிய ஆதித்தனும் இதில் இடம் பெற்றிருக்கிறது. இவ்வாறெல்லாம் காலத்தின் முக்கியத்வத்தை ஆன்மாக்கட்கு ஞாபகப்படுத்தும் முறையில்,

> தேர்ந்தறி யாமையின் சென்றன காலங்கள்
> பேர்ந்தறி வானெங்கள் பிஞ்ஞகன் எம்இறை
> ஆர்ந்தறி வாரறி வேதுணே யாமெனச்
> சார்ந்தறி வான்பெருந் தன்மைவல் லானே

என்ற பாடலால் விளக்குகின்ருர். இவ்வாறு காலத்தை ஞாபகப்படுத்தி, அதை வீணுக்காது சிவயோக நெறியைத் தேடிச் சென்று, இந்தப் பிணக்கப்பட்ட பிறப்பை அறுத்துக் கொள்ளவேண்டும் என்பதைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சொல்லிக்கொண்டு வருகிருர்.

அடுத்தபடியாக, திருமூலர் பெருமான் உலகத்திலே வாழ்க்கை நடத்துகின்ற ஆன்மகோடிகளேப் பார்க்கின்ருர். ஆன்மகோடிகளே ஒரு பூந்தோட்டத்திற்கு ஒப்பிடுகின்ருர். அதில் வசிக்கும் மக்களேக் கறுத்த வண்டுகளுக்கு ஒப்பிடுகிருர். கறுத்த வண்டுகளேப் போல மக்கள் ஆணவத்திலே மூடப்பட்டிருக்கின்ருர்கள் என்பதைக் காண்கின்ருர். அவ்வாறு காணுகின்ற காட்சியை உள்ளத்திலே கொண்டு வண்டுகளேப்போல் நீங்களும் வாழ்க்கையை நடத்தவேண்டாமா ? வண்டுகளேப்போல் ஆணவக்கறுப்பைப் பெற்றிருக்கிறீர்கள், குணத்தையும் பெறவேண்டாமா ? குணத்திற்குப் பதிலாக ஆணவத்தைப் பெற்றிருக்கலாமா? ஆகவே அதைவிட்டு வண்டுகள் போகும் வழியைக் கடைப்பிடித்துச் சிவயோக நெறியிலே ஒன்றிப்போக வேண்டும் என்று அறிவிக்கிருர். இந்த உவமை அமைந்த பாடற்பகுதி வருமாறு:-

> இருந்தேன் மலர்களேந் தின்புற வண்டு
> பெருந்தேன் இழைக்கின்ற பெற்றிமை ஓரார்.

இன்னும் நம்மக்கள் அறியாமை இருளில் இருக்கின்றனர். அதனே ஆராய்ந்து அவர்கள் அனேவரும் ஒரு முடிவிற்குத்தான் வருகிருர்கள். சித்தாந்தம், ஆகமம், மந்திரம், தந்திரம் ஆகியவை யெல்லாம் இவ்வொன்றைத்தான் சொல்லி வந்திருக்கின்றது. வண்டுகள் பல இடங்களிலே அலேகின்றன; அலேந்தாலும் சுவைக்கவேண்டிய இடத்தை நாடி அலேகின்றன; தேன் இருக்கும் இடத்தை நாடிச் செல்கின்றன. ஆனுல் வாழ்க்கையிலே இன்பத்திற்காகத் தேடி அலேயும் ஆன்மாக்கள், வண்டுகளேப்போல் இல்லாமல் ஆணவத்தால் அலேகின்றனரே என்று வருந்திக் கூறுகின்ருர். எப்போதும் பெரியவர்கள்தான் வருந்திச் சொல்வார்கள். ஆனுல் திருமூலரோ நம்மை ராஜாவாகவும், பெரிய மனிதராகவும் அல்லவா நினைத்துக்கொண்டு அறிவிக்கின்ருர். இதனே அடுத்த இரண்டு அடிகளாகிய,

> வருந்தேன் நுகராது வாய்புகு தேனே
> அருந்தேனே யாரும் அறியகி லாரே

என்பதால் காண்க. மலரிருக்கும் இடத்தை நாடி வண்டு செல்லுகின்றது. ஆனால் நாம் இருக்கும் இடத்திலேயல்லவா அருள்தேன் நிரம்பியிருக்கிறது. இதனையல்லவா நாம் உணர வேண்டும். வண்டு, மலரை நாடிச்சென்று உறிஞ்சி, அதன்மூலம் தேனை எடுக்கவேண்டும். ஆனால் நமக்கோ 'அருள் தேன்' வாயிலேயே வந்து கொட்டுகின்றது என்று கூறுகின்றார். இம்மாதிரியான தேன், கடையில் சென்று வாங்குவதற்கும் முடியாததாகும்; இதனை இன்னும் அறியாதிருக்கின்றார்களே என்று வருந்துகின்றார். இந்த அருள்தேன்வாயிலாகச் சிவானந்தத் தேனைச் சுலபமாக அடையலாம் என்பதை ஞாபகப்படுத்திப் போயிருக்கிறார். இந்த நோக்கத்தோடுதான் நமது குரு மகா சந்நிதானம் அவர்கள் கடந்த இரண்டு நாட்களாக அருள்தேனை அடைய நமக்கெல்லாம் உதவியிருக்கிறார்கள்.

அடுத்து ஒரு பாடலை எடுத்துக்கொள் வோம்:

> தரையுற்ற சத்தித னிலிங்கம் விண்ணுந்
> திரைபெறு நீரறு மஞ்சனச் சாலை
> வரைதவழ் மஞ்சுநீர் வானுடு மாலை
> கறையற்ற நந்திக் கலையுந்திக் காமே.

ஒருவனை உயர்ந்த மலைக்கு ஏற்றிக் கொண்டு போய்க் கீழே பார் என்று சொல்லுகிறார். கீழே பார்த்தால் தரைதான் தெரிகிறது. எவ்வளவு தூரந்தான் உயரச் சென்றாலும் கடைசியிலே உன்னை நிலைக்கச் செய்கின்ற இடம் தரைதான் என்பதை ஞாபகப்படுத்துகிறார். தரையில்லாது உனக்கு நிற்க முடியாதென்பதனைக் கூறி, உன்வாழ்க்கை செம்மைப்பட வேண்டுமானால் சிவபெருமானைத் தவிர வேறு யாருமில்லை என்பதை அறிவிக்கின்றார். அதுவே ஆன்மாவை நிலைத்திருக்கச் செய்யும். அப்படி ஒரு நிலைத்த இடத்தைமாத்திரம் பிடித்து விட்டால் போதுமா? ஆன்மாவுக்கு அறிவு வளர வேண்டுமே. இதனைத்தான் சிவாலயங்களும் மடாலயங்களும் செய்து கொண்டிருக்கின்றன. இதனை, நமக்கு ஒன்றாயும், வேறாயும் இருந்து செய்து கொண்டிருக்கின்றன.

அடுத்து, உள்ளமாகிய பெருங்கோயிலில் ஐம்புலன்களையும் கட்டுப்படுத்தி முத்தி யடைவதற்கான வழியை ஒரு பாடலால் விளக்குகின்றார்.

> உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
> வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
> தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
> கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே.

இப்பாடலில் நம் அகத்தை ஒருபெருங் கோயிலாகக் காட்டுகின்றார். நம் உடம்பை ஒரு கோயிலாகவும், வாயை அதற்குக் கோபுரமாகவும் ஒப்பிடுகின்றார். இந்நிலைகளிலெல்லாம் வெற்றி பெற்று, அறிவொளியினால் முற்றும் துறந்தவர்கட்கு முத்தி கிடைக்கும் என்கின்றார். அந்த முத்தியை உணர ஐந்து புலன்களையும் கட்டுப்படுத்த வேண்டும் என்று வலியுறுத்துகின்றார். இதனைக் கடைசி வரியாகிய 'கள்ளப் புலனைந்துங் காளா மணி விளக்கே' என்பதால் அறிவுறுத்துகின்றார். இந்த ஐம்புலன்களையும் ஒரு சிறு அளவுக்கு நாள்தோறும் விடாமல் கட்டுப்படுத்த முயற்சிக்கவேண்டும். அப்பொழுதுதான் ஒன்றாய், வேறாய், உடனாய் இருந்து அவனோடு கலக்க முடியும் என்பதை விளக்குகின்றார். இதனை ஆதார, மந்திர, மௌனம் ஆகிய நிலைகளிலே படிப்படியாக அடையலாம். இதுவே சைவ சமயத்தின் கருத்தாகக் கூறப்பட்டுள்ளது. திருமூலரும் இத்தந்திரத்தில் வலியுறுத்துகிறார். இதனையே நம் வாழ்க்கையில் பின்பற்றினால், எளிதில் அவனடி சேரலாம்.

அடியேனுக்குக் கொடுக்கப்பட்டுள்ள நேரம் குறுகியதாதலாலும், எனக்குப் பின்னர் இருவர் பேச இருப்பதாலும் இத்துடன் நிறுத்திக்கொண்டு, மகாசந்நிதானத்தின் திருவடிகளுக்கு இதைக் காணிக்கையாகச் சமர்ப்பித்து, குருமகா சந்நிதானத்திற்கும் இந்த ஞான பரம்பரைக்கும் அடியேன் பெரிதும் கடமைப்பட்டிருக்கின்றேன் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

எட்டாந் தந்திரம்: பொருள்: 'அவத்தைகள்'

திருவாவடுதுறை ஆதீன வித்துவான்

## திரு. வீர. சிவசுப்பிரமணியம் அவர்கள்

ஞானத்தின் பிழம்பாய் நின்று, அருளாட்சியே உருவாய் இருந்து, திருக்காட்சி தரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் பொன்னர் திருவடிகளுக்கும், தமிழகத்தில் மட்டுமல்லாமல் இலங்கையிலும் சென்று சைவசித்தாந்தத்தைப் பரப்பிவரும் சித்தாந்த மகாமகோபாத்தியாய சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்கள் திருவடிகளுக்கும், இங்கே கூடியிருக்கின்ற அடியார் பெருமக்களுக்கும் என்னுடைய வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்,

மேல்நாட்டார் புறப்பொருள் ஆராய்ச்சிகளைச் செய்து வருகின்ருர்கள். செய்ததில் ஓரளவு வெற்றிபெற்று உலகத்தை அச்சுறுத்தும் நிலைக்கு வந்திருக்கிருர்கள். ஆனல் நம் முன்ஞேர்கள் ஆண்டவனுடைய திருவருள் துணைகொண்டு, பல அரிய உண்மைகளைக் கண்டு உலகம் உய்யத் தெரிவித்திருக்கிருர்கள். டாக்டர் பென்னெட்டின் சிவஞானபோத மொழிபெயர்ப்பைக் கண்ட லண்டன் பேராசிரியர் ஒருவர்,

> "Science answers how of things; and the Religion answers the why of things and it is the Sivagnana-botham of Tamils, that answers both How and Why"

என்று கூறியுள்ளார். இப்போது திருமந்திரம் எட்டாம் தந்திரத்தில் அவத்தைகளைப்பற்றிய கருத்துக்களைப் படைக்க நிற்கிறேன்.

பரிமேலழகர், மெய்கண்டார் போன்ற பேராசிரியர்கள் கூறுபவைகள் விளங்கவில்லையே என்று பலர் தெரிவிக்கிருர்கள். ஆங்கிலம் கற்றவர்கள்கூட அவ்வாறு கூறுகிருர்கள். ஷேக்ஸ்பியரையோ, மில்டனையோ படிக்க எத்தனையோ ஆண்டுகள் முயற்சி செய்திருப்பர். மெய்கண்டார், பரிமேலழகர் போன்றவர்களை நாம் எளிதாகக் கருதுகிருேம். ரஸ்கின் என்ற பேராசிரியர்,

> "They are on the Olympic heights, we cannot expect them to condescend to our levels, but we must raise ourselves to their levels"

இவ்வாறு கூறுகின்ருர். அதாவது மெய்கண்டார், பரிமேலழகர், சிவஞானமுனிவர், திருமூலர் போன்ற பேராசிரியர்களை நம் நிலைக்கு வருமாறு எதிர்பார்க்கக்கூடாது; நம்மை அவர்கள் இருக்கும் நிலைக்கு உயர்த்திக் கொள்ள வேண்டும் என்பது.

இனி அவத்தைகள் கரணம் என்றும் காரியம் என்றும் இருவகைப்படும். கரண அவத்தை கேவலம், சகலம், சுத்தம் என மூன்று வகைப்படும். ஒரு மாணவன் பள்ளிக்கூடத்திற்கு வருவதற்கு முந்திய நிலை ஒன்று, பள்ளிக்கூடத்தில் பயிலுகின்ற நிலை ஒன்று, பள்ளிக்கூடம் விட்டு அறிவு விளக்கத்தோடு திகழ்கின்ற நிலை ஒன்று. அதேபோல ஆன்மா ஆணவமலத்தோடு அத்துவிதமாகி இருக்கும் நிலை கேவலாவத்தை. தனு, கரண, புவன போகங்களைப்பெற்று பிறப்பு, இறப்பு இவைகளில் உழலும் நிலை சகலாவத்தை. பிறப்பு இறப்பற்ற தாணுவிஞேடு அத்துவிதமாக இருக்கும் நிலை சுத்தாவத்தை.

இனி காரிய அவத்தையாவது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்

என ஐவகைப்படும். சாக்கிரம் அல்லது விழிப்பு நிலையில் 35 கருவிகள் தொழிற்படு கின்றன. அவையாவன; கர்மேந்திரியங்க ளாகிய வாய், கால், கை, எருவாய், கருவாய் ஆகிய ஐந்தும்; ஞானேந்திரியங்களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்தும்; இனி அவற்றின் தொழிற்பாடுகளாகிய 'பேசல், நடத்தல், கொடுத்தல், கழித்தல், இன்புறுதல் ஆகிய ஐந்தும்; உற்றறிதல், சுவைத்தறிதல், பார்த்தறிதல், முகர்ந்தறிதல், கேட்டறிதல் ஆகிய ஐந்தும்; வாயுக்கள் பத்தும்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அந்தக் கரணங்கள் நான்கும்; புருடன் ஒன்றும் ஆம்.

சொப்பனம் அல்லது கனவு நிலையில் மேலே குறிப்பவைகளில் ஞானேந்திரியங்கள் ஐந்தும் கர்மேந்திரியங்கள் ஐந்தும் வெளிப்பட மாட்டா. சுழுத்தி அல்லது யோகநிலையில் சித்தம், பிராணவாயு, புருடன் ஆகிய மூன்றும் தொழிற்படும். இங்கே சித்தமென்ருல் மனம் அல்ல. சித்தமென்ருல் முக்குணங்கள் வெளிப் படாமல் இருக்கும் நிலை. அது ஆன்ம தத்து வங்களுக்குத் தாயகமாக இருப்பது.

துரியம் அல்லது பேருறக்க நிலையில் பிராணவாயுவும், புருடனும் தொழிற்படும். துரியாதீதம் அல்லது உயிர்ப்பு அடங்கு நிலை யில் புருடன்மட்டும் தொழிற்படும். இதை விளக்கித் திருமூலர் கூறுகின்ற ஒரு பாசுரத் தைச் சொல்லுகிறேன்.

தன்னை அறிசுத்தன் தற்கே வலன்தானும்
பின்ன முறநின்ற பேத சகலனும்
மன்னிய சத்து அசத்துச் சதசத்துடன்
துன்னுவர் தத்தம் தொழிற்கு அளவாகவே.

1. தன்னை அறி சுத்தன்-மன்னிய சத்து- சுத்தாவத்தை நிலை.
2. தற்கேவலன் - அசத்து - கேவலா வத்தை நிலை.
3. பின்னமுற நின்ற பேதசகலன் - சத சத்து - சகலாவத்தை நிலை.

ஐயைந்து மத்திமை ஆனது சாக்கிரம்
கைகண்ட பன்னுன்கிற் கண்டங் கனவென்பர்
பொய்கண் டிலாத புருடனித யஞ்சுழுனை
மெய்கண் டவன்உந்தி ஆகும் துரியமே

சாக்கிரம் முப்பத்தைந்து நுதலினில் கனவு தன்னில்
ஆக்கிய இருபத்தைந்து களத்தினில் சுழுனை மூன்று
நீக்கிய இதயந் தன்னில் துரியத்தில் இரண்டுநாடி
நோக்கிய துரியாதீதம் நுவலின் மூலத்தில் ஒன்றே.'

உலகியலை நோக்கிச் செல்லுகின்றபோது கீழாலவத்தை எனப்பெறும். அவைகள் இறைவனை நோக்கி மாறுபடுகின்றபோது மத்தியாலவத்தை எனப்பெறும். இறை வனையே நோக்கிச் செல்லுகின்றபோது நின்மலாவத்தை யெனப்பெறும்.

கனவைப்பற்றி ஜெர்மன் நாட்டுப் பேராசிரியர் சீமன் பிராய்ட் விரிவான ஆராய்ச்சி செய்திருக்கிருர். ஆனுல் நம் முன்ஞேர்கள், ஆண்டவன் திருவருள் துணைகொண்டு செய்த ஆராய்ச்சியிலே, விஞ்ஞானம் காணுத பல அரிய உண்மைகளையெல்லாம் கண்டிருந்தார் கள். எங்கே விஞ்ஞானம் மண்டியிடுகிறதோ அங்கேதான் மனிதனது செயலைக் காணமுடியு மென்று விஞ்ஞான மேதை ஐன்ஸ்டின் போன்ற இமயமலைகள் கூறுகின்றன. சீமன் பிராய்ட் போன்றவர்கள் கனவு நிகழ்ச்சிகளை உண்மை நிகழ்ச்சிகள் அல்ல என்று கருத்துப் படக் கூறியிருக்கின்ருர்கள். ஆனுல் கனவு நிகழ்ச்சிகள் உண்மை நிகழ்ச்சிகளே. இந்த அவத்தைகளைப்பற்றிய அறிவினுல் நாம் நம் மைப்பற்றி நன்ருகத் தெரிந்துகொள்கிறேம். இந்த அறிவு தன்னை அறிந்து, தலைவனை அறிந்து, தலைவனை அடையும் வழியை எளிதில் காட்டு கின்றது.

இந்த அறிவு விளக்கத்தினுலே திருவருள் பெற்று நிலைபேறுடைய இன்பத்தை நுகர்வோ மாக. இதோடு இச்சந்தர்ப்பத்தை அளித்த ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுக்கு மீண்டும் வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

**ஒன்பதாந் தந்திரம்:** பொருள்; **'திருவைந்தெழுத்தும் திருக்கூத்தும்'**

கலைமகள் ஆசிரியர்,

## வித்துவான் திரு. கி. வா. ஜகந்நாதன் M. A., அவர்கள்

சென்னை

திருமந்திரம் எழுந்த இந்த அழகான தலத்தில், திருமந்திரத்தைப்பற்றி, பலபேர் சொற்பொழிவுகளைக் கடந்த இரண்டு நாட்களாக ஆற்றி வந்திருக்கிருர்கள். அவரவர்கள் தங்களுடைய விளக்கங்களைச் சொல்லியிருக்கிருர்கள். சென்ற ஆண்டு பேசியதுபோல இந்த ஆண்டும் பேசுவதற்கு எனக்கும் ஒரு வாய்ப்புக் கொடுத்த ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்கு என்னுடைய நன்றியறிவு கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்று நான் பேச இருப்பது, கடைசித் தந்திரத்தைப்பற்றி. கடைசித் தந்திரத்தில் உள்ள எல்லாச் செய்திகளையும் சுருங்கிய நேரத்தில் சொல்வது என்பது அரிது. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்பதுபோலச் சில செய்திகளைப் பற்றிமாத்திரம் இப்பொழுது சொல்ல நினைக்கிறேன்.

இந்த நூல் மந்திரம். இதன் உள்ளே ஒன்பது தந்திரங்கள் உண்டு. மந்திரம் என்பது வேதத்துக்கும், தந்திரம் என்பது ஆகமத்துக்கும் பெயர். திருமந்திரத்தில் வேதத்திலே சொல்லப்பெற்ற பொருள்களும், ஆகமத்தில் உள்ள பொருள்களும் செறிந்திருக்கின்றன. மந்திரம் என்ற சொல்லுக்கு வடமொழியில் ஒருவகையில் பொருள் சொல்லுவார்கள்; தமிழில் ஒருவகையில் பொருள் சொல்லுவார்கள். தன்னை மனத்தினுல் நினைப்பவர்களுக்குத் துன்பத்தை நீக்கி இன்பம் தருவது என்பது வடமொழியில் அதற்குக் கூறும் பொருள்.

வேதத்திலுள்ள மந்திரங்கள் எல்லாம் ரிஷிகளாலே இயற்றப்பெற்றன என்று மேல் நாட்டு ஆராய்ச்சியாளர் சொல்லுகின்றனர். இந்த நாட்டில் அப்படிக்கொள்வது வழக்கம் இல்லை. வேதம் அபௌருஷேயம் என்றும் அநாதிகாலமாக இருப்பதென்றும் நம்புகிருர்கள். ஆனுல் ஒவ்வொரு மந்திரத்துக்கும் ஒரு ரிஷியைச் சொல்லுவதுண்டு. அந்த ரிஷி அந்த மந்திரத்துக்கு ஆதிகர்த்தா அல்ல; அதாவது அந்த மந்திரத்தை இயற்றி உலகத்துக்குச் சொன்னவர் அல்ல. இறைவனுடைய திருவருளினுலே அந்த மந்திரத்தைத் தெரிந்து கொண்டு அதனை உலகத்திற்கு ஓதியவர் ஆதலின், அந்த மந்திரத்துக்கு அவரை ரிஷி என்று சொல்லுகிருேம். அவர்களை மந்திரத் திருஷ்டாக்கள் என்று சொல்லுவார்கள். திருஷ்டா என்ருல் கண்டவர் என்று பொருள்.

எங்கும் பரவியிருக்கின்ற நாதத்தின் வகையாகிய மந்திரங்கள் தகுதியுடைய பெரியோர்களுக்கு மாத்திரம் புலனுகின்றன. இறைவனுடைய அருளும் தம்முடைய தவ ஆற்றலும் சேர்ந்து அவர்களுக்கு அத்தகைய தகுதியை உண்டாக்குகின்றன. அந்த ஆற்றலை உடையவர்களே மந்திரங்களையெல்லாம் தெரிந்து கொண்டார்கள்; அறிந்தார்கள். மந்திரங்களைக் கண்டு அவற்றை உலகத்துக்குச் சொன்னமையினுல் அவர்களை மந்திரத் திருஷ்டாக்கள் என்று சொல்லுகிருேம். அவர்களே மந்திரத்தின் ரிஷியாகச் சொல்லப் பெறுவார்கள்.

தமிழில் உள்ள திருமந்திரம் என்பது திருமூலரால் இயற்றப்பெற்றது. வடமொழி மந்திரங்கள் ஒருவரால் இயற்றப்பெற்றவை அல்ல; கடவுளால் சொல்லப்பெற்றவை. திருமூலர் திருமந்திரமோ திருமூலராலே இயற்றப்பெற்றது. அந்த மந்திரத்துக்கும் இந்த மந்திரத்துக்கும் வேறுபாடு உண்டு. அந்த மந்திரங்களெல்லாம் நமக்குப் புலனுகாதவை. ஆனுல்

தமிழில் உள்ள திருமந்திரமோ நமக்கு விளங்கக்கூடிய வகையில் அமைந்திருக்கின்றது. சர்க்கரையும், மாவும், நெய்யுமாகிய பண்டங்கள் தனித்தனியே இருந்தால் அவற்றை ஒருவன் அப்படியே பயன்படுத்திக் கொள்ள முடியாது. அவற்றையெல்லாம் சேர்த்துப் பக்குவம் பண்ணிக்கொடுத்தால் அதனை உண்டுவிடலாம். அந்தமாதிரி, இறைவன் திருவருளிலே ஊறித் தவம் நிறைந்த பெருஞ் செல்வராக இருந்த திருமூலர், தம்முடைய தவ ஆற்றலாலே பல செய்திகளை அனுபவத்திலே உணர்ந்தார். வேத மந்திரங்களிலும் ஆகமங்களிலும் சொல்லப்பெற்ற அரிய பிழம்பையெல்லாம் அவர் தம் உள்ளத்திலே தேக்கிக் கொண்டார். அவற்றின் பயனாக அவர் தமிழுக்குத் தந்ததே திருமந்திரம் என்பது. ஆகவே, திருமந்திரம் என்பது புதியதாகத் திருமூலர் சொல்லியது என்று சொல்லக்கூடாது; பழங்கால முதல் வருவது என்றும் சொல்லக் கூடாது. பழங்காலமுதல் வருகின்ற வேதத்தையும் ஆகமத்தையும் நன்கு தேர்ந்து, அவற்றின் சாரங்களையெல்லாம் எடுத்து, திருவருட் பலத்தினாலும் தவ வலிமையினாலும் தமிழிலே திருமூலர் சொன்னார். அதுதான் திருமந்திரம் எனப்படுகிறது.

தமிழில் மந்திரம் உண்டா என்ற கேள்வி எழலாம். மிக மிகப் பழங்காலத்தில் தோன்றிய இலக்கண நூல் தொல்காப்பியம். அதில் தமிழ் நூல்களைப் பலவகையாகப் பகுத்து அவற்றின் இலக்கணங்களைத் தொல்காப்பியர் சொல்லுகிறார். அந்த வகைகளுக்குள்ளே மந்திரம் என்பது ஒன்று. அடிவரையறை இல்லாத நூல்களுள் மந்திரம் என்பதும் ஒன்று. தொல்காப்பியர் அதன் இலக்கணத்தைச் சொல்லுகிறார்:

'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப'

உள்ளத்தை நிறுத்தும் ஆற்றல் பெற்றுப் பொறி புலன்களை அடக்கும் ஆற்றலையுடைய, தவம் நிறைந்த பெரியோர்கள், ஆணைபோலச் சொன்ன - மறைந்திருக்கின்ற பொருள்களையுடைய மொழிகளெல்லாம் மந்திரம் என்று பெரியோர்களால் சொல்லப்பெறும் என்பது அதன்பொருள். ஒருவனைச் சாவவும், வாழவும் வைக்கின்ற ஆற்றல் அந்த வாக்குக்கு உண்டு. அத்தகைய மந்திரங்கள் தமிழில் இருந்தன என்று தெரிகின்றது. இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்புவது மரபு ஆதலின், தொல்காப்பியனார் சொன்ன இலக்கணத்தைக் கொண்டு, அதற்கு முன்னாலே பல மந்திரங்கள் தமிழில் இருந்தன என்று தெரிந்து கொள்ளலாம். இப்பொழுதுகூடச் சிலவகையான காரியங்களுக்குத் தமிழிலே மந்திரங்களுண்டு. காமாலைக்குரிய மந்திரம், பாம்புகடிக்குரிய மந்திரம் முதலியன தமிழிலும் இருக்கின்றன.

திருமந்திரம் இலக்கியத்துக்கு இலக்கியமாகவும், மந்திரத்துக்கு மந்திரமாகவும் விளங்குகின்றது. திருமந்திரம் ஒன்பதாவது தந்திரத்திலே பல செய்திகள் வருகின்றன. அவற்றுள் தலைமையாயவை திருவைந்தெழுத்தைப் பற்றிய செய்திகளும், இறைவனுடைய திருக்கூத்தைப்பற்றிய செய்திகளுமே ஆகும். இறைவனுடைய நடனங்களில் பலவகைகளைப்பற்றித் திருமூலர் இந்தத் தந்திரத்தில் பேசுகின்றார்.

மந்திரங்களிற் சிறந்தது பஞ்சாக்ஷரம். அதனால் உண்டாகும் பயன் பல. மந்திரங்கள் ஒலிக் குவியல்கள். அவற்றிலுள்ள சொற்களுக்கு நாம் அகராதியைக்கொண்டு பொருள் செய்ய முடியாது. அந்தச் சொல்லுக்குப் பொருள் இருந்தாலும், அந்தப் பொருளோடு நிற்றல் கூடாது. மந்திரங்களுக்கென்றே தனிப் பொருள் உண்டு. ஓசையமைப்பு, சொல்லின் அமைப்பு, பொருளில் உள்ள குறிப்புக்கள் ஆகிய எல்லாம் சேர்ந்து மந்திரத்துக்கு ஆற்றலை உண்டாக்குகின்றன. வேதத்தில் உள்ள மந்திரங்களுக்குத் தனி இலக்கணமே அமைத்திருக்கிறார்கள்.

ஒலியினால் பல காரியங்கள் நிகழும் என்பதை இப்பொழுது உள்ள விஞ்ஞான

ஆராய்ச்சிக்காரர்கள் நன்கு தெரிந்துகொண்டிருக்கிருர்கள். ஒரு வீட்டில் ஒரு குழந்தை பிறக்கிறது; அப்படிப் பிறந்ததை நாம் கண்ணுலே காணுவதில்லை; திடீரென்று அந்தக் குழந்தையின் அழுகை ஒலி காதில் படுகிறது. பட்டமாத்திரத்தில் அந்தக் குழந்தைக்குத் தகப்பன் உள்ளத்துள்ளே கிளுகிளுக்கிருன். குழந்தையின் அழுகையாகிய ஒலியைத்தான் அவன் கேட்டான். அவனுடைய உள்ளத்திலே தோன்றிய உவகையுணர்ச்சிக்கு அது காரணமாகின்றது. அதனுல் அவன் உடம்பு பூரிக்கின்ருன். இவையெல்லாம் அந்த ஒலியினுல் உண்டாகிய விளைவுகள். யாரோ இறந்துவிட்டதாகத் தந்தி வருகிறது. அந்தத் தந்தியில் என்ன இருக்கிறது ? சில சொற்கள். அதை ஒருவன் படிக்கிருன். அதைக் கேட்ட மாத்திரத்திலே தன்னுடைய ஆருயிர் நண்பன் ஒருவன் இறந்துவிட்டான் என்று, கேட்டவன் மூர்ச்சையடைந்துவிடுகிருன். வெறும் ஒலியைக் கேட்ட மாத்திரத்தில் அந்த விளைவு நிகழ்கிறது. உலகத்திலுள்ள இத்தகைய ஒலிகளுக்கு இப்படிப் பயன்கள் விளையுமானுல், இறைவனுடைய திருவருள்பெற்று அவனுடைய வாக்காகிய மந்திரங்களை வாங்கிக் கொண்ட ரிஷிகள் நமக்குத் தந்தவையான மிகச் சிறந்த ஒலிகளுக்கு உண்டாகும் பயன் மிகமிகப் பெரியது. அவற்றுக்குக் காரண காரியம் ஆராய்ந்துகொண்டிருக்க இயலாது.

சிருஷ்டி தொடங்கும்பொழுது முதலிலே தோன்றுகிற தத்துவம் நாததத்துவமாகும். உலகமே ஒலியிலிருந்துதான் தோன்றியது என்று சொல்லமுடியும். அந்த ஒலியைக் கண்ணுல் காணமுடியாது. எங்கும் பரந்திருக்கின்றவை ஒலி அணுக்கள் என்பதை இப்பொழுது ரேடியோ காட்டுகின்றது. பல ஆயிரம் மைல்களுக்கு அப்பாலே ஒருவன் ரேடியோவில் பாடுகிருன்; அவன் பாடுகிற ஒலி அணுக்களெல்லாம் சேர்ந்து பிரபஞ்சம் முழுவதும் வியாபித்திருக்கின்றன. ஆனுல் அதனை நாம் உணருவது இல்லை. அப்படி வியாபித்திருக்கின்ற ஒலியைத் தெரிந்து கொள்ள வேண்டுமானுல், அந்த ஒலியைப் பற்றிக்கொள்வதற்கு ஏற்ற ரேடியோப் பெட்டி நமக்கு வேண்டும். அது மாத்திரம் அன்று. அந்த ரேடியோப் பெட்டியில் அதற்குரிய அலை நீளத்தில் முடுக்கி வைத்துவிட்டால் அப்பொழுது ஆருயிரம் மைல்களுக்கு அப்பாலே உள்ள ரேடியோவில் பாடுகிற பாட்டோ, பேசுகிற பேச்சோ நமக்கு விளங்கும். அப்படியே இறைவனுடைய திருவாக்காகிய மந்திரங்கள் எங்கும் நிரம்பியிருந்தன. நாதத்தில் இருந்து பிறந்த அந்த ஒலிக்குவைகள் பிரபஞ்சம் முழுவதும் நிரம்பியிருந்தன. அதை ஏனையோர்கள் கேட்கமுடியாது. அவற்றை வாங்கிக் கொள்வதற்குரிய தவ ஆற்றலும் அருளாற்றலும் உடைய முனிவர்கள் அவற்றைக் கேட்டுத் தெரிந்துகொண்டார்கள். ரேடியோப் பெட்டி வைத்திருக்கிறவன், வீட்டிலே அவன் சரியாக முடுக்கிவிட்டானுல் அப்பொழுது கேட்கும் பாட்டை அருகில் இருக்கிறவர்களெல்லாம் கேட்கலாம். அதுமாதிரியே முனிவர்கள் கேட்ட மந்திரங்களை அவர்கள் சொல்ல, மற்றவர்கள் எல்லாம் கேட்டார்கள். அவற்றை முதலில் கேட்டவர்கள் முனிவர்கள்.

•

பஞ்சாக்ஷரத்தில் பலவகை உண்டு. அந்த மந்திரங்களை ஓதினுல் இம்மைப்பயனும் மறுமைப் பயனும் ஒருங்கே கிடைக்கும் என்று பெரியோர்கள் நம்பினுர்கள். மந்திரங்கள் எல்லாம் சிறந்த ஒலியின் கூட்டம். தவம் நிறைந்த பெரியோர்களெல்லாம் அந்த ஒலியின் கூட்டத்தினுல் இன்பத்தை அடைந்தார்கள். பஞ்சாக்ஷரம் இன்னது என்று நமக்குத் தெரியும்; திரு ஐந்தெழுத்து என்று தெரியும். அந்த எழுத்துக்களை உச்சரித்தும் எனக்குப் பயன் கிடைக்கவில்லையே என்று சிலர் நினைக்கலாம். வீட்டில் நல்ல பல்புகளெல்லாம் கொண்டுவந்து மாட்டியிருக்கிருேம். மிகவும் அதிக வெளிச்சத்தைத் தருகின்ற பல்புகள் என்று கடைக்காரன் சொன்னுன். அவற்றுக்கு உரிய விலையைக் கொடுத்து நாம் வாங்கி வந்து மாட்டியிருக்

கின்ருேம். பெரிய மாளிகை. பலவகையான மின்சார அமைப்புக்களையெல்லாம் வீட்டில் அமைத்திருக்கிருேம். ரேடியோ வைத்திருக் கின்ருேம்; விசிறிகள் வைத்திருக்கின்ருேம்; ரெப்ரிஜிரேட்டர் வைத்திருக்கிருேம். எல்லா வற்றினுலும் நாம் பயன் கொள்ள வேண்டு மானல் மின்சாரம் பாய வேண்டும். வெளி யிலே ஓடிக்கொண்டிருக்கின்ற மின்சாரக் கம்பியிலிருந்து நம் வீட்டுக்கு ஒரு கம்பியை இழுத்து அமைத்துக்கொண்டால்தான் நாம் வாங்கி வைத்திருக்கின்ற அத்தனை கருவி களும் பயன்படும். கருவிகளைப் பணம் கொடுத்து வாங்கி வைத்தால் மாத்திரம் போதாது; அந்தக் கருவிகளோடு மின்சாரம் இணையும்படியாக ஒரு காரியத்தைச் செய்ய வேண்டும். அப்படி இணைக்கின்ற கம்பி சிறியதாகத்தான் இருக்கும். அவ்வளவு பெரிய மின்சார ஓட்டத்திலிருந்து இவ்வளவு பெரிய மாளிகைக்கு மிக மிகப் பெரிய கம்பி வேண்டுமே என்று எண்ணக்கூடாது. மிகக் குறுகிய கம்பியினுலே மெல்லிய கம்பியினுலே தான் நாம் மின்சார ஓட்டத்தை இணைத்துக் கொள்கிருேம். அந்த இணைப்புத்தான் மிக மிகப் பயன்தருவது. திருவைந்தெழுத்து முதலிய மந்திரங்களெல்லாம் நமக்குக் கிடைத் தாலுங்கூட அந்த மந்திரங்களை ஓதுவதால் மாத்திரம் ஒருவன் பயன்பெற முடியாது. இறைவனுடைய திருவருள் மின்சார ஓட் டத்திலிருந்து, குரு என்ற ஒரு சிறு கம்பியை இணைத்துக் கொண்டால்தான் திருவைந் தெழுத்தின் பயன் நமக்குக் கிடைக்கும். அந்தக் கம்பி இல்லாவிட்டால் மின்சாரம் இருந்தும், நம்மிடத்தில் மின்சாரத்தைப் பயன்படுத்தும் கருவிகள் இருந்தும், நமக்கு ஒளியோ, ஒலியோ கிடைப்பதில்லை.

திருமந்திரத்தில் இதனைச் சொல்லுகிருர். குருவினுடைய திருவருளினுலேதான் இறைவ னுடைய திருவருள் கிடைக்கும். அஞ்செ ழுத்து நமக்கு நல்ல கருவியாகப் பயன்பட வேண்டுமானுல் குருவழியாக வந்த குணத்தில் நிற்க வேண்டும். குருவின் திருவருளுக்கு ஏற்றபடி பக்குவம் பெற்று, அதன்மூலமாகப் பஞ்சாக்ஷரத்தை உபதேசித்துக் கொண்டு, அதனை நாம் ஜபித்துச் சாதனைபண்ணினுல் அப்பொழுது அதனுல் வருகின்ற பயன் நன்கு கிடைக்கும்.

குருவழி ஆய குணங்களில் நின்று
கருவழி ஆய கணக்கை அறுக்க
வரும்வழி மாள மறுக்கவல் லார்கட்கு
அருள்வழி காட்டுவது அஞ்செழுத் தாமே.

என்பது பாடல். நாம் கருவழி ஆய கணக்கை இயற்றிக் கொண்டிருக்கிருேம். 'டெபிட் அக்கௌண்ட்' அதிகமாகிக்கொண்டு வரு கிறது; கடன் கணக்கு அதிகமாக இருக்கின் றது. அந்தக் கருவழி ஆய கணக்கை அறுப் பதற்கு அருள் வழியாகிய கணக்கு வேண்டும். அந்த அருள் வழிக் கணக்கைக் காட்டுவது அஞ்செழுத்து. அத்தகைய அஞ்செழுத்தைப் பெறுவதற்கு நாம் குருவழியாகிய குணங் களில் நிற்கவேண்டும்.

குருவினுடைய திருவருளைப் பெறுவ தற்கு எப்படியெல்லாம் நாம் தகுதிபெற வேண்டுமோ அத்தகைய தகுதி பெற்ருல்தான், குருவின் திருவருள் கிடைத்தபிறகு அஞ்செ ழுத்து நமக்கு அருள்வழி காட்டும். அந்த அருள்வழியின் தொடர்பினுலே இதுகாறும் நம்மிடத்திலே இருந்து துன்பத்தைத் தந்த கருவழிக் கணக்கு மாறிவிடும். அந்த மாற்றத் தினுல் வரும் பயனென்ன? இனி மீட்டும் மீட்டும் பிறந்துவரும் வழியானது மாண்டு விடும்.

மண்ணெண்ணெய் விளக்கு ஏற்றி வீடு முழுவதும் ஒரே கறுப்பாக இருக்கிறது; புகை அடர்ந்திருக்கிறது, அந்தக்கறுப்பைத் துடைத் துக்கொண்டே இருக்கிருேம். ஆனுல் மண் ணெண்ணெய் விளக்கை விடுவதில்லை. இப்படி இருந்தால் வீடு முழுவதும் கறுப்பாகத்தான் இருக்கும். எத்தனைகாலம் இந்த மண்ணெண் ணெய் விளக்கை வைத்துக்கொண்டு அழகான வீட்டைக் கறுப்பாக்குகிறது? என்று ஒருவர் நினைக்கிருர். மின்சார விளக்குப் போடுகிருர்.

மின்சார ஒட்டத்தினின்று இணைப்பையும் உண்டாக்கி வீடு முழுவதும் ஒரே ஒளிமயம் ஆக்குகின்ருர். அதற்குத் துணைசெய்வது மின்சாரம். தம்முடைய வீட்டிலே விளக்கு களையெல்லாம் அமைத்து மூல மின்சார ஒட்டத்திலிருந்து ஒரு கம்பியை நீட்டி இணைத்துக்கொள்கிருர்.

இதுகாறும் கருவழியாகும் கணக்கிலே சென்று நம்முடைய நெஞ்சம் முழுவதும் இருள் மண்டிக்கிடந்தது. அதை மாற்ற வேண்டுமானல் - அங்கே ஒளியைப் புகுத்த வேண்டுமானல், இறைவனுடைய திருவருள் மின்சார ஒட்டத்திலிருந்து குரு என்ற இணைக் கம்பியைக் கொண்டு, திருவைந்தெழுத்து என்கிற கருவிகளை யெல்லாம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அப்பொழுது ஒளிவீசும்; மிகப் படர்ந்து வீசும்.

குருவழி ஆய குணங்களில் நின்று
கருவழி ஆய கணக்கை அறுக்க
வரும்வழி மாள மறுக்கவல் லார்கட்கு
அருள்வழி காட்டுவது அஞ்செழுத் தாமே

இந்தத் திரு ஐந்தெழுத்து மிகப் பழைய தாகிய வேதத்துக்குள்ளே பழுத்திருப்பவை. வேதம் என்பது ஒரு பெரியமரம். அதனிடத் தில் பல பல சாகைகள் உண்டு. வேதங்களை யெல்லாம் நாம் படிக்கவில்லையே என்கிற வருத்தம் சிலருக்கு இருக்கலாம். அந்த வருத்தம் இருக்கவேண்டிய அவசியம் இல்லை. ஒரு மரத்தை நன்ருக வளர்க்கிருேம்; கப்பு விட்டுக் கிளைவிட்டு, மலர் குலுங்க அது நிற்கிறது. ஆனல் அதிலே பழம் பழுத்தால் தான் அதனல் பயன் உண்டு. நல்ல பழமரங் களை வைத்து வளர்ப்பது விறகுக்காக அல்ல. அதிலே உள்ள பழங்களை யெல்லாம் பயன் படுத்தவேண்டும் என்பதற்காக. ஒருவன் மரங்களை வளர்க்காமலும் பழத்தைப்பெறு கிருன். மரங்களை வளர்த்துப் பழம் பெற்ரு லும் சரி; விலைக்குப் பழத்தை வாங்கி உண் டாலும் சரி; இருவரும் பழத்தின் சுவையை நுகருகின்ருர்கள். அப்படியே, வேதங்களை யெல்லாம் ஓதிப் பஞ்சாக்ஷர ஜபம் பண்ணு கிறவர்களும் சரி; வேதங்களை ஓதாமலே பஞ்சாக்ஷர ஜபம் பண்ணுகிறவர்களும் சரி, இரண்டுபேரும் ஒரே பயனைப் பெறுகிருர்கள். நாம் வேதம் ஓதவில்லையே என்று யாரும் துயரடைய வேண்டாம். பஞ்சாக்ஷரத்தை ஜபித்தாலே வேதத்தினுடைய சாரத்தை உணர்ந்தவர்கள் ஆகிவிடுகிருேம்.

வேதங்கள் நான்கு. அந்த நான்கில் அதர்வணம், ஏனைய மூன்று வேதங்களில் உள்ள பகுதிகளின் தொகுப்பு. ஆதலால் வேதத்தை மூன்று என்று சொல்லுவார்கள்; ‘திரயீ’ என்ற வடமொழியில் அதற்கு ஒரு பெயர் வழங்கும். அந்த மூன்றில் நடுவில் இருப்பது யஜுர்வேதம். அந்த யஜுர்வேதத் தில் நடுவில் இருப்பது ருத்திரம். அந்த ருத்தி ரத்தின் நடுவில் பஞ்சாக்ஷர மந்திரம் இருக் கிறது. அதனல்தான்,

வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே

என்று திருஞானசம்பந்தப் பெருமான் திருவாய்மலர்ந்தருளினர்.

வேதங்களையெல்லாம் படித்தும் பஞ்சா க்ஷரத்தை ஜபிக்காவிட்டால் மரங்களையெல் லாம் வளர்த்தும் பழம் உண்ணுதவனுக்கு ஒப் பாவான். இங்கே எனக்கு ஒருகதை நினைவுக்கு வருகிறது. வெள்ளைக்காரன் ஒருவன் புதிய தாக இங்கே வந்தான். இந்தியாவிலுள்ள பழங் களெல்லாம் சுவையாக இருக்கும் என்று யாரோ சொன்னர்கள். தன்னுடைய குசினிக் காரனிடம் “இன்று பிற்பகல் சிற்றுண்டிக்கு நல்ல பழங்களாக வாங்கி வைத்துவை” என்று சொன்னன். அந்தக் குசினிக்காரன் வந்து மிகவும் சுவையுள்ள பலாச்சுளைகளைக் கொண்டுவந்து தட்டிலே வைத்திருந்தான். அதைப்பார்த்த வெள்ளைக்காரனுக்கு நாக்கில் தண்ணீர் ஊறியது. உடனே அதை வெட் டினன். உள்ளே இருக்கிற கொட்டையை எடுத்துத் தின்ருன் அது நாக்கைச் சுருட்டிக் கொண்டது. தூ தூ என்று துப்பினன். “இந்தியப்பழம் நன்ருக இருக்கின்றது என்று சொன்னது பொய்” என்று கத்தினன்.

அப்பொழுது குசினிக்காரன் உள்ளேயிருந்து வந்தான். "அடடா, என்ன காரியம் செய்தீர்கள்? வெளியில் இருக்கிறதையல்லவா சாப்பிடவேண்டும்?" என்று சொன்னான்.

மறுநாள் அந்தக் குசினிக்காரன் மாதுளம் பழத்தை வாங்கிக்கொண்டு வந்து வைத்தான். முதல் நாள் சொன்ன உபதேசத்தை நினைந்து வெள்ளைக்காரன் அதன் மேலே உள்ள தோலையெல்லாம் சாப்பிட்டான். அது ஒரே உவர்ப்பாக இருந்தது. தூ தூ என்று துப்பினான். அப்பொழுது குசினிக்காரனும் வந்தான். "அடடா, வெளியில் இருக்கிறதைச் சாப்பிடுகிறீர்களே; உள்ளேயிருப்பதையல்லவா சாப்பிடவேண்டும் என்று சொன்னான்.

"நேற்று ஒன்று சொன்னாய் இன்று ஒன்று சொல்லுகிறாய்; ஒரேமாதிரி பேசத் தெரியவில்லையே" என்று கடிந்து கொண்டான் வெள்ளைக்காரன். அவனுடைய அறிவைப்பற்றி நாம் இப்பொழுது ஆராய்ச்சி செய்ய வேண்டாம். பழம் பெற்றுங்கூட, பழத்தில் எதை உண்பது என்று தெரியாமல் இருந்தான் அவன். வேதங்களையெல்லாம் நன்கு தேர்ந்து ஆராய்ந்தவர்களும் வேதபாரகர்களும், பஞ்சாக்ஷர ஜபத்தைப் பண்ணவிட்டால் அவர்கள் வேதத்தைப் படித்ததனாலே ஆகும் பயனை யடைய மாட்டார்கள். வேதம் முழுவதும் படிக்காவிட்டாலும், பஞ்சாக்ஷர ஜபம் பண்ணினவர்கள் வேதத்தை உணர்ந்ததனால் ஆகின்ற பயனைப் பெற்றுவிடுகிறார்கள்.

திருமூலர் பஞ்சாக்ஷரத்தைப்பற்றிச் சொல்கின்றபோது "பழுத்தன ஐந்தும் பழமறையுள்ளே" என்று ஆரம்பிக்கின்றார். அது பழுத்த மரம்; மிக மிகப் பழையது; அநாதி காலமாக வளர்ந்து வருவது; இந்திய நாட்டுக்கு நிழல் தந்து நிற்பது; அந்த வேதமாகிய பெரிய கற்பக மரத்தில் ஐந்து எழுத்துக்களாகிய பழங்கள் பழுத்தன; பழுத்தன என்று பன்மையினாலே சொல்லுகிறார். ஒவ்வோர் எழுத்துக்கும் பலவகையான பொருள்கள் இருப்பதினாலே, இந்த ஐந்து எழுத்தும் ஐந்து மொழிகளுக்குச் சமானம், அதனால்தான் பழுத்தன என்று பன்மையிலே பேசுகிறார் திருமூலர்.

ஐந்து எழுத்துக்களும் பழுத்துக் கனிந்து சுவைபெற்று நிற்கின்றன. ஆனால் அவற்றை உண்டு, பயன் பெறுவோர்கள்தாம் மிகக் குறைவு. அவற்றை உண்டவர்கள் என்ன பயனை அடைவார்கள்?

விழித்துஅங்கு உறங்கும் வினைஅறி வாரில்லை

என்று திருமூலர் பேசுகிறார். விழித்து உறங்கும் இன்பம் அந்த ஐந்து பழங்களை உண்டவர்களுக்குக் கிடைக்குமாம். விழித்து உறங்குவதாவது, கண் திறந்திருக்கும்பொழுதே குருடாக இருப்பது. அப்படியென்றால் தெளிவாகத் தெரியவில்லையல்லவா?

நாம் மிகவும் சுவாரசியமாக ஒரு நாவலைப் படித்துக்கொண்டிருக்கிறோம். நம்முடைய கண்கள் திறந்தே இருக்கின்றன. காதுகளும் திறந்துதான் இருக்கின்றன. அருகிலே ஒருவர் போகிறார். பலகாலமாகப் பழக்கம் உள்ளவர் தாம், அடையாளம் தெரியாதவர் அல்ல. ஆனால் அவர் போவதை நம் கண் பார்க்கிறதோ? இல்லையோ? தெரியாது. நம் கண் முன்னாலேயே போகிறார்; பேசிக்கொண்டும் போகிறார். ஆனால் அவருடைய உருவம் நம் கண்ணில் படுவதில்லை. காதிலும் அவருடைய பேச்சு விழுவதில்லை. காரணம் நம்முடைய மனம் வேறொன்றில் பதிந்திருப்பதே. கண்களும் காதுகளும் கண்டும் கேட்டும், குருடாகவும் செவிடாகவும் போகின்றன. உலகியலிலே ஏதேனும் ஒன்றில் உள்ளத்தைப் பதித்திருந்தால் திறந்திருக்கும் கண்களிலே காட்சி தெரிவதில்லை; திறந்திருக்கும் காதுகளிலே ஒலி படுவதில்லை.

எப்பொழுதும் ஆண்டவனுடைய திருவருளிலே ஊறி இறைவனுடைய காட்சியையே கண்டிருக்கின்ற பெரியோர்களுக்கு, உலகியலில் தோற்றுகின்ற தோற்றங்களே

தோன்ரு. அவர்கள் கண் விழித்தும் பார்ப் பார்கள், ஆனால் நாம் பார்க்கின்ற பார்வை அவர்களுக்கு இராது. நாம் பார்க்கிற பார்வை யில் இது இன்ன; இன்ன நிறமுடையது; இது பெரிது; சிறிது; இவன் பெரியவன்; இவன் தாழ்ந்தவன் என்ற பேத உணர்வுண்டாகும், இறைவனுடைய திருவருளால் ஞானம் பெற் றவர்களுக்கு இந்தப் பேதம் இருப்பதில்லை. எங்கே பார்த்தாலும் இறைவனுடைய திருக் காட்சியையே காணுவதால் அவர்கள் கண் களில் நாம் பார்க்கும் காட்சிகள் தெரிவதில்லை. அவர்கள் கண்டும் கண்டிலாதவர்களாகவே இருக்கிருர்கள். விழித்துக்கொண்டே இருந் தாலும் உறங்குகிருர்கள்.

> விழித்தகண் குருடாய்த்திரி வீரரும் பலரால்

என்று திருவிளையாடற்புராணம் கூறுகின்றது.

அப்படி விழித்து உறங்குவோர்கள் மகா ஞானிகள்; இந்திரியங்களை எல்லாம் அடக்கி ஆண்டவர்கள்; ஜீவன் முக்தர்கள்; இந்த உலகில் இருக்கும்போதே முத்தியின்பத்தை அடைந்தவர்கள். அந்த இன்பம் நமக்கும் கிடைக்கும். பலகாலமாக அநாதி காலமாக இருக்கின்ற 'மறை' என்ற மரத்திலே ஐந்து பழங்கள் பழுத்திருக்கின்றன. அந்தப் பழங் களை உண்டவர்களுக்கு இந்த முத்தியின்ப நிலை கிடைக்கும்.

> பழுத்தன ஐந்தும் பழமறை யுள்ளே
> விழித்தங்கு உறங்கும் வினைஅறிவார் இல்லை.

எல்லாவற்றையும் படித்தவர்கள்கூட இந்தத் திருஐந்தெழுத்தை, எந்த முறைப்படி தெரிந்துகொள்ள வேண்டுமோ அப்படித் தெரிந்து உணர்வதில்லை.

படிப்புக்கு எல்லையேகிடையாது. எத்தனை எத்தனையோ பட்டங்களும், எத்தனை எத் தனையோவகையான பதவிகளும் படிப்பதினல் கிடைக்கின்றன. பி. ஏ., எம். ஏ., என்றெல் லாம் படிக்கின்ருர்கள். பலவகையான நூல் களைப் படிக்கிருர்கள். பல மொழிகளைப் படிக்கின்ருர்கள். அந்த அந்த மொழிகளில் உள்ள எழுத்துக்களில் எல்லாம் நன்ருகத் தேர்ச்சி பெறுகிருர்கள். முத்துப்போல் எழுத வும் எழுதியவற்றைப் படிக்கவும் ஆற்றல் பெறுகிருர்கள். அத்தனை எழுத்தும், சொற் களும், வாக்கியங்களும், நூல்களும் படித்தா லும் அவர்களுக்கு ஐந்தெழுத்துத் தெரிவ தில்லை. ஏன்? வேதங்களைப் படிக்கிறவர்கள் கூட ஐந்தெழுத்தைத் தெரிந்துகொள்ளாமல் இருக்கிருர்களே. பெரிய பழமரம் ஒன்றை அணுகி, அந்த மரத்திலுள்ள இலைகளின் பெருமையையெல்லாம் கண்டு, கிளைகளின் நீட்டங்களை எல்லாம் அளந்து பார்த்து, அடி மரம் இவ்வளவு பருத்திருக்கிறது என்று தெரிந்துகொண்டு, மலர் நன்ருக மணம் வீசு கிறது என்றும் அறிந்துகொண்டால் போதாது. அது பழமரம்; ஆகையினாலே அதிலுள்ள பழத்தை நுகரவேண்டும். அந்தப் பழத்தை நுகராதவன் எத்தனைதான் மரத்தைப்பற்றிய தெளிவான ஆராய்ச்சி செய்திருந்தாலும் அந்த ஆராய்ச்சியினால் பயன் இல்லை.

அதுபோல, எத்தனையோ எழுத்துக்களைத் தெரிந்துகொண்டிருந்தாலும் இந்த எழுத்து ஐந்தையும் தெரிந்துகொண்டால் அன்றி, அவர் கள் எழுத்தறிவுள்ளவர்கள் ஆகமாட்டார்கள்.

இந்த எழுத்து ஐந்தும் நமக்கு வேருேர் எழுத்தைப் போக்குபவை. அதைச்சொல்லு கிருர் திருமூலர்;

> எழுத்துஅறி வோம்என்று உரைப்பர்கள் ஏதர்
> எழுத்தை அழுத்தும் எழுத்தறி யாரே.

இந்த ஐந்தெழுத்து வேருேர் எழுத்தை அழிக்குமாம் அது என்ன என்பதைச் சற்று பார்க்கலாம்.

மனிதன் தன்னுடைய வாழ்நாளில் இன்பங்களையும் துன்பங்களையும் அனுபவிக் கின்ருன். அந்த இன்ப துன்பங்களுக்கெல் லாம் மூலகாரணமாக இருப்பது ஊழ்வினை. உயிர்கள் எல்லாம் உடலைப் பெற்று

உலகத்தில் வாழும்போது இங்கே அநுப விப்பதற்காக வினை மூட்டையோடு வருகின் றன. வினை மூன்றுவகைப்படும். சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமியம் என்பன அவை. பலகாலமாகச் சேகரித்து வைத்திருக்கின்ற வினைத்தொகையைச் சஞ்சிதம் என்று சொல் வார்கள். அவற்றில் ஒரு பகுதியை எடுத்துக் கொண்டு இந்தப் பிறவியிலே அநுபவிப்பதற் காக உயிர்கள் வருகின்றன. அப்படி ஏற்ற பகுதிக்குப் பிராரப்தம் என்று பெயர். அழுக்கு மூட்டையை எடுத்துக்கொண்டு வந்து சுத்தப் படுத்திக்கொண்டு போகலாம் என்று வரு கின்றவன், அவற்றைச் சுத்தப்படுத்துகின்ற போது புதிய அழுக்குப் பண்ணுகிறதுபோல பிராரப்தத்தை அநுபவித்துக் கழிக்கின்ற போதே, புதிய வினைகளைத் தேடிக் கொள்ளு கிறான். அப்படித் தேடிக் கொள்கிற வினைக்கு ஆகாமியம் என்று பெயர். சஞ்சிதமும் ஆகாமியமும் ஞானிகளுக்கு இல்லாமற் போய் விடும். குருவினுடைய திருக்கண் பார்வை பெற்ற மாத்திரத்திலே சஞ்சிதம் போய்விடு கின்றது. ஞானம் நிறைந்தபோது ஆகாமியம் போய்விடுகின்றது. ஆனால் பிராரப்தம் என் பதை எல்லோரும் நிச்சயமாய் அநுபவித்தே கழிக்கவேண்டும்.

எவ்வளவு பெரிய ஞானியாய் இருந்தா லும் பிராரப்தத்திலிருந்து விலக முடியாது. ஒன்று மாத்திரம் செய்யலாம். பிராரப்தத்தை அநுபவிக்கும்போது அந்த அநுபவம் மிகவும் அதிகமாக உறைக்காமல் செய்துகொள்ள லாம். உடம்பிலே உள்ள தோல் மிக மென்மையாக இருக்கிறது. அது வெயிலால் மிகவும் துன்பத்தை அடைகின்றது. நாம் வெயில் அடிக்கிற தரையிலே படுத்துக்கொண் டால் உடம்பெல்லாம் காய்கிறது. ஆனால் பலகாலம் வெயிலிலே உருண்டு உருண்டு பிச்சைவாங்கும் பிச்சைக்காரனுக்குத் தோல் மெதுவாக இருந்தாலும் பழக்கத்தினாலே அது காய்த்துப்போகின்றது. நமக்கு வெயிலின் சூடு எவ்வளவு உறைக்கின்றதோ, அந்த அளவுக்கு அவனுக்கு உறைப்பதில்லை. காரணம் அவ னுடைய பழக்கந்தான். அப்படியே ஞானம் கைவந்தவர்களுக்குப் பிராரப்த வினையினால் உண்டான அநுபவங்கள் நிச்சயமாக அநுப விக்க வேண்டுவனவே யாகும். ஆனாலும் ஞானத்தின் வன்மையினாலே அவர்களுக்கு அந்தப் பிராரப்த வினையின் அநுபவம் அத்தனை உறைப்பதில்லை.

ஒருவனுக்குத் துன்பங்கள் வந்தால் "அது என்னுடைய தலையெழுத்து" என்று சொல்லு கிறான். உலகத்தில் படுகின்ற கஷ்டங்கள் எல்லாம் தலையெழுத்தினால் விளைவன என்று நாம் பேசுகிறோம். நல்லதும் பொல்லாததும் ஆகிய இரண்டுமே தலையெழுத்தால் விளைந்தன. ஆனாலும், மனிதன் எப்பொழுதும் கேடு வரும் பொழுதுதான் "இது என் தலையெழுத்து" என்று சொல்லுகிறான். ஒருவனுக்கு ஒரு பையன் இருக்கிறான். அவன் பி. ஏ. பரீட்சை யில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெறுகிறான். அப்பொழுது அவரிடம் போய், "உங்கள் பையன் முதல்வகுப்பில் தேர்ச்சி பெற்றா னமே" என்று கேட்டால், "என்னுடைய தலையெழுத்து" என்று அவர் சொல்வதில்லை. பையன் தேர்ச்சிபெறவில்லை என்று வைத்துக் கொள்வோம்; அப்போது போய்க்கேட்டால் "எல்லாம் நம் தலையெழுத்து" என்று சொல்லு வார். தலையெழுத்து என்பது துன்பத்தை அநுபவிக்கும் அநுபவத்தைத்தான் குறிக் கின்றது.

இறைவனுடைய திருவருளிலே ஈடுபட்ட பெரியோர்கள் இந்தத் துன்பத்தை மாற்றிக் கொள்வார்களாம். துன்பத்திற்கு இடையில் இருந்துகூடத் துன்பத்தினுடைய உறுத்தல் நேராது, திருநாவுக்கரசர் சொல்லுவது நினை வுக்கு வருகிறது. இறைவனுடைய திருவரு ளாலே நரகம் பெற்றாலுங்கூட அந்த நரகம் எங்களுக்குத் துன்பத்தைத் தராது என்று அவர் பேசுகின்றார். 'நரகத்தில் இடர்ப் படோம்' என்பது அவர் பாட்டு. நரகத்தை அடையோம் அடையோம் என்று சொல்ல வில்லை. நரகத்துக்குப் போனாலுங்கூட,

இறைவனுடைய அருட்கவசம் இருப்பதனுல் அங்குள்ள இடர் எங்களைப் பாதிக்காது என்பதே அதனுடைய பொருள். பிராரப்த வினையை முழுவதும் போக்காவிட்டாலும் அதனுடைய உறுத்தல்களை எல்லாம் அழுத்தி விடலாம் என்பதைத் திருமூலர் சொல்லுகிருர்.

ஐந்தெழுத்தாலே தலையெழுத்தை அழுத்தி விடலாமாம். எழுத்தை மற்ருேர் எழுத்தால் அழுத்திவிடலாம் என்கிறபோது எனக்கு ஒரு கதை நினைவுக்கு வருகின்றது. ஒருவன் ஒரு விறகுக் கட்டைக் கொண்டுவந்தான். அந்தக் கட்டை ஒரு கயிற்ருல் கட்டியிருந் தான். அப்பொழுது அருகில் சிறந்த அறிவாளி ஒருவர் இருந்தார். அவர் அந்த விறகுக்காரனைப் பார்த்து, 'இந்தக் கட்டை எடுக்கவேண்டும், ஆனுல் இந்தக் கயிற்றை அவிழ்க்காமலே எடுக்கவேண்டும்' என்று சொன்னுர். அவ னுக்கு ஒன்றும் விளங்கவில்லை. வேருேர் அறிவாளி அங்கே இருந்தான். அவன் பார்த் தான்: 'நான் அதைச் செய்கின்றேன்' என்று வேருெரு கயிறு கொண்டுவந்தான். அதை இறுக்கிக் கட்டினுன். பின்னுலே போட்ட கட்டு இறுகலாக இருந்தமையினுல் முன்னுல் உள்ள கட்டு தளர்ந்துவிட்டது. இப்பொழுது முன்னுலே போட்ட கட்டுப் போய்விட்டது. அதை யாரும் அவிழ்க்கவில்லை. வேருெரு கட்டை இறுகப் போட்டமையால் முன்னுல் இருந்த கட்டுப் போய்விட்டது.

பிராரப்த வினையாகிய எழுத்தின் வன் மையை அழுத்துகின்ற ஆற்றல் ஐந்தெழுத் துக்கு உண்டு. ஆதலால் அதனை எழுத்தை அழுத்தும் எழுத்து என்று திருமூலர் சொல்லு கின்ருர்.

அவர் உலகிலுள்ள மக்களைப் பார்த்து இரங்குகிருர், 'மிகவும் பழமையான மரம்; பெரிய மரம், அந்த மரத்தில் நல்ல பழங்கள் பழுத்துக் குலுங்குகின்றனவே; அவற்றை உண்டால் எவ்வளவு சுகமாய் இருக்கலாம்; அப்படி உண்ணுகின்ற வழி தெரியாமல் இருக் கின்ருர்களே; எத்தனை எத்தனையோ படித் திருக்கிருேம் என்ற செருக்கினுலே பேசுகின் ருர்கள்; ஆனுல் தெரிந்து கொள்ளவேண்டிய எழுத்தைத் தெரிந்து கொள்ளவில்லையே; அப்படித் தெரிந்திருந்தால் அந்த அறிவினுலே எவ்வளவு இன்பத்தை அடையலாம் என்று அவர் இரங்குகின்ருர்.

பழுத்தன ஐந்தும் பழமறை யுள்ளே
விழித்துஅங்கு உறங்கும் வினைஅறிவார் இல்லை
எழுத்துஅறி வோம்என்று உரைப்பவர் ஏதர்
எழுத்தை அழுத்தும் எழுத்து அறியாரே.

என்னுடைய வாழ்நாளெல்லாம் படிப் பிலே செலவிட்டேன்; எவ்வளவோ நூல் களை எல்லாம் படித்தேன் என்று சொன்னு லும் ஐந்தெழுத்தைத் தெரிந்துகொள்ளாவிட் டால் அவர்கள் வீணர்கள் என்று சொல்கிருர் திருமூலர். ஏதர் என்ருல் வீணர்கள் என்று இங்கே பொருள். வாழ்கையின் பயன் எல் லாம் இறைவனுடைய திருவருளைப்பெறு வதுதான். அப்படிப் பெறுவதற்குத் தக்க கருவி திரு ஐந்தெழுத்து. அதனைக் குருமுக மாகக் கற்றுக்கொண்டு, ஜபித்துத் தியானம் செய்து, அதனுல் வருகின்ற இன்பங்களை எல்லால் அடையாமல் வீணே பொழுது போக்குகின்ருர்களே என்று திருமூலர் இரங்கு கின்ருர்.

இனி, இறைவனுடைய திருக்கோலத் தைப்பற்றித் திருமூலர் சொல்வதைப்பார்க் கலாம். ஒன்பதாந் தந்திரத்தில் இறைவனு டைய திரு நடனக்கோலத்தின் பலவகை களைப்பற்றி அவர் பேசுகிருர். அவற்றின் இலக்கணங்களையும் அவற்றைக் கண்டோர் பெறுகின்ற ஆனந்தத்தையும் அந்தப் பாடல் கள் நன்ருக விளக்குகின்றன. இப்பொழுது ஒரு பாட்டைக் கவனிக்கலாம்.

அந்தப் பாட்டில் திருமூலர், இறைவ னுடைய ஆடல்கண்டு இன்புறுகின்ற அடி யார்களைப் பற்றிப் பேசுகிருர். முதலில் அடி யார்கள் இன்னுர் என்பதைத் தெரிவிக்கிருர்.

நாம் சிதம்பரத்துக்குச் செல்லுகின்றோம். நடராஜப் பெருமானைத் தரிசிக்கின்றோம். அடிமுதல் முடிவரையில் அழகு சொட்ட அவன் நின்று ஆடுகின்றான். அந்தப்பெருமானை அப்பர்சுவாமிகள் கண்டார்.

குனித்த புருவமும் கொவ்வைச்
செவ்வாயில் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியில் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்
பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ
தேஇந்த மாநிலத்தே.

என்று பாடினார்.

இப்படியே சுந்தரமூர்த்தி சுவாமிகளும் நடராஜப்பெருமானைத் தரிசித்தபொழுது,

தெண்ணிலா மலர்ந்த வேணியாய்
உன்றன் திருநடம் கும்பிடப்பெற்று
மண்ணிலே வந்த பிறவியே
எனக்கு வாலிதாம் இன்பமாம்

என்று சொன்னாராம். இப்படியெல்லாம் அவர்கள் அநுபவிக்கின்ற அநுபவத்தை நாம் அடைவதில்லை.

முதலில் இறைவனுடைய திருமேனியைக் கண்டு, அந்தத் திருமேனியில் எது சிறந்தது என்றுகூடப் பார்ப்பதில்லை. அவனுடைய அங்கங்கள் எல்லாம் சிறந்தனவே. அவற்றில் ஒன்றுக்கொன்று வேறுபாடுஇல்லை. ஆனாலும் அடியார்களுக்கு இந்தத் திருமேனிக்கண்ணே சென்று தங்குவதற்கு ஓர் இடம் உண்டு. ப்பரமானது பல இடங்களிலும் சுற்றிச் சுற்றி வேகமாகச் சுழன்றாலும், அது கடைசியில் ஒரு இடத்தில் நின்று, வேகமாகச் சுழன்றால் அது தூங்குகின்றது என்று சொல்லுகின்றோம்.

அப்படித் தூங்கும்பொழுதுதான் அதனுடைய வேகம் மிகுதியாக இருக்கும். நாம் நம்முடைய கண்ணினாலே இறைவனுடைய திருமேனி முழுவதையும் தரிசிக்கின்றோம். தரிசித்தாலும் கடைசியில் இறைவனுடைய திருவடிக்கண்ணே நம் கண் சென்று பதிய வேண்டும். எத்தனைதான் இறைவனுடைய உறுப்பு நலன்களை எல்லாம் தெரிந்து கொண்டிருந்தாலும், நமக்குப் பற்றுக்கோடாக இருப்பது அவனுடைய திருவடி ஒன்றுதான், அதனால் இறைவனுடைய அன்பர்களைத் 'தோளார்' என்றோ, 'முகத்தார்' என்றோ கூறாமல் அடியார் என்றே சொல்லுகின்றார்கள். திருவடியினிடத்திலே பற்றுக்கோடு உடையவர் என்று பொருள், அந்த அடியைத் திருவள்ளுவர் 'நற்றாள்' என்று சொல்லுகின்றார். அதற்குப் பரிமேலழகர், "பிறவிப் பிணிக்கு மருந்தாதலின் நற்றாள் என்று சொன்னார்" என்று உரை எழுதுகிறார். பக்தர்கள் இறைவனுடைய திருவடிக்கண்ணே ஆராத காதல் உடையவர்கள். பரிபாடல் என்ற நூலிலே இறைவனைப் பார்த்து ஒருவர் பேசுகிறார். "நின்னிற் சிறந்தன நின் திருவடியை" என்கிறார். 'இறைவனே! உன்னைக் காட்டிலும் எங்களுக்கு நின் திருவடிகள் சிறந்தன' என்று சொல்கிறார். திருவடியைப் பற்றிக்கொண்டு வினைமாசை எல்லாம் அழிக்கலாம் என்பதே அடியார்களுடைய அநுபவம், ஆகவே, அடியார் என்பவர்கள் இறைவன் அடிக்கண்ணே ஆனந்தம் காண்பார்களாம். அதனை முதலில் திருமூலர் சொல்லுகிறார்.

அடியார் அரனடி ஆனந்தம் கண்டோர்.

இறைவனுடைய திருவடியே ஓர் ஆனந்தப் பொய்கை.

அருணகிரிநாதர் இதை மிக அழகாகச் சொல்லுகிறார். இறைவனுடைய திருவடியே ஆனந்தம். ஆனந்தம் என்னும் தேன் சொரிகின்ற தாமரை மலர் அது. அதனை அன்பர்கள் எல்லாம் நெருக்கமாக வந்து கண்டு கண்டு, உண்டு உண்டு இன்பத்தை அடைகிறார்களாம்.

தொண்டர்கண்டு அண்டிமொண்டு
உண்டிருக் கும்சுத்த ஞானமெனும்
தண்டையம் புண்டரீகம்'

என்று இறைவனுடைய திருவடியைப் பற்றி அவர் சொல்லுகிருர். திருவடி ஞானமய மானது. திருவடியே மோக்ஷமாக இருப்பது. அடியார், அரனுடைய அடியிலே கிடந்து, அதனைச் சரணுகப் புகுந்து இன்பம் காண் பவர்கள்.

அடியார் ஆனவர் அத்தருள் உற்ருேர்.

அத்தனையே தமக்குள் வைத்துக்கொண்டிருப் பவர்கள் அடியவர்கள். உள்ளத்தின்கண்ணே அவனைத் தரிசிப்பவர்கள்.

அடி ஆர்பவரே அடியவர் ஆமால்.

என்று பாடுகிருர். அடியவர் யார்? இறைவ னுடைய அடியின்கண்ணே தங்குபவர்கள். அவனுடைய திருவடியையே பற்றுக் கோடாகக் கொண்டவர்கள் யாரோ அவர் களே அடியார்கள் என்று சொல்லலாம்.

இறைவனுடைய திருமேனிக்கண்ணே பலவகையான தோற்றங்களைக் காணலாம். நடராஜப் பெருமானுக இறைவன் இருக் கிருன். விடையிலே ஏறி வருகிருன். திரிபுர சங்கார மூர்த்தியாகக் காட்சி தருகின்ருன். இப்படி அவனுக்குப் பலவிதமான மூர்த்திகள் இருந்தாலும், எல்லா மூர்த்திகளிலும் பொது வாக இருக்கின்றவை திருவடிகளே. மிகவும் பலபல உருவங்கள் இருப்பதாக நாம் சொல் கிருேம், ஆனுல் அந்த அந்த உருவங்களிலே வெவ்வேறு தெய்வங்கள் இருப்பதில்லை. ஒரே தெய்வம் இப்படிப் பல உருவங்களை எடுத் திருக்கின்றது என்று பெரியவர்கள் சொல் கிருர்கள். இப்படி முகத்தாலும் கையாலும் உடம்பினுலும் வேறுபடுகின்ற பல உருவத் தினையுடைய அந்த உருவங்கள் எல்லாம் நமக் குள்ளே பொதுமையாக இரண்டை உடைய னவாக இருக்கின்றன. அவைகளே திருவடி கள். அடியைப் பற்றினவர்களுக்கு வேறு பாடு இல்லை, முகத்தைக் கண்டு அன்பு முகிழ்த்தவர்களும், கையைக்கண்டு காதலித் தவர்களும், தோளைக்கண்டு துடித்தவர்களும் தங்களுக்குள்ளே வேறுபாட்டைச் சொல்லிச் சண்டை பிடிப்பார்கள். ஆனுல் அவற்றை எல்லாம் பார்த்துவிட்டு, கடைசியிலே சென்று பற்றுவதாகிய அடியினிடத்திலே நிற்கின்றவர் களுக்கு எந்த உருவத்தின் அடிகளும் ஒரே மாதிரியாகவே காண்பார்கள் அடியைக் கண்டாருக்குப் பேதம் இல்லை. அடியை நாடினுல் சமரசபாவம் உண்டாகும்.

திருவள்ளுவர் இறைவனை வணங்குவ தற்கு ஓர் அதிகாரம் சொன்னுர். அதுவே முதல் அதிகாரம். 'கடவுள் வாழ்த்து' எனப் பெயர்பெறும். கடவுளுக்கு உருவம் உண்டா இல்லையா? திருவள்ளுவர் உருவம் இல்லாத கடவுளைத்தான் சொன்னுர் என்று சிலர் சொல்லுவார்கள். அப்படி அன்று. அவர் இறைவனைப்பற்றிப் பேசுகிருர். இறைவனுக்கு உருவம் உண்டு என்றும் சொல்கிருர். ஆனுல் அந்த உருவத்தின் பல பகுதிகளைச் சொல்லா மல் அவனுடைய அடியை மட்டும் காட்டு கின்ருர். எல்லாச் சமயத்துக்கும் பொதுவாகப் பாடவந்த அவர், எல்லாச் சமயங்களும் உருவ வழிபாடு செய்து வந்தாலும் அவற்றிற்குள்ளே பொதுவாக அடியைப்பற்றும் முறை ஒன்று இருப்பதைக் கண்டுகொண்டார். ஆகையால் கடவுளுக்கு உருவம் உண்டு என்று சொல்ல வருகிறவர் நேரடியாகச் சொல்லாமல் அவ னுடைய அடியை மாத்திரம் சொல்லுகிருர்.

திரைக்குப் பின்னுலே இரண்டு மூன்று குருக்கள் இருந்து அலங்காரம் செய்கிருர்கள், அவருடைய பாதங்கள் மட்டும் நமக்குத் தோற்றுகின்றன. பாதங்களைப் பார்த்தால் இதோ பாதங்கள் தோன்றுகின்றன என்று சொன்னுலும், அந்தப் பாதங்களை உடைய மக்களும் இருக்கிருர்கள் என்று ஊகிக்கலாம். பாதம் உண்டு என்று சொன்னபோதே பாதத் துக்குரிய உடம்பும் உண்டு என்று தெரிந்து கொள்ளவேண்டும்; அப்படியே திருவள்ளுவர் அடியைச் சொல்வதனுல் இறைவனுக்கு உருவம் உண்டு என்பதை ஒப்புக்கொள்ளு கிருர். மற்றவற்றைச் சொல்லாததற்கு காரணம் இதுதான். அப்படிச் சொன்னுல்

வேறுபாடு உண்டாகும். வேறுபாடற்ற ஒரு நூலை அவர் செய்தார். ஆகையினால் பொது வான ஒன்றைச் சொன்னார். அந்த அடியி னிடத்திலே தலைகுனிந்து வணங்கவேண்டும் என்றும் அவர் சொல்லுகிறார்.

'எண்குணத்தான் தாளை வணங்காத் தலை'

என்று கூறுகின்றார், இறைவனுடைய உரு வத்திலே தாள் உண்டென்றும், அதில் நாம் தலைவைத்து வணங்கவேண்டும் என்றும் பொருள்படுகிறது அல்லவா?

நடராஜப் பெருமானுடைய திருக்கோலத் தில் பெருமான் திருவடிக்குச் சிறப்பு அதிகம். எம்பெருமானுடைய திருநடனம் பஞ்ச கிருத்தியங்களைக் காட்டும் நடனம். பஞ்ச கிருத்தியங்களுக்குள்ளே அருளுதல் மிகவும் முக்கியமானது. படைப்பு, அளிப்பு, சங்காரம், மறைப்பு, அநுக்கிரகம் என்பவை ஐந்து தொழில்கள். ஆன்மாக்கள் இன்பம் பெறுவது இறைவனுடைய அனுக்கிரகத்தாலே. அதுவே இறுதித்தொழில். நடராஜப்பெருமானுடைய கையில் உள்ள துடி சிருஷ்டியைக் குறிக்கும், அமைத்த திருக்கரம் திதியைக் குறிக்கும். கையில் உள்ள அக்கினி சங்காரத்தைக் குறிக்கும். ஊன்றியிருக்கின்ற திருவடி திரோ பவமாகிய மறைப்பைக் குறிக்கும், தூக்கிய திருவடியாகிய குஞ்சிதபாதம் அநுக்கிரகத் தைக் குறிக்கும்.

இறைவன் ஐந்து பெரிய தொழில்களைச் செய்கின்றான். அவற்றுக்குள்ளே ஆருயிர்கள் கடைசித் தொழிலாகிய அநுக்கிரகம் என்பதை எதிர்பார்த்து நிற்கின்றன. அதனாலேதான் இன்பம் உண்டாகும். இறைவனைத் தொழுது அவனுடைய அநுக்ரகத்தைப் பெறுவதற்காக அடியார்கள் செல்லுகிறார்கள். அந்த அநுக் கிரகத்தைக் காட்டுவது அவனுடைய தூக்கிய திருவடியே. அவனுடைய திருமேனி பல வற்றின் தத்துவங்களை ஆராய்ந்தவர்களுக்கு அவனுடைய தூக்கிய திருவடியிலே நெஞ்சம் பதியும். நடராஜப் பெருமானுடைய திரு மேனியில், அவன் பாதத்தின்கண்ணேதான் ஆனந்தம் இருக்கின்றது. அதனால், அடியவர் கள்தான், அதாவது அடியைக்கண்டு அதன் கண் தங்குவோர்களே எம்பெருமானுடைய ஆடல் இன்பத்தை அடைவார்கள், இதையே திருமூலர் சொல்லுகின்றார்.

அடியார் அரனடி ஆனந்தம் கண்டோர்
அடியார் ஆனவர் அத்தருள் உற்றோர்
அடிஆர் பவரே அடியவர் ஆமால்
அடியார் பொன்னம்பலத்து ஆடல்கண் டோரே.

அடியவர்கள் எம்பெருமானுடைய திரு நடனத்தைக் கண்டார்கள். அந்தத் திருநட னத்தில் தூக்கிய திருவடியில் கண்ணைப் பதித்து ஈடுபட்டார்கள். அந்த அடியிலே ஆனந்தம் கண்டார்கள். அந்த ஆனந்தத்திலே ஆழ்ந்து நின்று, அடியார் என்ற பெயரை உறுதிப்படுத்திக் கொண்டார்கள். அவனை வருணிப்பவர்களும் அவனுடைய திருவுரு வத்தைக் கண்டவர்களும் அடியார்கள் ஆக மாட்டார்கள்; எம்பெருமான் திருவுருவச் சிலையைக்கண்டு, இது செம்பாலானதா? இது பொன்னாலானதா? என்று ஆராய்ச்சி செய்கிற வர்களும் நடராஜப்பெருமானிடத்திலே கவ னத்தைச் செலுத்துகிறார்கள். ஆனால், அவர்க ளெல்லாம் அடியார் ஆகமாட்டார்கள், ஆடு கின்ற திருப்பாதத்தைக்கண்டு, அந்தக் குஞ்சித பாதத்தில் சரணம் புகுந்து அதனிடத்திலே உண்டாகின்ற அநுக்கிரகத் தேனைப் பருகுவ தற்கு முயலும் பெரியோர்களே அடியவர்கள். அவர்கள்தாம் 'பொன்னம்பலத்து ஆடல் கண்டவர்கள் ஆவார்கள்' என்று திருமூலர் சுட்டுகின்றார்.

இப்படிப்பட்ட அருமையான பாடல் களைத் திருமந்திரத்தில் கண்டு ஆனந்தம் அடையலாம்.

வெளியீடு எண். 103

உ

சிவமயம்

மூன்றாவது

# திருமந்திர மாநாட்டு மலர்

[மன்மத - தை]

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

21-வது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

திருவுள்ளப்பாங்கின்வண்ணம்

வெளியிடப்பெற்றது.

**திருவாவடுதுறை ஆதீனம்**

1957 ஜனவரி]  [துன்முகி - தை



ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகளை
ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் வழிபடுதல்.

உ
சிவமயம்

# வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

—ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

உ
சிவமயம்

## ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் தோத்திரம்:

இருதய நாப்பண் அஞ்செழுத் துருவின்
இறைவனை உயிர்க்கொலை செயாமை,
அருள், பொறி அடக்கல், பொறை, தவம், வாய்மை,
அன்பு, அறிவு என்னும் எண்மலர்கொண்டு
ஒருமையொடு அருச்சித்து இடுகஎன்று அடியர்க்கு
ஒள்ளிய தீக்கைசெய்து உணர்த்தத்
திருஅமர் துறைசை உறையருள் குருவாம்
திருநமச் சிவாயர்தாள் போற்றி.

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

குறிப்பு:-

ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளுக்கு வணக்கம் கூறுகிற முறையில் ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகளால் பாடப்பெற்றது இச்செய்யுள். நமசிவாயமூர்த்திகள் இத்திருவாவடுதுறை ஆதீனத்தை இன்றைக்குச் சுமார் ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னர்த் தோற்றுவித்த தெய்வீக அருளாளர் ஆவர். இவர் கண்ட ஆதீனம், தென்னாட்டில் பலகோடி மக்களுடைய ஞானத்தையும் சமய உணர்ச்சியையும் நன்னெறியையும் நிலைபெறச் செய்வதற்கும் வளர்ப்பதற்கும் துணையாக இருந்துகொண்டிருக்கிறது. இந்தக் குருமூர்த்திகளால் கட்டளை இடப்பெற்ற நற்செயல்களும் இன்றுவரை நடைபெற்று வருகின்றன.

நாட்டிலும் மக்கள் உள்ளத்திலும் எத்துணையோ மாறுபாடுகள் தோன்றினும், குருமூர்த்திகளுடைய கட்டளையும் திட்டமும் எள்ளளவும் மாறியன அல்ல. எடுத்துக்காட்டாகத் திருமடத்தின் அடுக்களையை மூர்த்திகள் அமைத்து, அதில் பொருத்திய நெருப்பு அணையாமல் நின்று என்றும் அடியவர்களுக்கு அமுதளிக்கவேண்டும் என அருளிய திருமொழி இன்றும் உண்மையாக இருந்து வருவது உலகம் அறிந்ததே. இந்த ஐந்நூறு ஆண்டுகளிலும் நிகழ்ந்த மாறுதல்களும், பஞ்சமும் எவ்வளவோ ஆயினும் இத்திருமடத்திலும் இதன் கிளைமடங்களிலும் இன்றுவரை பசிப்பிணி ஒன்று உண்டு என்பதை எவரும் அறியார். இத் திருமடம் எந்த நல்ல நோக்கங்களுடன் தோன்றியதோ அந்நோக்கங்கள் இன்றும் இங்கே நிறைவேறி வருகின்றன.

ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள், சங்கரர் இராமாநுசர் ஆகிய இவர்களுடன் வைத்து எண்ணக்கூடிய ஒரு பெருந்தத்துவ ஞானியாவார்; இத் திருமடத்தின் தம்பிரான்களில் ஒருவரும் ஆவர்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக மூர்த்திகளின் திருவருள் துணைக் கொண்டு, அவர்கள் குருபூசைத் திருநாளாகிய மகரத்தலை நாளையொட்டி, வழக்கம்போல் சென்ற மன்மத ஆண்டிலும் திருமந்திர மாநாடு நடைபெற்றது.

சொற்பொழிவாளர்கள் தமது நீண்டநாள் அநுபவத்தைக்கொண்டு வேதாகம சாத்திர தோத்திர வரம்பிலே நின்று திரட்டியகருத்துக்களை, மக்கள் அனைவரும் புரிந்து கொள்ளத்தக்க எளிய இனிய நடையில் பேசுகிறார்கள். அக்கருத்துக்களை அனைவரும் கேட்டுத் தம் வாழ்க்கையநுபவத்தோடு ஒட்டிப்பயனெய்துகிறார்கள். இந்த அநுபவத்தை மாநாட்டில் கலந்துகொள்ளாத ஏனையோரும் அடைந்து உய்யவேண்டும் என்ற கருணைநோக்காலும், ஆண்டுகள் தோறும் எத்தகைய புதிய கருத்துக்கள் - சிவாநுபவச் செல்வங்கள் வெளிவந்திருக்கின்றன என்று திருமந்திர ஆராய்ச்சியின் உணர்ச்சிப்பெருக்கை அறிந்துகொள்ளும் நோக்குடனும் மாநாட்டுச்சொற்பொழிவுகள் அனைத்தும் தொகுத்து மலராக வெளியிடப்பெறுகின்றது.

சுருக்கெழுத்தாளர்கள் எடுத்துக்கொடுத்துள்ள சொற்பொழிவுகளின் சுருக்கங்கள், எழுத்துப் பிழைகளைத்திருத்தி அப்படியே அச்சிடப்பெற்றன.

சைவத்தமிழ் உலகம் இந்த வெளியீட்டைப்பெற்று, கருத்துக்குவியலில் ஈடுபட்டுப் போற்றி மகிழுமாக.



ஏழாந்திருநாளில் திருமூலதேவர் உற்சவம்

கயிலாயத்து ஒரு சித்தராய் நந்திதேவர் திருவருளைப்பெற்ற சிவயோகி, தல யாத்திரையாகப் பொதியமலை நோக்கி வருகிறபோது, திருவாவடுதுறைக்கு வந்து பெருமானை வழிபட்டு அருகில் உள்ள சாத்தனூர் அடைந்தார்; அங்கு இறந்து கிடந்த பசுமேய்ப்போனாகிய மூலன் என்னும் இடையன் உடலில் புகுந்து மூலராக எழுந்தார் என்பது வரலாறு. இப்படி மூலராக எழுந்தவுடனே, எஜமான் இறந்த துக்கத்தால் கதறிய பசுக்கள், ஆனந்தமேலீட்டால் மோந்தன; நக்கின; கனைத்தன; துள்ளிக்குதித்தன. எப்படி எப்படியோ சந்தோஷத்தைக் காட்டிக்கொண்டன. மூலராகிய சிவயோகியும் மகிழ்ச்சியோடு பசுக்களை மேய்த்தார்; அவைகளைக் காவிரித்துறையிலே நீர் அருந்தச்செய்தார்; வெயில்நேரத்தில் நிழலுள்ள இடத்தில் தங்கச்செய்து பாதுகாத்தார். மாலைநேரம் வந்ததும் பசுக்கள் கன்றுகளை நினைத்துக்கொண்டே வீடுகளை நோக்கி நடந்தன. அவை தத்தம் வீடுகளை அடையும்வரை மூலரும் பின்னே தொடர்ந்து சென்றார். இப்படி மூலர் அன்றுமேற்கொண்ட பசுப்பணியும் முடிந்தது.

இப்படியாகப் பசுப்பணி முடிந்தபிறகுதான், திருவாவடுதுறையில் அரச மரத்தின்கீழ் மூவாயிரம் ஆண்டுகள் யோகத்திலிருந்து, அருந்தமிழ் மூவாயிரம் அருளினார்; திருமூலதேவநாயனார் என்று சிறப்பிக்கப்பெற்றார். அருந்தமிழும் திருமந்திரம் என்ற பெயருடன் திகழ்கிறது.

இத்தகைய சிறப்போடுகூடிய திருமூலதேவநாயனாருக்கு, ஸ்ரீ கோமுத்தீஸ்வரர் கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறுகிற மகோற்சவ ஏழாந்திருநாளில், தனிச்சிறப்புச் செய்யப்பெறுகிறது. அன்று காலை திருவீதியுலாவில் பெருமானுடன் திருமூலதேவநாயனாரும் எழுந்தருளுகிறார். அவர் மேற்கொண்ட பசுப்பணியின் நினைவாக அவருக்கு முன்பு, ஒரு பசுமாடு கன்றுடன் கொண்டு செல்லப்பெறுகிறது. திருவுலா முடிந்து ஆலயத்தை அடைந்ததும் சந்நிதியிலேயே ஆதீன ஓதுவாமூர்த்திகளால் திருமூலர் வரலாறு வாசிக்கப்பெறுகிறது. உடனே கோபூஜை நடைபெறுகிறது. பிறகு தீபாராதனை தரிசனம். இப்படி நிகழ்கிற திருமூலர் உற்சவக் காட்சியை இப்படம் காட்டுகிறது.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவன் ஆவடு தண்துறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே.

திருச்சிற்றம்பலம்

—திருமூலர்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருவாவடுதுறை ஆதீனம்
# 3-வது திருமந்திர மாநாட்டு நிகழ்ச்சிகள்

**ஆணையின்வண்ணம்:**

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஸ்ரீமுத்திபஞ்சாக்கரதேசிக சுவாமிகள் ஆதீனத்து இருபத்தோராவது குருமூர்த்திகளாக ஞானபீடத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் கட்டளையிட்டருளிய வண்ணம் மெய்கண்டான் யாண்டு 733ல் நிகழும் மன்மத ஆண்டு மார்கழித் திங்கள் உஎ-ம் நாள் (11-1-1956) புதன்கிழமை மாலை மூன்றுமணிக்கு, திருவாவடுதுறை ஆதீன மடாலய கொலுமண்டபத்தில் திருமந்திர மூன்றுவது மாநாடு தொடங்கி நடைபெற்றது.

தொடக்க விழாவிற்குத் தலைமை வகித்துப்பேசிய, சென்னை நகரசபை முன்னாள் மேயர் திரு. எஸ். இராமசுவாமி நாயுடு அவர்கள் தலைமையுரையில்

*'திருமூலதேவர் திருமந்திரத்தைத் திருவாய்மலர்ந்தருளிய இத்திருவாவடுதுறையிலே திருமந்திர மாநாடு ஆண்டுதோறும் நடைபெறுவது சாலவும் பொருந்தும். இத்தகைய சீரிய முறையில் திருமந்திர விழா பிறிது எங்கும் நடைபெறவில்லை என்றே கூறுதல் வேண்டும். இன்றைய குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள் ஞானபீடத்தில் எழுந்தருளிய இந்த ஐந்து ஆண்டுகளாகத் தமிழும் சைவமும் செழித்தோங்கச் செய்துவரும் செம்மையான பணிகள் பல்லாற்றானும் சிறந்து திகழ்கின்றன. நம் குருஞான வள்ளலார் ஞானபீடம் ஏறிய பின்னரேதான் இத்திருமந்திரமாநாடு நடைபெறத் துவங்கியது.*

என்று குறிப்பிட்டிருப்பது கருதத்தக்கது.

**கொலுமண்டபம்:**

கொலுமண்டபம் மாநாட்டிற்கென அலங்கரிக்கப்பெற்றுத் தனிச்சிறப்புடன் திகழ்ந்தது. கல்லாலின்புடையமர்ந்து நான்மறை ஆறங்கங்களை அன்று சனகாதியர்கட்குச் சொல்லாமற் சொல்லி விளக்கிய ஆசாரிய மூர்த்திகளின் திருவருட்பொலிவின்வண்ணம் இப்படித்தானோ என்னுமாறு ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், முனிபுங்கவர்கள்

புடைசூழக் கொலுமண்டபத்தில் எழுந்தருளிக் காட்சி வழங்கினார்கள். திருமுன்பு சிவநேசச்செல்வர்களும் சிவயோகப்பயிற்சி மிக்க அன்பர்களும் பாவலர்களும் நாவலர்களுமாக இப்படிப் பல்லோர் ஒருங்கு கூடியிருந்தனர். ஆதீனத்து இசைப்புலவர்கள் திருமுறைமுழக்கம் செய்துகொண்டிருந்தனர். இந்நிலையில் கண்வழிபுகுந்து அனைவர் உள்ளத்தையும் ஒருமுகப்படுத்திப் பரவசப்படுத்தியது மற்றொரு காட்சி.

கொலுமண்டபத்தின்நடுவே திருவாவடுதுறைஆதீன 21வது குருமகாசந்நிதானம், தமது ஞானகுருமூர்த்திகளாகிய ஸ்ரீ முத்திபஞ்சாக்கரதேசிகசுவாமிகள் எனப்போற்றப்படும் ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திக்கு முன் கைகூப்பிய வண்ணம் தேஜோமயமாக நின்று வணங்கிக் கொண்டிருக்கும் நிலையில் எழுதப்பெற்ற ஓவியக்காட்சிதான் அது. மாநாட்டுக்கு வந்திருந்த சித்தாந்தச்சிவநேசச் செல்வர்களின் சிந்தைகளிலெல்லாம்,

**திருவடி ஞானம் சிவம் ஆக்குவிக்கும்**<br>
**திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்**<br>
**திருவடி ஞானம் சிறைமலம் நீக்கும்**<br>
**திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே**

என்ற திருமூலரது அருள்வாக்கை உபதேசிப்பதுபோல் இருந்தது அக்காட்சி.

**தொடக்கநாள்:**

11—1—56 புதன்கிழமை மாலை மூன்றுமணி. ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், தலைவரும் சொற்பொழிவாளர்களும் புடைசூழ, ஆதீனப் பிரதம நாதஸ்வர வித்துவான் நடராஜசுந்தரம் நாதஸ்வரம் வாசித்துவர, கொலுமண்டபத்திற்கு எழுந்தருளினார்கள். திருவாவடுதுறை ஆதீனத் தேவார இன்னிசைப் புலவர்கள் திரு. சுந்தரேசஐயா, திரு. சோமசுந்தரம் தேவாரபாராயணம் நிகழ்த்த, திருமந்திர மாநாடு தொடங்கியது. சென்னை திரு. எஸ். இராமசுவாமி நாயுடு அவர்கள் தலைமை வகித்தார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தலைவருக்குப் பொன்னாடை போர்த்தி, நிலைமாலை சூட்டிக் கௌரவித்தார்கள். ஆதீன மகாவித்துவானும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துத் தமிழ் ஆராய்ச்சி விரிவுரையாளருமான திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் மாநாட்டுக்கு வந்திருந்தோர்களுக்கு வரவேற்புரை வழங்கினார்கள். விழா மூன்றுநாட்களிலுமே அவர்கள் கூறிய வரவேற்புரை சமய உண்மைகள் பலவற்றை அறிந்துகொள்ளத் துணைசெய்தது.

தஞ்சை சரஸ்வதிமஹால் நூல்நிலையக் கௌரவக்காரியதரிசி திரு. S. கோபால ஐயர் அவர்கள் மாநாட்டுத் திறப்புவிழா உரை நிகழ்த்தினார்கள்.

அடுத்து, திருமந்திர மாநாட்டைப்பற்றி அறிஞர்கள் பலரிடமிருந்து வந்திருந்த வாழ்த்துச்செய்திகள் படிக்கப்பெற்றன. தருமபுர ஆதீனத்திலிருந்து அனுப்பப்பட்டிருந்த ஆசியுரையை, ஆதீனத்தின்சார்பில் வந்திருந்த வித்துவான் திரு. வி. சா. குருசாமி அவர்கள் படித்து, ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களிடம் சேர்ப்பித்தார். தலைமையுரைக்குப் பிறகு விரிவுரைகள் முறையே தொடங்கின.

காஞ்சிபுரம் உயர்நிலைப்பள்ளிக் கணித ஆசிரியர் திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்கள் முதல் தந்திரத்தில் '**உபதேசம்**' என்பது பற்றியும், ஆதீன மகா வித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் இரண்டாந்தந்திரத்தில் '**அதோமுக தரிசனம்**' என்பது பற்றியும், பாலகவி வயிநாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள் மூன்றுந்தந்திரத்தில் '**அட்டாங்க யோகம்**' என்பது பற்றியும் விரிவுரை நிகழ்த்தினார்கள். இறுதியில் பாலகவியின் திருமகளார், செல்வி மீனாக்ஷி '**குருவழிபாடு**' என்பதுபற்றிப்பேச, கடவுள்வாழ்த்துடன் அன்றைய நிகழ்ச்சி நிறைவுற்றது.

**இரண்டாம் நாள்:**

12—1—56 வியாழக்கிழமை. ஆதீன இன்னிசைப் புலவர்கள் தெய்வத்தமிழ் மறை ஓத இரண்டாம் நாள் நிகழ்ச்சி தொடங்கியது. ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அருளாணைவழி நிற்கும் திரு. எஸ். இராமசுவாமி நாயுடு அவர்கள் முதல்நாள் போலவே இரண்டாம் நாளும் விழாத்தலைமையை ஏற்று, பெருஞ்சிறப்புக்கு உரியவர்களானார்கள். தலைமையுரைக்குப்பிறகு நாலாந்தந்திரச் சிறப்பினை, '**திருவம்பலச் சக்கரம்**' என்ற தலைப்பில் சித்தாந்த சரபம், மஹா மஹோபாத்யாய சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்கள் எடுத்துரைத்து அனைவரையும் மகிழ்வித்தார்கள்.

ஆதீனவித்துவான் கடலூர் திரு. தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்கள் '**ஞானம்**' என்ற தலைப்பில் ஐந்தாந்தந்திரச் சிறப்பினையும், சென்னை, டாக்டர் திரு. தேவசேனாபதி அவர்கள் '**திருவடிப்பேறு**' என்ற தலைப்பில் ஆறுந்தந்திரச் சிறப்பினையும் எடுத்துக்காட்டி விரிவுரையாற்றினார்கள்.

**மூன்றும் நாள்:**

13—1—56 வெள்ளிக்கிழமை. இன்றைய நிகழ்ச்சிக்குத் தலைமைதாங்கிச் சிறப்பித்தவர்கள் சென்னை, அரசினர் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களும் தலைவருக்குப் பொன்னாடை போர்த்தி, நிலைமாலை சூட்டி ஆசியருளினார்கள். தலைமையுரையை அடுத்துத் திருமந்திர விரிவுரைகள் தொடங்கின. சென்னை, 'கலைமகள்' ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் ஏழாந்தந்திரத்தை '**இதோபதேசம்**' என்ற தலைப்பிலும், சென்னை டாக்டர் திரு. T. M. P. மகாதேவன் அவர்கள் எட்டாந்தந்திரத்தைச் '**சோதனை**' என்ற தலைப்பிலும், ஆதீன மகாவித்துவான் திரு. K. ஆறுமுகநாவலர் அவர்கள் ஒன்பதாந்தந்திரத்தைச் '**சூனிய சம்பாஷணை**' என்ற தலைப்பிலும் விளக்கிப் பேசினார்கள்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் நல்லாசி அருள்நோக்குடன் மாநாடு இனிதே நிறைவேறியது.

திருச்சிற்றம்பலம்.

நம்பிரான் திருமூலன்
அடியார்க்கும் அடியேன்"

—சுந்தரர்.

# தொடக்கநாள் பேருரைகள்

## திறப்புரை :

தஞ்சை சரஸ்வதிமஹால் நூல்நிலையக் கௌரவக் காரியதரிசி

**திரு. S. கோபால ஐயர் அவர்கள்** B. A., B. L.,

அட்வகேட், தஞ்சை.

திருமந்திர மகாநாட்டிற்கு எழுந்தருளி, இங்குத் திருக்கொலுவீற்றிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுக்கும், விழாவிற்குத் தலைமை தாங்கும் நமது தலைவர் திரு. இராமசுவாமி நாயுடு அவர்களுக்கும், மற்றும் இங்கு இருக்கும் பெரியோர்களுக்கும், நண்பர்களுக்கும் எனது தாழ்ந்த வணக்கம். இந்தத் திருமந்திர மூன்றும் மகாநாட்டில் திறப்புரை ஆற்ற என்னைக் குருமகாசந்நிதானம் அவர்கள் நியமித்திருக்கிறார்கள் என்று தெரிந்த உடன் நான் பெரிதும் கலக்கமுற்றேன்.

திருமந்திரம் என்பது ஒரு பெரிய கடல் என்று எனக்குத்தெரியும். அதிலும் கரையற்ற-காலவரையற்ற ஒரு பெருங்கடல். அதைப் பற்றி நான் தெரிந்துகொண்டது ஒன்றே ஒன்று; அதுதான் என்னுடைய அறியாமை. இந்நிலையில் நான் என்னசெய்யப்போகிறேன் என்று பெரிதும் கலக்கம் அடைந்தேன்.

பிறகு மற்றொரு எண்ணம் உதித்தது. என்னைப் போன்ற வழக்கறிஞர்களுங்கூடப் பெரும்பொருள் தேடி அல்லலுற்று அலைகிற வாழ்விலிருந்து, சிறிதாவது மாறுபட்டுச் சிறந்த பரம்பொருளைத் தேடிவாழும் நிலை பெற்று உய்யும் வாய்ப்பருளும் திருவுள்ளத்தோடு மகாசந்நிதானம் திருமந்திர மகாநாட்டில் பங்குகொள்ள நம்மையும் சேர்த்திருக்கின்றார்கள் போலும் என்ற எண்ணம் வந்தபோதுதான் அக்கலக்கம் நீங்கியது; தெளிவு பிறந்தது. அவர்களது பெருங்கருணைக்கு மீண்டும் நன்றி உடையவன் ஆகிறேன்,

ஆதீன மகாவித்வான் அவர்கள் வரவேற்புரை வழங்கியபோது, "நம் கோபால ஐயர் அவர்களுடைய சேவையால், சரஸ்வதிமஹால் நூல்நிலையம் அதிகப் பெருமை அடைகிறது" என்று குறிப்பிட்டு மிகவும் பெருமையாகப் பேசிவிட்டார்கள். அதுவும் எனக்குப் பெரிய நடுக்கத்தைக் கொடுக்கிறது. ஆனால் அவர்கள் சொன்னதிலிருந்து என்னால் சரஸ்வதிமஹால் நூல் நிலையம் பெருமைக்கு வந்ததாகவே காட்டும். ஆனால் பூவுடன் சேர்ந்த நாரும் மணம் பெறுமாப்போல சரஸ்வதிமஹாலுடன் தொடர்பு கொண்டதாலேதான் எனக்கும் பெருமை ஏற்பட்டதாக நான் மனத்தில் கருதுகின்றேன்.

திறப்பாளரின் வேலை மகாநாட்டிலே மிகவும் சுலபமானதுதான், மகாநாட்டில் பேசப்போகின்ற பேரறிஞர்களின் சொற்பொழிவுகளை எல்லாம் நாம் எல்லோரும் கேட்டு மகிழ்வோம் என்பதாகச் சொல்லி விட்டு உட்கார்ந்துவிடலாம்; ஆனால், தொடக்கத்திலே நான் சில பொதுவான விஷயங்களை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன்.

அன்பர்களே! இன்று நாம் காணுகின்ற யுகமானது அணுயுகம். அணுக்குண்டு யுகம் என்றுகூடச் சொல்லுவார்கள். அதாவது விஞ்ஞான முன்னேற்றத்தில் மிகவும் முன்னேறிக் கொண்டேயிருக்கும் காலத்திலே பழையகால நூல்களைப்பற்றியோ, பழையகாலப் பழக்க வழக்கங்களைப் பற்றியோ நம்மில் அனேகர் உதாசீனமாக இருப்பது சகஜமே.

ஒரு ஆங்கில எழுத்தாளர் மிகவும் அழகாக இந்தக்கால மனோபாவத்தைப் பற்றி We are in an age which is searching for supermen in their looking glasses என்று

குறிப்பிட்டிருக்கிருர். அதாவது தன்னைவிடப் பெரியவர்கள் யார்? என்று தேடுகின்ருர்கள் இப்பொழுது இருப்பவர்கள்; ஆனுல் தங்களுடைய முகம் பார்க்கும் கண்ணுடிகளில் தான், யார் பெரியவர்கள் என்று பார்க்கிருர்கள் என்று சொன்னுர்.

இதற்கு உதாரணமாகச் சமீபத்தில் வெளிவந்திருக்கும் ஒரு ஆங்கிலப் புத்தகத்திலுள்ள கருத்தை இங்கு வெளியிட விரும்புகிறேன். சென்ற யுத்தத்தில் ஆகாய விமானம் ஓட்டுவதிலேயே மிகவும் கெட்டிக்காரர் என்ற பெரும் புகழுடன் பணிசெய்த ஒருவர், "நான் உலகம் முழுவதும் சஞ்சாரம் செய்து பார்த்திருக்கிறேன்; எல்லா இடங்களுக்கும் போய் இருக்கிறேன்; இந்த உலகத்திற்கு வெளியே கூட ஒரு நகரம் இருக்குமானுல் நான் போய் இருப்பேன்; இவ்வளவு இடங்களுக்கும் நான் போய் இருந்தபோதிலும் எந்த இடத்திலும் கடவுள் எனது கண்ணில் தென்பட வில்லை; அவர் எங்குதான் இருக்கிருர் என்றே புரியவில்லை" என்பதாக அந்தப் புத்தகத்தில் குறிப்பிட்டிருக்கிருர். இதனுல் கடவுள் இல்லை என்று ஆகிவிடுமா? கடவுள் இல்லை என்ற கருத்தை மறைமுகமாக வலியுறுத்துபவர் போலவே அவர் அந்தப் புத்தகத்தில் குறிப்பிட்டிருப்பதால்தான் நான் சொல்லுகிறேன். இங்கு இருக்கும் வித்வான்களுக்கு எல்லாம் ஒரு விஷயம் ஞாபகம் இருக்கும். இதே விதமாகத்தானே காரைக்காலம்மையாரும்,

> வானத்தான் என்பாரும் என்கமற் றும்பர்கோன்
> தானத்தான் என்பாரும் தாம்என்க — ஞானத்தான்
> முன்நஞ்சத் தாலிருண்ட மொய்யொளிசேர் கண்டத்தான்
> என்நெஞ்சத் தான்என்பன் யான்.

என்று குறிப்பிடுகிருர்கள். ஆனுல் நிச்சயமாக கடவுள் இருக்கிருர் என்பதை அம்மையார் வலியுறுத்தியிருப்பதை நாம் எல்லோருமே மறந்துவிட முடியாது.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டதாகக் கூறப்படும் திருமந்திரத்திலுள்ள பல கருத்துக்கள், இந்த அணுயுகத்தில் கண்டுபிடிக்கப்படும் பல விஞ்ஞானவுண்மைகளுக்கு மிக ஒத்ததாகவே உள்ளன. இன்று நவீன விஷயங்கள் என்று எண்ணப்படுவன எல்லாம் இந்தநாட்டுக்குப் புதியன அல்ல, பண்டைக்காலத்திலே நமது முன்னேர்கள் கண்டுபிடித்த உண்மைகளே அவை என்று அறிவுறுத்துகிறதுபோல இருக்கிறது.

திருமூலருடைய திருமந்திரம் பழைய காலத்தில் ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன் எழுதப்பட்டதாகச் சொன்னபோதிலும் அதில் சொல்லப்பட்டிருக்கும் பல விஷயங்கள் நவீன விஷயங்களாகும். இப்பொழுது இருப்பவர்களுக்கு வழிகாட்டியான பெரிய தத்துவங்கள் பல அதிலே புதைந்து இருக்கின்றன. "விஞ்ஞானத்துறையிலே முன்னேற்றம் அடைந்து விட்டோம்; ஆகையால் இது நமக்குத் தற்காலத்தில் பயன்படாது" என்று நினைப்பது மிகத்தவறு. இதற்குப் பல சான்றுகள் உள்ளன.

தற்காலத்தில் ஏற்பட்டிருக்கின்ற முன்னேற்றம் வெறும் சரீர முன்னேற்றந்தான்; இன்னும் சொன்னுல் இயந்திர முன்னேற்றம்; அவ்வளவுதான். ஒரு குள்ளன், உயரமான ஒருவனுடைய தோள்மீது ஏறி உட்கார்ந்துகொண்டு, அந்த நெட்டையனைவிட நான்தான் உயரமானவன் என்று சொல்லிக்கொண்டால் அது எப்படியிருக்குமோ அவ்வாறேதான் விஞ்ஞான முன்னேற்றத்தைக்கொண்டு நாம் உயர்ந்து விட்டதாக எண்ணுவதும்; ஆனுல் நம் எல்லோருடைய வாழ்க்கையும் மிகக் கீழாகத்தான் போய்க்கொண்டிருக்கின்றது. அந்தக்காலத்தில் விஞ்ஞானத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு ஒவ்வொரு தனி மனிதனும் எவ்வாறு உயர்ந்து நின்ருன் என்பதற்குத் திருமூலர் போன்றவர்களே சான்றுகளாக இருக்கின்ருர்கள். அவர்களால்தான் நாம் இன்றைக்கும் பெருமை அடைகிருேம். அம்மகான்களால் சுற்றிவிடப்பட்ட சமூக சைக்கிள்தான் இன்றும் சுற்றிக்கொண்டிருக்கிறது என்னலாம்.



தொடக்கநாள் விழாவில்
திரு. S. கோபால ஐயர் திறப்புரை நிகழ்த்துதல்.

1936—37-ம் வருஷத்திலே சரஸ்வதி மஹால் நூல் நிலேயத்தில் ஒரு வேடிக்கை யான சம்பவம் நிகழ்ந்தது. அப்பொழுது 'India office' லண்டனில் இருந்தது. அந்தக் காரியாலயத்திலிருந்து தஞ்சை நூல் நிலேயத் தில் இருந்த பழங்கால எட்டுச்சுவடிகளின் நகல் வேண்டுமென்று அடிக்கடி பல மனுக் கள் வரும். பெரும்பாலான மனுக்களில், நம் நாட்டின் பழைய புராணங்களான பாரதம், இராமாயணம் ஆகிய நூல்களில் குறிப்பிடப் படும் சண்டைகளில் எந்தவிதமான ஆயுதங் கள் உபயோகப்படுத்தப் பட்டிருக்கின்றன; அந்தப் பகுதிகளை மாத்திரம் நகல் எடுத்து அனுப்பும்படியாகக் கேட்டிருந்தார்கள். நானும் அம்மாதிரி பல பகுதிகளை ஏட்டுச் சுவடிகளிலிருந்து எடுத்து, ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்து அவர்களுக்கு அனுப்பி வைத்தேன்.

சென்ற மகாயுத்தத்தில் பல விசித்திரமான ஆயுதங்களெல்லாம் உபயோகிக்கப்பட்டன என்பதை நாம் அறிவோம். அந்த ஆயுதங் களில் பெரும்பாலானவைகள், நம் சரஸ்வதி மஹால் நூல் நிலேயத்திலிருந்து அனுப்பப் பட்ட ஏட்டுச்சுவடிகளின் நகல்களில் குறிப் பிட்டிருந்தபடியே செய்யப்பட்டன என்ருல் யாரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். ஆனுல் அதற்குப் பிறகு என்ன நடந்தது என்பதைக் குறிப்பிட்டால் அந்த உண்மை புலனுகலாம்.

யுத்தம் ஆரம்பித்துச் சுமார் ஒருவருடம் ஆனவுடன் எங்களுக்கு வேறு ஒரு உத்தரவு வந்தது. அதாவது "இனிச் சரஸ்வதிமஹால் நூல்நிலேயத்திலிருந்து பழங்காலத்தில் இந்தி யாவில் உபயோகிக்கப்பட்ட ஆயுதங்கள் என்னென்ன என்பதை ஏட்டுச்சுவடிகளில் இருந்து மொழிபெயர்த்து யாருக்கும் அனுப் பக்கூடாது; முன்பு அனுப்பப்பட்ட மனுக் கள் எல்லாம் ஜெர்மன் தேசத்திலிருந்தே நூல் நிலேயத்திற்கு அனுப்பப்பட்டன; லண்டன் ஆபீஸிலிருந்து அனுப்பப்படவில்லே" என்று அதில் குறிப்பிட்டிருந்தார்கள்.

இதிலிருந்து என்ன தெரிகிறது? ஜெர்மா னியர்கள் லண்டன் ஆபீஸிலிருந்து எழுதுவது போல எங்களது நூல்நிலேயத்திற்குப் பல கடிதம் எழுதி எங்கள் நூல்நிலேயத்திலிருந்த பல ஏட்டுச்சுவடிகளின் நகல்களைப் பெற்றுக் கொண்டுவிட்டார்கள்; அதனை அடிப்படை யாகக்கொண்டு பல ஆயுதங்களையும் செய்து விட்டார்கள் என்பதுதான். இதனை நான் தற் போது சொன்னுலுங்கூட நீங்கள் ஒருக்கால் வேடிக்கையாக இருக்கிறது என்று எண்ணி விடலாம். ஆனுல் இதே கருத்தை, சர்ச்சில் அவர்கள் தாம் எழுதிய ஆறு புத்தகங் களிலும் வெளியிட்டிருக்கிருர். குறிப்பாக இரண்டாவது பகுதியில் (Volume II) இந்திய நாட்டுப் புராணங்களில் சொல்லப்பட்டிருந்த பல விஷயங்களைத் தெரிந்துகொண்டு ஹிட்லர் பைத்தியக்காரத்தனமாகப் பல பல ஆயுதங் களைப் பண்ணிக் குவித்துவிட்டார் என்று குறிப்பிடுகிருர்.

இப்படியாக அந்தக்காலத்தில் அறிவின் நுட்பங்கொண்டு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டே, சிந்தித்துச் சிந்தித்துப் பல உண் மைகளை நம் நாட்டிலுள்ள பல பெரியார்கள் வெளியிட்டிருக்கிருர்கள்.

"Parady" என்ற பெரிய விஞ்ஞானி ஒருவர் ஐரோப்பாதேசத்தில் இருந்தார். அவர் சாதாரணமான சிறிய குடிசையிலே இருந்த வர். அவர் பல ஆராய்ச்சிகள் செய்து பல உண்மைகளை வெளியிட்டிருக்கிருர். சிலபேர் அவரிடம் சென்று, தாங்கள் அவருடைய நூல் நிலேயத்தைப் பார்க்க வந்திருப்பதாகத் தெரிவித்தார்கள். அவர் ஒரு தட்டில் இரண்டு மூன்று கருவிகளைப் போட்டுக் கொண்டுவந்து வைத்து 'இதுதான் என்னுடைய நூல்நிலேயம்; இதைத்தவிர வேறு ஒன்றும் இல்லே' என்ப தாகக் குறிப்பிட்டார்.

இப்படித்தான் நம் நாட்டிலிருந்த பல மகரிஷிகள் அன்று மரத்தடியிலே உட்கார்ந்து கொண்டு உண்மைகளைக் கண்டு பிடித்தார் கள். இப்பொழுது ஒரு கல்லூரி ஏற்படுத்த

வேண்டுமென்ருல் பல்கலைக்கழக (யூனிவர்ஸிடி) நிர்வாகிகள், ஐந்துலட்சம் ரூபாய்கள் டெபாஸிட் கட்டவேண்டுமென்று சொல்லுகிருர்கள். அக்கல்லூரிக்கு ஒரு லாபரெடரி கட்டவேண்டும் என்று சொன்ருல் அதில் மூன்று லட்சம் ரூபாய்க்குச் சாமான்கள் வாங்கி வைக்கவேண்டும் என்று சொல்லுகிருர்கள். இன்றைக்கு நம்முடைய இந்திய நாட்டிலே பன்னிரண்டு பிரதேசங்களில் எலெக்ட்ரோ கெமிக்கல்இன்ஸ்டிட்யூட்டுகள் ஆரம்பிக்கப்பட இருக்கின்றன. அவை எதற்காக என்று உங்களுக்குத் தெரியும். ஒரு உலோகத்தை மற்ருெரு உலோகமாக மாற்றுவதற்கு மின்சார சக்தி மிகவும் அவசியம். ஆகவே மின்சார சக்தியைச் சேகரிப்பதற்காகவும், அதையொட்டி வேறு பல ஆயுதங்களையும் இயந்திரங்களையும் கொண்டு பரீட்சைகள் நடத்தவும் ஏற்பாடு செய்து வருகிருர்கள்.

ஆதிகாலத்தில் இதே விஷயங்களைப் பல சித்தர்கள் செய்யவில்லையா? எங்கள் நூல் நிலையத்தில் 'ஆனந்த நந்தன்' என்ற ஒரு புத்தகம் இருக்கிறது. அதில் பல சித்தர்கள் அந்தக் காலத்தில் எப்படி செம்பைப் பொன்னுக்கி வந்தார்கள் என்பதற்கும் பல வழிகள் கூறப்பட்டிருக்கின்றன. அந்தக் காலத்தில் பல சித்தர்கள், உட்கார்ந்த இடத்திலேயே இருந்து கொண்டு, அணுச்சக்தியின் இரகசியத்தை எல்லாம் கண்டுபிடித்து, அவற்றை எவ்வாறு வைத்திய சாஸ்திரத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம் என அறிந்தார்கள். வைத்திய சாஸ்திரத்தைப் பல துறைகளிலும் விருத்தி செய்திருக்கிருர்கள். அந்தப் புத்தகத்தில் ஆயிரம் பக்கங்களுக்கு மேல் இருக்கின்றன. நாங்கள் அதனை ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்திருக்கின்ருேம் தமிழிலும் மொழி பெயர்த்திருக்கிருேம். மூலம் சமஸ்கிருதத்தில் இருக்கிறது. "அணுவை எப்படித் துளைப்பது? எப்படி அதனைத் தயாரிப்பது?" என்பதற்குரிய பலவழிகள் அதில் நன்கு விளக்கமாகக் காட்டப்பட்டிருக்கின்றன.

ஒரு உலோகத்தை மற்ருெரு உலோகமாகச் செய்ய அவர்கள் தங்கள் சரீரத்திலேயே மின்சாரத்தை அடக்கி வைத்திருந்தார்கள். ஒரு ஆசாமியை அவர்கள் கையால் தொட்டாலேபோதும். அந்த ஆசாமி உடனே உயிர் இழப்பான்; இது நம்பக் கூடிய விஷயமாக இல்லையே என்று பலர் கேட்கலாம். இப்படியே எங்கள் நூல்நிலையத்திற்கு வந்தவர்கள் என்னிடம் கேட்டார்கள். நான் அப்பொழுது அவர்களிடம் ஒன்று கேட்டேன் "அமேசன் நதியில் மின்சாரத்தைத் தனது உடலிலேயே சேர்த்துவைத்துக்கொள்ளும் ஒருவகை மீன் இருக்கிறது என்று சொல்வதை நீங்கள் நம்புகிறீர்களா? அந்த மீன் ஒருவர் காலில்பட்டால் போதும்; அவருடைய கால் உபயோகமற்றதாக ஆகிவிடுகின்றது என்று சொல்லப்படுகிறதையும் நீங்கள் நம்புகிறீர்களா? என்று. அவர்கள் அதனை நம்புவதாகச் சொன்ஞர்கள். அதனை நம்ப முடியுமாஞல், அந்தக் காலத்தில் இந்நாட்டிலிருந்த பல சித்தர்கள் தங்கள் கைகளிலேயே மின்சாரத்தைச் சேர்த்து வைத்துக்கொண்டிருந்தார்கள் என்பதை ஏன் நம்பமுடியாது என்று கேட்டேன்.

இதைப்போல் பல உதாரணங்களை நான் உங்களுக்குக் கூற முடியும். விஞ்ஞானம் பெருமை அடைந்திருக்கிறது என்று சொல்லுகின்ருேம். விஞ்ஞானத்தின் சாரந்தான் மெய்ஞ்ஞானம். மெய்ஞ்ஞானத்தின் சாரமே திருமந்திரம் என்று சொல்லலாம். அது ஒரு பெரிய கடல். பொருள்காணமுடியாத பெரிய கடல். இதில் நான் இறங்கி வியாக்யானம் செய்ய விரும்புவது, மண் பொம்மையைக் கொண்டு கடல் ஆழத்தைக் கண்டுபிடிக்க ஆரம்பித்தது போலத்தான் ஆகும். கற்றல், கேட்டல் ஆகிய இரண்டும் வாய்ந்த பெரியவர்கள் இதில் நிறைந்திருக்கும் தத்துவங்களை எடுத்துச்சொல்லப்போகிருர்கள்.

ஆஞல் ஒரு விஷயத்தைமட்டும் இங்கு எடுத்துச் சொல்லிவிடுகின்றேன். உலகமெல்லாம் நம்முடையபெருமையை உணரவேண்டுமாஞல் - இந்தத் தேசத்திலேயே உள்ள பல

பகுதி மக்களுக்கும் தமிழர்களுடைய பழம் பெரும் நூல்கள் பயன்படவேண்டுமானால், இந்தத் திருமந்திரத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கவேண்டும். அதற்கு அறிகுறியாகவே இவ்வாண்டு இவ்வாதீனத்தின் வெளியீடாகத் திருமந்திரத்தின் சாராம்சத்தினைத் தாங்கி ஆங்கிலத்தில் ஒரு புத்தகம் வெளிவருகிறது. இது மிகவும் பாராட்டப்படவேண்டியதான விஷயம். திருமந்திரமாகிய பழத்திலுள்ள சாற்றைப் பிழிந்து கொடுப்பதுபோல அப் புத்தகம் ஆங்கிலத்தில் மிக அழகாக எழுதப் பட்டிருக்கிறது.

திருமூலரைப்பற்றி நமக்கு எவ்வளவு தெரியுமோ அவ்வளவுதான் அதன் சாராம் சத்தை ஆங்கிலத்தில் எழுதியவரைப்பற்றியும் தெரிகின்றது. இப்புத்தகத்தில் அவரைப்பற்றி யாதொன்றும் குறிப்பிடப்படவில்லை. பெயர் வெளியிடவேண்டாம் என்று அவரே சொல்லி விட்டார்கள் என்று அறிகிறேன். அதை எழுதியவர் யாராக இருந்தபோதிலும், அவர் தமிழையும் ஆங்கிலத்தையும் கரைத்துக் குடித்த பெரியாராகத்தான் இருக்க வேண்டும் என்பது அதிலுள்ள பலபகுதிகளைப் படித் துப் பார்ப்பதிலிருந்தே நமக்குத் தெரிகிறது. விஞ்ஞான ஆராய்ச்சிக்குச் சாதகமான பல விஷயங்கள் திருமந்திரத்தில் இருக்கின்றன. ஆண்டுதோறும் இங்கு நடக்கப்போகும் திருமந்திர மாநாடுகளைப் போலவே, திருமந் திரத்திலுள்ள பல கருத்துக்களும் நூல்வடி வாக இவ்வாதீனத்திலிருந்து வெளியிடப்படும் என்று நான் கருதுகிறேன்.

இவ்வாதீனமும், ஆதீனத்தின் 21-வது குருமகாசந்நிதானமாக இங்கே வீற்றிருக்கின்ற குருமூர்த்திகள் அவர்களும் சைவத்திற்கும் தமிழகத்திற்கும் செய்துவருகிற சேவைகள் பாராட்டுதலுக்கு உரியன. இதே பணியை அவர்கள் தொடர்ந்துசெய்து, உலக மக்கள் யாவரும் உய்ய வழிகாட்டுவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. இம்மாநாட்டிலே கலந்து கொள்ள எனக்கும் ஒரு வாய்ப்பு அளித் தமைக்கு எனது மனப்பூர்வமான நன்றியைக் குருமகா சந்நிதானத்திற்கு மீண்டும் தெரிவித் துக்கொண்டு எனது பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

*" ஊனுடம்பின் பிறவிவிடம் தீர்ந்துலகத் தோர்உய்ய*
*ஞானமுதல் நான்குமலர் நல்திருமந் திரமாலை*
*பான்மைமுறை ஓராண்டுக்கு ஒன்றாகப் பரம்பொருளாம்*
*ஏனஎயி றணிந்தாரை ஒன்றவன்தான் எனஎடுத்து "*

*" முன்னியஅப் பொருள்மாலைத் தமிழ்மூவா யிரம்சாத்தி*
*மன்னியமூ வாயிரத்தாண்டு இப்புவிமேல் மகிழ்ந்திருந்து*
*சென்னிமதி அணிந்தார்தந் திருவருளால் திருக்கயிலை*
*தன்னில்அணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார் "*

*—திருமூலர் புராணம்.*

தலைமையுரை :

## திரு. எஸ். இராமசுவாமிநாயுடு அவர்கள்

முன்னுள்மேயர், சென்னை.

திருக்கயிலாய பரம்பரை வழித்தோன்ற லாம் திருவாவடுதுறை ஆதீனத்தின் இருபத் தொன்ருவது குருஞானப் பெருந்தகையாராக எழுந்தருளியிருந்து, சைவச்செங்கோல் ஓச்சித் திருவருள் பாலிக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பொன்னுர் திருவடிகளுக்கு அடியேன் தலைவணங்கித் தாழ்மையுடன் விண்ணப்பித்துக் கொள்ளும் நனிகலந்த வணக்கம். இத்திருமந்திர மாநாட்டில் பங்கு கொள்ளவந்திருக்கும் சித்தாந்தச்செந்நெறியும் சிவயோகப் பயிற்சியும் மிக்க பெருமக்கள் அனைவருக்கும், மற்றும் உள்ள சீரடியார் கட்கும் அடியேனுடைய மிகத்தாழ்மையான வணக்கம் உரியதாகுக.

அடியேனுக்கு இந்த நாள் ஒரு தெய்வத் திருநாள்; புனிதம் நிறைந்த பொன்னுள்; மறைகின்ற ஞான்றும் மறக்க முடியாத ஓர் பெருநாள் ; மூலபண்டாரத்தை வந்தித்து வாழ்த்துகின்ற முதல்நாள்.

இந்த மூன்ருவது திருமந்திர மாநாட்டு விழாவிற்குத் தலைமை தாங்குக என்று ஆணை பிறந்தது. ஏதும் அறியாமல் திகைத்தேன்: மயங்கினேன்; அச்சம் கொண்டேன். ஏன்? அரிய திருமந்திரத்திற்குப் பேருரை காண, சிவயோகப் பயிற்சியாளரும், சைவசித்தாந்தப் பெருநெறியை முற்றிலும் உணர்ந்தோரும், வடமொழிப் பயிற்சி வல்லுநரும், தமிழ் இலக்கண இலக்கியம் கற்று உணர்ந்த அறிஞரும், மற்றும் பிறவகையில் பெரும்புலமை வாய்ந்த ஆன்ருேர்களும் முன்னின்று முயன்றுகொண்டிருக்கின்றனர். இந்நிலையில் அடியேன் இப் பொறுப்பினை எவ்வாறு ஏற்று ஆற்றுதற்கு இயலும் என்ற உணர்ச்சி என்னைப் பெரிதும் கவ்விக்கொண்டது. பிறகு ஒருவாறு தேற்றம் கொண்டேன்; தெளிந்தேன். முன்பிறவியில் செய்த முது தவத்தின் பயனே போலும், இப்பிறவியில் பெறுதற்கு அரியதாகிய பெரும் பேறு பெற்றேன் என எண்ணி மகிழ்ந்தேன். ஆண்டவனுடைய அருளால் நம் குருஞான மணிகளார் அடியேனை ஏழையன் என்றும் எண்ணுது ஏற்று அருள் பாலித்தனர்,

திருமூலதேவர் வாழ்ந்தருளிய இத்திருவாவடுதுறையிலேயே திருமந்திரமாநாடு ஆண்டு தோறும் நடைபெறுவது சாலப் பொருத்தம். இத்தகைய சீரிய முறையில் திருமந்திரவிழா பிறிது எங்குமே நடைபெறவில்லை என்றே கூறுதல் வேண்டும். ஆகவே அடியேனுக்குப் பேசும் வாய்ப்புக் கிடைத்ததும் திருவருட் பேறே என்னலாம்.

*" திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்*
*பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்*
*குருவடி விற்கண்ட கோனைஎம் கோவைக்*
*கருவழி வாற்றிடக் கண்டுகொண் டேனே "*

என்ற பாசுரம் அடியேனுடைய நினைவுக்கு வருகிறது. திருவடிப்பேறு பெற்றமையினுலே அடியேன் திருவடிஞானமுங்கூடச் சிறிதளவு பெற்றேன் என்று சொல்லலாம்.

அப்பர்சுவாமிகள், " பன்னிய செந்தமிழ் அறியேன் " என்று கூறுவாராகில் அடியேன் போன்றவன் தமிழின் அருமை பெருமை அனைத்தையும் எங்ஙனம் அறிதல்கூடும்? தண்ணுர் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டானுகிய சிவபெருமான் தமிழ் இன்பம் பெறவேண்டி, அப்பருக்கும், சம்பந்தருக்கும் மிழலையம்பதியில் நாள்தோறும் பொற்காசு அருளித் தமிழ் மாலை சூடி, அவ்விருவர்களின் உள்ளக் கோயிலையும் தனக்கே உறைவிடமாக்கிக் கொண்டார் என்று சேந்தனுர் பாடுகிருர் :—

*" பாடலங்காரப் பரிசில் காசருளிப்*
*பழுத்தசெந் தமிழ்மலர் சூடி*
*நீடலங்காரத் தெம்பெரு மக்கள்*
*நெஞ்சினுள் நிறைந்து நின்ருனை "*



ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்
தொடக்கநாள் விழாத்தலைவர்
திரு. S. இராமசுவாமிநாயுடு அவர்களுக்கு ஆசி அருளுதல்.

இத்தகைய அருந்தமிழை - தமிழன்னையை ஆர்வத்திலே நம்முன்னோர் இவ்வாறு சிறப்பித்துள்ளனர். திருமந்திரம் எனப்படும் தமிழ் மூவாயிரத் திருமுறையை அறிய வேண்டும் என்ற அடியேனுக்கு இருந்த காதல் வேட்கை தான் சிறிதளவு பேசுவதற்குத் துணை செய்கின்றது. மேலும், துறைசையும் தருமையும் அடியேனுடைய தாயகம். அடியேனுக்குள்ள தமிழ்ப்பற்றினையும், சைவப் பற்றினையும், அன்பு நீர் பாய்ச்சி வளர்த்த திருமடங்கள். தாயினும் சாலப்பரிந்து பாவியேனுடைய ஊனினை உருக்கி, உள் ஒளிபெருக்கி ஆட்கொண்ட இடங்கள் அவையே.

திருமூலரே, இறைவன் தமது புகழைத் தமிழிற் புலப்படுத்துமாறே தன்னைப் படைத்தான் என்று கூறுகிறார்.

*'' என்னை நன்றாக இறைவன் படைத்தனன்*
*தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே ''*

என்கிறார். அடியேன் பேசப்புகும் சொற்களின் குற்றம் குறைகளைக் களைந்து நல்லனவற்றை நாடிக்கண்டு சிவஞானச்செல்வர்கள் நல்லாசி வழங்கும்வண்ணம் வேண்டுகிறேன்.

திருமூலநாயனார் தமது சிவாநுபவத்தில் கண்டவாறு திருவாய்மலர்ந்தருளிய அரும் பெரும் சிறப்பினை உடையது; மேலும் தமிழ் உலகிற்கு இருகண்மணிகள் போன்று, அரிய பெரிய தத்துவப்பொருள் நிறைவினை எல்லாம் தன்னுள் ஒருங்கே கொண்டு, உயர்வு ஒப்பு உளது எனக் கூறுதற்கு அரியதாய் விளங்குவது திருமந்திரம். இத்திருமந்திரத் திருமுறையினிடத்து நீடித்த காலமாய் அடியேன் வைத்திருந்த சிற்றறிவின் பெரும்பற்றே அறிஞர் பெருமக்களாகிய உங்கள் திருமுன்னிலையில் நின்று, பேருரை காண்பதற்குப் பேரருள் நோக்குப் பாலித்தருள்க என்று குருமகா சந்நிதானம் அவர்களை வேண்டிக்கொள்ளப் பிடர் பிடித்து உந்தியது. அத்திருமந்திரப் பேருரை யாற்றுதற்கு வேண்டுவன விரைவில் நிகழும் என்பது உறுதி.

சமயச்சார்பற்றது நமது தேசம். எம்மதமும் சம்மதமே என்ற ஒரு பொதுநோக்கினைக் கொண்டது நம் அரசு. ஆகவேதான், பண்டு திருமடங்கள் செய்த திருப்பணியை இன்றும் இடையறாது செய்ய முற்படுகின்றன. சைவமும், தமிழும் தழைத்தினிது ஓங்க ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னர் இந்தத் திருமடத்தில் ஆசாரிய ஞானபானுவாக விளங்கியருளிய ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் தேடிவைத்த அருள் விளக்கம் நம் தெய்வத் தமிழ் உலகத்தைச் செந்நெறியில் நிலைக்கச்செய்து வருகின்றது.

இன்றைய இருபத்தோராவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் ஞானபீடத்தில் எழுந்தருளியான ஐந்து ஆண்டுகளாகத் தமிழும், சைவமும் செழித்தோங்கச் செய்து வரும் செம்மையான பணிகள் பல்லாற்றானும் சிறந்து திகழ்கின்றன என்று சொல்லலாம்.

பக்தசிரோமணிகள் உய்யும்வண்ணம் நம் ஞானசாத்திரங்கள் யாவற்றையும் அச்சிட்டு இலவசமாகவே வழங்கி அருளுகின்றார்கள். அவர்கள் திருவுள்ளத்துச் சுரக்கின்ற அன்பும், அருளும் சிவநேசச் செல்வர்களைச் சூழ்ந்து நிற்கின்றன. அரன் நாமத்தை நாள்தோறும் அனைவரும் நவின்று போற்றிப் பணியுமாறு செய்துவருகின்றனர்.

அருந்தமிழ் மூவாயிரம் அருளிய திருமூலதேவநாயனாருக்கு, ஆண்டுதோறும் நிகழ்கின்ற திருநாளில் தனிச்சிறப்புச் செய்யப்பெறுகிறது. நம் குருஞான வள்ளலார் ஞானபீடம் ஏறிய பின்னரே இத்திருமந்திரமாநாடு நடைபெறுதற்குத் துவங்கியது. இனிமேல் இந்த மாநாடு தொடர்ந்து நடைபெறும். இத்திருவிழாவிலே எளியவரும் இனிது படித்து அறிந்து உவக்கும்வண்ணம் ஆங்கிலம், தமிழ் முதலாய மொழிகளில் அற்புத வெளியீடுகள் ஆக்கித் தந்துள்ளனர்.

திருமுறைகள் பன்னிரண்டில் பத்தாவது திருமுறையாகத் திகழ்வது தமிழ் மூவாயிரம்

என்ற திருமந்திரம் ஆகும். திருத்தொண்டத் தொகையில் நம்பியாரூரர் திருமூலமுனிவரை,

*" நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன் "*

என நாவார இசைத்து உள்ளம் உருகிப் பரவியிருக்கின்றனர். "நம்பிரான் திருமூலன்" என்று சிறப்பு அடைமொழி தந்து பாடியிருக்கும் பெருமை போற்றுதற்கு உரியது. இதனுல் திருமூலர் ஞானகுரவர் என்பதை நன்கு உணரலாம்.

நம்மனேர்க்குக் கிடைத்துள்ள செந்தமிழ் ஞான நூல்களுள், திருமூலர் திருமந்திரம் ஒன்றே பழைமையும், புகழும் வாய்ந்தது. அதன்பின் ஞானமிர்தம், சிவஞானபோதம் முதலிய அடுத்து அமையற்பாலன, திருமந்திரம் ஆகமசாரம்; முதலில் ஆகமங்கள் ஒன்பது வகையாகப் பாகுபடுத்தப்பட்டு, பின் அவற்றிலிருந்து இருபத்தெட்டு ஆகமங்கள் விரிந்து தோன்றலாயின என்பது,

*" ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு "*

என்னும் திருமூலர் திருமொழியினுல் நன்கு விளங்குகின்றது. திருமந்திரம் உயரிய மந்திர நூல்.

வேதம் என்னும் ஞானநூலும் இறை இயல்பு உணர்த்தும் இறைவன் நூல்களே யாயினும் முறையே அவை பொது எனவும் சிறப்பு எனவும் கொள்ளப்பட்டன. ஆயினும் இவ்விருவகை நூலின் பொருள் ஒருமை காணும் அருட்பெரியோர்க்கு விழுமிய நோக்க மெல்லாம் ஒன்றேயாம்.

*" வேதமொ டாகமம் மெய்யாம் இறைவன்நூல்*
*ஓதும் சிறப்பும் பொதுவுமென் றுள்ளன*
*நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்*
*பேதம(து) என்பர் பெரியோர்க்(கு) அபேதமே "*

என்னும் திருமந்திர மெய்யுரைகளாலேயே இனிது விளங்காநிற்கும்.

மந்திரம் என்பதற்குத் தன்னை மனத்தினுல் நினைப்பவருக்குத் துன்பத்தை நீக்கி இன்பம் தருவது என்று பொருள் உரைப்பர். மந்திரம் என்னும் சொல் வடமொழியில் "திரண்டு வடிவம் எடுத்த கருத்து" எனப் பொருள்படும். எனவே, இடையரு நினைப்பினுல் புந்தியில் நிகழும் ஆழ்ந்த உண்மைத் தோற்றங்களே மந்திரங்களாகற்பாலனவாம்.

ஆரூரருக்குப் பின்னர்த் தோன்றிய நம்பியாண்டார் நம்பியும், திருமூலரைப் "பிரான்" என்று வியந்து போற்றுகின்றதோடு அவரது வரலாற்றையும் விளக்குகின்ருர் :

*" குடிமன்னு சாத்தனூர்க் கோக்குலம்*
*மேய்ப்போன் குரம்பைபுக்கு*
*முடிமன்னு கூனற் பிறையாளன்*
*றன்னை முழுத்தமிழின்*
*படிமன்னு வேதத்தின் சொற்படி*
*யேபரவிட்(டு) என்உச்சி*
*அடிமன்ன வைத்த பிரான்மூல*
*னுகின்ற அங்கணனே "*

இங்ஙனம் சுருக்கமாகக் கூறிய வரலாற்றினைச் சேக்கிழார் பெரியபுராணத்தில் விளக்கமாக எடுத்து ஓதியுள்ளார்,

திருமுறைகளுக்கு எல்லாம் காலத்தால் முற்பட்டது "தமிழ் மூவாயிரம்". அங்ஙனமிருக்க அதனைப் பத்தாவது திருமுறையாக அமைக்கத் திருவருள் நம்பியாண்டார் நம்பிகளை இயக்குவானேன் என்ருல் அது கி. பி. 13-ம் நூற்ருண்டில் மெய்கண்ட சிவாசாரிய சுவாமிகளால் செய்யப்பட்ட சிவஞானபோத நூலை நோக்க வெளியாம்.

சிவஞானபோதப் பன்னிரண்டு சூத்திரங்களும், பன்னிரண்டு அமைப்பைப் பொருந்தியிருக்கின்றன. பிரமாணவியலில் கூறப்பட்ட மூன்று சூத்திரங்களும் முதல் மூன்று திருமுறைகளையும், இலக்கணவியலில் கூறப்பட்ட மூன்று சூத்திரங்களும் 4, 5, 6 திருமுறைகளையும், சாதனவியலில் கூறப்பட்ட மூன்று சூத்திரங்களும் 7, 8, 9 திருமுறைகளையும், பயனியலில் கூறப்பட்டுள்ள மூன்று சூத்திரங்களும் 10, 11, 12 திருமுறைகளையும் பொருந்த அமைந்துள்ளமை உணரத்தக்கது.

சிவஞானபோதம் பத்தாஞ்சூத்திரமாகிய,

*'' அவனே தானே யாகிய அந்நெறி*
*ஏகனுகி இறைபணி நிற்க*
*மலமாயை தன்னெடும் வல்வினை இன்றே ''*

என்பது,

*'' ஊனுடம்பின் பிறவிவிடம் தீர்ந்துலகத்தோருய்ய*
*ஞானமுதல் நான்குமலர் நல்திருமந்திரமாலை ''*

என்று சேக்கிழார்பெருமான் திருமூலநாயனுர் புராணத்தில் கூறியதற்கு இணங்கவே அமைந்துள்ளது. தமிழ் மூவாயிரத்தின் பொருள் அமைதியை நோக்கியே நம்பியாண்டார்நம்பிகள் திருமந்திரத்தைப் பத்தாம் திருமுறையாகத் தொகுத்து அமைத்துள்ளார் என்று போதருகின்றது.

'' தமிழ் மூவாயிரம் '' என்பதே திருமூலர் நூலுக்கு இட்ட பெயர் எனத் தெரிகிறது.

*'' மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ் ''*

என்ற சிறப்புப்பாயிரச் செய்யுளானும்,

*'' முன்னிய அப்பொருள்மாலை*
*தமிழ் மூவாயிரம் சாத்தி ''*

என்ற சேக்கிழார்பெருமான் திருவாக்கானும் அறியலாம்.

பழைய வரலாற்று வழக்கினைக்கொண்டு பார்க்கும்பொழுது மூலனுடைய உடலிற் புகுந்தபின் செய்யப்பட்டது தமிழ் மூவாயிரம் ஒன்றே. இது நிகழ்வதற்கு முன்னம் உபதேசம் முப்பது, மந்திரம் முந்நூறு என்ற இரண்டு நூல்களைச் செய்துள்ளார் திருமூலர். அவ்வாறிருக்க இதற்குமட்டும் திருமந்திரம் எனப் பெயர் வருவானேன் என்னின்,

*'' நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
*மறைமொழி தானே மந்திரம் என்ப ''*

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு இணங்க, நிறைமொழி மாந்தராகிய திருமூலநாயனுரால் சிவபெருமானது திருவருட்குறிப்பு என்னும் ஆணையால் மறைபொருள் கூற்றுக் களையுடைய செய்யுட்களால் தமிழ் மூவாயிரம் ஆக்கப்பட்டிருப்பதால் '' மந்திரம் '' என இது பெயர்பெற்றது.

திருமூலதேவநாயனுருடைய வரலாற்றில் சேக்கிழார்பெருமான், ''நந்தி திருவருள் பெற்ற நான்மறை யோகிக ளொருவர் '' '' அணிமாதி வருஞ்சித்தி பெற்றுடையார் '' ''தவமுனிவர்'' '' சைவநெறி மெய்யுணர்ந்தோர் '' என்று கூறுமற்கூறுகிறுர்.

தமிழ் மூவாயிரத்தின் சிறப்புப்பாயிரச் செய்யுளில்,

*'' தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்*
*சுந்தரன் ஆகமச் சொன்மொழிந் தானே ''*

என்று கூறப்பட்டிருப்பதால், திருமூலருடைய இயற்பெயர் '' சுந்தரநாதர் '' என்று அறியக் கிடக்கின்றது.

திருமூலருடைய கால ஆராய்ச்சி இன்னும் முற்றும் முடிந்தபாடில்லை. ஏழாம் நூற்றுண்டுக்கு முன்னரும் போகும் என்று ஒரு சாரார் கூறுகின்றனர். பிறிது ஒரு சாரார் கி. மு. 2100-க்கு முன்னர் இருக்கவேண்டும் என்று வரையறுக்கின்றனர். ஆயின் இவ்வாராய்ச்சியில் அடியேன் ஈடுபடுதற்கு விரும்பவில்லை.

*'' தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்*
*ஒப்பில் எழுகோடி யுகம் இருந்தேனே ''*

*'' இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி ''*

என்ற திருமந்திரப்பாடல்களின் பகுதிகளால் பல்லாண்டு இவர் உயிர் வாழ்ந்தனர் என்பது மட்டும் தெளிவு.

*'' சந்ததமும் இளமையோடு இருக்கலாம் ''*

எனத் தாயுமானுர் கூறியது கருதற்பாலது.

திருமூலதேவர் பொன்னம்பலத்தையும் சிலபாடல்களில் கூறியுள்ளமையான் தில்லைமாநகரில் அந்த அம்பலம் அமைக்கப்பெற்ற பின்னரே இந்நூலை இயற்றியிருத்தல்வேண்டும்

என்பது ஒருதலை. தில்லையம்பலத்தில் கூத்தப் பெருமானுக்கு அம்பலம் அமைத்து அதற்குப் பொன்வேய்ந்தவன் கி. பி. ஐந்தாம் நூற்ருண்டிலிருந்த பல்லவ வேந்தனுகிய சிம்ம வர்மன் ஆவன். எனவே தில்லைப் பொன்னம்பலத்தைத் தம் நூலில் கூறியுள்ள திருமூல நாயனுர் கி. பி. ஐந்தாம் நூற்ருண்டின் பிற்பகுதியிலாதல் ஆரும் நூற்ருண்டிலாதல் இந்நூலை இயற்றியிருத்தல் வேண்டும் என்பது நன்கு துணியப்படும் என்று அண்ணுமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் ஆராய்ச்சி விரிவுரையாளர் சதாசிவ பண்டாரத்தார் அறுதியிட்டுக் கூறுகிருர்.

இன்னும் பலர் பலவாறு சாற்றுகின்றனர். எங்ஙனமாயினும், திருமந்திர நூலின் பழமையையும் பெருமையையும் அடியேன் போற்றுகிறேன். ஔவையார் பாடியுள்ள,

> *''தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்*
> *மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை*
> *திருவா சகமும் திருமூலர் சொல்லும்*
> *ஒருவாசகம் என்று உணர்''*

என்பதிலிருந்து திருக்குறள், திருநான்மறை, தேவாரம், முனிமொழி, திருக்கோவையார், திருவாசகம் இவையெல்லாம் உயரிய - ஒத்த - இணையிலா உண்மைப்பொருள் ஒன்றையே குறிப்பன எனக்கொள்ளலாம்.

திருமூலரது திருமந்திரத்தில் உள்ள தந்திரங்கள் ஒன்பது.

முதல் தந்திரத்தில் மெய்யுணர்ச்சிக்குச் சாதனமாக அமையும் நல்லொழுக்கு நிலைகளை வற்புறுத்தும் பாக்கள் அடங்கியுள்ளன.

இரண்டாம் தந்திரத்தில் சைவ புராணங்களிலும் ஆகமங்களிலும் பண்டைய இதிகாசங்களிலும் வழங்கும் இன்றியமையாத சிற்சில சரிதங்களின் மெய்ப்பொருள் உணர்த்தப்பெறுகின்றன. கடவுளினது ஐந்தொழிலும் ஆன்மாக்களினது கூறும், கடவுளை வழிபட்டு உய்யும்வழியினிடத்து உண்டாகின்ற வழுஉக்களும் ஒருவாறு இதில் விளக்கப்பட்டு உள்ளன.

மூன்ரும் தந்திரம் யோகத்தின் வழியையும், பேறுகளையும், சாதனங்களையும், சித்திகளையும் கூறுகின்றன.

நான்காம் தந்திரம், பேரறிவிற்குத் தலைமைச் சாதனமாகிய மந்திர யோகத்தின் பிரிவுகளையும், அப்பிரிவுகளைப் பற்றும் உபாசனை வேற்றுமைகளையும், அந்த வேற்றுமைகளையடுத்து அகவுணர்ச்சி எய்தும் திரிபுகளையும் விளம்பும்.

ஐந்தாம் தந்திரம், சைவசமயத்தின் பகுதிகளையும், பாதங்களாகிய படிகளையும், மார்க்கங்களாகிய வழிகளையும், அந்த வழிகளின் இறுதி நிலைகளையும், கடவுளின் அருட்டிருமேனி ஆன்மாக்கள் தோறும் பதியும் பல முறைகளையும், ஒதுக்கற்பாலனவாகிய சமயப் பாகுபாடுகளையும் பகர்கிறது.

ஆரும் தந்திரம், சமய நெறி நிற்க முந்துவோர் குருவின்திருவருள் எய்திப் பிற பற்றுக்கள் அற்றுத் தவநெறி கடைப்பிடித்தற்கான தெளிவுநிலைகளை விளக்குகிறது.

ஏழாம் தந்திரம், அத்தெளிவு கைவந்த சீரியோரை அகவழிபாடு புறவழிபாடுகளாகிய அருட் பழக்கத்தில் நேரே இறக்கிப் பழகச் செய்து, அந்நிலையில் உறும் இடையூறுகளைக் களைந்து தனது நிலையில் நிற்கும் ஆற்றலையும் அறிவிக்கின்றது.

எட்டாம் தந்திரம், ஆகமாந்தத்தின் நுண்ணிய அகவுணர்ச்சிபழகக் கருவிகளாகிய பதினெட்டவத்தைகள், ஆறத்துவாக்கள் முதலியவற்றின் இலக்கணங்களையும், அவ்வுணர்ச்சி பெருகப் பெருகத் தழைக்கும் மெய்ப்பேறுகளின் பாகுபாடுகளையும், அப்பேறுகளைப் பெறும் தவங்களில் நேரும் இடையூறுகளினின்றும் நீங்கி அடையும் துறைகளையும் வெள்ளிடைமலைபோல் விளக்குகின்றது.

ஒன்பதாவது தந்திரம் இறுதித்தந்திரம். பஞ்சாக்கரத்தின் உட்பிரிவுகளையும், அவைகளின் மெய்ப்பொருள்களையும், அம்மெய்ப் பொருள்களை ஊன்றி இடைவிடாது நினையும் ஆன்மாவினது அகவுணர்ச்சி மேலீட்டினால் அவ்வான்மாவின் புந்தியிற் பொழியும் இறைவனது இன்னருட் பெருவெள்ளத்தின் தன்மைகளையும், அத்தன்மைகளைச் சார்ந்து அந்தப் பேரின்பவீட்டை அணுகும் அவ்வான்மாக்களுக்குப் புலப்படும் பற்பல காட்சிகளையும், பேரின்பவீட்டின் இறுதி இயக்கத்தையும் உரைத்து முடிக்கிறது இப்பகுதி.

திருமந்திரத்தில் காணப்படுகிற தந்திரம் ஒவ்வொன்றிற்கும், அத்தியாயங்கள் அநேகம் உள. அந்த அத்தியாயங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விஷயத்தை விளக்க அமைந்ததாயினும், அவ்விஷய வரம்பு மீறாது, அவ்வத்தியாயம் முடிவு பெறுதல் மிகவும் அரிது. காரணம் என்னையோவெனில் திருமூலர் துறையற்ற திருவருட்பெருஞ்சோதியை அகக்கண் கொண்டு கண்டு, பேரின்பவீட்டு வெள்ளத்தில் மூழ்கியவராதலானும், சாதன முறைகளிலும், சோதனை நெறிகளிலும் இடையறாப் பயிற்சியினால் எள்ளளவேனும் குழப்பமின்றி உழந்து முப்பதார்த்தங்களின் இயற்கைகளை நனவு கனவு துயில் என்னும் மூன்று நிலைகளிலும் ஒருங்கே உற்று நோக்கி உணர்ந்தவராதலானும், மெய்யுணர்வின் மேலீட்டினால் பொய்யுணர்வின் வெறுமையினின்றும் அகன்றவராதலானும் அவர் தாம் பகரப்புகும் ஒவ்வோர் அத்தியாயவிடயத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உரைக்கவேண்டி வெள்ளனச் சுருக்கமாய்க் கூறி முடிப்பதுமன்றி, அவ்விடயத்தின் இறுதிப்பயனையும், அவ்விடயத்தைச் சார்ந்து ஒழுகும் ஏனைய விடயங்களின் தொகுதியையும் பயனையும் சொல்லாமல் விடுவதில்லை.

*'' வழுதலை வித்திடப் பாகல் முளைத்தது*
*புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது*
*தொழுதுகொண் டோடினர் தோட்டக் குடிகள்*
*முழுதும் பழுத்தது வாழைக் கனியே ''*

என்று ஒரு பாடல் உள்ளது.

சாதாரணமாக இதற்குப் பொருள் பார்த்தால் வழுதலை வித்திட அதாவது கத்தரிவிதை போடப் பாகல் முளைத்தது என்றும், புழுதியைத் தோண்டினேன் பாகல் பூசணியாக மாறிப் பூத்தது என்றும், இதனைக்கண்டு அஞ்சி அந்தத் தோட்டக்காரர்கள் ஓடிவிட்டார்கள் என்றும், பிறகு பார்த்தால் அது பூசணியும் அல்ல வாழைக்கனியாகப் பழுத்து நின்றது என்றும் பொருள் கொள்ளப்படும். ஆனால் இதன் உண்மைப்பொருள் என்ன என்று சிறிது பார்த்தால் அந்தப் பாடல் எவ்வளவு நேர்த்தியாக அமைக்கப்பட்டு இருக்கிறது என்பது விளங்கும்.

வழுதலை வித்திட என்றால் யோகாப்பியாசம் செய்ய என்று பொருள், பாகல் முளைத்தது என்றால் வைராக்கியம் பிறந்தது என்றும் புழுதியைத் தோண்டினேன் என்றால் தத்துவ ஆராய்ச்சிகளைச் செய்ய என்றும், பூசணி பூத்தது என்றால் சிவம் வெளிப்பட்டது என்றும், தோட்டக்குடிகள் ஓடினர் என்றால் இந்திரியாதி விடயங்கள் அதனைக் கண்டு ஓட்டம் பிடித்தன என்றும், வாழைக்கனி என்றால் ஆன்மலாபம் என்றும், முற்றும் பழுத்தது என்றால் நன்றாகச் சித்தித்தது என்றும் பொருள் கொள்ளப்படும்.

*'' தட்டான் அகத்தில் தலையான மச்சின்மேல்*
*மொட்டா யெழுந்தது செம்பால் மலர்ந்தது*
*வட்டம் படவேண்டி வாய்மை மடித்திட்டுத்*
*தட்டான் அதனைத் தகைந்து கொண்டானே ''*

இதில் தட்டான் என்றால் ஜீவன் என்றும், அகத்தில் என்றால் உடம்பில் என்றும், மச்சின் மேல் என்றால் கபாலத்தில் என்றும், மொட்டாய் என்றால் அரும்பைப்போல என்றும், செம்பால் என்றால் செம்மைத்தன்மை என்றும், வட்டம் என்றால் பிரணவம் என்றும், வாய்மை என்றால் பஞ்சாக்கரம் என்றும், அதனை என்பதற்கு அந்த அமுதப்பாலை என்றும், தகைந்து கொண்டான் என்றால் தடுத்துத் தன்னுடையதாக்கிக் கொண்டான் என்றும் பொருள் வைத்துப் பார்த்தால் இதன் அருமை நன்கு விளங்கும்.

இப்படியாகத் திருமூலர் கூறியுள்ள அரிய உண்மைகள் எல்லாச்சமயத்தினர்களும் எத்தகைய வேறுபாடும் இன்றி எஞ்ஞான்றும் நினைவிற்கொண்டு ஒழுகத்தக்க பொதுவான அறிவுரைகளாகும். திருமந்திரத்திற்கு முழுதும் இஞ்ஞான்றும் எவரும் பேருரைகள் கண்டாரில்லை; எனினும் சமயஞானப் பயிற்சி மிக்க பேரறிவாளர் ஒரு சிலர் ஒரு சில நூறு பாடல்களுக்குப் பேருரை வரைந்து சென்றுள்ளனர்.

அடியேனுடைய சிற்றறிவுக்கு உண்மை ஏதும் விளங்கவில்லை. விளங்க வேண்டின், குருவினிடத்து உபதேசம் பெற்று, சமயத் துறையில் நின்று முறைபோகிய முனிவர்கள் திருவடிகளைத் தொழுது, பலநாள் தவம் கிடந்து பாடம் கேட்கவேண்டும். இல்லையாயின் முற்றிலும் அறிவது கடினமே.

ஆதீனச் சார்பில் அமைந்துள்ள நூல் நிலையத்தில், யோகாப்பியாசத்தைப் பற்றிய நூல்கள் பல இருக்கின்றன. அவற்றை மொழிபெயர்த்து வெளியிடுவது நன்று. திருவருளின் பயனால், இந்த ஆதீனத்தின் பேராதரவில் பெரும்புலவர்களும், வித்துவான்களும், மகாவித்வான்களும், முழுத்த முதிர்ந்த சிவஞானம் பெற்றவர்களாகத் திகழ்கின்றார்கள். இவர்களிடத்துப்பெரும்பொறுப்பையளித்து ஞான முதிர்ந்த பெரியவர்கள்பால் சென்று, அவர் தம்முடன் இருந்து, அறிந்து, மெய்ப்பொருள் பெற்று அதன்பயனைத் திருமந்திரத்திற்குப் பேருரை காணுமாறு செய்திடல் வேண்டும். குறிப்பாக மகாவித்வான் தண்டபாணி தேசிகரவர்களும், வித்துவான் ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்களும். த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள் ஆவர்.

சிறப்பாக, த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இடையறாது செம்மையாகவும், செழுமையாகவும் மெய்யறிவுக்கண்கொண்டு, ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருவருட்கருணையினால் ஆக்கியுள்ள சித்தாந்தப் பேருரைகள் எண்ணிலடங்கா. அவர்களைப் போற்றுகின்றேன். எழுத்தறிவும், மெய்யறிவும் நிரம்பப்பெறாத அடியேன் நீண்டநேரம் பேச விரும்பவில்லை. சிவஞானச் செல்வப் பெரியோர்களுடைய சொற்பொழிவுகளைக் கேட்டு இன்பம் துய்த்துத் திளைக்கவே வேட்கை கொண்டுள்ளேன்.

யோகத்தைப்பற்றிக் கூறியதும், இன்றைய செய்தித்தாளில் வெளியான அற்புத நிகழ்ச்சி எனக்கு ஆனந்தத்தை அளித்தது. கோவையில் நாற்பத்தைந்து ஆண்டுகள் நிரம்பிய அருணாசல அடிகளார் என்ற யோகிகள் பதினான்கு நாட்கள் ஏழு அடி ஆழமுள்ள குழியில் பத்மாஸன சமாதியில் இருந்து உணவின்றி உள்ளிருந்தவாறே ஒலிபெருக்கியின் வழியாகச் சமயவுரையும் நிகழ்த்தி வெற்றி கண்டுள்ளார். இக்காலத்திலும் இவ்வாறு செய்ய இயலும் என்ற சாதனையைக் காட்டியிருக்கிறார் எனின், பண்டு முற்றும் துறந்த முனிபுங்கவர்கள் எவ்வாறு இருந்திருக்க வேண்டும் என்பது கருத்துக்கும் எட்டாத உச்ச நிலையில் இருக்கின்றதன்றோ?

உயரிய ஒப்பிலாத் தத்துவப் பொருளை உணர்வதற்கு எளியேனுக்கு முற்றிலும் இயலாது எனினும் பொதுவாகச் சில பாடல்களுக்குப் பொருள் விளங்குவது போல் அறிகின்றேன். இதனை ஒரு மயக்கம் என்றே எண்ணுகிறேன். அடியேன் அப்படி அறிவதாக உள்ள ஒரு சில கருத்துக்களையும், பாடல்களையும் கூறி அமைய விரும்புகிறேன்,

ஆன்ம ஆற்றல் என்ற உள்ளொளி பெற்றுப் புலனடக்கம் கொள்ளுதற்கு இனிய துணையாவது இறைவழிபாடேயாம் என்னும் சீரியகருத்தை,

*'' தானே புலன் ஐந்தும் தன்வசம் ஆயிடும்*
*தானே புலன் ஐந்தும் தன்வசம் போயிடும்*
*தானே புலன் ஐந்தும் தன்னில் மடைமாறும்*
*தானே தனித்தெம் பிரான்றனைச் சந்தித்தே ''*

என்னும் திருமந்திரம் தெளிவுபடுத்துகின்றது.

இதைத்தான் அப்பர்பெருமான் அழகாகக் கூறுகின்றார் :

*" ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே*
*அடக்குவித்தால் ஆரொருவர் அடங்காதாரே*
*ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடாதாரே*
*உருகுவித்தால் ஆரொருவர் உருகாதாரே*
*பாட்டுவித்தால் ஆரொருவர் பாடாதாரே*
*பணிவித்தால் ஆரொருவர் பணியாதாரே*
*காட்டுவித்தால் ஆரொருவர் காணுதாரே*
*காண்பாரார்கண்ணுதலாய்காட்டாக்காலே"*

*" அவனருளே கண்ணுகக் காணின் அல்லால்*
*இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்*
*இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணுதே"*

என்று பிறிதோரிடத்திலும் அறிவிப்பர்.

செல்வச்செருக்கால் ஓடியலேபவரையும் இளமை இன்பத்தில் ஓடித்திளேப்பவரையும் அடங்கவைத்துத் தம்பால் இழுத்து உருக வைத்து, பாடுவோரையும் பணியவைத்து, அறவாழ்விற்கு அரிய உரம் அளித்து அருளேத் தருவது சமய வாழ்வே, இத்தகைய அமைதி நிறைந்ததான அருள்வாழ்விற்கு அழைத்துச் செல்லுகிற அருள்நெறிகளோ எண்ணற்றன. பழம்பெரும் காலத்திலிருந்தே நம்மைப் பண் படுத்த முன்னிற்பது சைவநெறியாகும். உலக வரலாற்றுக்கெல்லாம் முன்னேயதும் இன்றைய விஞ்ஞானத்திற்கு ஏற்றத்துடனும் எழிலுட னும் ஒன்றிநிற்பதும் இறை என்பதை,

*" முன்னேப் பழம்பொருட்கும்*
*முன்னேப் பழம்பொருளே*
*பின்னேப் புதுமைக்கும்*
*பேர்த்தும் அப்பெற்றியனே"*

என்ற மணிவாசகப் பெருமானின் மணிவாக் கால் அறியலாம்.

நம்பெரும் சைவ சமயத்து அடிப்படைக் கொள்கையாக முப்பொருள் உண்மை முன் னிற்கின்றது.

*" பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்*
*பதியினேப் போல் பசு பாசம் அனுதி"*

என்பது திருமந்திரம். தாயுமானுரும்,

*" என்று நீ அன்று நான் உன் அடிமை அல்லவோ"*

என்ற அடியில் சத்காரியவாதத்தைச் சுருக்கி அடக்கிச் சமயக்கருத்தை அறிவிக்கிருர்.

இறைவனே எவ்வண்ணம் ஏத்திறுலும், அவ்வண்ணத்திலேயே ஈசன் அருள்புரிவான் என்ற உண்மையை,

*" எப்பரிசாயினும் ஏத்துமின் ஏத்திறுல்*
*அப்பரிசு ஈசன் அருள் பெறலாமே"*

என்ற அடிகள் தெளிவுபடுத்துகின்றன.

தலந்தோறும் சென்று வணங்கி வழி படுவாராகில் நெஞ்சத்துள் இறைவன் கோயில் கொள்வான் என்பதை,

*" நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்*
*தேடித் திரிந்து சிவபெருமான் என்று*
*பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்*
*கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே"*

என்ற பாடல் விளக்குகின்றது.

திருமந்திரப் பாடற்பகுதிகளிலே காண் கின்ற பேருண்மைகளேத் தமிழகத்தில் பழ மொழியாகப் பேசி வருகின்றனர். குறிப்பாக,

*" நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"*

*" ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்"*

*" ஆர்க்கும் இடுமின் அவர் இவர் என்னன்மின்"*

*" சிவனேடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லே"*

இவைபோன்ற இன்னேரன்ன பல உண்மை களே, திருமந்திரம் கற்றறியாதவரும் அறிந்தவர் சொல்லக்கேட்டு வழக்காற்றில் அமைத்துப் பேசுகின்றனர்.

முதல் தந்திரத்திலே உபதேசவாயிலாகக் கூறும் உண்மைகள் யாவற்றையும் மக்கள் இன்று ஊன்றிப் படித்து உய்யும் வழியை அடைய வேண்டுவது மிகவும் இன்றியமை யாதது. எல்லாமக்கட்கும் பொதுவாகவுள்ள யாக்கை நிலேயாமை, செல்வம் நிலேயாமை, இளமை நிலேயாமை, புலால் மறுத்தல், அன்பு

உடைமை, நடுவுநிலைமை, வாய்மை, அவா அறுத்தல், புறங்கூருமை, கள்ளுண்ணுமை, அன்பு, கல்வி, கேள்வி, தானம், அரசாட்சி முறை, அந்தணர் ஒழுக்கம் முதலான அறங்கள் பலவற்றை எடுத்து இனிது இயம்புவதால் எல்லோரும் படித்து இன்புறுதல் வேண்டும். அவ்வாறு செய்திடின் நம்முடைய நாடும் நற்றமிழ்நாடு என்று போற்றப்படும்.

இந்நூலிலுள்ள அருமை பெருமைகளை எடுத்துக் கூறி, தமிழ்நாட்டில் யாவருக்கும் இந்நூல் பயன்படுமாறு செய்யவேண்டியது சிவஞானச் செல்வர்களின் இன்றியமையாத கடமையாகும், சிவஞானப்பேற்றில் திளைத்த செல்வர்களாகிய உங்கள் முன்னிலையில் அறியாமையின் காரணமாக அடியேன் கூறிய மொழிகளை அன்புப்பெருக்கால் அமைதியுடனும், பொறுமையுடனும் கேட்டருளின மைக்கு வணக்கமும் நன்றியும் உரித்தாகுக.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், பேரின்ப நெறியை நாடி நுகர்ந்து இன்புறு தற்கு விரும்பும் பிறநாட்டு மக்களுக்குப் பயன் படும்வண்ணம் ஆங்கிலத்திலும், தமிழறிந்த யாவரும் படித்து உய்யும்வண்ணம் தமிழிலு மாகத் திருமந்திர முன்னுரை என்னும் தனி நூல் இன்று வெளிவருமாறு செய்த பெருந் தகைமைக்கு அடியேன் தமிழ்ப்பெரு மக்க ளின் தொண்டன் என்ற நிலையில் பலமுறை வாழ்த்தி வணங்குகிறேன்.

எண்ணுதற்கும் அரிய இந்த வாய்ப்பினை அடியேனுக்கு அருளிய ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுக்கு மீண்டும் வணக்கத் தைத் தெரிவித்துக்கொண்டு இவ்வளவில் அமைகின்றேன்.

நம்பிரான் திருமூலன் திருவடிகள் வாழ்க.
நமச்சிவாய மூர்த்தி திருவடிகள் வாழ்க.
வாழ்க உலகெலாம்.

'ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றவன் தானிருந் தானுணர்ந் தெட்டே."

முதல்தந்திரம் : 'உபதேசம்'

## திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்கள் B. A., L. T.,

*கணித ஆசிரியர், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி, காஞ்சிபுரம்.*

அருள்வடிவாகச் சபையில் வீற்றிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கும், மாநாட்டுக்கு விஜயம் செய்திருக்கின்ற அன்பர் பெருமக்களாகிய சிவநேசச் செல்வர்களுக்கும் எனது வணக்கத்தை முதற்கண் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

அடியேன் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானத்தினது திருவருள் ஆணையின்வண்ணம், திருமந்திரம் என்ற ஞான நூலின் முதல்பகுதியாக இருக்கின்ற உபதேசம் என்பதைத் தொடக்கமாகவுள்ள முதலாம் தந்திரத்தைப்பற்றிச் சில கருத்துக்களைச் சுருக்கமாகச் சொல்ல முற்படுகின்றேன். தலைவர் அவர்கள் திருமூலரைப் பற்றியும், திருமந்திரத்தின் ஒன்பது தந்திரங்களும் என்னென்ன கருத்துக்களை உடையனவாக இருக்கின்றன என்பதைப் பற்றியும் நன்கு சுருக்கமாகச் சொன்னார்கள். அவர்கள் சொன்ன கருத்துக்களிலேயே ஒரு சிலவற்றை எடுத்துக்கொண்டு சற்று விரிவாக நான் பேச வேண்டிய நிலைமையில் இருக்கின்றேன்.

முதல் தந்திரம் என்று தொடங்குகின்ற பகுதியில் இருபத்துநான்கு தனி அத்தியாயங்கள் இருக்கின்றன. அவற்றுள் முதலாவதாக இருக்கின்ற அத்தியாயம் உபதேசம் என்று சொல்லப்படும். உபதேசம் என்ற பகுதியைக் கவனித்துப் பார்த்தால், சிவாகம நூல்களிலே ஈடுபட்டு, சமயப்பெரியோர்களின் திருமுன்னிலையில் இருந்து, அவர்கள் சொல்லக்கேட்டு, கேட்டபின் உணர்ந்த பொருள் அனைத்தையும் ஒன்றாகத் தொகுத்து உரைக்கின்ற பாகம் எப்படியிருக்குமோ அப்படியே இந்த உபதேசம் என்ற பகுதி அமையப்பெற்றிருப்பது கவனிக்கத்தக்கது.

திருமுறைகள் பன்னிரண்டில் பத்தாவது திருமுறையாகத் திகழ்வது தமிழ் மூவாயிரம் என்ற திருமந்திரம் ஆகும். இந்த நிலையில் பத்தாவது திருமுறையாக இருக்கக்கூடிய இந்தத் திருமந்திரம் என்ற பெரிய நூலுக்கு முதல் பாகமாக அமைந்திருப்பது உபதேசம் என்ற இப்பகுதி. இதிலே ஈடுபட்டவர்கள் இதனைச் சொல்லக் கேட்டறிந்திருக்கின்றேன். அதனாலேயே நூலினுடைய முழுப்பயனை, அதனுடைய சாரமாக- பிழிவாக எடுத்துக்கொண்டால் அந்தப் பிழிவை இந்தப் பகுதியிலுள்ள முப்பது திருப்பாடல்களிலே காணலாம். இந்த முப்பது திருப்பாடல்களிலே சொல்லப்படுகிற கருத்துக்களை எல்லாம் ஒருவர் அனுபவத்திலே பெறுவதற்கான வழிகளை, இந்தப் பகுதிக்குப் பின்னே வருகின்ற பகுதிகளில் காணலாம்.

பொதுவாக நாம் நம்முடைய உள்ளங்களிலே ஒருகருத்தை வைத்துக்கொள்ளலாம். பன்னிரண்டு திருமுறைகளில் திருமந்திரம் பத்தாம் திருமுறையாக அமையப்பெற்றிருக்கின்றது. முதல் பதினொரு திருமுறைகளில் பத்தாந்திருமுறை நீங்கலாக, முதல் ஒன்பது திருமுறைகளும், பதினோராம் திருமுறையும் தேவர் வடிவமாக அமைந்தவை. பன்னிரண்டாவது திருமுறை நாயன்மார்களுடைய உண்மை வரலாற்றையும், அவர்கள் காட்டிய செந்நெறியையும் விளக்குவதாக அமைந்தது. இவற்றில் பத்தாவது திருமுறை சாத்திர வடிவமாக இருக்கின்றது என்பதை நாம் எல்லோரும் அறிந்துகொள்ளவேண்டும். நாம் அடையவேண்டிய நெறி, நாம் கடைசியாக அடைய விரும்பவேண்டிய நிலை, அதற்கு நாம் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கம், நாம் அறிந்துகொள்ளவேண்டிய பல உண்மைகள் ஆகிய எல்லாவற்றையும் ஒருங்கே சொல்லக்கூடிய நூலாக இத்திருமந்திரம் அமைந்திருப்பதை எல்லோரும் மனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அப்படிக்கொள்ளுகிற போது சாத்திரம் வேறு; திருமுறைகள் வேறு

என்று நாம் சொல்வதற்கு இல்லை. அவை இரண்டும் நெய்யும் பாலும்போலக் கலந்தவை.

சிவானந்த அனுபவ மேலீட்டினுலே உள்ளம் கிளர்ந்து பாடப்பெற்றவைகள்தாம் திருமந்திரப்பாடல்கள் எல்லாம். பாடல்களின் வாயிலாகக் கிடைக்கின்ற அனுபவங்களை எல்லாம் வரிசைப்படுத்தி - கோவைப்படுத்திப் பார்த்தால் இறைவன் எல்லாமாய் எங்குமாய் விரவி நிற்கின்ருன் என்று பாடுபவர்களின் உண்மைகளை உணர்ந்துகொள்ளலாம்,

உண்மைத் தத்துவத்தினை விளக்குகின்ற போது, பகுத்தறிவு பேசும் அறிவுடையோர் களுக்கும் பொருந்தும் வகையில் — சமயத் தைக் குறை கூறுவோர்களுங்கூட ஏற்றுக் கொள்ளத்தக்க வகையில் பல கருத்துக்கள் சொல்லப்படுகின்றன. அப்படி இந்த உலகத் திற்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு விளக்கப்படுகிறது. விரிவான இந்த உலகம் முழுவதிலும் ஈசன் கலந்து நிற்கின்ருன்; பார்க் கின்ற பொருளாகவும், பார்க்கப்படுகின்ற பொருளாகவும் அவனே விளங்குகின்ருன் என்று பரம்பொருளின் தத்துவம் விளக்கப் படுவது கவனிக்கற்பாலது,

சுப்ரபேதம் என்ற பகுதியிலே மிக முக்கிய மாகச் சொல்லப்படுகிறது என்னவென்ருல் உணர்த்துகிறவனுகவும், உணரப்படுகின்றவ னுகவும் விளங்குபவன் ஈசன்தான். கடவு ளுடைய உணர்வு தானே எல்லாவற்றையும் உணர்ந்து, உணர்த்துவதாகவும் இருக்கிறது. ஒரு பொருளை நாம் உணரவேண்டுமானுல் உணர்ந்துகொள்ளுகிறவன், உணரப்படுகின்ற பொருள், உணர்த்துகின்ற பொருள் ஆகிய மூன்று இருக்கவேண்டுமென்பது ஆராய்ச்சி பூர்வமாக நம் சைவசித்தாந்தத்தில் சொல்லப் படுகிற உண்மை. கடவுளுடைய உணர்வு தானே எல்லாவற்றையும் உணர்ந்து உணர்த் துவதாக இருக்கின்ற - உணர்வு தத்துவமாக விளங்குகின்ற ஒரு பொருளாகவும், உணர்வு எதனுலும் உணரமுடியாத பொருளாகவும் இருக்கின்றது.

இப்பொழுது நாம் பேசுகிறவர்களை ஒரு உவமையாக வைத்துக்கொள்ளுவோம். கேட் கின்றவர்களை உணருகிறவர்களாக வைத்துக் கொள்ளலாம். நம் எதிரிலே இருக்கின்ற ஒலி பெருக்கி நான் பேசுவனவற்றையெல்லாம் வாங்கி ஒலியைப் பெருக்கி உங்களுக்கு எல்லாம் அளிக்கிறது. நீங்கள் நான் சொல்லு கின்ற கருத்துக்களையெல்லாம் கேட்டு மகிழ் கிறீர்கள். ஆனுல் என்னதான் அழகாக நான் பேசினுலும் இந்த ஒலிபெருக்கியினுல் நான் கூறுகின்ற திருமந்திர உண்மைகளை உணர்ந்து கொள்ள முடியுமா? உணர முடியாது. அது போலவே ஜடப்பொருள்கள் இருக்கின்றன. நாம் உணர்ந்து கொள்ளுகின்ருேம் என்று நினைக்கிருேமே, நமக்கு உணர்த்துகின்றவர் களும், உணர்த்தப்படுவதற்குச் சாதனமான நூலும் இருக்கவேண்டும். அதனை நாம் அறிந்து கொள்வதற்கு இந்த உடம்பு வாய்க்க வேண்டும். இவைகளையெல்லாம் உடன் கூட்டுகிறபோதுதான் நமக்கு அந்த ஆர்வ மானது எழுகின்றது. ஆகையால் நமக்குப் பொது அறிவு உண்டாகிறபோதுதான் நாம் அறிவோம் என்று பெரியவர்கள் சொல்லி இருக்கிருர்கள். இந்த உடம்பும் உடம்பிலே இருக்கின்ற கருவிகளும் நமக்கு வந்தபோது நாம் அறிவுவிளக்கம் பெறுகின்ருேம், ஆகை யால் அந்த அறிவு விளக்கத்திலே வந்தவன் ஆண்டவன்.

நமக்குள் இருந்து நம்மை எல்லாம் உருக்கி உலப்பிலா ஆனந்தத்தைக் காட்டுபவன் ஆண் டவன். உயிராகிய நாம் உண்மைப்பொருளை உணராதவகையில் மறைப்பது மலம் என்று சொல்லப்படுகிற களிம்பு. மனத்திலே இருக் கிற அழுக்காறு, அவா, வெகுளி போன்றவை கள் மலம் என்னும் அறியாமை ஆகும் என்று பெரியோர்கள் சொல்லுகிருர்கள். இந்த அழுக் காறு இருப்பதனுலேதான் நாம் உண்மை யிலேயே எதை நன்கு உணர்ந்துகொள்ள வேண்டுமோ, அதனை உணர்ந்து கொள்ளாது ஜடமாக இருக்கின்ருேம். அறிவு விளக்கம் வரும்போது நமக்கு வேருக உள்ள பொருள் அனைத்தையும் அறிய முற்படுவதை விட்டு

நமக்குள்ளேயே இருக்கும் பொருளை அறிய முற்படுகிறோம். நமது கருத்துக்களை எல்லாம் வெளியிலே போக விட்டு, வெளிப்பார்வை கொண்டு - தூரப்பார்வைகொண்டு வெளியிலிருக்கின்ற பொருள் அனைத்தையும் அறிய முற்படுவதை விட்டு, உள்ளுக்குள்ளேயே இருக்கின்ற பொருளை உணர்ந்து கொள்ளச் செய்கின்ற ஞானப்பார்வை நமக்கெல்லாம் ஆசான்மூர்த்தியின் வழியாகத்தான் கிடைக்க வேண்டும்.

வெளிப்பொருள்களைப் பற்றி ஆராய்ச்சி செய்துகொண்டே போகின்ற விஞ்ஞானிகளுக்குங்கூட விளங்காத பொருளாக இருப்பது கடவுள் தத்துவம். இப்படிச் சாதாரண அறிவினால் வெளிப்பொருள்களையே அறிந்து அறிந்து காலத்தைப் போக்கும் அறிவினால் அறியப்படாத ஓர் பொருளாக விளங்குவது கடவுள். எவனும் இனி வெளிப்பொருள்களைப்பற்றியே அறிந்துகொண்டு போவதில் பிரயோஜனமில்லை. நாம் யார்? நாம் எப்படி வந்தோம்? என்பதாக தன்னைத்தானே விசாரம் செய்துகொள்ள எவன் ஆரம்பிக்கின்றானோ அவனால் கொஞ்சம் கொஞ்சமாக அறியக்கூடிய பொருளாக நெருங்கிவருவன் ஈசுவரன். எவன் ஒருவன் தன்னை உணர்ந்து, உடம்பை உணர்ந்து, அறிவிற்கும் அப்பாற்பட்ட உணர்வாக இருக்கின்ற ஒன்றை அடைகின்றானோ அவனால்தான் பரம்பொருளை நன்கு அறிந்து கொள்ளக்கூடும்.

பொருள்களை எல்லாம் அறிந்துகொள்ளக் கூடிய அறிவு எது? எது? என்று தன்னை நோக்கி அறிகிற ஒரு உணர்வு இருக்கிறதே அந்த உணர்வு ஆண்டவனால்தான் கொடுக்கக் கூடியதாக இருக்கிறது. வெளியே செல்லுகிற உணர்வை உள்நோக்கிச் செலுத்துகிறவனாக இருப்பவன் ஆண்டவன்தான். உள்நோக்கு அமையப்பெற்றுச் சிந்திக்கக்கூடிய ஒருவனது சிந்தையில்தான் அருள் நோக்கம் - திருவருள் நோக்கம் பிறக்கிறது. இந்த அருள் நோக்கம் பிறந்தவுடன் ஆனந்த நிலையும், தன்னிலும் மேம்பட்ட பரம்பொருளை உணர்ந்ததினால் பேரானந்தத்தை அடைகின்ற தன்மையும் உண்டாகிறது. இப்படிப்பட்ட இந்தப் பெரிய நிலையிலே கொண்டுவந்து வைப்பதற்கு நம் ஆண்டவன் குருமுகத்திலே வந்து நின்று, அவர் உலகத்திலே இருக்கிற சுத்த ஆன்மாவான ஜீவன் முத்தர் ஒருவரை இடமாகக் கொண்டு, இந்த உயிர்களுக்கு எல்லாம் தன்னை நோக்கிச் செல்லுகின்ற ஒரு பெருநெறியைக் கொடுத்து, அந்த ஞானநெறியிலே இருக்கிற தலைவன் அறிவித்த திருவருளில் தோய்ந்து நிற்கிற ஒரு நிலையை அறிவிக்கிறேன் என்று இந்த உபதேசப் பகுதியிலே சொல்லப்பட்டிருக்கிறது. முதல் பாட்டு:

> *"விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு*
> *தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து*
> *உண்ணின் றுருக்கியோ ரொப்பிலா ஆனந்தக்*
> *கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே"*

என்பதாகப் பாடுகிறார் திருமூலர். கடவுள் நம்முடைய மனத்திலே உள்ள களிம்புகளை எல்லாம் அறுத்து, ஆசான்மூர்த்தியின் வாயிலாகவே ஒப்பிலா ஆனந்தம் கொடுக்கிறார்.

எப்படி ஈஸ்வரன் நம்முடைய மனத்திலுள்ள களிம்புகளையெல்லாம் அறுத்து எறிகிறான்? செம்பு போன்ற பதார்த்தத்தைத் தேய்த்துத் தேய்த்து வைத்துக் கொண்டிருந்தால்தான் அது பரிசுத்தமாக எப்பொழுதும் இருக்கும். அதைப்போலவே நாமும் கடவுளுடைய நாமத்தைச் சொல்லிச் சொல்லி நமது உள்ளத்தில் மாசுபடியாதவண்ணம் பரிசுத்தமாக இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டுவது நமது கடமை.

திருமூலதேவர் சிறந்த ஞானி. அவர் சிவயோகத்தின்வாயிலாகச் சிவஞானப் பேற்றை அடைந்து அந்த ஆனந்த பரவசத்தினால் தான் அடைந்த இன்பநிலைகளையெல்லாம்,

> *"யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"*

என்ற பேரவாவோடு உலகத்துக்குத் திருமந்திரம் வாயிலாகப் பல உண்மைப்பொருள்களை எடுத்துக் கூறியிருக்கிறார்.

சிவஞானம் என்பது வெளியிலிருந்து கிடைக்காதது; உள்ளிருந்தே கிடைப்பது. மனத்தின் இயல்பு தன்னுடைய கரணங்களின் உதவியினுல் வெளியில் இருக்கும் பொருள்களையே அறிந்துகொள்ள முற்படுவது ஆகும். ஆனுல் ஐம்புலன்களின் பார்வையை உள்முகமாகத் திருப்பினுல் பதி உண்மைப்பொருள்களை நம்முள்ளேயே நாம் எல்லோரும் காணலாம். வெளியிலே ஈசுவரன் இருப்பதாகத் தேடி அலைந்து ஏமாந்து போகும் மனத்தை, உள்ளேயே தீரத் தீர விசாரித்துப் பார்க்கச் செய்தால் உண்மைப் பரம்பொருளை எளிதில் கண்டு கொள்ளலாம்.

*'' வேயின் எழுங்கனல் போலே இம் மெய்யெனும்*
*கோயிலிருந்து குடிகொண்ட கோன் நந்தி ''*

என்று திருமூலர் பாடியிருக்கிறதைப் பார்க்க வேண்டும். சிவஞானம் உயிரினிடத்திலேயே இருக்கிறதென்ருல், உயிரினிடத்தில் தோன்றக் கூடிய மலம் ஏன் இயற்கையிலேயே போகவில்லை ? என்ற கேள்வி எழும்பும்.

சூரிய காந்தக்கல் பஞ்சை எரிக்கும் தன்மையை உடையதுதான். இருந்தாலும் சூரிய காந்தக் கல்லினிடத்தில் பஞ்சை வைத்தால் பஞ்சு எரிந்து போவதில்லை; ஆனுல் சூரியனுடைய ஒளியில் சூரியகாந்தக்கல்லைப் பிடித்து, அடியில் தோன்றும் ஒளியிடையே பஞ்சை வைத்தால் பஞ்சு பொசுங்கிவிடுகிறது. அதைப் போலவே உயிரின் பக்கத்திலேயே மலம் இருந்தும் மலத்தைப் போக்க அதனுல் முடியவில்லை. சூரிய ஒளிபோன்ற ஞானசிரியனின் அருட் பார்வையும், அருள்வாக்கும் இருக்குமேயானுல் உயிர் சிவஞானத்தைப் பெற்று மலங்களை அழித்துவிடுகின்றன. இதைத்தான் திருமூலர்,

*'' சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே*
*சூரிய காந்தம் சூழ்பஞ்சைச் சுட்டிடா*
*சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்*
*சூரியன் தோற்றமுன் அற்ற மலங்களே ''*

என்று வெகு அழகாகச் சொல்லுகிருர்.

இந்த வகையிலே சிவஞானத்தை ஆசான் மூர்த்தமாக அனுபவித்து நின்று, இறைவன் உண்டுபண்ணின ஆனந்தநிலையிலே இந்த உயிரை வைத்து, இன்புறுத்தி, மீள இந்தப் பிறவிக்குக் காரணமாக இருக்கிற மலங்கள் பற்றுதவண்ணம் செய்கிறேன் என்ற ஒரு முடிவை வைத்துக்கொண்டு அதற்கான கருத்துக்களையெல்லாம் அடுத்தடுத்து முறையாக எடுத்துச் சொல்லி, முத்திநிலையை எய்தும் ஒரு ஞானனந்த நிலையை எப்படி ஆன்ம சோதனையினுலே பெறலாம் என்றும் விளக்குகிருர் திருமூலர்.

வெளிப்பார்வையின் மூலம் பெறுகின்ற உணர்வெல்லாம் பொறி உணர்வு - மன உணர்வு; அதற்கு மேம்பட்டது தத்துவ உணர்வு; தன்னைத்தானே விசாரித்துக்கொள்ளுவதன் மூலம் அதனைப் பெறலாம் என நமது ஸ்ரீ கோபால ஐயர் அவர்கள் சொன்ன நிலையிலே சொல்லுகிற முறைகளை எடுத்துச் சொல்கின்ருர். அப்படிச் சொல்கின்றபோது முடிந்த முடிபு என்னவென்று சொன்னுல் சிதாகாசத்திலே ஒன்றி நிற்கின்ற ஆனந்த தாண்டவந்தான். ஆனந்தக் கூத்திலே பிறந்து ஆனந்தத்திலேதான் முடிவாகிறது இந்த உபதேசம் என்ற பகுதி. இது,

*'' விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு ''*

என விண்ணிலே தொடங்கி,

*''வேதம் துதித்திடப் போய் அடைந்தார் விண்ணே''*

என்று விண்ணிலேயே முடிகிறது.

சித்தாந்தத்திலே முதலிலே இருக்கின்ற முதற்பொருள் நடனம். முதல்வன், ஆசான் மூர்த்தமாக அனுஷ்டித்துநின்று. உயிரை உயர்த்தி, இந்தத் தத்துவங்களினின்றும் பிரித்து மீள, அந்தச் சிதாகாச நடனம் என்ற ஒரு ஆனந்த நடனத்தை அவர்களுடைய மெய்யுணர்வுள்ளே வரும்படியாக வைத்து, அந்தச் சிதாகாசத்திலே ஒன்றி நிற்கும்படியான ஒரு நிலையை இந்த உயிருக்கு உண்டு

பண்ணுகிறுன் என்று ஒரு முதலும் முடிவும் இன்றி, அந்தாதித் தொடையாக "விண்" என்று ஆரம்பித்து, "விண்ணே" என்று முடிக்கிறுர். இவ்வண்ணம் உபதேசப்பகுதி முப்பது பாக்களும் சிறந்த வகையிலே நமக்கு அமைந்திருக்கின்றன.

அதோடுகூட ஒரு கருத்து, நடனத்தைப் பற்றிச் சொல்லவேண்டும் என்று விரும்பு கின்றேன். அதாவது திருமூலர் இங்கு வரு வதற்கு முன்னே அற்புதத் தாண்டவத்தைத் தரிசித்தார்; அதன் பிறகுதான் இங்கு வந்தார் என்று பெரியபுராணத்தில் சொல்லப்படுகிறது. அப்படித் தரிசித்தபோது, எந்தவகையிலே தரிசித்தார் என்பதைச் சேக்கிழார் சொல்லி யிருக்கிறுர்.

*" எவ்வுலகும் உய்யஎடுத்*
*தருளியசே வடியாரைச்*
*செவ்வியஅன் புறவணங்கிச்*
*சிந்தைகளி வரத்திளைத்து*
*வவ்வியமெய் யுணர்வின்கண்*
*வரும்ஆனந்தக் கூத்தை*
*அவ்வியல்பில் கும்பிட்டுஅங்கு*
*ஆராமை அமர்ந்திருந்தார் "*

என்பது திருப்பாடல். ஒலிபரப்புதலை 'ப்ராட் காஸ்டிங்' என்று சொல்லுகிறேம். பேசுகிற ஒலி மற்றெல்லாவற்றையும்விடப் பேர் ஒலி யாகச் சென்று செயற்படுகிறது. நான் பேசு கின்ற ஒலி காற்றில் பரப்பப்பட அதனை நீங்கள் உணர்ந்து என் கருத்துக்களை உங்களுடைய மனதிலே ஒருவாறு ஏற்றுக் கொள்கிறீர்கள். அது இப்பொழுது நிகழ்கிறது. ஆனல் ஒலி பரப்புகிறபோது நான் பேசுகிற ஒலியை மின் அலையாக மாற்றுகிறுர்கள். அது எங்கே செல் கிறது என்றுல் காற்றுக்கு மேம்பாடாக நம் முடைய பெரியோர்கள் 'ஆகாசம்' என்று ஐந்தாவது பூதமாகச் சொல்லுகின்ற ஈதரில் தான் பரவுகிறது. 'ரிஸீவிங் ஸெட்' வீட்டிலே வைத்திருந்தால் அந்தக் கருவி மின் அலையை வாங்கி, அதை மீள ஒலி அலையாகத் தருகிறது. அதனுலே காற்றுக்கும் மேம்பட்டு நிச்சலமாக இருக்கிறதென்று சொல்லப்படுகிற ஈதரில் ஒரு அசைவு உண்டு. அதற்கு ட்ரான்ஸ்மீட்டர் கொண்டுபோகிறது. ரிஸீவிங்ஸெட் அங்கிருந்து கொண்டு வருகிறது. இந்தப் பூதாகாசமெலாம் கடந்து, எல்லாப் பொருள்களுக்கும் இடம் அளித்து உயிருடைய அறிவையும் ஊடுருவி நிற்கக்கூடியதாக உள்ள ஆண்டவனுடைய பேருணர்வு அல்லது ஞானம் அல்லது சக்தி என்று சொல்லுகிற அவனுடைய ஞானசக்தி அந்த 'ஈதர்' போல் இருப்பது ஒன்று. அந்தச் சக்தியிலே ஒரு இயக்கம். அந்த இயக்கம் தான் ஞானமாக இருந்துகொண்டிருப்பது. அது உலகத்தை இயக்குகின்றபோதுதான் தோற்றம் நடு இறுதி ஆக மூன்று வகையா கிறது. உயிரின் அறிவைப்பற்றி இயக்குகின்ற போது திரோதானம் அனுக்ரகம் என்று இரு வகையான தொழில் ஆகின்றது. மலத்தைப் பற்றிக்கொண்டிருக்கும் உயிர்கள் மலத்தி லிருந்து விடுபட்டு ஆனந்தக்கூத்தை அனுப விக்கிறபோது இன்பமாக இருக்கிறது. ஆகை யால், அந்தக் கூத்தைச் சிவஞானிகள் தரிசிக் கிறபோது ஆனந்தக் கூத்தாக – தனு கரண புவன போகங்களையெல்லாம் கடந்து தனித்து நிற்கின்ற இறைவனுடைய உணர்விலே ஒன்றி இறைவன் தருகிற பேரின்பமாக அனுபவிக் கிறுர்கள்.

முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து எந்த இடத்திலே பேரானந்தம் இருக்கிறதோ, அந்த ஆனந்தத்தைப் பெற, ஞானகுருவின் திருமேனியைக் கண்டு, அவரது திருநாமம் செப்பி, அவர் அருள்வாக்கைக் கேட்டு, அத் திருவுருவையே சிந்தித்து இருக்கவேண்டும் என்கிறுர் திருமூலர். ஈசுவரனது திருவடிநிழலை அடைவதற்குரிய வழி என்ன என்பதையும் அமைத்துக்கூறும் நல்ல உபதேசமாக அமைந் திருக்கின்றது முதல் பகுதி. அந்த உயர்ந்த நெறிக்கு அழைத்துப் போவதற்காக அடிப் படையான சிற்சில கருத்துக்களையும் 'உப தேசம்' என்ற பகுதிக்குப் பின்னர் முதல் தந்திரத்திலேயே திருமூலர் வெளியிடுகின்றுர். அவற்றை அதிகமாக விளக்கிச் சொல்ல விரும்பவில்லை. குறிப்பாக நிலையாமையை உணர்கின்றபோது – செல்வம் நீங்கி வறுமை

வரும்போது எல்லாருக்கும் ஞானம் பிறப்பதைப் பார்க்கின்ருேம். அணுகுண்டு கண்டு பிடிக்கப்பட்டதிஞல், உலகத்தின் நிலையாமையை உணர்ந்துகொள்ள முடிகின்றது. அதனுல் மக்களிடத்தில் பரபரப்பு உண்டாவதையும் நாம் பார்க்கின்ருேம். இப்படி உயிர் போகின்ற காலத்தும், செல்வம் போகின்ற காலத்தும், அதனுல் உறவினர்கள் எல்லாம் நம்மை உதறிவிட்டுப் போகின்ற காலத்தும் ஞானம் வருகின்றது. உலகப் பொருள்களின் மீது இச்சையை விட்டு, நாம் யார்? நாம் ஏன் வந்தோம்? இந்த உலகத்தின் உண்மையான இயல்பு என்ன? என்பதைப்பற்றி விசாரிக்க ஞானம் பிறக்கும். இந்த உலக இயல்புக்கு ஏற்பத் திருமூலரும் யாக்கை நிலையாமையை உணர்த்தி, செல்வம் நிலையாமையைக் கூறி, இளமைநிலையாது என்பதை அறிவுறுத்தி, அதற்கு மேலாகத் தவநெறியில் வாழ்தற்கு விரும்புகின்றவர்கள் என்ன என்ன முறைகளைப் பின்பற்ற வேண்டும் என்றும் வற்புறுத்துகிருர். அரனைக் காண்பதற்கு அன்பு வேண்டும் என்றும், அறிவு மயமாக நிற்கின்ற அவனைக் காண்பதற்கு அறிவுவேண்டும் என்றும், கல்வி கேள்வி வேண்டும் என்றும், நடுவுநின்று ஞானம் பெறுகிறதன்மை அமையப்பெறுதல் வேண்டும் என்றும், பூர்ண ஞானநிலை எய்தக் கள்ளுண்ணுமை அவசியம் என்றும் முறையாகக் குறிப்பிட்டு, திருமந்திரத்தின் முதல் தந்திரத்தை முடிக்கிருர் திருமூலர். சைவசித்தாந்தத்தின் கருத்துக்கள் இந்தத் திருமந்திரப் பாடல்களில் புதைந்து கிடக்கின்றன என்னலாம். இவற்றை எல்லாம் நாம் ஞான குருவை அடுத்துநின்று, கேட்டு இறைவன் திருவருளைப் பெறவேண்டும் என்ற அளவில் அடியேன் சொற்பொழிவை முடித்துக் கொள்ளுகிறேன்.

“மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்
ஆணிப்பொன் மன்றினுள் ஆடும் திருக்கூத்தைப்
பேணித் தொழுதுஎன்ன பேறு பெற்ருரே.”

இரண்டாந்தந்திரம் : 'அதோமுக தரிசனம்'

திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான்
## திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்
தமிழாராய்ச்சித்துறை விரிவுரையாளர், அண்ணமலைநகர்.

அருள் வடிவாய் இங்கு வீற்றிருக்கின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கும், மற்றும் பெரியோர்களுக்கும் வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

உலகத்திலே ஆசை என்ற ஒன்று மனிதனைப் பல்வேறு வழிகளில் அழைத்துச் செல்கின்றது. அந்த ஆசையின் அளவுக்கு எல்லையில்லை என்பதை விஞ்ஞானத்துறையிலுள்ளவர்களும், மெய்ஞ்ஞானத்துறையிலேயுள்ள பெருமக்கள் அனைவரும் நன்ருக அறிவார்கள். அதனைப்பற்றி, திரு. கோபால ஐயர் அவர்கள் நன்ருக எடுத்துச் சொன்னுர்கள். ஆசையை அடக்கி, ஐம்புலன்களையும் வென்று, தன் உடலை ஒதுக்கித்தள்ளி, தன்னந்தனியாகச் சிந்தித்திருக்கும் நிலையிலிருந்து பலசித்தர்கள் அறிவுக்கும் எட்டாததான உண்மைகளை ஒருமனப்பட்டு ஒன்றிலே தோய்ந்துநின்று அனுபவித்திருக்கின்ருர்கள். அந்தநிலையிலே உணருகின்ற அளவுக்குப் பல உபாயங்கள் உண்டு. அங்ஙனமன்றிப் புதுப் புத்தகங்களால் விளக்கப்படுகிற விஷயங்களைத் துணையாகக் கொண்டு, கருவிகளைச் சாதனமாக வைத்து உணருகின்ற அறிவுதான் முடிந்த அறிவு என்று, சிலர் பெரும்பயனை அடைந்ததுபோல எண்ணி ஏமாந்துபோகிருர்கள்.

இந்த நிலையிலே, அறிவின் அளவுக்கு ஒன்றி இருந்து, உணர்ந்த ஒன்றினுலே உணருகிற உணர்ச்சிமாட்டு நின்று இறைவன் திருவருள் ஆட்சியிலே கொண்டு செலுத்துகிறதே மேம்பட்டதான நிலை. அதற்கு ஆன்மாவை அடிப்படையாகக்கொண்டு கல்வி கேள்வி ஆகியவைகளைச் சாதனங்களாக - துணையாக வைத்துக்கொண்டு, அனுபூதிகளை அடைந்த போது - அனுபூதி நிலையிலேயே சிதாகாசப் பொருளாய் விளங்கிநிற்கின்ற பரம்பொருளின் தன்மையோடு ஒன்றுகின்றபோது அனேக அற்புதங்கள் நிகழ்கின்றன; அற்புதங்களும் நீடிக்கின்றன. அந்த அனுபூதி மகான்களும், அதனைத் தாம் நிகழ்த்தியதாக எண்ணுவதும் இல்லை; தாம் கண்டதாகச் சொல்லிக் கொள்வதும் இல்லை. தம்மைக் கருவியாகக்கொண்டு திருவருள் அவற்றை நிகழ்த்துவதாக எண்ணி, பாச நினைவை அகற்றிவிட்டு, பரம் நிலையிலேயே நிற்கிருர்கள்.

இம்மாதிரியான பல அற்புதங்களை அந்தக் காலத்தில் பல சித்தர்கள் செய்துவந்தார்கள் என்றும், குறிப்பாகக் கையிலேயே மின்சாரத்தினைச் சேகரித்து வைத்துக்கொண்டார்கள் என்றும் திரு. கோபால ஐயர் அவர்கள் குறிப்பிட்டார்கள். அதனைக் கேட்டபோது அடியேனுக்கு 1928-ம் ஆண்டில் நடந்த ஒரு நிகழ்ச்சி நினைவிற்கு வருகின்றது; அடியேன் கண்ணுல் கண்ட அக்காட்சியை எங்கள் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அருள் விளக்கம் பெற்றிருக்கிற இந்தப்பேரவையில் அறிவிக்காமல் இருக்க முடியாது. அது என்னவென்ருல் கஞ்சமலைச் சுவாமிகள் என்ற சித்தர் ஒருவர் இருந்தார். அவர் பேசுகின்ற பேச்சை நம்மால் புரிந்துகொள்ள முடியாது. இந்த அனுபூதிமகான் நாகை தாலூகாவில் நாயுடுவம்சத்திலே பிறந்த ஒரு பெரியவருக்கு இருந்த காக்கை வலிப்பு நோயை மிக அற்புதமாகக் குணப்படுத்தியதையே குறிப்பிடுகின்றேன். பலர் அந்தப் பெரியவருக்குள்ள காக்கைவலிப்புநோயைக் குணப்படுத்துவதற்காக எங்கெங்கோ ஓடித் திரிந்து பணத்தைச் செலவழித்தார்கள். யாராலும் அதைக் குணப்படுத்த முடியவில்லை. அந்நிலையிலேதான் இந்தச் சுவாமிகள் அதனைக் குணப்படுத்தினுர்கள்.

கஞ்சமலைச் சுவாமிகள் பெண்களைப் போல் நகைகளைப் போட்டுக்கொண்டு பேதா

பேதமற்ற நிலையிலே திருவருள் இன்பத்தில் திளேப்பவர்கள். அவர் அந்த நோயாளியின் வீட்டிற்கு வந்து, அம்மாள் கட்டியிருக்கும் சேலையைக்கேட்டார்கள். சுவாமிகள் யாரிடம் எது கேட்டாலும் அதை அவர்கள் கொடுக்க மறுப்பது வழக்கம் இல்லை. அவர் கேட்ட சேலையைக் கொடுத்தபோது அந்த அம்மாளுடைய காக்கைநோய்க் கணவர் உள்ளே காக்காய் வலிப்பால் துடித்துக்கொண்டிருந்தார். அதனை நினைந்த அம்மாளின் கண்களில் கண்ணீர்வெள்ளம் பெருகியது. சிவனடியார் மனமோ அந்த அம்மாளின் கண்ணீரின் காரணத்தை அறிந்துவிட்டது. உடனே அவர்கள் "ஏன் அம்மா வருந்துகின்றீர்கள்" என்று கேட்டார். அந்த அம்மாள் தன் வருத்தத்தின் காரணத்தைச் சொல்ல, உடனே அடிகள் விபூதி வாங்கி வரச்சொல்லி, அதனை அந்த நோயாளி உடலெல்லாம் பூசி, காறிக் காறித் தன் வாயின் எச்சில் கோழையை அவர்மேல் துப்பினுர்; அவரைப் போட்டு உருட்டினுர். அந்த அனுபூதி மகானின் வாயெச்சில் பட்ட மாத்திரத்திலே நோய் விலகிவிட்டது. இன்றும் நோய்நீக்கம்பெற்ற அவர் நன்ருக உயிரோடு இருக்கிருர். ஆனுல், அந்த அடிகள்மாத்திரம் கூத்தூர் என்ற ஊருக்குப் பக்கத்தில் அடங்கிவிட்டார்கள். இது 1928-ம் ஆண்டில் நடந்தது. இதுபோலப் பல சித்த புருஷர்கள் நாம் முத்திநிலை எய்த, அற்புத நூல்களைச்செய்து ஞானக் கருவூலங்களாகக் கொடுத்திருக்கிருர்கள். அந்த சித்த பரம்பரையில் வந்தவர்களுக்குத் தலைவராகத் திருமூலரைச் சொல்லலாம். இவர் பெரிய சிவயோகி. இந்தச் சித்தருடைய நூலிலே இரண்டாந் தந்திரத்திலுள்ள "அதோமுக தரிசனம்" என்ற பகுதிபற்றி உரையாற்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் அருள் ஆணை பிறந்திருக்கிறது.

இரண்டாந் தந்திரத்திலே அதோமுக தரிசனம் என்பதை அடிப்படையாகக்கொண்டு குருமகாசந்நிதானத்தின் ஆணையின் வண்ணம் இரண்டாந்தந்திரம் முழுவதையும் ஒருவாறு சுருக்கிப்பேச முற்படுகிறேன்.

திருமந்திரம் ஒன்பது தந்திரங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அப்படி ஒவ்வொரு தந்திரத்திலும் இருக்கக்கூடிய பொருள்களைத் தொகுத்துப் பார்த்தால், அவைகள் ஒன்பது பகுதிகளுக்குள் அடங்கக் கூடியதாக இருக்கின்றன. அந்தமுறையில் இரண்டாந்தந்திரமும் ஒன்பது பகுதியாக அமைந்திருக்கிறது என்பதைச் சிறப்பாக ஒருவாறு நோக்கலாம்.

முதல்பகுதி என்பது வரலாற்றின் அடிப்படைத் தத்துவங்களைக் கூறுவது: அதில் நாற்பத்து மூன்று பாடல்கள் அமைந்திருக்கின்றன.

இரண்டாவது பகுதி ஆதி சிருஷ்டியைப் பற்றிக் கூறுவது. இறைவன் சங்கார காலத்தில் இவ்வுலகத்தைப் படைத்தருளும் தன்மை முப்பது திருப்பாடல்களால் இப்பகுதியில் சொல்லப்படுகிறது.

மூன்றும்பகுதி இறைவனுடைய பஞ்ச கிருத்தியங்களைப் பற்றிக் கூறுகிறது. இறைவன் தாயும் தந்தையுமாக இருந்து இவ்வுலகையெல்லாம் காத்து ரட்சித்துக் கிருபை செய்கின்ற அடிப்படைத் தத்துவமும், கற்றறிந்த விஞ்ஞானிகளுங்கூட அறிந்துகொள்ள முடியாதபடி கரு உற்பத்தி விபரமும் இப்பகுதியில் விவரிக்கப்படுகிறது.

நாலாவது பகுதி மூவகைச் சீவவர்க்கங்களைப்பற்றியது. ஐந்தாவது பகுதி பாத்திரம், அபாத்திரம், தீர்த்தம் முதலியவைகளின் விளக்கம். ஆருவதுபகுதி திருக்கோயிலைப் பற்றியது.

ஏழாவது பகுதியில் அதோமுகதரிசனம் பெறப்படுகிறது. உன்முக தரிசனமும், அதற்கான நிலைமையும் அறிவிக்கப் பெறுகின்றது இந்தப் பகுதியில்.

எட்டாம்பகுதி சிவநிந்தை, குருநிந்தை, மயேசுரநிந்தை முதலியவைபற்றியும், பொறையுடைமைபற்றியும் விளக்குகிறது.

ஒன்பதாம்பகுதியில், பெரியாரைத் துணைக் கோடல்வேண்டும் என்பதுபற்றி விளக்கப் படுகிறது.

இப்படியே ஒன்பது தந்திரங்களிலுள்ள ஒவ்வொரு தந்திரத்தின் பொருள்களும் தொகுக்கப்பட்டால் ஒன்பது பகுதிகளுக்குள் அடங்கும் என்பது அறிவுடை மக்களின் ஆராய்ச்சிக் கண்களுக்குத் தெரியும். புராண தத்துவங்களைப்பற்றிப் பேசும்போது திருமூல தேவர் எப்படித் தெரிவிக்கிறார் என்பதும் கவனிக்கத்தக்கது.

சிலர் எங்களிடம், 'உங்கள் புராணங்கள் எல்லாம், சமயத்தின் அடிப்படைத் தத்து வத்தை விளக்குகின்ற வெறும் கதைகள்தாம் என்பதை ஒத்துக்கொள்ளுங்கள், நாங்கள் உங்களை மன்னித்து விடுகின்றோம்' என்று சொல்லுகிறார்கள். நன்றாகச் சமய சாஸ்திரங் களை ஊன்றிப்படித்தவர்களுங்கூட 'இறைவ னின் தத்துவத்தை விளக்கப் பல புராணங் களின் வரலாறுகள் இருக்கின்றன; தத்துவம் புரிந்தாலே போதும்; புராண வரலாறுகளை உண்மையெனக் கொள்ளவேண்டாம்' என நமது மாணவர்களிடையே பேசி, மாணவர் களின் கருத்தைக் கெடுக்கிறார்கள்.

புராணங்கள் வாயிலாக நாம் பல தத்து வங்களை உணர்ந்துகொள்ளுகின்றோமேதவிர, தத்துவத்தை விளக்கவந்த பொய்க்கதைகள் அவை என்று சொல்வது மிகவும் தவறாகும். புராணங்களின் வரலாற்றையெல்லாம் நாம் மெய்யெனவே கொள்ளல்வேண்டும். திருமூல தேவரும் இலிங்க புராணம், தக்கன் வேள்வி முதலியவற்றை இரண்டாவது தந்திரத்தின் ஆரம்பத்தில் விளக்குகிறார்.

பரமேஸ்வரனது திருமணக்காலத்திலே எல்லோரும் இமயம் நோக்கி வட திசை செல்ல, தென்திசை தாழ்ந்துபோக, அதனைச் சமப்படுத்துவான் வேண்டியே அகத்தியரைத் தென்திசைக்கு அனுப்பிய வரலாற்றை இரண் டாவது தந்திரத்தின் முதற்பகுதியாகிய அகத் தியம் என்பது விளக்குகிறது. இது நடுவுநின் றார்க்கே எதையும் சமன்படுத்தும் சக்தியுண்டு என்னும் தத்துவத்தைக்காட்டுகிறது. உருவத் தால் சிறுத்த அகத்தியர் பெரிய தேரிலுள்ள அச்சாணியைப் போன்றவர் என்பதை,

*'' நடுவுநில் லாதிவ் வுலகம் சரிந்து*
*கெடுகின்ற தெம்பெரு மானென்ன ஈசன்*
*நடுவுள அங்கி அகத்திய நீ போய்*
*முடுகிய வையத்து முன்னிரென் றானே ''*

என்ற பாடலில் விளக்குகிறார்.

புராண வரலாறுகளை விளக்கும்போதே, நமக்கு அதன் தத்துவார்த்தக் கருத்துக்களும் விளங்கும்படியாகக் கூறுகிறார். உதாரணமாக,

*'' அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்*
*முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்*
*முப்புரம் ஆவது மும்மல காரியம்*
*அப்புரம் எய்தமை யாரறி வாரே ''*

என்ற பாடலைப் பார்க்கலாம்.

யோகம் பற்றியும் பலபாடல்கள் இருக் கின்றன. ஹடயோகம் போன்றவைகளோ நம்மால் அப்பியசிக்க முடியாதன. பிராண யாமம் ஒன்றினாலேயே கூற்றை உதைக்கும் நிலை பெற்றிடமுடியும்,

இரண்டாவது தந்திரத்தின் நான்காவது பகுதி தக்கன்வேள்வியைப்பற்றிச் சொல்வது.

*'' தந்தை பிரான்வெகுண் டான்தக்கன் வேள்வியை*
*வெந்தழ லூடே புறப்பட்ட விண்ணவர்*
*முந்திய பூசை முடியார் முறைகெட்டுச்*
*சிந்தினர் அண்ணல் சினம்செய்த போதே ''*

என்பதாகப் பாடுகின்றார் திருமூலர். அந்தப் பகுதியின் கடைசியிலேயே,

*'' தெளிந்தவர் கலங்கினும் நீ கலங்காதே ''*

என்று சிறப்பித்துச்சொல்லி, அதன் பின்னர், பிரளயம், சக்கரப்பேறு என்பதையும் அறிவிக் கிறார். இறைவனிடமிருந்து சக்கரத்தைப் பெற்ற தாமோதரன் அதைச் சுமக்கச் சக்தி இல்லாதவனாக இருந்தமையினால், அதைச் சுமப்பதற்கான ஆற்றலையும் அவருக்கு இறை வனே தரவேண்டி வந்தது என்பதையும்

அறிவிக்கின்ருர். ஆன்மாக்களுக்குச் சிவபெருமான் அருள்புரியும்போது அந்த அருள் அவர்களிடம் தேங்கி நிற்கக்கூடிய சக்தியையும் அவரே கொடுக்கிருர் என்று அறிவிக்கிருர்.

பின்னர் பிரமனும் மாலும் அரனைத்தேடி நின்ற வரலாற்றை 'அடிமுடி தேடல்' என்ற பகுதியில் ஒன்பது பாடல்களால் விளக்குகின்ருர். அடுத்துச் சிவசக்தியின் தத்துவங்களையும் இவ்வுலகத்தின் சிருஷ்டியைப்பற்றியும், சிருஷ்டிக்கப்பட்ட உலகத்தைக் காத்து நிற்கின்ற நுணுக்கமான கருத்துக்களையும் விளக்குகிருர். அதையொட்டியே 'சங்காரம்' பேசப்படுகிறது.

*'' நித்த சங்காரம் உறக்கத்து நீள்மூடம்*
*வைத்த சங்காரமும் சாக்கிரா தீதமாம்*
*சுத்த சங்காரம் தொழிலற்ற கேவலம்*
*உய்த்தசங் காரம் பரன்அருள் உண்மையே ''*

என்பது திருமூலரது பாடல்.

நம் இறைவன் தாயையும் தந்தையையும் கருவியாக - காரியமாக வைத்துக்கொண்டு பல காரியங்களைச் செய்கிருன்; கிருபை செய்கிருன் என்ற பகுதியை ஆரம்பிக்கிருர்கள். பத்திரிகையிலே படித்தேன்; விஞ்ஞானிகள் கூடக் கருவிலே இருக்கின்ற சிசு ஆணு? பெண்ணு? என்று அறிவதற்குப் பெருமுயற்சி எடுத்துக்கொண்டார்கள் என்று. அதுவும் கருவியின் சாதனத்திஞலேதான் அதன்மேலே இருக்கிற ஜவ்வைக்கொண்டு ஆண் என்றும் பெண் என்றும் நிச்சயித்துச் சொல்லக்கூடும் என்ற செய்தி வந்திருக்கின்றது. திருமூலர் தாய்க்கும் தந்தைக்கும் தெரியாமலேயே சிருஷ்டிக்கப்படுகிற சிசுஉற்பத்திபற்றி மிக விளக்கமாகப்பேசி, அறிவின் எல்லையிலேயே அந்த சிசு ஆணு? பெண்ணு? என்று அறியலாம் என்றும் குறிப்பிடுகிருர்.

*'' ஆண்மிகில் ஆணுகும் பெண்மிகில் பெண்ணுகும்*
*பூணிரண் டொத்துப் பொருந்தில் அலியாகும்*
*தாண்மிகு மாகில் தரணி முழுதாளும்*
*ஆண்வசம் மிக்கிடில் பாய்ந்ததும் இல்லையே ''*

என்ற இந்தத் திருப்பாடலுக்கு நான் பொருள் சொல்லத் தேவையில்லை. பிறந்த குழந்தை எத்தனை வயது இருக்கும் என்று ஜாதகத்தைப் பார்க்கவேண்டாம்; அதையும் அப்போதே சுவாசிக்கின்ற அளவுகொண்டே தெரிந்து கொள்ளலாம் என்கிருர்.

*'' பாய்ந்தபின் அஞ்சோடில் ஆயுளும் நூறுகும்*
*பாய்ந்தபின் நாலோடில் பாரினில் எண்பதாம்*
*பாய்ந்திடும் வாயுப் பகுத்தறிந் திவ்வகை*
*பாய்ந்திடும் யோகிக்குப் பாய்ச்சலு மாமே ''*

அதாவது ஐந்துமாத்திரையளவு சுவாசம் ஓடுமேயாஞல் 100 வயது; நான்கு மாத்திரையளவு ஓடிஞல் 80 வயது என்று இப்படி அறியலாம்; இது உனக்கு அல்ல யோகிக்கு என்றும் சொல்லிவிடுகிருர். இல்லறத்தினின்று செவ்வையாக வாழ்வதற்கும், இல்லறத்தை இன்பகரமாக - வெற்றிகரமாக நடத்துவதற்கும் உரிய வழிகளைப் பல பாடல்களிலே குறிப்பிட்டிருக்கிருர்.

காசிக்கும் ராமேஸ்வரத்திற்கும் சென்று தவம்செய்து பெற்ற பிள்ளை பொட்டையாக - குருடாகப் பிறப்பதையும் பார்க்கிருேம். இந்த ஊனம் எப்படி ஏற்படுகின்றது என்பதை இன்றைக்கு விஞ்ஞானிகளுங்கூட ஆச்சரியப் படத்தக்கவகையில்,

*'' மாதா உதரம் மலம்மிகின் மந்தனும்*
*மாதா உதரம் சலம்மிகின் மூங்கையாம்*
*மாதா உதரம் இரண்டொக்கில் கண்இல்லை*
*மாதா உதரத்தில் வந்த குழவிக்கே ''*

என்று சொல்லியிருக்கிருர்.

பின்னர் பாத்திரம், அபாத்திரம் என்று பிரிக்கப்படுகிறது. சிவ ஞானிகளுக்கு ஈந்தால் பரமுத்தி, சித்தி, பரபோகம் யாவும் பெறலாம். ஆஞல் அபாத்திரங்களுக்கு ஈவது கூடாது. அப்படி ஈந்தால் அது "கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப் பாலைக்கறந்து பருகுவதே ஒக்கும்" என்று குறிப்பிடுகிருர்.

திருக்கோயில் பூசனைமுறை சரிவர நடைபெருவிட்டால் மன்னர்க்குத் தீங்கு வரும்;

வாரிவளம் குன்றும்; காசினியில் கன்னங்களவு மிகுந்திடும் என்று குறிக்கிருர். குருவை நிந்திப்பவர்களுக்கும் சிவனே நிந்திப்பவர்களுக்கும் நரகமே கிடைக்கும் என்று சொல்லி முடிக்கிருர். புண்ணியபாவம் இரண்டிலே நம்பிக்கையுள்ளபடி பண்படுகிற இந்திய நாட்டு மக்களுக்குச் சொர்க்கம் நரகம் என்ற பயனே அகற்றவே முடியாது. ஆகவே சிவன், குரு, மயேசுரன் ஆகிய மூன்று பேரையும் நிந்திக்கிறவர்களுக்கு இடம் நரகந்தான் என்கிருர். நாம் வாழவேண்டுமாளுல் பொறையுடைமை அவசியம் என்று சொல்லி, அதற்குமேல் தக்க பெரியோர்களே அடுத்து நிற்கவேண்டும் என்றும், பெரியாருடன் கூடல்தான் பேரின்பம் ஆகும் என்றும் கூறி முடிக்கிருர். இவ்வளவு கருத்துக்களும் 212 பாடல்களால் இரண்டாம் தந்திரத்தில் விளக்கப்படுகிறது.

அடியேன் இதுகாறும் பேசியதெல்லாம் இரண்டாம் தந்திரத்தின் அடிப்படைத் தத்துவங்களே எடுத்துக்காட்டவே. வரலாறுகள் தத்துவங்களேக் காட்டுவதற்காக எழுதப்பட்டிருக்கின்றன என்று அரசியல்வாதிகளேப் போலச் சமயவாதிகளுங்கூடப் பிரசாரம் செய்வது சரியல்ல. பல மகான்கள் இந்நாட்டிலே தவத்தின் பெருமையால் செய்து காட்டிய அற்புதங்கள் - அவர்கள் வரலாறுகள் யாவும் உண்மை. அதில் பலஅடிப்படைத் தத்துவங்கள் அமைந்து கிடக்கின்றன அல்லாது இப்பொழுது எழுதப்படுகிற புனைகதைகள், நாவல்களேப் போலத் தத்துவங்களே விளக்க அமைக்கப்பட்ட கட்டுக்கதைகள் அல்ல அவை. இந்தக் கருத்து, தென்னிந்திய சைவ நாட்டிலே நிலேபெற்றிருக்கவேண்டும் என்று கூறி அடியேன் முடித்துக்கொள்ளுகிறேன். அணுவை மலேயாக ஆக்கிய குருமகா சந்நிதானத்தின் பேரருளுக்கு அடியனேன் என்றென்றும் கடமைப்பாடுடையேன் என்று தெரிவித்துக்கொண்டு, நமசிவாயமூர்த்திகளின் திருவருளுக்கு நமஸ்காரம் தெரிவித்துக்கொண்டு அடியேன் அமருகிறேன். வணக்கம்.

"செய்தான் அறிவன் செழுங்கடல் வட்டத்துப்
பொய்யே உரைத்துப் புகலும் மனிதர்காள்;
மெய்யே உரைக்கில் விண்ணேர் தொழச்செய்வன்
மைதாழ்ந் திலங்கு மணிமிடற் ருேனே."

மூன்ருந்தந்திரம் : ‘ அட்டாங்க யோகம் ’

*சித்தாந்தப்புலவர்மணி*

## பாலகவி, திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்

ஆசிரியர் ‘செட்டிநாடு’ தேவகோட்டை.

கண்ணுதலும் கண்டக்கறையும் கரந் தருளி, மண்ணிடையில் மாக்கள் மலமகற்ற எழுந்தருளி, சைவச் செங்கோல் ஓச்சி வரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் திருவடிக் கமலங்களுக்கு வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு, அன்புடைய பெருமக் களாகிய உங்களுக்கும் நன்றி செலுத்திக் கொண்டு, திருமந்திரத்திலுள்ள மூன்ருந் தந்தி ரத்தின் முதற்பகுதியாகிய அட்டாங்க யோகம் என்பதுபற்றிப் பேச எழுந்து நிற்கிறேன்.

யோகத்தைப்பற்றிய கூறுபாடுகளைப் பலர் பலவகையில் எடுத்துக் காட்டியுள்ளார்கள். இன்று நாட்டில் யோகத்தைப்பற்றி அறிந்தவர்கள் பல பேர். ஆனால் அனுபவத்தில் அதன்படி நிற்கின்றவர்கள் ஒருவரைக்கூட காணமுடியா தென்று சொன்னால் அதை யாருமே மறுக்க முடியாது. உடற்பயிற்சி என்ற முறையிலே வேண்டுமானால் இருக்கலாம். ஆனால், யோக நிலை பழக்கத்தில் இல்லை. யோகம் என்கிற பெயரை வைத்துக்கொண்டு இன்று நாட்டில் பல வகையான யோகாசனப் புத்தகங்கள் வெளிவருகின்றன. இவையெல்லாம் ஓரள வுக்கு நன்மையே பயக்கின்றன என்ருலும் ஆதிகாலத்திலிருந்த யோகநிலையை அடைந் திட யாரும் முயற்சிசெய்யவில்லை.

திருமூலரது திருமந்திரத்திலே மூன்ரும் தந்திரத்தின் முதல்பகுதி அட்டாங்கயோகம். திருமந்திரத்திலுள்ள மூவாயிரம் பாடல்களில் யோகத்தைப்பற்றி விளக்க 335 பாடல்கள் இருக்கின்றன. அட்டாங்க யோகம் நான்கு பாடல்களால் விளக்கப்படுகிறது. யோகா சனப் பயிற்சிக்கு இன்றியமையாத இயமம், நியமம், ஆதனம், பிராணயாமம் முதலியன வும் பின்னர் பேசப்படுகின்றன.

திருமூலர், யாவருக்கும் நன்கு விளங்க மிக அழகான பாடல்களில் தன் கருத்தைச் சொல்கிருர். யோக நிலையை அடைய விரும்பு கின்றவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய நெறி களையெல்லாம் விளக்குகிருர்.

*‘‘ கொல்லான் பொய்கூருன் களவிலான் எண்குணன்*
*நல்லான் அடக்கம் உடையான் நடுச்செய்ய*
*வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கள்காமம்*
*இல்லான் இயமத் திடையில்நின் ருனே ’’*

என்கின்ருர் திருமூலர். யோகத்திலே பயிற்சி பெறவேண்டுமென்று கருதுகின்றவன் இந்த வகையான நெறிகளையெல்லாம் நாம் உடைய வருக இருக்கின்ருேமா என்று முதலிலே சிந்தித்துப் பார்க்கவேண்டும். குறைபாடு இருக்குமானுல் அவன் யோகத்திற்குத் தகுதி உடையவன் ஆகான். இந்நெறிகளைக்கொண்டு பார்த்தால் இன்று யோகிகள் என்று சொல்லு கிறவர்களிலே எவ்வளவுபேர் தேறுவார்கள் என்று நீங்களே முடிவுசெய்துகொள்ளலாம். தீயனவற்றை விடுதலே இயமம் ஆகும், நல்லனவற்றைக் கொள்வது நியமம் ஆகும். எது நியமம் என்று திருமூலர் சொல்லுகிருர் :-

*‘‘ தவம்செபம் சந்தோடம் ஆத்திகம் தானம்*
*சிவன்தன் விரதமே சித்தாந்தக் கேள்வி*
*மகம்சிவ பூசையொண் மதி சொல்லீர் ஐந்து*
*நிவம்பல செய்யின் நியமத்தன் ஆமே ’’*

இந்த நல்ல கொள்கைகளை உடையவன் நியமத்தில் நிற்பவன் என்று சொல்லுகிருர். பிராணயாமத்திலே இப்பொழுது ஈடுபடாத வர்கள் யாருமே இல்லை. பெரும்பாலோர் பிராணயாமம் செய்கிருர்கள். அது செய்யா தவர் சைவர் அல்லர். பிற மதத்தவர்களும் பிராணயாமம் செய்வதை நாம் பார்க்கிருேம். பிராணயாமத்தின் அடிப்படையை நினைந்து

பார்த்தால் அவ்வளவும் சிந்திக்கவேண்டிய இடத்திலேதான் இருக்கிறது. பிராணயாமம் என்பதை எடுத்துச் சொல்லுகின்றபோது தேசிகர் அவர்கள் மிக அழகாகச் சொல்லிக் காட்டினார்கள். அதைத் திருமூலதேவர் ஒரு அழகான பாடலில் கூறுகிறார்:

*''ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்*
*உய்யக்கொண் டேறும் குதிரைமற் றொன்றுண்டு*
*மெய்யர்க்குப்பற்றுக் கொடுக்கும் கொடாதுபோய்ப்*
*பொய்யரைத் துள்ளி விழுத்திடும் தானே''*

அதாவது குதிரையில் ஏறும்போது அடங்காத குதிரையாக இருந்தால் ஏறியவனை அது கீழே தள்ளிவிடும். அடங்கிவிட்டாலோ அது அவன் செலுத்துகிறவழியே நடக்கும். இந்த உவமையை வைத்துக்கொண்டு பார்த்தால் ஐம்புலன்களையும் அடக்கவல்ல குதிரைதான் பிராணயாமம்; அதனை அடக்கிவிட்டவனே ஐம்புலன்களையும் வென்றவன். அடங்காதவர்களுக்கு இப் பிராணயாமம் கெடுதியை விளைவித்துவிடும் என்று அழகாகக் குறிப்பிடுகிறார். நாமோ நமக்குள்ள புலன்களின்வழியே நாம் ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றோம். ஆனால் ஞானிகளோ புலன்களை விட்டவர்கள் அல்லர்; ஐம்புலன்களை அடக்கி அதனைத் தன்வழியே செலுத்தினவர்கள். நாம் செல்கிறவழி அவர்கள் செல்கிறவழி ஆகிய இரண்டுக்கும் இது தான் வேறுபாடு. ஐம்புலன்களை அடக்கித் தன்வழியில் கொணர்ந்தவர்களே ஞானிகள். சேக்கிழார்சுவாமிகள் திருநீலகண்டநாயனாரை,

*'' வென்ற ஐம்புலனால் மிக்கீர் ''*

என்று சிறப்பித்துச் சொல்வதைப் பார்க்கலாம். ஐம்புலன்களையும் அடக்கப் பிராணயாமந்தான் இன்றியமையாதது. மூச்சை ஏற்றி இறக்கிப் பிராணயாமம் செய்யப்படுகிறது. மூக்கைக் கையினால் தொடுவது, எடுப்பது என்பது பிராணயாமம் ஆகாது. காற்றை உள்ளே அடக்கி. விடும் கால சம்ஹாரம் தெரிந்து செய்கிறவர்களுக்குத்தான் யமனை உதைக்கும் கருவியாகப் பிராணயாமம் இருக்கும். நமது மூச்சுக் காற்றைக் கட்டுதலே பிராணயாமம். மூச்சை அடக்கினால் மனமும் அடங்கும். அதனை மாறி மாறிப் பாய்ச்சினால் மனஒருமைப்பாடு உண்டாகும்.

பிராணயாமத்தைப்பற்றி நம் சிவஞான சுவாமிகள் குறிப்பிடுகின்றபோது யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம் நான்கு வகையாகப் பிரித்துக்கொண்டு, இயமம் நியமம் ஆதனம் பிராணயாமம் என்னும் நான்கும் யோகத்தில் சரியை என்றும், பிரத்தியாகாரமும் தாரணையும் யோகத்தில் கிரியை என்றும், தியானம் யோகத்தில் யோகம் என்றும், சமாதி யோகத்தில் ஞானம் என்றும் குறித்துக்காட்டினார்கள். பிரத்யாகாரம் தாரணை என்று சொல்லப்படுகிற இரண்டும் எங்கெங்கோ செல்கிற மனத்தை அங்கங்கெல்லாம் செல்லவிடாது தடுத்து ஒருமுகப்படுத்தலே ஆகும்.

புலன்களை அவ்வவற்றுக்கு உரிய செயல்களைப் புரியாது தடுத்து, மனத்தை ஒருவழிப் படுத்தவே பிராணயாமம் உதவுகிறது.

*'' கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி*
*விணாத்தண் டூடே வெளியுறத் தானோக்கிக்*
*காணாக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு*
*வாணாள் அடைக்கும் வழியது வாமே ''*

என்கிறார் திருமூலர்.

திருப்பெருந்துறையிலே முனிபுங்கவர்கள், காணாக்கண் அதாவது பொருள்களைப் பார்த்தும் பார்க்காத விழித்த கண்ணுடையவர்களாகவும் கேட்டற்கு உரிய செவியிருந்தும் கேளாத்தன்மை உடையவர்களாகவும் இருந்தார்கள் என்று கூறப்படுகிறது.

நமக்கெல்லாம் யோகத்தைப்பற்றிக் கூறுகின்ற திருமூலரும் சிறந்த சிவயோகி ஆவார். அவரே தன்னைப்பற்றிச் சொல்லியிருக்கிறார்:

*'' இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி ''*

என்பதாக. எண்ணாயிரம் ஆண்டு வாழ்ந்தார் நமது திருமூலதேவர்.

இப்படிப் பல காலம் தியானத்திலிருந்து அது முற்றி, அதே சமாதிமாக ஆகும்போது அதற்குமேலே ஒருபடி; அதாவது அறிவினுலே அறியமுடியாத - அறிந்தாலும் பிறருக்கு எடுத்துக் காட்ட முடியாத ஞானம் வந்துசேரும்; பயில்வார்களுக்கு முற்றின பகுதியாக வருவது ஞானம். ஆன்மா, மலம் நீங்கி யோகத்திலே அடங்கி ஆசாரியர்கள் காட்டுகிற நன்னெறியிலே நின்று, இறைவன் திருவடிப் பேற்றையே நினைந்து தியானித்தால் அதனுல் சமாதி ஞானம் உண்டாம். அந்த ஞானம் பெறுவதற்கேற்ற சிறந்ததொரு வாய்ப்பை, நம்மைவிட அறிவிலே உயர்ந்து. உலகியல் வாழ்விலே சிக்குருது நல்ல முறையிலே சிறந்த சிவநெறி வாழ்க்கையை நடத்திக்காட்டி வருகின்ற ஒருவராலேதான் அளிக்கமுடியும் என்ற குறிப்பை நமக்குக் காட்டுகிருர். நம்மிடமுள்ள தீயனவற்றையெல்லாம் விட்டு, நல்லனவற்றைக்கொண்டு, பிராணுயாமத்தில் மனம் அடங்கி விடலாம். மலத்தின் இயல்பு சும்மாய் இராது. அடங்கிய மனத்திலே வேருெரு பொருளை அடக்கி, அந்த மனமும் அடக்கிய பொருளும் ஒரே நிலையை அடையப் பயிற்சி வேண்டும் என மிக அழகாகத் திருமந்திரத்தில் எண்பத்துமூன்று பாடல்களால் விளக்கப்படுவதைப் பார்க்கிருேம்.

இரண்டாம் தந்திரத்தைப்பற்றிப் பேசிய திரு. தேசிகரவர்கள் ஒவ்வொரு தந்திரத்திலும் உள்ள பொருள்களை ஒன்பது பகுதிகளாகப் பிரிக்கலாம்; திருமந்திரமும் ஒன்பது தந்திரங்களாக விளக்கப் படுகிறது என்று குறிப்பிட்டார்கள். அந்த முறையிலே இந்த மூன்ரும் தந்திரத்திலுள்ள இருபத்தொரு தலைப்புக்களும், பொருள்வகையில் சேர்த்துப் பார்த்தால் ஒன்பது பகுதிகளுக்குள்ளே அடங்கும். அட்டாங்கயோகத்தை ஆண்டவன் திருவருள் பெற்ற பெரியவர்கள் மிக எளிய முறையிலே திருவாய்மலர்ந்தருளியிருக்கின்ருர்கள். அதனை நாம் கடைப்பிடித்து ஒழுகுவதற்குக் குருமூர்த்தியின் திருவடியைப் பற்றிக்கொள்ள வேண்டியது இன்றியமையாத கடமை என்பதைத் திருமூலரே தெரிவித்துள்ளார் என்ற அளவிலே என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்,

இந்நேரத்திலே என்னுடைய உள்ளத்தை விட்டுப் பிரியாது இடையருது நிற்கின்ற நமசிவாயமூர்த்திகளையும், சிவஞானசுவாமிகளையும், அவர்கள்வழியே உருப்பெற்று எழுந்தருளியிருக்கிற ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் திருவடிகளையும் நினைந்து இங்கேவந்து இந்த மகாநாட்டிலே பங்கெடுத்துக்கொள்ள கருணைபாலித்த ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுடைய பொன்னுர் திருவடிகளுக்கு என்னுடைய மனமொழி வணக்கத்தை மீண்டும் செலுத்தி, உங்கள் அனைவரையும் வணங்கி அமர்கிறேன்.

அந்நெறி இந்நெறி என்னுது அட்டாங்கத்து
அன்னெறி சென்று சமாதியிலே நின்மின்
நன்னெறி செல்வார்க்கு ஞானத்தில் ஏகலாம்
புன்னெறி யாகத்திற் போக்கில்லை யாகுமே."

# இரண்டாம்நாள் பேருரைகள்

**தலைமையுரை :**

## திரு. எஸ். இராமசுவாமிநாயுடு அவர்கள்

முன்னாள் மேயர், சென்னை.

கருணையுள்ளம் நிறைந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ குரு மகாசந்நிதானமவர்களுக்கு அடியேனுடைய இதயபூர்வமான வணக்கத்தை முதற்கண் அறிவித்துக்கொள்கிறேன். இன்று இங்கு கூடியிருக்கின்ற சிவநேசச்செல்வர்கள் பெருவாரியாகக் காணப்படுகின்றார்கள். நேற்று காணப் பெறாதவர்கள் இன்று காணப்பெறுகிறார்கள். அவர்களிலே பெரும்பாலானவர்களுடைய பேரவையின் நிலையை அறிந்துகொள்வதற்கு வேண்டிய வழிகளெல்லாம் பலகாலும் நான் பெற்றிருப்பதினாலே அவர்களுக்கும் என்னுடைய வணக்கத்தையும் நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும், நாயன்மார்கள் திருக்கூட்டத்திலே ஆண்களுக்கு மட்டுந்தானா இடம், பெண்களுக்குங்கூட உண்டு என்பதை அறிவிக்கும் முறையிலே காரைக்காலம்மையார்வழியிலே வந்தவரைப் போல் இக்கூட்டத்திற்கும் ஒரு அம்மையார் வந்திருப்பது பாராட்டுதற்குரியது. ஆகவே, அந்த அம்மையாருக்கும் என்னுடைய வணக்கத்தைக் கூறிக்கொள்கிறேன்.

இம்மாநாட்டின் நேற்றைய பேரவையில் பேசியபோது மெய்யறிவை உணர்வதற்கு வேண்டிய வழியை இறைவன் அருள் பெற்றாலன்றி - குருவின் அருள்பெற்றாலன்றி அறிந்து கொள்ள இயலாது என்று எண்ணினேன்; அதோடுமட்டுமல்லாமல் மேலெழுந்தவாரியாக நான் கேட்டறிந்தவையெல்லாம் உங்கள்பால் கூறினேன்.

இன்று இவ்விழாவிற்குத் தலைமைவகிக்க வேண்டுமென்று குருமகா சந்நிதானம் அவர்களுடைய பெரும் கருணை நிறைந்த ஆணையானது பிறந்தது என்பதை நான் ஒருசில நிமிஷங்களுக்கு முன்னால்தான் அறிந்தேன். ஆனால், நேற்று ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களிடம் விடைபெற்றுச் செல்லவேணும் என்று விரும்பிக் கேட்டுக்கொண்ட காலத்தில் 'இன்று அமர்ந்து நாளை செல்க' என்று அவர்கள் எனக்கு ஆசி பகர்ந்தார்கள். ஆனால், நானும் போக விரும்பியது உண்மையாக இருந்தாலும் எனக்கு இங்கே இருக்கவேண்டுமென்ற பேராசையானது பிடர் பிடித்து இழுத்து நின்றது என்று சொல்லவேண்டும். ஏனென்றால், மகாமகோபாத்யாய பட்டம் பெற்று, ஆரியமும் தமிழும் கண்டறிந்து பேரறிஞராக விளங்கும் சைவசித்தாந்த சரபம் நமது ஈசான சிவாசாரிய சுவாமிகளை அறியாதவர்கள் அறியாதாரே என்று சொன்னால் அது உண்மைதான். ஆனால், அவர்களை முற்றிலும் அறிந்தவனென்று சொன்னாலுங்கூட அதுவும் அறிவுடைமை ஆகாது. அவரை அறியுமாறு செய்த ஒருசம்பவம் ஒருகாலத்தில் நிகழ்ந்தது.

தருமை ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள், சிவாசாரியார் அவர்கள் பேசுங்காலத்தில் அழைத்துச் சென்று தனியாகப் பக்கத்தில் அமர்த்தி, பேச்சைக்கேட்டு மெய்குளிர அருள் செய்தார்கள். அதற்குப் பின்னர் அவர்கள் அறிவுரைகளைக்கேட்டு மகிழவேண்டும் என்ற ஆசை எனக்கு இருந்தாலும், அவ்வப்போது நிகழ்கிற பேச்சுக்களை செய்தித்தாள் வாயிலாக அறிவேனேயல்லாது நேரில் கேட்டு மகிழ்வதற்கு வேண்டிய பேறு பெற்றேன் இல்லை. அவர்கள் பேச்சைக் கேட்பதற்குப் புண்ணியம் செய்யவேண்டும் என்று நமது மகா வித்வான் சொன்னார்கள்; அது உண்மைதான். ஆகவே, அந்தப் புண்ணியத்தின் பயனாகத் தான் இன்று ஸ்ரீ-ல-ஸ்ரீ குரு மகா சந்நிதானம் அவர்களின் திரு முன்னிலையிலே அவருடைய

பேச்சைக்கேட்கும் திருவாய்ப்புக் கிடைத்தது பற்றி நான் மகிழ்கிறேன். அவர்கள் பேச வேண்டிய பேச்சும் அதிகமாக இருக்கிறது. மேலும் கேட்டு மகிழவேண்டும் என்று நீங்களும் விழைந்திருப்பதாக அறிகின்றேன். அதற்கு அடுத்தாற்போல் நமது வைணவ சிவ நேசர் ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்களும், புகழ் படைத்த திரு. தேவசேனுபதி அவர்களும் பேசுவார்கள்; அவைகளேயும் கேட்கவேண்டு மென்ற விருப்பம் எனக்கும் உண்டு. ஆகையினுல், தலைமையுரை என்ற தலைப்பின் கீழே நீண்ட நேரம் பேசுவதற்கு இல்லாத இந்த அளவிலே ஒரு சில கருத்துக்களைமட்டும் நான் இங்குக் குறிப்பிடுவதற்கு விரும்புகிறேன்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாலேதான் நான் நேற்றும் 'திருமந்திரம்' என்ற ஒன்றைப்பற்றிப் பேசுவதற்கோ அதைத் தொட்டுப் பார்ப்பதற்கோ வாய்ப்புக் கிடைத்தது என்று கூறினேன். அதைப்போல் இன்றும் தொடர்ந்து கிடைக்கிறது. நானே தனித்திருந்து புத்தகத்தைப் புரட்டிப் பார்த்துக்கொண்டே இருந்தேன். ஆனுல், இன்று சிவாசாரியார் அவர்கள் பேச வேண்டிய பேச்சானது உயர்ந்த • பேச்சாக இருக்கிறது. நான் அந்தப் பேச்சைக் குறித்துத் தலைமையுரையில் ஒன்றும் சொல்ல விரும்பவில்லை. ஏனென்ருல் திருமந்திரம், மந்திரங்கள் சக்கரங்கள் பற்றிய விஷயம் அடங்கிய ஒரு நூல் என்று நம் மகாவித்துவான் அவர்களே குறிப்பாக எடுத்துக் கூறினுர்கள். 910, 911, 912 ஆகிய எண்ணுள்ள பாட்டுக்களைமட்டும் நான் அவர்களுக்கு இப்பொழுது விண்ணப்பித்துக்கொள்ளலாம் என்று நினைக்கிறேன்.

*ஆனந்தம் ஒன்றென் றறைந்திட ஆனந்தம்*
*ஆனந்தம் ஆ-ஈ-ஊ-ஏ-ஒமென் றைந்திடம்*
*ஆனந்தம் ஆனந்தம் அஞ்சும தாயிடும்*
*ஆனந்தம் அம்-ஹ்ரீம்-அம்-க்ஷம்-ஆம் ஆகுமே.*

*மேனி யிரண்டும் விளங்காமல் மேற்கொள்ள*
*மேனி யிரண்டு மிக்கார விகாரியா*
*மேனி யிரண்டும் ஊ-ஆ-ஈ-ஏ-ஓ என்னும்*
*மேனி யிரண்டும் ஈ-ஓ-ஊ-ஆ-ஏ-கூத்தே.*

*கூத்தே சிவாய நமமசி வாயிடும்*
*கூத்தே -ஈ-ஊ-ஆ-ஏ-ஓம்-சிவாயநம வாயிடும்*
*கூத்தே-ஈ-ஊ-ஆ-ஏ-ஓம்-சிவாயநம வாயிடும்*
*கூத்தே-இ-ஊ-ஆ-ஏ-ஓம் நமசிவாய கோளொன்றும்*
*வாறே.*

இந்தப் பாட்டுக்களேப் படித்துக்கொண்டிருந்தேன். பொருள் விளங்கவில்லை. அதை உங்களிடத்திலே சொல்லவேண்டும் என்று நினைத்தேன். மந்திரத்தினுடைய பெருமையைப்பற்றியெல்லாம் அவர்கள் சொல்வார்கள். நாம் கேட்கின்ற ஒலி எல்லாம் மாயையின் காரியமாகிய ஒலிதான். இன்னிசைப் பாட்டுக்களைக் கேட்கிருேம். அந்தச் சொற்கள் எந்த வகையில் அமைந்திருக்கின்றன, உலகத்திலே வான வெளியிலே எப்படி அண்டங்களெல்லாம் ஒவ்வொன்ருக இயங்குகின்றது என்பதைப்பற்றி நினைக்கும்போதெல்லாம் - பூமியிலே வளருகிற உயிர்களும் மற்றைய பொருள்களும் எவ்வாறு அந்த ஒலித்தன்மையை அடைந்து பிறகு வளர்கின்றது என்று நினைக்கும்போதெல்லாம் அந்த ஒலியின் சக்தி விளங்குகிறது. அந்த ஒலி, பேச்சொலி ஆனந்தமாக சிறப்புப் பெறுகிறது. அவைகளையெல்லாம் மாயைஎன்று வைத்துக் கொள்ளவேண்டும். அவை அருள்நாத ஒலி அல்ல. அருள்நாதம் சிவஞானப் பேற்ருல் பெறவேண்டும். அந்த ஒலி சாதாரண அளவிலே ஒரு பெரிய மகிழ்ச்சியிலே இருக்கை.

மேற்கண்ட பாட்டுக்களின் பொருளைப் பற்றி ஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்களிடத்திலே நேரில்கேட்பதற்குச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. அந்தப் பாடல்களின் மந்திரக் கருத்துக்களை அவர்களிடமிருந்து அறிந்துகொள்ள விரும்புகிறேன். இதனைப்பற்றிக் கூறுவதற்கு அவர் ஒருவராலேதான் இயலும் என்று அவருடைய பேச்சுக்களைக் கேட்டு மகிழ்ந்த அறிஞர்கள் கூறக் கேட்டிருக்கிறேன்; அவருடைய ஒளி நிறைந்து விளங்குகின்ற பேச்சுக்களையெல்லாம் தொகுத்துச் சுருக்கி வெளியிட வேண்டும். அவருடைய பேச்சுக்களையெல்லாம் அவரைக்கொண்டே ஒன்றுசேர்த்துத்

தொகுத்து, அதை அவர்கள் பதிப்பிக்குமாறு செய்தால், அது உயர்ந்ததொருபயனைத் தரும் என்று அடியேன் எண்ணுகின்றேன்.

இன்று இருக்கிறசூழ்நிலையிலே, இறைவன் திருவருளால் நமசிவாயமூர்த்தியின் வடிவமாக எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் முன்னிலையிலே பேசுவதாக இருப்பதால், அவர்கள் பேச்சு, தெய்வப் பேச்சாகத்தான் இருக்கும்; தெய்வ மணம் கமழும்; இறையருள் சுரக்கும். சிவஞானப் பழத்தைப் பிழிந்து நல்ல சாருகக் கொடுக்கப் போகிருர்கள். அதில் நானும் திளைக்க விரும்புகிறேன் என உங்களிடம் சொல்லிக்கொண்டு, என்னுடைய அறிவுக்கு எட்டாத இந்தப் பாடல்களை அவர்களுக்கு முன்னல் சமர்ப்பணம் செய்துகொண்டு, இந்த மந்திரங்களைப் பற்றி அருள் விளக்கம் தெரிவிக்க வேண்டும் என்று அவர்களைக் கேட்டுக்கொண்டு, மகா சந்நிதானம் அவர்களுக்கும் வணக்கம் செலுத்திக்கொண்டு என்னுடைய தலைமையுரையை இந்த அளவோடு நிறுத்திக்கொள்கிறேன்.

"போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகல் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேன்அறை யோசிவ யோகத்தை
ஏற்றுகின் றேன்எம்பி ரான்ஓர் எழுத்தே."

" திருவம் பலமாகச் சீர்ச்சக்க ரத்தைத்
திருவம் பலமாக ஈராறு கீறித்
திருவம் பலமாக இருபத்தைஞ் சாக்கித்
திருவம் பலமாகச் செபிக்கின்ற வாறே."

நான்காந்தந்திரம் : ‘ திருவம்பலச்சக்கரம் ’

சித்தாந்த சரபம், மகாமகோபாத்தியாய
## சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள்-
பழநி.

ஸ்ரீ - ல - ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கும், முனிபுங்கவர்களுக்கும், இதர பெரியோர்களுக்கும் என் வணக்கம். திருவம்பலச் சக்கரம் என்பது நாலாந்தந்திரத்திலுள்ள பல பகுதிகளில் ஒருபகுதியின் தலைப்பு. அதனைப் பற்றிப் பேசுமாறு ஸ்ரீ - ல - ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களிடமிருந்து கட்டளை பிறந்திருக்கிறது. அதனைப் பல பிரகாரமாகப் பேச வேண்டியிருக்கின்றது. திருவம்பலச் சக்கரம் என்பது எல்லா மந்திரங்களையும் சாரும் சமய சாஸ்திரப் பொருளைத் தன்னகத்தேகொண்டு விளங்குவது. மந்திரங்கள் என்பன தன்னைத் தியானிப்பவர்களைச் சம்ஸாரக் கடலிலிருந்து கரையேற்றுவிப்பதாகும்.

திருமூலர் எழுதிய நூலுக்குத் திருமந்திரம் என்று பெயர் அமைந்திருப்பதிலிருந்தே இம் மந்திரத்தை யார் மனனம்பண்ணுகிருர்களோ அவர்களுக்குச் சம்சாரக்கடலிலிருந்து தப்பிக்க வழி தோன்றும் என்பதும், சித்தாந்த உண்மைகள் பலவும் இதனிடத்தில் கொண்டு விளங்குகிறது என்பதும் புலனுகும். இந்தத் திருமந்திரத்தின் நடுப்பகுதியிலே திருவம்பலச்சக்கரம் என்பது அமைந்திருக்கின்றது. ஆகம சாஸ்திரங்களெல்லாம் கூறுகின்ற உண்மைச் சிவ ஞானத்தில் உய்ப்பிக்கும் சிறந்த நூல் இது. அறிவுக்கு அறிவாக விளங்கும் பரம்பொருளின் தரிசனத்தைத் தான் அனுபவித்து, தான்பெற்ற இன்பத்தை உலகோரும் பெற்று இன்பமீ அடைவான் கருதியே இந்நூலினைத் திருமூலர் ஆக்கினுர் என்ற வரலாறு நாம் எல்லோருமே அறிந்துகொள்ளத் தக்கது. மாயையில் தன் சுய அறிவை இழந்திருக்கிற உயிரை மீட்டுச் சிவனிடத்தே சேர்ப்பிப்பது இந்த நூலின் சிறந்த தன்மை. மீட்டு இங்கு வாரா நிலையைக் கூட்டி வைப்பது இது, சாஸ்திரம் காட்டுகிற முடிபே முடிபாகக்கொண்டு, அங்கம் மறை நியாயம் முதலியவற்றையெல்லாம் கொண்டு தான் காட்டுகிற முடிபே முடிபாகச் சிலர் கூறினுர்கள் என்ருல், பலர் ஒரு நியாயமும் இல்லாமல் ‘என் கடவுளே கடவுள்’ என்று கூறக்கூடும். ஆகவே எந்தவிதமான நியாயமும் இல்லாமல் கூறுகின்றதைக் காட்டிலும் பல நியாயங்களை எடுத்துக்காட்டி உரைக்கின்ற முடிபே பலர் சிந்தனைக்கும் ஏற்றதாகும். மாயா மலங்களில் சிக்குண்டவர்களுக்குச் சிந்தனையில் எழுகின்ற பல ஆட்சேபணை சமா தானங்களையெல்லாம் நியாயப்படி எடுத்துக் காட்டி, அம்மையோடு அப்பனுகப் பரம் பொருளைக் காணும் வழிநெறிகளைக் காட்டி, மக்களுக்கு எதிலும் கலக்கம் பீதி முதலியன உண்டாகாமல் அழைத்துச்செல்லும் சமய சாஸ்திரக் கருத்துக்களை எல்லாம் தன்னகத்தே கொண்டு இது விளங்குகிறது.

இந்தத் திருவம்பலச் சக்கரம் என்று சொல்லுகிற ஒன்றற்கு முக்கிய சாதனமாக இருக்கிறது அட்சரம். அந்த அட்சரத்திஞல் ஆகிற சக்கரம் திருவம்பலச் சக்கரம். ஆகவே சக்கரத்திற்குச் சிறந்த உறுப்பாக உள்ளது அட்சரம். அட்சரத்திஞல் ஆகியது சக்கரம் என்று சொல்லுகிற ஒன்றின் இயல்பு மந்திரத்திற்குத் தொடர்பு உடையது என்பதை நாம் அறிந்துகொள்ளவேண்டும். அதை எடுத்துப் புலப்படுத்திஞல்தான் அந்தக்கருத்து நமது சமயத்தினுடைய முடிவாகவிளங்கும். எழுத்துக்கள் எல்லாம் ஒரு காரணேஸ்வரரால் இயங்குகிறது என்ற குறிப்பையும் உணர்ந்து, அந்தக் காரணேஸ்வரர்கள் எல்லாம் சிவ சக்தியினுலே இயக்குவிக்கப்படுகின்றனர் என்பதையும் உணர்ந்து, ஆகமங்களிலே சொல்லப்படுகின்ற வண்ணம் நம்முடைய அறிவு அறியாமையிலே பரந்து கிடக்கின்றபோது, அறியாமையில் மூடிக்கிடக்கிற ஆன்மாவாகிய

நமக்கு இன்பப்பேற்றிலே மிகவும் விருப்பம் இருக்கின்றது. அறியாமையில் உழல்கின்ற ஆன்மாக்களுக்கு இன்பம் உண்டாகவேண்டுமென்றால் அந்த இன்பம் அறிவிலேயிருந்து தலைப்படவேண்டும். அந்த இன்பத்தைப் பெறுவது நமது லட்சியமாக இருக்கலாம். ஆனால், அந்த இன்பத்தின் அகலம் சுத்த அறிவின் அகலத்தினாலே வாய்க்கப்பெறும். அறிவு நமக்குச் சாராதபோது இன்பப் பேறு நமக்கு இல்லை. அந்தப் பேறு நமக்கு அறிவின் அகலத்தினாலே உண்டாகும். அறிவோடு கூடிய ஆன்மா அறியாமையாகிற ஆணவ மலத்துடன் அபேதமாக இருக்கிறது. அந்தத் தன்மையில் இன்பப்பேற்றை அடைவதற்கு வாய்ப்பு இல்லாமலிருக்கிறது.

அந்தப் பேறு சிவஞானம் வாயிலாகத் தான் சித்திக்கிறது. அந்தச் சிவஞானம் திருவருள் தவத்தால் - அருள்ஞானம் பெறுவதால் கிடைக்கப் பெறுகின்றது. ஆகவே, அருள் ஞானம் என்பதான ஒன்று சிவபெருமானது திருவருள் துணையின்றி ஆன்மாக்களுக்குச் சித்திக்காது. அதற்கு உரிய பல படிகளாகச் சரியை, கிரியை, யோகம், சமாதி என்பன எல்லாம் நம் சைவசித்தாந்தத்திலே பேசப் படுகின்றன. யோகங்கள் எல்லாம் தத்துவமாகவே பேசப்படுவன. ஏனைய செயல்கள் எல்லாம் பொறிவழியே செயற்படுவன. ஆனால் தவம், பொறிகள் எல்லாம் அடங்கியிருக்கும் தன்மையில் உயிரினால் செயற்படுவது. ஆகவே எல்லாவற்றையும் திருவருள் இயக்குவதாக எண்ணி, தன்னிலையில் அமர்ந்து சிந்திப்பதால் கிடைக்கப்பெறுவது ஞானம்.

ஞானம் அபரஞானம், பரஞானம் என இரண்டுவகை. அபரஞானம் என்று சொல்லுகிற ஒன்று வேதாகமங்களின் வழியாக விளங்குவது. பரஞானம் என்பதான ஒன்று ஆகமங்கள் சொல்லுகின்ற நெறியெல்லாம் கொண்டு சாதனமார்க்கத்திலே குருவின் அருளால், குருபரன் வாயிலாகச் சென்று தியானிப்போர்களுக்கு இறைவன் திருவருளால் சித்திப்பது. குருபரன் காட்டும் வழியே நம்மைச் சாதனை நெறியிலே கொண்டுபோய்ச் சேர்க்கும். அதன் பயன் திருவருள் வாயிலாக நமக்கு அருள் ஞானமாக உண்டாகும். இந்த இரண்டு ஞானமும் முதலிலே அறிவின் வாயிலாகப் புலப்படுகிறது. இந்த இரண்டு பேற்றினையும் பரம ஞானிகளாக உள்ளவர்கள் சிவபெருமான் வாயிலாகவும் என்போன்றவர்கள் குருபரன் வாயிலாகவும் பெறுவர் என்று சமய சாஸ்திரங்கள் சொல்லும். திருஞானசம்பந்தர் முதலிய பரமாசாரியர்கள் சிவபெருமான்வாயிலாக நேரே ஞானம் பெற்றவர்கள். சிவ சக்தி சிவஞானப்பாலை ஊட்டிய மாத்திரத்திலேயே அவர்களுக்கு எல்லா ஞானமும் ஒருசேர அப்பொழுதே உண்டாகிவிட்டது. நம்மைப் போன்றவர்கள் சிறிது சிறிதாகப் பெறக்கூடிய ஞானத்தை, அவர்கள் நேரே சிவபெருமான் மூலமாக ஒருசேர ஒரேசமயத்தில் பெறுகிறார்கள். இதனை, ஞானப்பால் ஊட்டிய அந்நிலையில் 'உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம் தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார்' என்று ஞானசம்பந்தரைப் பற்றிச் சேக்கிழார் சுவாமிகள் கூறியிருப்பதிலிருந்தே உணர்ந்துகொள்ளலாம்.

ஆன்மாக்களாகிய நாம் எல்லோரும் ஒரு சமயம் உணர்ந்ததைப் பின்னர் மறத்தலும், மறந்த ஒன்றினை உணர்தலும் ஆகிய நித்திய வஸ்துக்களிலே படிப்படியாக, குருபரன் வாயிலாக உணரப் பெறுகிறோம். திருஞானசம்பந்தர் முதலான பரமாசாரியர்கள் சிவபெருமானின் அருள் ஞானத்தால் ஒருசேர உணர்வார்கள்.

ஞானம் என்று சொல்கின்ற ஒன்றுதான் சிதாகாசப் பொருள். ஆகாசப் பெருவெளி. நமது சேக்கிழார் சுவாமிகள் சிதம்பர சபையைப்பற்றிப் பேசுகிறபோது ஞானமயமான சபை என்று அதனைச்சொல்லி அச் சபையிலே ஞானசம்பந்தப்பெருமான் நின்று தொழும் காட்சியை வர்ணிக்கின்றார். ஞானசம்பந்தப் பெருமான் சிவஞானம் ஒருசேர உணரப் பெற்றவர், அந்தச் சபையோ ஞானமயமான சபை. இருஇடத்திலும் சிவஞானம் பூர்ணமாக

உள்ளது. ஞானம் ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்வு உடையது அல்ல. ஆகவே திரு ஞானசம்பந்தப் பெருந்தகையை முன்னிலைப் படுத்திப் பேசுகிற இடத்திலே ஞானமயமான சபை என்று சொன்னால், சபையைக் காட்டிலும் ஞானசம்பந்தப்பெருமானின் ஞானம் குறைவானதாக உணர நேரிடலாம்; அதைப் போலவே ஞானம் என்பதை ஞானசம்பந்த ரோடு சேர்த்துவிட்டால் சபை ஞானக்குறை வுடையதாகத் தோற்றக் கூடும். சேக்கிழார் போன்ற பரம ஞானிகள் அப்படிச் சொல்லு தல் நியாய விரோதமாகும் என்றும் தர்க்க நெறிக்கு ஒவ்வாது என்றும் கருதியேபோலும் "அண்ணலார் தமக்கு அளித்த ஞானமேயான அம்பலம்" என்றுசொல்கிறார். ஞானசம்பந்த ருக்குச் சித்தித்தசிவஞானமே, அம்பலத்திலும் ஒளிர்விடுகின்றது என்பதாக – இருவரிடமும் உள்ள ஞானம் ஒன்று என்ற ஐயப்பாட்டுக்கு இடமில்லாததாகப் பேசுகின்றார். சேக்கிழார் போன்ற ஞானிகளின் திருவாயிலே சொற்கள் நியாயவரம்பைஅஞ்சலிசெய்துகொண்டுதாமே வரும். ஆகவே, "அண்ணலார் தமக்களித்த ஞானமேயான அம்பலம்" என்னும்போது ஞானசம்பந்தப் பெருந்தகையாருக்குச் சிவ பெருமானிடத்திலிருந்து பெற்ற ஞானம் எதுவோ அந்த ஞானமாகிய இந்த அம்பலம் என்று சொன்னால் இந்த இரண்டையும் ஒரே ஞானமுடையதாக ஒருமுகமாக நாம் அறிந்து கொள்ளுகிறோம்.

திருவம்பலச் சக்கரம் என்பதிலுள்ள திரு என்றால் என்ன அம்பலம் என்றால் என்ன என்பதை விளக்கவே இவ்வளவு தூரம் பேசினேன், 'ஞானமேயான அம்பலம்' என்று அருளிய சேக்கிழார்சுவாமிகளின் வாயிலாகத் திருவம்பலச்சக்கரம் என்பதற்கு ஞானமாகிய சக்கரம் எனச் சொன்னால் பொருந்தும்.

பஞ்ச பூதங்களாகிய பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் ஆகியவற்றில் ஆகாசம் மிகச் சிறந்தது. அந்த ஆகாசம் சதாசிவமூர்த் தியின் வழியேநின்று இயங்குவதாம். சதாசிவ மூர்த்தியின் ஆணையின் வழித்தாக நின்று இதர காரணேசுவரர்களெல்லாம் அவ்வழியில் செல்வர், ஆகாசத்திலிருந்து வாயு, தேயு ஆகிய காரணேவசுரர்கள் பரமகாரணராக இருக்கும் சதாசிவ மூர்த்தியின்வழியே நின்று தத்தமக் குரிய காரியங்களைத் தோற்றுவிப்பார்கள். பிரபஞ்சம் எல்லாம் ஒவ்வொரு காரணேசுவர ரால் தோற்றுவிக்கப்படுகிறது. சுத்தமாயை யால், ஞானிகள் பிரபஞ்சத்தைத் தத்துவ மயமாகக் காண்பார்கள். காரணேசுவரர்கள் எல்லாம் மூலப் பொருளிலே ஒடுங்குவர். ஒவ்வொரு காரணேசுவரர்களும் தத்தமக்குரிய எல்லையில் நின்று தொழில் புரிவார்கள். சூட்சு மமான தத்துவங்கள் மந்திரங்களின் வாயி லாகத் தொழில்புரியும்.

மந்திரங்கள் வாசக மந்திரம், வாக்கிய மந்திரமென இருவகைப்படும். ஒருபொருளின் பெயராகஅமைந்துகிடப்பது வாக்கியமந்திரம். சிவசக்தியே மந்திரமாக அமையப்பெற்றது வாசகமந்திரம். ஒவ்வொரு மந்திரத்திற்கும் எல்லா நாமமுமாக எல்லா நாமமும் சிவனுக் குரியதாக அமையப்பெற்றது வாக்கியமந்திரம். சிவன் என்றசப்தத்திற்கு நிர்மலம் என்பதாகப் பொருள் கொள்ளப்படும். உலகமெல்லாம் அவர் ஆக்ஞையினால் இயக்குவிக்கப்படுகிறது. உலகத்திலுள்ளவற்றையெல்லாம் நாம் எல் லோரும் பொருள்மயமாகக் காண்போம். பரம ஞானிகள் அவற்றை எல்லாம் தத்துவமயமாக வே காண்பார்கள். தத்துவசமூகங்கள்எல்லாம் உலகத்தில் சிருஷ்டிகாலத்தில் தோற்றுவிக்கப் பட்டுப் பிரளய காலத்தில் மறைகின்றன. நம் முடைய அறிவோடு கலந்திருக்கிற அறியாமை யைப் போக்குவதற்குத் தத்துவங்களின் வாயி லாகப் பல காரணேசுவரர்கள் தத்தமக்குரிய எல்லையில் நின்று தொழில் புரிவர்.

ஒவ்வொரு மந்திரங்களுக்கும் அந்தந்தக் காரணேசுவரர்களும் அதற்கு உரியவர்களாக இருப்பார்கள். எல்லா மந்திரங்களுக்கும் பரம காரணர் யார்? அவாந்தர காரணர் யார்? ஒவ்வொரு காரணேசுவரர்களும் அவாந்தர காரணர்கள் என்றும் பரம காரணர்கள் என்றும், பரம காரணர் சிவபெருமானே

என்றும், ஆதலினுலேதான் எல்லா நாமமும் எல்லாப் பெயரும் எல்லாப்பொருளும் அந்தப் பெருமானுக்கு உரியது என்றும் சொல்லப்படு கிறது. ஒவ்வொரு தேவர்களுக்கும் அமைந் திருக்கின்ற பெயர்களெல்லாம் சிவபெருமா னுடைய உத்தம குணங்களில் ஒவ்வொன்று என்றே பதியப் பெற்றிருப்பதால் ஒவ்வொரு பெயர் வந்தது. இத்தனை தேவர்களுடைய பெயர்களும் பரமேசுவரனிடத்திலேபொருந்தி யிருப்பதால் எல்லாத் தேவர்களுடைய பெய ரும் சிவபெருமானுக்கு உரியது என்று சொல் கின்றுர்கள். எல்லாச் சக்தியும் சிவபெருமா னுக்கே உரியது. எல்லாச் சக்தியும் உடையவ ரான சிவபெருமான் எல்லாப் பெயரையும் பெறுவார். அந்தக் குணங்களுக்குள்ளே ஒவ் வொரு குணங்கள் அமரகுணம் உள்ள தேவர் கள், அந்தந்த குண மகாத்மாதிசயத்தின் ஒவ் வொரு பெயரும் பொருந்துவார்கள். எல்லா வன்மையும்பரமேசுவரன்ஒருவருக்கேபொருந் தும். ஆனுல், எல்லாக் குணங்களையும்விட பரமேசுவரனின் சிறந்த குணம் என்ன? ஆண வாதி மலங்களில் தான் தோயாமை, தோய்ந்த வுர்களைத் தான் தோயாமலேயே அவர்களைக் கடையேற்றுதற்குரிய சக்தி பரமேசுவரனுக்கு இருக்கிறது. ஆகவே, அதைப் புலப்படுத்தும் மந்திரம் எது? சிவசப்தம். மங்கலம் என்பது அதனுடைய பொதுப்பொருளையும், நிர்மலம் என்பது சிறப்புப் பொருளையும் தரும்.

சிவசப்தம் சொல்கிறபோது ஆணவாதி மலங்களெல்லாம் முன்னமேயே முழுமை யும் நீங்குகின்றது. இந்தத் தாத்பர்யத்தைக் கொண்டுதான் "சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி அம்மான்" என்று சொல்லப்பட்டது. ஏனைய நாமங்கள் ஒவ் வொரு எல்லைவரையில் பொருந்தும், சிவ சப்தம் சிவனுக்கே முழுதும் பொருந்தும் என்ற கருத்தால், "சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி அம்மான்" என்றுர். சர்வகுண சம்பன்னரும், சர்வ நாமங் கள் உடையவரும், நிர்மலத்தன்மை உடைய வரும் ஒருவரே. ஆகவே, சிவம் என்ற சப்தம் சிவனுக்கே உரியது என்று எடுத்துக்காட்டும்.

இந்த நியாயத்தினுலேயே சிவபெருமானிடத் திலே எல்லா அம்சமும் சூட்சுமமாக அமைந்து கிடக்கிறது. தாத்பர்யம் என்ன? சிவசக்தியி னுடைய வழித்தாக நிற்கும் இந்த ஜகத் பரமேசுவரன் வழியாகக் கிடக்கும் என்பது தாத்பர்யம். அது எப்படிக் கிடக்கும்? இந்த உலகமெல்லாம் அவன் வசம் என்று சொன் னுல் அதன் தாத்பர்யம் அவன் ஆணையின் கீழ்ப்பட்டது உலகம் என்பதாம். அந்த பரமேசுவரனின்கீழ் இந்த உலகம் எல்லாம் கிடக்கும் என்ருல் அதன் தாத்பர்யம் பரமேசு வரனுடைய ஆணையின் வழியாக இந்த அகில உலகமும் அடங்கிக்கிடக்கும் என்பதாகும்.

ஆணை என்பதற்குத் தாத்பர்யம் என்ன? வடமொழியில் ஆக்ஞை என்பது இங்கே ஆணை என்று சொல்கிறது. சிவஞானபோதம் இரண்டாவது சூத்திரத்தில் 'ஆக்ஞை' என்று சொல்லப்பட்டிருக்கின்றது. "ஆக்ஞா சம வேதயா" என்று வடமொழியில் சொல்லப் பட்டிருக்கிறது. ஆணை சிவசத்தி; சுவாதீன மாக இருக்கும் என்பது தாத்பர்யம். அப்படி யானுல் அந்தச் சிவசக்தியினிடத்திலே இந்த உலகம் எல்லாம் அடங்கிக் கிடக்கும். அது எப்படி அடங்கிக் கிடக்கும் என்ற லட்சியத் தைப் புலப்படுத்துவது திருவம்பலச்சக்கரம். எல்லா எழுத்துக்களையும் ஒன்றுகச் சிவசக்தி நடத்தும் என்றும், அந்த எழுத்துக்களைக் காரணேசுவரர்கள் நடத்துவார்கள் என்றும் காரணேசுவரர்கள் அனைவரும் தத்தமக்குரிய எல்லையில் நடத்துவார்கள் என்றும், சிவசக்தி யினிடத்தில் போய் ஒடுங்கிக் கிடக்கும் சிவ சக்தியினுலே செலுத்தப்பெறும் என்றும் தெரிகிறது.

முன்னே நம் தலைவர் அவர்கள் நமக்கு எடுத்துக் காட்டியவாறு எழுத்துக்களை இரண்டு பிரகாரமாகக் கொள்ளவேண்டும். ஒன்று காணப்படுகிற வரிவடிவாக எழுதப் படுகிறஎழுத்து. மற்றொன்று உச்சாரணவடிவு. தோன்றிய அருள் நாதத்திலே முரண்பட்டா லொழிய நாம் பேசுகிற பேச்சு வாக்கை முன்னுகக்கொண்டது. வாக்கு விவகாரங்கள்

இருக்கிறதே. அவற்றைத் துணையாக்கொண்டு எழுந்தது. இந்த வாக்கு ஒப்புமையிலும் இந்த மந்திரங்கள் சொன்னதும் கேட்பவர் களுக்கு இந்த இரண்டும் ஒன்ருகப் புலப் படுமேயன்றி வேறுபாடு காணுதல் இயலாது. சம்பந்தம் இல்லாமலேயே எழுவது என்று சொல்கிருர் என்பது மத்திர சுத்திப்பிரகரணம் இருக்கிறது. ஆத்ம சுத்தி என்பதற்குப் பொருள் இங்கே மந்திரம், மாயையோடு கலப் பது. இவ்வாறு தனக்கு உரிய தன்மையைப் புலப்படுத்தும் மந்திர சுத்தி, ஆத்ம சுத்தி. மந்திரங்களால் சிவபூஜை பண்ணவேண்டும் என சிவாகமங்கள் சொல்கின்றன. ஆத்மசுத்தி எது ? ஆத்மதத்துவங்கள் வாயிலாக அறிவு பெறவேண்டும். மருள் வாயிலாக ஆன்மாக் கள் கட்டுண்டு கிடக்கின்றன. இந்த நிலை நீங்கப்பெற்று அருள் பெறுகின்றது. அருள் சேர்ந்து நிற்போர்கள் தன்மையை உணர்தல், அது ஆத்மசுத்தி, ஸ்தானசுத்தி பூஜைசெய்கிற இடம் உலகத்திலே இடம்பெறுவது ஒன்று அல்ல பின் ஏது எனின் இடம் திருவருள் மயமாக அமைந்திருக்கும் தத்துவம். அந்தப் பொருளை உணர்தல் அதன் பின்பு பரமசுத்திக் கும் மந்திரத்தை நாம் இதுவரை பேசுகிற பேச்சிலே அந்தப் பேச்சுக்கு 'வாய்ப்பாக எழுத்து ஒன்று அல்ல. இது திருவருள் நலம் என்ற அருள் நலத்தின் துணைகொண்டு எழுந்தது.

இலிங்கசுத்தி. பூஜிக்கிற பரமேசுவரனு டைய தத்துவம் உலகத்திலே காணப்படுகிற வடிவம் போன்றது. எல்லாம் திருவருள் மயமான வடிவம் என்று லிங்க சுத்தி சிவாக மங்களிலே சொல்லப்படுகிறது. இதையெல் லாம் சண்டேசுவரர் புராணத்திலே சேக்கிழார் சுவாமிகள் இந்த வரம்பிலே நின்று சொல் கிருர், மாய எல்லைக்குள் நின்று சிவபெரு மான் ஏற்றுக் கொள்ளவில்லை; அந்த அருள் மயமாக இருக்கிற நிலையிலே பரமேசுவரன் தன்னுடைய பேரருள் தவத்திற்கு இரங்கி "கோணம்" என்ற அந்த வரம்பிலே நின்று பூஜையை ஏற்றுக்கொள்கின்ருன் என்று எடுத்துக்காட்டுகிறது. இந்த ஞான நெறியிலே தரப்படுகிற கிரமத்தை – அந்த அதிகாரத்தைக் கொடுப்பதுதான் சைவத்திலே சிவ தீட்சை. மூன்று மலத்தையும் கெடுத்து, நம்மை ஏது வாக்குவது அந்தத் தீட்சை சப்தத்தினுடைய தாத்பர்யம். ஞான பாவனையினுலே மூன்று மலங்களை நீக்குதல். இந்த நிலையையும் நீங்கப் பெற்றவர்கள்தானே நமக்குத் தர முடியும் ? அப்படி நீங்கப் பெற்றவர்கள் யார் ? சிவபெரு மான் ஒருவர்தான், அவன்வழித்தாகப் பெற்ற வனும் அத்தகைய நிலையில் வருவான். ஆதலி ஞலே நம்முடைய வைதிக சமயங்களில் அப்படி வந்ததே நம் குருபரம்பரை. அத்த கைய குருபரம்பரையில் வந்தவர்கள், பரமே சுவரனே குரு என்றும் கூறி மூன்று பிரகார மாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த மூன்று பிரகாரத்திலே வந்தது குரு மரபு என்று திருமூலரே குறிப்பாக எடுத்துக் காட்டியிருக் கிருர். அந்த முறையிலே வந்திருக்கின்றது. ஞான மயமான சிதம்பரம் ஞானசம்பந்த சுவாமிகள் பெற்றிருக்கிற சிதம்பரம் என்று சேக்கிழார் சுவாமிகள் எப்படிக் காட்டிஞர் களோ அதனைத் திருமூலர் புராணத்திலும் "வவ்விய மெய்யுணர்வில் வரும் ஆனந்தக் கூத்தைக் கும்பிட்டு" என்று காட்டுகிருர். இந்த இயல்பு தடுத்தாட்கொண்ட புராணத்தில் சிதம்பர தெரிசனத்தின்போது சுந்தரமூர்த்தி சுவாமிகள் அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையேஆக மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந் தார் என்று குறிப்பிடுகின்ருர். ஆதலினுலே தவம் பயந்த சாதகர்களே சிவஞானமான அந்த உண்மையை அங்கேயே விரிவாக உணர்த்திட முடியும்.

அம்பலத்தில் நின்று ஆடும் பெருமானை நாம் தரிசிக்கின்றநிலை வேறு, பரமஞானிகள் தரிசிக்கிற நிலைவேறு என்றும் நாம் நாமாக நின்று தரிசிப்போம் என்றும் சேக்கிழார் சுவாமிகள் குறிப்பிடுகிருர்கள். பரம ஞானிகள் சிவம் வேறு, தாம் வேறு என்ற நினைப்பில் லாமல் அவன் திருவருள்மயமாகச்சிவமாகவே நின்று அவனை வழிபடுகின்ருர்கள். திருமூல தேவரும் அவனது திருவருளிலே கலந்து

மந்திரத்தை அமைத்தார். பஞ்சாட்சரம் என்கிற ஐந்து எழுத்துக்களும் சிவபெருமான் திருவடியில் உடையன என்றும், அவை ஐந்து பூதங்களாக அமைந்தவை என்றும், மந்திரங்கள் இயங்க காரணேசுவரர் இயங்குவர் காரணேசுவரர் இயங்கப் பூதம் இயங்கும் பூதம் இயங்க எழுத்துக்கள் இயங்கும் எழுத்துக்கள் இயங்கச் சிவசக்தி இயங்கும் அதுவே அவரது ஆனந்த நடனம் சிவசக்தி மயமாக இருக்கிற அக்ஷரம் இயங்கத் தத்வ மயமாக இருக்கிற உலகம் இயங்குகிறதென்றும் சொல்கிறார்.

சிவசக்தி இயக்கம் ஒன்றே சிவபெருமானின் திரு உருவ அசைவு. அத்தகைய திரு உருவ அசைவு, சிவ சக்தியின் அசைவு, பஞ்சாட்சர மந்திரம் சிவாய நம: **'சி'** என்றால் சிவன், **'வ'** என்றால் அருள், **'ய'** என்றால் ஆன்மா, **'நம:'** என்றால் மல எழுத்துக்கள்; இவைதான் பஞ்சாட்சரத்தின் தாத்பர்யம்.

ஒவ்வொரு எழுத்துக்களும் சிவசக்தி மந்திரம். அதனை நடத்துகிறது சிவபெருமான் அருள். எழுத்துக்களைத் திருவம்பலச் சக்கரம் மாற்றி யமைக்கிறது. பிருதிவி முதல் பஞ்ச பூதங்களுக்கு ஐந்து எழுத்துக்களும் மாறி நின்று சேர்ந்து கிருத்யங்கள் செய்கின்றன. இத்தகைய செயல்கள் எல்லாம் நிகழும் வண்ணம் எழுத்துக்களை மாற்றி யமைக்கிற அமைப்பினாலே எழுத்துக்கள்மாறி, அவற்றை காரணமாகக்கொண்டு காரியமாகக் கீழே உள்ளதை இருக்கிற தத்துவமாகவும் தொழில் படுவதற்கு எழுத்துக்களை மாற்றியமைக்கவே அவற்றின் வழித்தாகவே இருக்கிற தத்துவங்கள் தொழில்படுவதற்கு மந்திரங்களுடைய அமைப்பு நமக்குத் துணையாகும். அதன் எண்ணிக்கை அட்சரங்களுடைய துணையாக வைத்துக்கொண்டிருக்கிறது என்ற கருத்தைத் தலைவர் நமக்குக் காட்டினார்கள். அகரம் உகரம் என்ற இரண்டு எழுத்திலேவைத்துக் காட்டத் தலைப்பட்டு எட்டும் இரண்டும் உருவான சிதம்பரசக்கர வாக்யத்தில் எட்டும் இரண்டும் சேர்ந்துள்ள கருத்தை விளக்குகிறது. பத்து பொருளிலே அமையாத அது அகரம், உகரம் ஆகிய பொருளும் அவற்றோடு ஏனைய உறுப்புக்களும் தழுவி, ஐந்து கலைகளும் பிரணவமாக அமைந்திருக்கிற உலக இயல்புக்குக் காரணம் பிரணவம் என்பது சிவபெருமான் நேரே இருந்து சுத்தமாயையை இயக்கும் என்று சொல்கிற கருத்தை அகரம் உகரம் என்று சங்கியைகளை எடுத்துக்காட்டி எட்டொடும் இரண்டு என்று எடுத்துக்காட்டி இத்தனைபேருமாக இருக்கிறார் பரமேஸ்வரன் என்றபொருளையும் அதுதருகிறஅகரம், உகரம் ஒவ்வொரு எழுத்துக்கும் தலைவர் உண்டு என்று கூறி, எழுத்துக்களைச் சமஷ்டி வியஷ்டிப் பிரணவம் இரண்டு வகையாக இருக்கும், தனித்தனியாய்ப் பிரிந்து சென்று பிரணவம் ஒவ்வொரு தேவதைகளைத் தலைவர் இவர்களெல்லாம் சேர்ந்திருக்கிற ஐந்து கலைகளும் ஒவ்வொன்றும் பிரணவத்திற்கு பரமேசுவரன் ஒருவனே என்று சொல்லிக்கொண்டு வந்து முடிவு கட்டுவதினாலே பரம என்று எடுத்துக் காட்டி எட்டினோடு இரண்டு என்று சொல்கிற ஒன்றுக்கு'' பிரணவ பரமேசுவரன்'' என்பதனுடைய தத்துவப் பொருளை விளக்கி விட்டால் எழுத்துக்கள் மாறி மாறி மாத்திரையையும் காலத்தையும் உணர்த்தி, கால வேறுபாட்டுக்கு அந்த எண்ணிக்கை வேறுபாட்டாலே வைத்த ஒவ்வொரு எழுத்துக்களும் மாறிநிற்கிற கிரமத்தை மாத்திரை மாற்றுக்கள் என்று பேசப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ பஞ்சாட்சரம் நடத்தும் ஐந்து பொருளுக்கும் சிவசக்தி ஐந்து பொருள்களையும் உணர்த்துவதுபோல வணக்கம்என்றபொருள் ஒன்று. இன்னும் ஒன்று. அனுபவிப்பது சிவன் ஆதலாலே வந்தது என்று கருதி, பின்பு இவை ஒன்றும் நமக்கு இல்லை எல்லாம் சிவன் பொருட்டு என்கிற தாத்பர்யத்தில் நம: என் பொருட்டு இல்லை. சிவாய சிவன்பொருட்டே என்கிற பொருளில் பஞ்சாட்சரம் அமைந்திருக்கிறது.

நமக்கு வருகிற இன்ப துன்ப அனுபவங்கள் அவனாலேதான். எப்படி வந்தாலும்

பரமஞானிகள் சிவபெருமாலுல் வந்ததுஎன்று காண்பார்கள். சிவபெருமானின் அருளால் அன்றி ஒன்றும்வந்து பொருந்தா எனத் திரு நாவுக்கரசர் போன்றபெரியார் கூறியிருக்கிருர்.

இதுவரையில் திரு அம்பலச் சக்கரம், நவகுண்டம், பைரவி மந்திரம் முதலியவை களைக் குறித்துப் பேசப்பட்டது. அஜபா, ஜபிக்கப்படாத மந்திரமாக விளங்குவது, அகர உகரத்தால் சிவம் சக்தி இரண்டும் குறிக்கப் படுகிறது. மகரத்தால் அதினின்று எழும் ஒளி காட்டப்படுகிறது. மந்திர பேதங்களுள்ளே, பஞ்சாக்ஷர மந்திரமும், அதற்கு உரிய பீஜா மந்திரங்களும் சொல்லப்படுகின்றன. நமக் குள்ளே அமைந்திருக்கின்ற ஞானம், பக்தி, வைராக்யம் இவற்ருேடு இறைவனைத் தியா னித்தால் இறைவன் அருள் கைகூடும் என்ற அளவிலே முடித்துக்கொள்கிறேன்.

"புண்ணிய வானவர் பூமழை தூவிநின்று
எண்ணுவர் அண்ணல் இணையடி மந்திரம்
நண்ணுவர் நண்ணி நமஎன்னும் நாமத்தை
கண்ணெனை உன்னிக் கலந்து நின்ருரே."

"அரகர என்ன அரியதொன் றில்லை
அரகர என்ன அறிகிலர் மாந்தர்
அரகர என்ன அமரரும் ஆவர்
அரகர என்ன அறும்பிறப் பன்றே."

ஐந்தாந்தந்திரம் : ‘ஞானம்’

திருவாவடுதுறை ஆதீன வித்துவான்

## ஸ்ரீ தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்கள்

கடலூர்.

ஸ்ரீ - ல - ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுக்கும், முனிபுங்கவர்களுக்கும், மற்றும் மெய்யன்பர்களுக்கும் எனது வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எனக்குப் பேசுவதற்குத் **திருமந்திரம் ஐந்தாம்** தந்திரத்தில் **ஞானம்** என்ற பகுதி கொடுக்கப்பட்டிருக்கிறது. திருமந்திரம் என்ற நூலே சிவபெருமான் அருள்பெற்ற திருமூலர் அருளிய நூல்; ஆதலாலே, எந்தப்பேறும் பெற்றிடாத நான் அதனைப்பற்றிப் பேச என்ன தகுதியுள்ளது என அஞ்சுகிறேன். அந்நூலின் பெயரோ திருமந்திரம் என்பது.

திரு என்ற சொல்லுக்குப் பலபொருள்கள் சொல்லப்படுகின்றன. மிகச் சிறந்த பொருள் எது என்று ஆராய்ந்தால் திரு - வீட்டின்பம், பரமானந்தம் என்றும் சொல்லப்படுகிறது. அதற்குமேலே பொருள் சொல்ல இயலாது. இது அரியபொருள் என்பதை விளக்கவே திரு மந்திரம், திருக்குறள், திருவாய்மொழி என - உண்மைத் தத்துவங்களை அப்படியே எடுத்துரைக்கின்ற நூல்களுக்குப் பெயரிட்டார்கள் போலும் பெரியோர்கள்.

மந்திரம் என்ற சொல்லினுடைய தாத்பர்யங்களையெல்லாம் எனக்குமுன் பேசியவர்கள் வாசாமகோசரமாய் அருளிச் செய்யக் கேட்டீர்கள். அதிலிருந்து தெரிவது என்னவென்றால் மந்திரம் என்கிறது ஏராளமான - தனக்கு மேல் எல்லையில்லாததான ஆற்றலைப் படைத்திருக்கின்ற ஒன்று என்பதை அறிகின்றோம். அவ்வாறு ஓர் ஆற்றலைப் படைத்திருக்கின்ற அந்த ஒன்றின் துணையில்லாமல் இறையருளை அடைதல் முடியாதெனச் சொல்லப்பட்டிருக்கிறதைக் கேட்டுள்ளோம்.

திரு என்ற வீட்டின்பத்தை அடைதல் எளிதில் இயலாது. ஆகையால், அடைய இயல்வதற்குப் பக்கபலமாய் இருந்துகொண்டிருப்பது மந்திரம் என நாம் அறிந்துகொள்ளலாம். இதனால் திரு என்பதில் மந்திரம் என்பதும் சேர்ந்து இருக்கின்றது என்று கொள்ளலாம். மந்திரம் என்ற சொல்லின் பொருளையெல்லாம் முன் பேசியோர் அருளிச் செய்யக் கேட்டோம். இனி அந்த மந்திரம் என்பது நமக்குத் தன் கொள்கையை இன்னதென நிலைநிறுத்திவிட்டது. ஆனால், அதைச் செயல்முறையிலே கொண்டுவருவது எவ்வாறு என்பதுதானே இப்பொழுது வேண்டும். டாக்டர் கொடுத்த ‘ப்ரிஸ்க்ரிப்ஷன்’ கையில் இருக்கிறது; அதாவது மந்திரம். ஆனால், அதைக் கடையில் கொடுத்து மருந்து வாங்கி அருந்தினால்தானே அதாவது செயலில் இறங்கினால்தானே நோய் நீங்கும்? செயலில் இறங்கி நேரே செல்லமாட்டாமே ஒரு மந்திரம் இருக்குமானால், அந்த மந்திரம் நமக்கு எந்த அளவில் உதவி செய்யவேண்டுமோ, அந்த அளவுக்கு உதவாது போகும். ஆகையால்தான், நமது மூலர்பெருமான் மந்திரம் என்ற நூலினுள்ளே ‘தந்திரம்’ என்று உள்ளே பகுத்துச் செயல்முறைக்கு அம்மந்திரத்தை எவ்வாறு ஆக்கிக்கொள்ள வேண்டுமென்றும், ஸ்வீகரித்துக் கொள்ளவேண்டும் என்றும் அம்முறைகளை ஒன்பது பகுப்புகளில் ‘தந்திரம்’ என்ற பெயராலே சொல்லிவிட்டார்கள். ஆங்கிலத்தில் ‘தியரி அண்டு ப்ராக்டிஸ்’ என்று சொல்லுவதுபோல், **மந்திரமும் தந்திரமும்** இதிலே அடங்கியிருக்கின்றது. ‘தியரி’ மாத்திரம் இருந்து பயன் இல்லை, ‘பிராக்டிஸ்’ முக்கியம். ஒருவன் சாஸ்திர ரீதியாக - ‘ப்ராக்டிகல்’ ஆக அறிந்திருக்கின்றேன் என்றால் அனுபவரீதியாக அறிந்திருக்கின்றான் என்று அர்த்தம்.

‘சர்க்கரை’ என்ற வார்த்தையை ஒரு ஏட்டிலே எழுதினால் அதைக் கண்ணாலே

பார்க்கலாம். 'சர்க்கரை' என்ற வார்த்தையை ஒருவரைச் சொல்லச் சொல்லிக் காதாலும் கேட்கலாம். ஆனால் நாக்கில் இனிப்பு இருக்காது. சர்க்கரை என்ற வஸ்துவானது நேரிலே வந்து நாக்கில் விழுந்தால்தான் கண்ணால் பார்த்த சர்க்கரை மந்திரம், காதால் கேட்ட சொல்லாகிய சர்க்கரை மந்திரம் இரண்டும் இனிக்கும். செயல் முறைக்கு எவ்வாறு கொண்டு வரவேண்டும் என்பதைத்தான், அகில உலகத்திலே இருக்கின்ற அனைவரும் இந்த வீட்டின்பத்தை, யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பதுபோல - வையகம் முழுவதும் அடைய வேண்டுமென்ற காரணத்தினால் சுத்த அருள்வயப்பட்டவர்களாகிய அவர்கள் அதுபற்றி என்னென்ன சொல்லவேண்டுமோ அவற்றை எல்லாம் தாம் மட்டுமே அனுபவித்த அந்த நிலையோடு நின்றுவிடாமல், நமக்கும் கொண்டுவந்து ஊட்டுகிறார்கள். இவ்வாறு அவர்கள் ஒவ்வொரு செய்தியையும் நமக்குக் கொண்டுவந்து ஊட்டும்போதும், அவர்கள் பரவயப்பட்டவர்கள் - சிவத்தின்வயப்பட்டவர்கள் ஆதலாலே, சிவத்தின் அனுமதி கேட்டுத்தான் நமக்குக் கொடுக்கவேண்டும். ஆதலினாலேதான், ஒவ்வொரு ஆண்டும் தாம் சிந்தனையிலே ஊறியிருந்து, அப்பரசிவத்தினிடத்தே அனுமதி பெற்று, அவர் அனுமதி எந்த அளவுக்கு நமக்குக் கொடுக்கவேண்டும் என்று தம்முடைய ஞான எல்லையில் தோற்றுவித்ததோ அதைமாத்திரந்தான் நமக்குக் கொடுத்திருக்கிறார். ஆகையால், நாம் இதிலிருந்து என்ன தெரிந்துகொள்ளவேண்டும்? திருமூலருடைய ஞானம் முழுதும் இந்த நூலுக்குள் அடங்கியிருக்கிறது என்று நினைத்துவிடக்கூடாது. நமக்கு வேண்டிய ஞானம் எந்த அளவுக்கோ அந்த அளவுக்கு அவரால் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. டாக்டர் கொடுத்த ப்ரிஸ்க்ரிப்ஷனில் எந்த மருந்து எழுதப்பட்டிருக்கிறதோ அந்த அளவுக்குத்தான் வைத்தியத்தைப்பற்றி அந்த வைத்தியருக்குத் தெரியும் என்று நாம் கருதிவிடக்கூடாது. ஏனென்றால் அவர் ஒரு குறிப்பிட்ட நோயாளிக்கு ஏற்ற ஒரு மருந்தைக் கொடுக்கிறார். அதைப்போல எந்த அளவுக்கு நமக்கு வேண்டுமோ அந்த அளவுக்கு - வீட்டின்பத்தை நாம் அடைவதற்கு நாம் எதைக் கொள்கையாகக் கொள்ள வேண்டுமோ அவ்வாறு கொண்டு, எந்தவகையில் தமதாக்கிக்கொண்டு செயல் முறையில் ஆக்கிக்கொள்ள வேண்டுமோ, அவைகளையெல்லாம் தொகுத்து ஒரு பிண்டமாக - ஒரு உணவாக - அமுதமாக - இம்மந்திர நூலில் கொடுத்து அருளியிருக்கிறார்கள் என்று நாம் கருதினால் திருமந்திரத்தின் உயர்ந்த பெருமை என்னவென்பது நமது உள்ளத்தில் பதியும். நோயாளிக்கு மருந்து எந்த அளவுக்கு உதவுகிறதோ, அதாவது மருந்தை உட்கொண்ட பிற்பாடு எப்படி வியாதியை அந்த மருந்து களைகின்றதோ, அதைப்போலவே திருமந்திர சாரத்தை ஒருவர் ஸ்வீகரித்துக்கொண்ட பிற்பாடு வீட்டின்பத்தை அது தரும். மருந்தானது நோயாளிக்கு வியாதியைப் போக்கிச் சுகத்தைக் கொடுக்கிறது. அதைப்போல, திருமந்திர சிந்தனை, திருமந்திர சிவயோகங்கள், திருமந்திர ஞானம் ஆகிய எல்லாம் கூடி, நமக்கிருக்கின்ற துன்பம், அல்லது இன்பம் கலந்ததாய் இருக்கிற துன்பம் இதைப் பற்றற ஒழித்து முற்றிலும் இன்ப மயமாகவே ஆகிவிடுவதற்கு என்ன துணை செய்யவேண்டுமோ அதில் இம்மிகூடக் குறைவு இல்லாமல் அது செய்கிறது என்பதை நாம் கருத்திலேகொள்ள வேண்டுமென்று அடியேன் விரும்புகிறேன்.

சிவசாந்நித்யம் பெற்றிருக்கின்ற உங்கள் முன்னிலையில் அடியேன் சொல்வதையெல்லாம் உங்களுடைய சொந்தக் குழந்தையின் மழலைச் சொல்லாகக் கருதி, எந்த அளவுக்கு ஏற்றுக்கொள்ளக்கூடுமோ அந்த அளவுக்கு ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று வேண்டிக் கொள்கிறேன். நான் உங்களுக்கு உணர்த்துவதாக எண்ணிவிடாதீர்கள். இருக்கிற விஷயத்தை அப்படி அப்படியே சொல்லிக் கொண்டு போகிறேன். அதிலே புகுந்து அது தான்பொருளா? அது சரியா? என்று பார்க்க வேண்டாம். ஏனென்றால், தாய் தன் குழந்தையின் மழலையை ஆராய்ச்சிசெய்யமாட்டாள்.

அதுபோல என் உரையைக் கொள்ளுமாறு உங்களை மீண்டும் வேண்டிக்கொள்கிறேன்.

அடியேன் பேசுவதற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் பொருள் திருமந்திரத்தில் ஐந்தாவது தந்திரம் ஆகும். ஐந்தாவது தந்திரத்தின் கண்ணே நாம் நின்றுகொண்டு முன்னும் பின்னும் நோக்குவோமானால், முன்னே நான்கு தந்திரங்கள், பின்னே நான்கு தந்திரங்கள் இருக்கின்றன. மொத்தம் 9 தந்திரங்களில் இடையே, நட்டநடுவில் இருந்துகொண்டிருக்கிற ஒரு பொருள் இது. ஒரு கூடாரத்தை நான்கு பக்கங்களிலும் இழுத்துக் கட்டியிருந்தாலும் அந்தக் கூடாரத்தை நடுக் கம்பம் தாங்குகிறதுபோல, ஐந்தாம் தந்திரம் தனக்கு முன்னே இருக்கிற நான்கு தந்திரங்களின் கொள்கைகளையும், பின்னே வரப்போகின்ற நான்கு தந்திரங்களின் கொள்கைகளையும் தன்னிடத்திலே இழுத்து நிறுத்திக் கொள்கிற அந்த நடுநிலைமையை உடையது என்பதையும் நாம் கொள்ளவேண்டும். அந்தச் சிறப்பு இந்த ஐந்தாம் தந்திரத்திற்கு இருக்கிறது. எப்படிச் சிவபெருமானுடைய உருவ பேதங்களிலே முன்னே நான்குக்கும், பின்னே நான்குக்கும் இடையிலே இருக்கிற சதாசிவ மூர்த்தம் அருவமும் உருவமுமாகிப் பிணைத்துக்கொண்டிருக்கின்றதோ, அதைப்போலத் திருமந்திரத்திலே இடையிலே இருக்கிற இந்த ஐந்தாம் தந்திரம் சதாசிவ ஸ்வரூபம் போல இருந்துகொண்டு முன்னும் பின்னும் இழுத்துப் பிடித்து இயக்குகின்றது. அட்சரங்கள் இயக்க மந்திரங்கள் நடக்கிறதுபோல், இந்தப் பாகந்தான் நடத்துகிறது என்பது ஐந்தாம் தந்திரத்திற்கு உள்ள கௌரவம். அதை நாம் முன்னே சங்கற்பித்துக்கொள்ளவேண்டும் என்றும் வேண்டிக்கொள்கிறேன்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கருணைநோக்கினால் இந்த ஐந்தாந்தந்திரத்தில் அடியேனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்ற செய்தி 'ஞானம்' என்ற ஒரு பகுதி ஆகும். ஞானம் என்பதைப்பற்றிப் பேசுகிறதாக இருந்தால், பேசுகின்றவர் பல விஷயங்களைப் பற்றிக் கவனிக்கவேண்டும். இந்த இடமோ ஞானபூமி. பல ஞானாசாரியர்கள் ஞான அரசு செலுத்திய இடம். இங்கே ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் ஞானத்தின் வடிவாக வீற்றிருக்கிறார்கள். நீங்களெல்லோரும் ஞானத்தில் தேவர்களாக இருக்கிறீர்கள். எல்லாமே ஞான மயமாயிருக்கிற சபை ஒன்றில் ஞானத்தைப் பற்றிப் பேசுகின்றவர் பெரிய ஞானவானாக இருந்தால்தானே ஞானத்தைப்பற்றிப் பேச முடியும். பெரிய ஞானவான் என்று சொல்லிக் கொள்ளுந் தகுதி எனக்கு இல்லாவிட்டாலும், ஸ்ரீ - ல - ஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் அருள் ஞானத்தால் பேசமுற்படுகிறேன்.

நமது உடம்புக்குள் இருந்து உடம்பை நடத்துகிறதே அதற்கு ஆத்மா என்று பெயர். ஆத்மா இப்பொழுது எங்கே இருக்கிறது? உடம்புக்குள் இருக்கின்றது. உடம்புக்குள் எங்கே இருக்கிறது என்ற கேள்விக்குப் பல பெரியார்கள் பல ஞானநூல்களின் வாயிலாக, ஆத்மா ஒவ்வொருவருடைய இருதயத்திலும் இருக்கிறதென்று கூறி, அந்த இருதயத்தில் எப்படி இருக்கிறது என்றும் தெரிவித்திருக்கிறார்கள். ஞானம் எப்படி வருகிறது என்பதற்குச் சிவத்தின் மகிமையினால் ஞானம் வருகிறது என்றும், சிவத்தின் மகிமையினாலே ஞானம் அடைவதாய் இருக்கிற ஆத்மா உடம்பில் இருதய ஸ்தானத்தில் இருக்கிறது என்றும், ஆத்மாவின் இயற்கைக் குணம் ஞானத்தை விஸ்தரித்துக்கொள்வதாய் இருக்கிறதென்றும் சொல்லியுள்ளார்கள்.

எப்பொழுதும் அது அப்படியே இருக்கலாமே என்றால், ஒரு விளக்கை ஒரு மூடி போட்டு மூடிவிட்டால் எப்படியோ அப்படி இந்த ஆத்மா உடம்புள் இருக்கின்றது.

மேலும் ஆன்மா பற்றுக்களோடு சம்பந்தம் கொள்வதால் ஞானம் வெளித்தோற்றாது போகிறது. நம்மையெல்லாம் பற்றிக்கொண்டிருக்கிற பற்றுகளை நீக்குவதே சிவஞானம். அந்த ஞானத்தைக் குருமூர்த்திகளின் வாயிலாகப் பெற்றவன் அந்த மாயா மலங்களின்

இடத்திருந்து விடுபட்டு, சுத்த சிவமாகப் பிரகாசிக்கிருன். மனிதப்பிறவி எடுத்திருக்கிற எல்லோரும் அறநெறியில் செல்லா விட்டால் மற நெறியிலேயே போய், பிறவித்துன்பத்தை நீக்க வழியின்றி அல்லலுற நேரிடுகின்றது. தர்மத்தில் சிறந்தது அறநெறி ஆகிய தர்மம் தான்; அந்த அறநெறியில் செல்வோர்களே ஞானவாயிலைச் சீக்கிரத்தில் அடைகிருர்கள்.

நம் திருமூலதேவர் "ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை" என்று குறிப்பிட்டிருக்கிருர். அந்த அறநெறியை மக்களுக்கு எல்லாம் காட்டுவதற்காக, அரன் உருவில் சைவச் செங்கோல் ஓச்சிவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குரு மகாசந்நிதானம் நம் முன்னிலையில் வீற்றிருக்கிருர்கள். அவரது திருவடிநிழலை அடைந்தவர்கள் சீக்கிரத்தில் ஞானம் பெறமுடியும் என நாம் அறியலாகும்.

திருமூலர் ஒரு லட்சியத்தை நமக்கு வைத்துவிட்டார். அதுவே ஞானம் எனப்படுவது. ஆகவே, ஞானம் நம்முடைய லட்சியமாக இருக்கவேண்டுமென்று திருமந்திரம் தெரிவிக்கிறது. மற்றும் நீதி நூல்களும் ஆன்மா எந்த வடிவமாயிருக்கிறதோ, அதற்கு அதையே உணவாகக் கொடுத்துவிட்டால் புஷ்டிப்படும். விரோதமாகக் கொடுத்துவிட்டால் சளைத்துப்போம் என்கின்றன. ஆத்மா ஞான வடிவம் உடையது; ஆதலினுலே ஞான ஸ்வரூபம் உடைய ஆத்மாவானது நல்ல விசேஷத்துவஞானம் உடைய ஒன்றினுலே ஞானத்தை உண்டாக்கினுல் அது சிறப்பு அடைகிறது. அதற்கு விரோதமாய் இருக்கிறது விஞ்ஞானமே. அது அஞ்ஞானம் ஆகும். அந்த அஞ்ஞானத்தைக் கொடுத்துக் கொண்டே போனுல் கொஞ்சங் கொஞ்சமாக ஆன்மா சோர்ந்துவிடுகிறது. பல பிறவிகளை எடுத்து அலைகிறது என்றும் வேறு நூல்களில் சொல்லிவைத்திருக்கிருர்கள். இவைகளை எல்லாம் கொண்டு பார்த்தால் இப்பொழுது நமக்குக்கிடைக்கும் முடிந்த முடிபு என்னவென்ருல் ஞானம் சேர்ந்த அறநெறி மக்களால் கொள்ளப்படவேண்டும் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அந்த ஞானம் ஒரு குணம். அது அருவமானது. அதை எப்படித் தெரிந்து கொள்ள முடியும்? தெரிந்துகொள்ள முடியாது. ஆகையால்தான் மனத்திற்குள்ளே ஞானத்தின் சிறப்பை இன்னது என்று தெரிவிக்க வேண்டியதாகின்றது. அந்தக் குணத்தினை நமக்கெல்லாம் உணர்த்திக் காட்ட வேண்டும் என்று நம் சேக்கிழார் சுவாமிகள் விரும்பியபடியினுலே அரும்பெரும் தமது சிவ ஞானத்தினுலே ஞானசம்பந்தப் பெருமானை 'ஞானத்தின் திருவுரு' என்று சொல்லிவிட்டார்கள். ஆகையால், அவருடைய சரித்திர வரலாற்றிலே நாம் காண்கிற அனைத்தும் வாக்கினுலே புலப்படுகிறது. எல்லாச் சொற்களும் ஞானமயம் என்று சொல்லிவிடவேண்டும். இன்னும் சாத்திர நூல்களில், ஞானிகள் சிவ கரணம் உடையவராகிருர்கள்; ஆதலினுலே அவருடைய போக்கில் நாம் எந்தவிதமான ஐயப்பாடும் கொள்வதற்கில்லை என்று வரையறுத்து எழுதி வைத்திருக்கிருர்கள். இப்படியாக ஞானத்தினுடைய முடிந்த நோக்கம் இன்பம் என்பதை நாம் படிப்படியாகக் கொள்ளவேண்டிவரும்.

மற்றப்பொருள்களெல்லாம் அழிந்துவிடத்தக்கவை. அந்தப் பொருளையெல்லாம் நாம் எவ்வளவு சேர்த்தாலுங்கூட அதனுடைய ஸ்வபாவம் நம்மைவிட்டு அவை நீங்கத்தான் செய்யும். இப்படியான அந்த ஸ்வபாவத்தை அவை தமக்கு இயற்கையாகக் கொண்டிருப்பதால் அதை நாம் நம்முடைய இயற்கையினுலே மாற்றிவிடமுடியாது. அவைகளுடைய இயற்கைப்படி நாம் போகலாமே அன்றி அந்தஸ்வபாவத்தை மாற்றிவிட முடியாது. எல்லாப்பொருளும் அழியும் தன்மை உடையவை. அனுபவத்திலே, நிலையாமையானது ஆரம்ப நிலையாம். நிலையாமைத்தன்மையைத் தம்பால் உடையவை 'வடிவம்' எனப் பேசப்படும். இவை பிரளயம் வரைக்கும் ஆன்மாவுக்கு உறுதுணையாக இருந்து அப்பால் நீங்கி விடும். ஆகையால், எது தன்னுடைய ஸ்வரூபம் நிலையாமையாகப் பெற்றிருக்கிறன்தோ அது நிலையானதன்று.

எப்பொழுதும் நிலைத்திருக்கிற பொருள் பரமசிவமே. ஆகையால்தான் அழியும் பொருளாகிய அவற்றுக்கு ஆசைப்படாமல் அழியாத பொருளாய் இருந்துகொண்டிருக்கிற ஆக்கம் என்று சொல்லப்படுகின்ற ஞானத்தையே அடையவேண்டும். அதுவே சிறந்த பேறு, சிவப்பேறு. இந்தப் பிறப்பிலே எல்லாச் சாதனைகளும் கடந்தபின் இப்பேறு அனுபவிக்கப்படுகிறது. பின்னும் அநுபவிக்கப்படுகிறது. அதற்கு முன்னதாக நாம் கேட்டுக்கொள்ள வேண்டியது சாதனம் என்கிற ஞானப்பேறுதான். அந்த ஞானப்பேறு எப்படி வரும்?

ஆத்மாவுக்குச் சிவத்தைத் தவிர வேறு ஆதாரம் இல்லை. எப்படித் தொட்டிலுக்குத் தரைதான் ஆதாரமோ, சங்கிலி ஆதாரம் இல்லையோ, அப்படி ஆன்மாவுக்குச் சிவமே ஆதாரமாகிறது. சைவ சமயத்தின் ஒரு பெரிய உண்மை இதுதான். இந்த உண்மையை ஞானத்திற்கு ஒரு முதற்கருவியாக நாம் கருதிவிட்டால், ஞானத்தின் பொதுச் சாதனத்தில் திரும்பி விட்டோம் என்று சொல்லிவிடலாம். இப்பொழுது அடியேனை "நீ எங்கே இருக்கிறாய்?" என்று கேட்டால், "திருவாவடுதுறையில் இருக்கின்றேன்" என்று இப்படி ஏதாவது ஒன்றைச் சொல்லிக்கொண்டே போவேன். ஆனால் முக்கியமாக, பக்குவமான ஞானிகள் என்ன கருதுகிறார்கள் என்றால், எப்போதும் சிவத்திற்கு உள்ளேயேதான் தாங்கள் இருக்கிறதாகக் கருதுகின்றார்கள். சிவத்தில் எல்லாப் பொருள்களும் அடங்கியிருக்கின்றன. இது ஞானத்திற்கு அடிப்படை ஆகும். இந்த அடிமட்டத்தின் பேரிலேதான் மற்றைய ஞானசாதனையைக் கட்ட வேண்டும். நாம் எப்போதும் சிவத்தின் வியாபகத்திற்குள்ளேதான் இருக்கின்றோம். ஆனால் ஒரு மூடிபோட்ட கிண்ணத்தைத் தண்ணீரில் மிதக்கவிட்டிருப்பதுபோல, நாம் எல்லாம் சிவவியாபகத்திற்குள்ளேதான் ஒரு மறைப்பைப் பெற்று ஏகதேசத்தில் இருந்துகொண்டு இருக்கின்றோம். அந்த ஏகதேசத் தன்மையைஉடைத்துவிட்டால் சிவத்திற்குள் கலந்துவிடுவோம். மிகப்பெரிய ஒரு சமுத்திரம். அந்தச் சமுத்திரத்தில் ஒரு கிண்ணம். கிண்ணத்திற்குள்ளே கொஞ்சம் சமுத்திர ஜலம். இப்போது கிண்ணத்திற்குள் இருக்கிற சமுத்திரஜலம் சும்மா அலம்பிக்கொண்டு கிடக்கிறது. கீழே நிறைய உள்ள ஜலத்திலே மிதந்து கொண்டு கிடக்கிறது. அதைச் சேரவேண்டும். கிண்ணம் தற்காலிக ஆதாரம். அந்த ஜலம் கிண்ணத்தைச் சார்ந்துள்ளவரையில் கிண்ணத்திலேயே அடங்கிக் கிடக்கவேண்டியதுதான். தண்ணீர் தன் இருப்பு நீரே என எண்ண வேண்டும். ஆனால் அது ஜடப்பொருள். ஒரு மனிதன் அந்தக் கிண்ணத்தை நீக்கிவிட வேண்டியிருக்கிறது. ஆன்மாவும் இப்படித்தான். ஆனால் இது சித்துப்பொருள். இது கிண்ணத்து நீர்போல் இருந்துகொண்டிருக்கிறது. இந்தக் குற்றத்தை நீக்கிவிடுவோமானால் (நீக்குவதற்குச்சாதனம் ஞானமென்று சொல்லப்பட்டிருக்கிறது.) கிண்ணத்திலுள்ள ஜலம் சமுத்திரஜலத்தோடு கூடி வியாபகமாய் ஆகிவிடுவதுபோல், நம்முடைய ஆத்மஞானம் சிவஞானத்தோடு ஒன்றாக கலக்கத் தொடங்கி விடுகிறது. இது இன்பநிலை எனப்படும்.

இதுவரையில் கூறிவற்றால் நாம் அறிந்து கொள்ள வேண்டியது என்ன வென்றால், ஞானம் அற நெறி என்றும், ஞானந்தான் திருமந்திரத்தின் குறிக்கோள் என்றும், ஞானந்தான் சாதித்துக்கொள்ள வேண்டிய செய்தி என்றும், அழியாததும் அழிக்க முடியாததுமான ஒரு பொருள் என்றும், அந்த அழியாத பொருள்தான் நம்தேட்டமாய் இருக்கவேண்டுமென்றும், இதுதான் ஆன்ம உரிமை என்றும் நாம் கருதவேண்டும். இதைவிட ஆன்ம உரிமை வேறு இல்லை. இதுதான் நமக்கு உரிமையாக இருக்கக்கூடியது என்பதையும் அறியவேண்டும். ஆன்ம உரிமை எது? பதியை அறிவது. பதியானது ஞானத்தினாலே தான் அறியப்படுகிறது என்பதை நாம் இங்கே முடித்துக்கொள்ளவேண்டும். இப்படி நமக்கு ஒரு குறிக்கோளை வகுத்துவிட்டுத் திருமூலர் அடுத்தபடி அந்த ஞானத்தை அடைவதற்கு

என்னென்னவோ வழிகள் சொல்லிப் பார்த்திருக்கின்ருர். அந்த வழியை என்போன்ற முழுமந்தர்களாக இருப்பவர்களும் இன்னும் கொஞ்சம் மந்தர்களும் இப்படி எத்தனையோ வகைகளாக இருக்கும் ஆன்மாக்கள் எல்லோரும், யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் என்றபடி திருமூலர் தாம் பெற்ற இன்பத்தை அனுபவிக்கவேண்டும் என்று கருதிப் பார்க்கின்ருர். எல்லோரும் இந்தப் பக்குவத்தை அடையவேண்டுமானல் அதற்கு என்ன உபாயம் செய்யலாம்? என்று நன்கு சிந்தித்துத் தெளிந்த சிவஞான ஸ்வரூபமாக இருந்துதான் இத்திருப்பாடல்களை அருளிச் செய்திருக்கிருர். "ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில் இல்லை." இந்த ஞானத்தை வினையினல் பலவகையாயுள்ள ஆன்மாக்கள் அடையவேண்டுமானல், அதற்கு உபாயம் என்ன என்பதை அடுத்தபடி கொடுத்திருக்கிருர். அந்த வழியை நமக்கு உணர்த்துகிருர். அது நம்மையும் பரசிவத்தையும் ஒன்ருக இணைக்கவல்லதாக இருப்பதாகும். அப்படியிருந்தால்தான் அந்த வழி சிறந்தது. இணைக்கவல்லதாய் இல்லாமல் பிரித்து விடுவதாய் இருந்து விடுமானல் அது நமக்கு வேண்டாத தொன்ருகும்.

ஞானத்தின் முடிந்தபயன் சிவப்பேறே. அந்தப் பயனைத் தரவல்லதாயிருப்பது எதுவோ அதுதான் நமக்குச் சிறந்த சாதனமாகும். அந்தச் சாதனையைப் பெரியவர்களாய் இருக்கிறவர்கள் சமயம் என்ற பெயரால் சொல்லி வைத்திருக்கிருர்கள். இது தனித்தனி கண்ட முடிவும் ஆம். மற்றவற்ருல் பயன் இல்லை. பேரின்புக்கு அடிப்படையான ஞானத்தை அடைவதற்கு வழியாக எத்தனை உபாயங்கள் சொல்லப்பட்டிருந்தாலும் எல்லா உபாயங்களுக்குள்ளேயும் மிகச் சிறந்த உபாயமாக இருப்பது எதுவென்ருல் சமயம். இது மதம் என்றும் சொல்லப்படுவது. சமயத்திற்குள்ள பதங்கள் பல. ஆங்கிலத்தில் 'ரிலிஜன்' என்ற பதத்தைச் செய்திருக்கின்ருர்கள். ரிலிஜன் என்ற சொல் பிரிந்தது ஒன்றில் திரும்பவும் சேர்ந்துவிடுதல் என்ற அடிப்படையிலிருந்து வந்தது என்று அறிவுடையோர்கள் எழுதிக் காட்டியிருக்கிருர்கள். ஆன்மா பிறவியை விட்டு எந்த இடத்திற்குப் போய்ச் சேர வேண்டுமோ அங்குச் சேருவது என்பதுதான் சமயம் என்கிற தத்துவச் சொல்லில் அடங்கியிருக்கிற உண்மைப் பொருள் என்றும் கூறிக் காட்டியிருக்கிருர்கள். ஆகையால், சமயம் அல்லாத வேறு எந்த வழியும் நமக்குச் சுலபமான பாதை அன்று. யோகம் முதலிய வேறு வழிகளும் கொள்ளலாம். அதில் எல்லாம் பல விதமான சிரமம் இருக்கிறதென்பதை இதற்கு முன்னல் அட்டாங்க யோகத்தைப் பற்றிப் பேசியதிலிருந்து நாமறியலாம். அதன் பயன் அட்டமாசித்தி என்று ஆங்காங்கே ஒரு முடிவு கட்டிக்கொண்டு போகிருர் திருமூலர். ஆனல், சமயம் சொல்லுகின்றபடி நாம் நடப்போமானல், எளிதில் குற்றம் நீங்கினவர்களாக ஆவோம். பற்பல சமயங்கள் பற்பல மார்க்கங்களைக் காட்டுகின்றனவே எனலாம்.

அவரவர்களுடைய நோய்க்குத் தகுந்தாற் போல மருந்து கொடுத்து உடம்பைக் குணப்படுத்துவதற்கு அவரவர்களுடைய குடும்ப வைத்தியருக்கே நன்கு தெரியும். அதைப் போலவே அவரவர்களுடைய சமூக பழக்க வழக்கங்களுக்கேற்ப அஞ்ஞானப் பற்றை நீக்கி, ஞானம் அளிக்க அவரவர்களுடைய சமூகத்திலே வந்த ஞானசிரியர்களால்தான் முடியுமாதலால், அந்தந்த ஞானசிரியர்களால் ஞானத்தைப்பெற உபதேசிக்கப்பட்ட முறைகள் எல்லாம் பலவிதமான சமயங்களாக இருக்கின்றன. இந்த எல்லாச் சமயங்களின் முடிவும் ஞானமே. சிவஞானத்தைத் தவிர பெரிய ஞானம் எதுவும் கிடையாது. ஆதலால் திருமூலர்,

*"ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று"*

என்று கூறுகிருர். சிவஞானத்தில் உய்ப்பிக்கின்ற சைவ சமயம் ஒரு மகா சமுத்திரம். அந்த மகாசமுத்திரத்திலிருந்து எடுக்கப்பட்ட உண்மைகள் எல்லாம் பல சிறு குளங்களாக

இருக்கின்றன. உதாரணமாகச் சமுத்திரத்தி லுள்ள ஜலத்தை ஒரு கிண்ணத்தில் எடுத்தால் கிண்ணத்தில் இருக்கின்ற நீர், கிண்ணநீராக இருக்கலாம். உண்மையிலே அது சமுத்திர நீர்தான். கிண்ணநீரைத் தட்டிவிட்டால் அது மறுபடியும் சமுத்திரநீரோடேயே கலந்து விடு கிறது. அதைப்போலவே எல்லாமதங்களும் நம் சைவசமயமாகிற மகாசமுத்திரத்தின் நீர் தான். ஞானநிலை வந்தெய்தியபோது எல்லாம் ஒன்ருகிவிடுகிறதைக் காணலாம்.

மேலும் இந்தச் சமயத்தைப் பின்பற்றி ஞல் என்னநன்மை ஏற்படும் என்பதற்குத் திருமூலர், இந்தச் சைவசமயத்தைப் பற்றிக் கொண்டால் அதாவது ஞானத் தோணியில் ஏறிக்கொண்டால் அது **"ஞானத்தின் மிக்க நன்முத்தி நல்கும்"** என்று குறிப்பிட்டிருக் கிருர். நமக்கு ஐம்புலன்கள் இருக்கின்றன. ஒவ்வொரு புலனுலும் ஒவ்வொரு இன்பத் தைப் பெறுகிறோம். ஆன்மா எல்லையில்லாத இன்பத்தை, புலன்களினுடைய பற்றிலிருந்து விடுதலை பெற்று அடையும் நிலைக்கே **முத்தி** என்று பெயர். இந்த நன் முத்தியை நல்குவது **சைவ சமயம்**. இதனை அடைந்து - ஆன்மா ஆணவ மலத்தை நீக்கி, நன்மை அடைந்து நின்ருல், அதைவிட மிக்கது எதுவும் இல்லை. இதை **"ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே"** என்று திருமூலர் கூறியிருப்பதனுல் நன்கு நாம் அறியலாம்.

ஞானத்தையடைய பலநிலைகள் விளக்கப் பட்டிருக்கின்றன. ஆனுல் சிவயோகம் ஒன்றி னுல்தான் நமக்கு எல்லாவிதமான இன்பங் களும் கிடைக்கின்றன.

சிறந்த பேரின்ப நிலையை இந்த ஞானத் தினுல் அடையப் பெற்றவர்களை என்ன வென்று சொல்லலாம் என்ருல், அவர்களைத் தான் மனிதரில் மிக்கார் என்று சொல்லலாம் என்கின்ருர் திருமூலர். மனித சப்தத்தையும் விட்டுவிடாமல் **"ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்கார்"** என்கின்ருர். அவர்களை மனிதரில் ஒருவர் அல்லர் என்றுதான் சொல்லவேண்டி யிருக்கிறது. யோசனைசெய்து பார்த்து **"நரரின் மிக்கார்"** என்று கூறிவிட்டார். நரரின் மிகுந்தால் என்ன ஆகிருர்கள்? சிவம் ஆகிருர் கள். சிவத்திலே லயித்து விடுகின்ருர்கள். நரரின் மிக்கவர்கள் உயர்ந்து வானவர்களின் உலகத்திலே புகுகிருர்கள். அதிலேயுங்கூடப் பல படிமுறைகள் உள்ளன. அந்த அந்த மயமாக அவர்கள் ஆகிருர்கள். ஆனபடி யினுல், அவர்களை இந்த உலகத்திலே இருக்கிற சிவமயம் ஆனவர்கள் என்று நாம் சொல்ல வேண்டியிருக்கிறது. இதனுல் இந்த மண்ணில் இருந்துகொண்டே அவர்கள் சிவபோகத்தை அனுபவிக்கின்ருர்கள் என்றும் தெரிவிக்க வேண்டியே "நரரின் மிக்கார்" என்கின்ருர். ஞானத்தின்மிக்கார் நரரின்மிக்கார்;ஞானத்தை நோக்கமாகக் கொள்ளவேண்டும்.

ஞானமே சிறந்த அறநெறி. அந்த அற நெறியே சிவநெறி. அதை அடைந்துவிட்டால் எந்த இன்பத்தையும் அடையலாம். பேரின் பத்தைத் தட்டாமல் அது கொடுக்கும். பல தத்துவத்தின் பயனுய் விளங்குகின்ற பலவகை நிலையும் நமது சைவசமயத்தில் சொல்லப்பட் டிருக்கிறது. நல்முத்தியை அடைகிறவர்களே சிறந்தவர்கள்; என்ருலும் அந்தந்தப் பதவிக் குத் தகுந்தாற்போல், மிகக் குறைந்த ஒன்றை அடைந்தவர்கள்கூடச் சைவசமயநெறியைப் பற்றலுற்று, அதிலே சிவலோக பதவியை அடைந்தவர்கள், சிவலோகத்திலே சஞ்சரிக் கிறவர்களாக இருப்பதால் அவர்களும் மண் ணுலகத்திலே சஞ்சரிக்கிறவர்களைக் காட்டி லும் மிக்கார் ஆவர். சாலோக பதவியை அடைந்தவர்களும் நரரின் மிக்காரேயாவர். சிவலோகத்திற்குள்ளே அடங்கி இருக்கிற ஒரு பாக்கியத்தை அவர்கள் பெற்றுவிட்டிருக் கிருர்கள் என்ருல், இந்த மண் உலகத்திலே இருக்கின்ற - சஞ்சரிக்கின்ற ஏனையோரைவிட அவர்கள் **சிவசாயுஜ்யம்** பெற்றவர்கள் என்ன லாம். ஆகையால், அவர்களை நரரின் மிக்கார் என்று சொல்லலாம். சரியை முதலிய நான் குக்கும் தர்மமாய் இருப்பது ஞானந்தான். ஆத்ம ஞானியாய் இருப்பவர்களும் சிவமயம் ஞானந்தான் என்பர். அதை அடைவதற்கான

சமயத்தகுதி ஞானம் அடையத் தகுதியாம். ஆகையினுல், மந்திர ரூபமாகக்கொண்ட தந்திரமாகச் சமயநெறியில் நாம் நடப்போமே யாஞல் அது ஞானமயமாக நம்மை ஆக்கி விடும் என்ற முடிந்த முடிபை நமக்கு இந்த ஐந்தாம் தந்திரம் சுருக்கமாகச் சொல்லுகிறது. இதற்கப்பால் அதை விஸ்தரிக்கிருர்கள். எப் படித் திருவள்ளுவர் பத்துப்பத்துக் குறளிலே திட்டவட்டமாக நீதியைச் சொல்லிவிட்டார் களோ அப்படியே இந்த ஐந்தாந்தந்திரத்திலே ஞானம் என்ற விஷயத்தைத் திருமூலர் பெருமான் பத்துப் பாசுரங்களில் தெரிவித்து விடுகிருர். அதன் முதற்பாடலே வரிவரியாக இதுவரை தந்து பேசப்பட்டது.

சமய வேறுபாடுகள் பல. எல்லாச் சமயங் களும் ஒரே விஷயத்தைப் போதிக்கின்றன. யானையைத் தடவிப்பார்த்து ஒவ்வொரு அங் கந்தான் யானையினது முழு உருவம் என்று ஒவ்வொருவரும் நினைத்துப் பார்ப்பதுபோன் றது மற்றச் சமயங்களெல்லாம். சைவசமயந் தான் முழுத்தன்மையை உடையது. இதனை யாவரும் மேற்கொள்வோமாக.

எனக்கு இச்சந்தர்ப்பத்தில் பேசுவதற்கு அருள் செய்த ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கு எனது பணிவான நன்றியைத் தெரிவித்துக்கொண்டு அமர்கிறேன்.

" அறிவும் அடக்கமும் அன்பும் உடனே
பிறியா நகர்மன்னும் பேரரு ளாளன்
குறியும் குணமும் குரைகழல் நீங்கா
நெறியறி வார்க்கிது நீர்த்தொனி யாமே."

" நண்ணிய ஞானத்தின் ஞானதி நண்ணுவோன்
புண்ணிய பாவம் கடந்த பிணக்கற்ருேன்
கண்ணிய நேயம் கரைஞானம் கண்டுளோன்
திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே."

ஆறுந்தந்திரம் : 'திருவடிப்பேறு'

## டாக்டர் திரு. தேவசேனபதி அவர்கள் M. A., Ph. D.

*தத்துவத்துணைப்பேராசிரியர், சென்னைப்பல்கலைக்கழகம்.*

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கட்கும், இங்குள்ள பெரியோர்கள் அனைவர்களுக்கும் என் வணக்கம். எனக்கு முன்பு பேசியவர்கள் மிக அழகாகப் பேசினார்கள். இந்த அறிஞர் கூட்டத்திலே நானும் பேசவேண்டும் என்பது திருவருள்போலும். எனக்குப் பேசக் கொடுத்திருக்கிற தலைப்பு "திருவடிப்பேறு". காலத்தினைக்கருதியே மிகச் சுருக்கமாகப் பேசலாம் என்று நினைக்கின்றேன். எல்லாக் கருத்துக்களையும் இந்தக் குறுகிய காலத்தில் எடுத்துச் சொல்வது என்பது இயலாதகாரியம். ஆகவே, மூன்று நான்கு கருத்துக்களைமட்டும் சொல்லி என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

"திருவடிப் பேறு" என்பது ஆறாவது தந்திரத்தில் இரண்டாவது பகுதி. அதாவது குருவின் திருவடிகளைப்பற்றி அடையும்பேறு.

*"இசைந்தெழும் அன்பில் எழுந்த படியே*
*பசைந்தெழும் ஈசரைப் பாசத்துள் ஏகச்*
*சிவந்த குரு வந்து சென்னிகை வைக்க*
*உவந்த குருபதம் உள்ளத் துவந்ததே"*

என்று இப்பகுதியை ஆரம்பிக்கிறார் திருமூலர்.

குருவின் திருவடிப்பேறு கிடைத்த மாத்திரத்தில் அவர் தம்முடைய தரிசனத்தையும் நமக்குக் கொடுக்கிறார் என்பதை,

*"தாள்தந்த போதே தலைதந்த எம்இறை"*

என்ற வரிகளில் சொல்லுகின்றார் திருமூலர். தாளைப் பற்றிக்கொண்டால் பணிவு ஏற்படுகிறது. துன்பம் எதுவுமே ஏற்படாது. நாம் யாரோ ஒருவருக்கு அடங்கி நடப்பவர்களாகவே கருதுகிறோம். ஆனால் ஞானிகள் யாருக்கும் அடங்கினவர்கள் அல்லர்; ஆனால் சங்கரனுக்கு என்றும் மீளா அடிமையானவர்கள். அவனைத் தவிர வேறு யாருக்குமே அடங்கினவர்களாகத் தம்மை நினைக்கமாட்டார்கள் அவர்கள்.

*"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்*
*மூர்த்தி அவன்இருக்கும் வண்ணம் கேட்டாள்*
*பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்*
*பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்*
*அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்*
*அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்*
*தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்*
*தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே"*

என்பது அப்பர் பாடல். அம்மையார், இறைவன் நாமத்தைக்கேட்டு, அவன் திருவடிக்கே ஆளாகியவாழ்வு தமிழ்நாடு அறிந்தது. ஆகவே இறைவனுடைய தாளை நாம் அடைவதால் — இறைவன் திருவடிநிழலை நாம் அடைவதால் நமக்குச் சிறப்பு உண்டாகும். நாம் எல்லோரும் இன்பமாக இருக்கவேண்டும் என்று விரும்புகிறோம். மூவுலகையும் கட்டி ஆளும் முடிமன்னரின் இன்பம் அதிகமா? இறைவன் திருவடிசார்ந்து அவன் குடியாக வாழ்வதில் இன்பம் அதிகமா என்பதுபற்றித் திருமூலரே சொல்லியிருக்கிறார்.

*"முடிமன்ன ராகில்மூ வுலகம தாள்வர்*
*அடிமன்னர் இன்பத் தளவில்லை கேட்கின்*
*முடிமன்ன ராய்நின்ற தேவர்கள் ஈசன்*
*குடிமன்ன ராய்க்குற்ற மற்றுநின் றாரே"*

இதில் இரண்டுவிதமான மன்னர்களைப் பற்றிப்பேசுகிறார். மூவுலகமும் கட்டியாண்ட முடி மன்னர்கள் ஒருசாரார். இறைவன் திருவடிப்பேற்றை அடைந்த அடிமன்னர்கள் அதாவது குடிமன்னர்கள் மற்றொருபகுதியுள் அடங்குவர்.

மூவுலகமும் கட்டி ஆள்வதாக நினைத்த முடிமன்னர்களுடைய நிலைமை என்ன ஆகிவிட்டது என்பது நமக்குத் தெரியும். ஆனால் "அடிமன்னர்களாக" எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த திருமூலர்போன்ற யோகிகளுக்கெல்லாம் இந்த மாநாட்டைப் போல் பல மாநாடுகள்கூட்டி மக்கள்வாழ்த்தி

வணங்கி வருவதையும் பார்க்கிறோம். ஆகவே தான் இறைவனுடைய அடியை அடைந்த குடிமன்னர்களுடைய இன்பமே பெரிதாம் என்று திருமூலர் பேசுகின்றார். அதை நாமும் உணர்கிறோம். இறைவனின் அடி மன்னராக இருந்த பெரியோர்களைப்பற்றி நாம் பேசுகின்றோமே தவிர, முடிமன்னர்களாக இருந்தவர்களைப்பற்றி ஒன்றும் பேசுவதில்லை. அவர்கள் பெயருங்கூட நினைவில் இல்லை. முன்னூறுக்கு முன்னால் அவர் வாழ்ந்தவராக இருந்தாலும் சரி, அல்லது மூவாயிரம் ஆண்டுகட்கு முன் வசித்தவராக இருந்தாலும் சரி, இறைவன் அடியைச்சேர்ந்த அடிமன்னராக இருந்தவர்களை இன்றைக்கும் பாராட்டுகிறோம். 'கழலார் கமலத் திருவடி என்னும் நிழல்சேரப் பெற்றேன் '' என்று திருமூலர் சொல்வதிலிருந்தே அவர் அடிமன்னராகவே வாழ்ந்தார் என்பது நமக்குப் புலப்படும்.

இறைவனின் திருவடி எதற்காக நமக்கு வேண்டுமென்பதைத் தெரிந்துகொள்வதற்குக் ''கழலார் கமலத் திருவடி என்னும் நிழல் சேரப் பெற்றேன்'' என்று திருமூலர் சொல்கிறார். எதற்கு நிழல்வேண்டும்? நிழல் அருமை யாருக்கும் தெரிவதில்லை. வெயிலில் கஷ்டப்படும்போதுதான் நிழலின் அருமை தெரியும் என்று சொல்லக் கேட்டிருக்கிறோம். நிழல் அருமை வெயிலில் தெரிவதுபோலவேதான் ஈசன் திருவடி நிழலின் அருமையும். அந்த நிழலின் அருமையை உலகத்திலே உணர்கிற அறிவு அரிதாக இருக்கின்றது. ஞானிகள் உணர்வர்.

*'' கழலார் கமலத் திருவடி என்னும்*
*நிழல்சேரப் பெற்றேன் நெடுமால் அறியா*
*அழல்சேரும் அங்கியுள் ஆதிப் பிரானும்*
*குழல்சேரும் இன்னுயிர்க் கூடும் குலைத்ததே ''*

என்பது திருமந்திரம்.

எல்லாப் பொருளுக்கும் உள்ளே நெருப்பாகச் சுடுகிறதன்மையைத் தணிக்கவல்லவன் இறைவன் ஒருவனேதான். எந்த நெருப்புக்கும் விபத்தை உண்டாக்குகிறவன் இறைவன்; அவன் நமக்குக் குளிர்ச்சியைத் தருகிறான். அவன் திருவடிபற்றி திரு உருவைப் பார்க்கிறோம். இப்படிவந்து நமக்கு அன்றாடவாழ்வில் நன்மை ஏற்படுகிறது என்பதைப் பார்க்கிறோமே அதுதான் அறிவு. இறைவனுடைய திருவடியை அடைந்தவர்கள், புலன்வழிப் போகுதலினின்று விடுபடுகிறார்கள். புலன்களை இறைவன் வழியாகச் செலுத்தினால் மெய்த்தேன் அடையலாம். திருவடித் தாமரையை அடையலாம். சாதாரணமாக நாம் அருந்துகின்ற தாமரைத்தேன் எப்பொழுதும் நிலைத்த இனிமையைத் தருவது அல்ல. இறைவன் திருவடித் தாமரைத்தேன் அப்படியல்ல; நிலையான இன்பத்தைத் தரும்.

*'' மெய்த்தேன் அறிந்தேனவ் வேதத்தின் அந்தமே ''*

என்று சொல்கிறார் திருமூலர்.

*'' திருவடி ஞானம் சிவமாக்கு விக்கும்*
*திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்*
*திருவடி ஞானம் சிறைமலம் மீட்கும்*
*திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே ''*

திருவடிஞானம் மலத்திலிருந்து ஆன்மாக்களை மீட்கும்; மீட்பதோடு சிவலோகத்திலேயும் சேர்க்கிறது; சிவமேயாக ஆக்குகிறது.

இப்படியாக நம் திருமூலர் பெருமான் ''திருவடிப்பேறு'' என்பதுபற்றிப் பதினைந்து திருப்பாடல்கள் சொல்கிறார். இறுதித் திருப்பாடலைமட்டும் சொல்லி முடித்துக்கொள்ளுகின்றேன். ஸ்ரீ - ல - ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கு எனது வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு அமர்கிறேன்.

*'' மந்திர மாவதும் மாமருந் தாவதும்*
*தந்திர மாவதும் தானங்க ளாவதும்*
*சுந்தர மாவதும் தூய்நெறி யாவதும்*
*எந்தை பிரான்தன் இணையடி தானே ''*

# மூன்றும்நாள் பேருரைகள்

**தலைமையுரை :**

பன்மொழிப்புலவர்

## திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் M.A., B.L., M.O.L.

*தமிழ்ப்பேராசிரியர், அரசினர்கல்லூரி, சென்னை.*

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருவடிக் கமலங்களுக்கு வணக்கம். இந்த மாநாட்டிற்கு வந்திருக்கிற அறிஞர்களுக்கும் என்னுடைய வணக்கம் உரியதாகுக.

இந்த நாள் ஒரு நல்ல நாள் என்று கருது கிறேன். இங்கு வராதிருந்தால் என்னென்ன எண்ணங்கள் எண்ணி இருப்பேனே என்று நினைத்துப் பார்த்து, இந்தத் தமிழ் நாட்டின் தலைசிறந்த ஓர் பேரறிஞர்-நமக்கு வழிகாட்டி- முனிபுங்கவர் இவ்வாறெல்லாம் திகழ்ந்த ஒரு பெரியோரது திருப்பெயரைச் சொல்லி, அவருடைய சொற்களை அறிந்தோ அறியாதோ பேசி, அதில் இருக்கிற கருத்துக்களில் ஈடுபட ஒருவாய்ப்புக் கொடுத்த குருமகாசந்நிதானம் அவர்களுக்கு அடியேன் என்ன கைம்மாறும் செய்ய முடியாது.

ஒன்றுமட்டும் என் மனத்தை உறுத்து கிறது. திருமந்திரத்திலே ஒரு அடியைக்கூட பாராத நிலையில், இந்தப் பெருங்கூட்டத்திலே தலைமைவகித்துப் பேச வந்து விட்டேனே என்று உள்ளம் என்னைப்பார்த்துச் சிரிக்கிறது.

ஆனால், தமிழை - தமிழ்ப்பண்பாட்டை- தமிழன் தான் வாழ்ந்த காலத்தே தேடிவைத்த புதைபொருளைக் காத்த ஒரு இடத்தில் நிற்கின் றேன் என்ற இறுமாப்பு இப்பொழுது என்னிடத்தில் இருக்கிறது.

நால்வர் முதலியோர் பாடி உலகத்தை உய்வித்த காலம் ஒன்று. அந்த வீர எழுச்சியிலே தமிழ்நாடு ஒரு புதிய உயிர் பெற்று, வீரம் பெற்று, ஆற்றல்பெற்று, அறிவு பெற்று, செல்வம் பெற்று, அத்தனையையும் தாமே அடைந்து வாழவேண்டும் என்று மயங்கி விடாமல் அவைகளை இந்த உலகம் எல்லாம் வாரி இறைக்கவேண்டும் என்ற ஆசையில் சோழ அரசர்கள் இந்த நாட்டிலே வானை அளாவிய கோவில்கள் பற்பல கண்டார்கள். தஞ்சை பெரியகோவில் கண்களை எல்லாம், கருத்தை எல்லாம் கவர்ந்து இருக்கின்றன. அப்படி ஓங்கி உயர்ந்தது அவர்கள் உள்ளம்.

ஆனால், இங்குமட்டும் அவர்களுடைய அறிவு வெள்ளம், செல்வ வெள்ளம் அணையிட்டுத் தேங்கிவிடவில்லை. கீழ்த்திசைகளுக்கும் சென்றன. கீழ்த்தீவுகளிலும் அவர்கள் கண்ட உண்மைகள் பரப்பப்பட்டன. தமிழர்கள் கண்ட நாகரிகம், தமிழர்கள் கண்ட நம் பண்பாடு, வட இந்தியா கன்னேசிவரையிலும் பரவி இருந்தது.

அந்தக் கன்னேசிநாட்டில் நம் தமிழர்களுடைய வளப்பம் கொழித்துக் கிடந்தது. எதற்காக மன்னன் சென்முன் என எண்ணிப் பார்ப்போமானல் ஓர் ஐயம் தோன்றுவது உண்டு. அந்தக் காலத்திற்குள் கஜனி முகமது முதலியவர்கள், இந்த நாட்டின் மேல் படையெடுத்து இந்த நாட்டின் பண்பாட்டை — இந்த நாட்டின் செல்வத்தை அடக்கி ஒடுக்கி நொறுக்கி அழிக்க முற்பட்டார்கள். அதைத் தடுக்க நமது ராஜேந்திரன் — கங்கை கொண்ட சோழப் பேரரசன், கங்கை வரை சென்று, கோரி முகமதைக் கன்னேசியைவிட்டு ஓட்டி விட்டு ஆட்சியையும் கைப்பற்றிக்கொண் டான். ஆகவே, இந்தச் சோழப் பேரரசு தன்னுடைய பண்பாட்டினை வட நாட்டிலும்

பரப்பிற்று. அது எப்பொழுது குன்றியதோ, அப்பொழுதே இந்திய நாட்டின் பண்பாடு—கலாசாரம் மழுங்கிப்போயிற்று. அதன்பயஞக ஒரு பெரியவெள்ளம். அது தென்ஞடுவரை-கன்யா குமரிவரை ஓடியது. கேள்விப்பட்ட வர்கள் அஞ்சி ஓடிஞர்கள். நூல்களைப் புதைத்துவைத்தார்கள். இந்நாட்டின் அறிவுச் செல்வம் செல்லரிக்கப்பட்டதோடு மட்டுமல்லாமல் - காப்பாற்றுவார் இல்லாமல் மழுங்கத் தலைப்பட்டது. அந்த வேளையிலே மக்களுக்கு உறுதி கொடுப்பதாயிருக்கின்ற ஒரு இயக்கம் தோன்றியது. மைசூர் முதலிய நாடுகளிலே அந்த இயக்கத்தின் எண்ணம் மிக வேரூன்றி எழுந்தது. அதுதான் எல்லா மக்களிடத்திலும் ஆண்டவன் குடிகொண்டிருக்கிருன்என்பது.

மேலிருந்துவந்த ஒரு பெரிய வெள்ளத்தால் மக்களுக்கு மக்கள் வேற்றுமை இல்லை; எல்லோரும் ஆண்டவனுடைய புதல்வர்கள் என்ற எண்ணம் வற்புறுத்தப்பட்டது. இந்தக் கருத்து, பல மக்களைக் கவர்ந்தது. அதற்கு அடுத்தாற்போல, மக்களிடம் வேற்றுமை இல்லை; எங்கும் ஆண்டவன் இருக்கின்ருன், எல்லா உயிர்களையும் ஆண்டவஞகப் பார்க்க வேண்டும் என்று சொல்லிவந்தவர்கள் பெரிய போரில் ஈடுபட்டார்கள். அவர்களைப் பெரும் தபசிகள் என்று சொல்லமுடியவில்லை. அரசர்களேதான்; எந்த அடியார்களும் அல்ல. எத்தனையோ கீழானநிலையில் இருக்கின்றவர்கள், ஏழைகள், எளியவர்கள், பெண்கள் இவர்களெல்லாம் ஆண்டவனை எங்கும் காணுகிற நிலையை உண்டுபண்ணுவதற்கு முயற்சி செய்தார்கள். தங்களால் இயன்ற அளவு பிறருக்குக் கொடுக்கின்ற தியாகிகள், அவர்களெல்லாம் தம்மிலும் உயர்ந்தவர்களாக காணப்படுகிருர்கள். இப்படி, நடமாடுங்கோயில் என்று திருமூலர் சொல்வதுபோல் உலகத்திலே இருக்கிற நடமாடுங்கோயிலாகிய உயிர்களைக்கண்டு, தொண்டு செய்வதே சிறந்த கடவுட்பணி என்றும், நம்பிக்கைதான் ஆணிவேர் என்றும் அவர்கள் சொல்லிவிட்டார்கள். இதுகாரணமாகத் தமிழ்நாட்டிலே ஒரு புதிய சமுதாயம்; ஒரு புதிய எழுச்சி தோன்றியது. அதற்குக் காரணம் நம்முடைய பெரிய புராணம் என்பதை நினைப்பூட்டிக்கொள்ள விரும்புகிறேன். அதுகாரணமாக எழுந்த ஒரு பெரிய சமய வெள்ளம், முடிவிலே விஜயநகர சாம்ராஜ்யமாக எழுந்து, அது பலநாள் வரையிலும் வடக்கே இருந்துவந்த வெள்ளத்தைத் தடுத்து நின்றது. ஆனுல் அதுவும் கிருஷ்ணதேவராயர் மறைந்த பிறகு வட வெள்ளத்தில் ஆழ்ந்து மறைந்தது.

இப்படி தத்தளித்துக் குன்றுகிற நிலையில் நமது தமிழைக் காப்பதற்கு - தமிழ்ப் பண்பாட்டை உயர்விப்பதற்குப் பல சிற்றரசர்கள் தோன்றி இருக்கலாம். ஆனுல், அந்தச் சிற்றரசர்கள் எல்லாம் தங்களுடைய சுயநல நிலையை அடியோடு மறக்க முடியாத நிலையில் இருந்தார்கள். ஆனுல், தன்னலம் அற்றவர்களாக - அரசியலில் யாதொரு தொடர்பும் இல்லாதவர்களாக இருக்கக்கூடிய ஒரு கூட்டம் எழுதல் வேண்டும். அந்தக் கூட்டம் ஒன்றுதான் நம் தமிழைக் காத்தல் கூடும்; தமிழ்ப் பண்பாட்டைக் காப்பாற்றக்கூடும் என்று ஆண்டவன் திருவுள்ளத்தில் எழுந்தது.

கிருஷ்ணதேவராயர் ஆட்சிக்கு முன்ஞல் ஆண்டவன் திருவருளால் இங்கே நாம் கூடியிருக்கின்ற திருமடத்தை நிலைநாட்டிய பெரியோரை எண்ணுங்கள். அவர்கள் இந்தியா அதிலும் சிறப்பாகத் தமிழ்நாடு தன் உரிமையற்று, வாடி வதங்கிய காலத்தில் தமிழையும், தமிழ்ப்பண்பாட்டையும், தமிழ்க்கடவுளையும் திருவருட்டுணையால் காத்துவந்திருக்கிருர்கள். தமிழ் காத்த இடத்திலே இன்று நாம் தமிழ் பேசுகிருேம்; படிக்கிருேம். இந்த நிலையத்திலே இதுவரை தொண்டுபுரிந்து சைவ ஒளி பரப்பிவந்த அருளாளர்களை நாம் எண்ணுகிற போது நம்மையும் அறியாமல் ஒரு இன்பந்தான் தோன்றுகிறது. இன்பம் மட்டுமல்ல, ஒரு செருக்குங்கூட. எனவே, நாம் நம்முடைய நாட்டின் வரலாற்றை ஒரு சிறிது ஆழ்ந்து பார்க்கும்போது ஒரு தெய்வீகத் திருவருள் ஓடிக்கொண்டே இருக்கிறது; இயக்கிக்கொண்டே இருக்கிறது என்பதைக் காண்கின்ருேம். இனி நம்முடைய உரிமைபெற்ற



ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்
மூன்றும்நாள் விழாத்தலைவர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களுக்கு
ஆசி அருளுதல்.



மூன்றும்நாள்விழாவில் தலைவர் தலைமையுரை நிகழ்த்துதல்.

இந்தியா, தன் உரிமைபெற்றபோது அதற்கு ஒரு செங்கோலைக் கொடுக்கவும் இந்தத் திரு மடந்தானே முன்வந்தது? ஆகையால் பழைய பரம்பரை ஆண்டவன் அருளால் விளங்கு கிறது. ஒரு வெள்ளம் இவ்வாறு ஓடிக்கொண் டிருக்கிறது. அது நிலைத்துநின்று எங்குமே பரவி, உலகெங்கும் அந்தப் பழைய தமிழ்ப் பண்பாட்டிலே " ஒருவனே தெய்வம் ஒன்றே குலம் " என்ற அந்த உயர்ந்த நெறியை உலகெல்லாம் பரப்பி உலகத்திற்கெல்லாம் வழிகாட்டி வருவதாகும்.

இந்தத் திருமந்திரம் என்ற நூல் எனக்கு விளங்காத ஒரு நூல். இருந்தாலும் கை தட்ட வேண்டியவன் ராமனுக இருக்கவேண்டும் என்பதில்லை. ராமனுக வேருெருவன் மேடை யில் நடிப்பான். ராமனுக நடிப்பவனுக்கு உண்மை ராமனுக்கு அமையப்பெற்ற குண நலங்களெல்லாம் - பண்பாடுகளெல்லாம் அவ னிடத்தில் இருக்கவேண்டும் என்பதுமில்லை. அவன் ராமனுக நடிக்க மேடைக்கு வந்தவன் தான். அதைப்போலவே இம்மாநாட்டுக்குத் தலைமை தாங்கித் திருமந்திரம் தெரிந்தவன் போல நான் இங்கு நடிக்க வந்திருக்கிறேன்.

திருமந்திரத்தில் பல பாடல்கள் இருக் கின்றன. முழுவதும் விளங்கவில்லையென்ருல் அது முழுப்பொய்தான். ஏதோ சிறிது விளங்கு கிறது. விளங்காத பகுதிகளைக் காணும்போது விளங்குகின்ற பகுதிக்குக்கூட வேறுபொருள் இருக்குமோ என்ற அச்சம் உண்டாகின்றது. இன்று மாநாட்டின் மூன்றும் நாள் ; திரு மந்திரத்தின் இறுதி மூன்று தந்திரங்களைப்பற்றி மூன்று அறிஞர்கள் பேசவேண்டியிருக்கிறது.

திருமந்திரம் மூவாயிரம் என்பது எல்லாக் குழந்தைகளுக்கும் தெரியும். இது நம் தமிழ் நாட்டின் நல்லகாலம். ஆனல், மூவாயிரத் துக்கு மேலும் பல பாடல்கள் இருக்கின்றன. திருமந்திரம் மூவாயிரமானல் மூவாயிரத்துக் கும் மேலாகவுள்ள பாடல்களை யார் பாடினர் கள்? அப்படியானல் என்னென்னபாடல்கள்? முறைப்படி பாடியவற்ருேடு எவை இடையே நுழைந்தவை? என்று கேட்கலாம்.

திருமூலரால் எழுதப்பட்ட பல பாடல் கள் அழிந்துபோய்விட்டன என்று சொல்லப் படுவதால், இடையிலேயே பல பாடல்கள் நுழைக்கப்பட்டிருக்கக்கூடும். இதைப்பற்றி ஆராய்ச்சிசெய்ய இத்துறைசை ஆதீனத்தார் முயற்சிசெய்ய முன்வந்துள்ளார்கள்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் பாடிய திருத் தொண்டத் தொகையில், திருமூலரைப்பற்றிக் குறிப்பிடப்பட்டிருப்பதால், சுந்தரமூர்த்திக்கு முன்னே வாழ்ந்தவராக இருக்கவேண்டுமென் பதில் ஐயமில்லை. மூவாயிரம் ஆண்டுகள் திரு மூலர் வாழ்ந்திருந்தார் என்பதை ஒப்புக் கொள்ளாதவர்களுங்கூட, சுந்தரமூர்த்திகள் காலத்திற்கு முன் வாழ்ந்தவர் திருமூலர் என் பதை ஒப்புக்கொள்ளவேண்டும். வரலாற்று ஆசிரியர்கள் ஏழாவது நூற்ருண்டின் பிற் பகுதியில் வாழ்ந்தவர் திருமூலர் என்கிருர்கள்.

தமிழர்களுடைய நூல்களில் மிக மிகப் பழமையான நூலாக இருப்பது திருமந்திரம். மந்திரம் என்பதற்கு எத்தனையோ பொருள் கள் உண்டு. என்னென்னவோ பொருளில் அந்தச்சொல்லை நாம் வழங்குகிருேம். மந்திரம் என்பதற்கு,

> *" நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
> *மறைமொழி காட்டிவிடும் "*

என்பதாகத் திருக்குறளிலே விளக்கம் கொடுக் கப்பட்டிருக்கிறது. திருமூலர் சிவநெறியிலே நின்று சிவயோகத்தின்பயிற்சியினலே தாம் பெற்ற இன்ப அனுபவத்தையெல்லாம், மந்தி ரங்களாக எடுத்துச் சொல்லுகின்ருர். இவை வெறும் ஏட்டுச்சுரைக்காய் அல்ல; அவர் கூறு கின்ற நெறிகளின்படி நாம் சென்ருல் அவர் பெற்ற அதே அனுபவங்களை நாமும் பெற முடியும் என்பதை அந்த நூலின் பெயராகிய திருமந்திரம் என்பதே நமக்கு நன்கு எடுத்துக் காட்டுகின்றது.

திருமந்திரம் ஏதோ ஒருநாளிலே கண்டு சொல்லியது அல்ல. ஒவ்வொரு பாட்டையும் சொல்லவேண்டுமானல், ஆழ்ந்த பரவசத்தில்

ஓர் ஆண்டு திளைத்துத் திளைத்துக் காண வேண்டும். கண்டபோது ஒரு வெள்ளமிட்டு சில நான்கு அடிகளாகப் பொங்கி வரும். இப்பாட்டு ஒருநாளிலே எழுதியது அல்ல. மிக விரைவாக எழுதியதும் அல்ல. ஆற அமர, ஆராய்ந்து சொல்லமாட்டாத பேரின்பத்திலே ஊறி ஊறி, அதன்பலனுக உலகத்தையும் உய் விக்கவேண்டும் என்ற கருணைகூர்ந்த உள்ளத் திலிருந்து பாட்டாகப் பொங்கி வழிந்தது. இப்படி ஆண்டுக்கு ஒன்ருகப் பாடியதாக இருக்கவேண்டும். மூவாயிரம் பாடல் உண்டு என்ருல் அதனை எழுத மூவாயிரம் ஆண்டு தவம் இருக்கவேண்டும். இந்தக் கதையை நாம் நம்பினுலுஞ்சரி நம்பாமற்போனுலுஞ்சரி எழுச்சி அப்படி உள்ளத்திலே தோன்றியது. உள்ளக் கிறுக்கிஞல் வருவது அல்ல. ஆனந்த அனுபவத்திலே திளைக்கிறபோது, எழுகின்ற ஓர் அன்புப் பெருக்காகும் இது. அப்படிச் சொல்லிய அவர் எங்கிருந்து வந்தார்? என்ன அவர்களுடைய எண்ணம்? சிவத்தொடர்பு இல்லாதவர் சொல்லியிருக்கக்கூடுமா ? என்று பல கேள்விகள் உள்ளத்தில் எழும்.

காஷ்மீருக்கும் தென்ஞட்டுக்கும் உள்ள தொடர்பு விளக்கமுடியாத தொடர்பு. உலக அரங்கிலே காஷ்மீருக்கும் இந்தியாவுக்குமுள்ள தொடர்பு பலபேருக்குத் தலைவலியாக இருக் கிறது. இறைச்சி என்று தொல்காப்பியத்தில் பேசப்படுகிறது. தொனி என்று சொல்வோம். தொனிபற்றிக்கூறும் நூல் அலங்கார சாஸ்தி ரத்தில் மிகச் சிறந்ததாயிருக்கிற உண்மையை உலகுக்கு எடுத்து விளக்குகிறது. அதாவது ஒன்பதாவது நூற்ருண்டிலே அதற்கு முன் அது எழுந்தது. தொல்காப்பியமும் தொனி யைப்பற்றிச் சொல்கிறது.

அந்தத் தொனிக்கொள்கை தமிழ்நாட் டிலே ஏதோ ஒரு மூலையிலே இருக்கின்றது. அதற்கும் பலநூற்ருண்டுகள் முன்பு ஒரு நூல் விளக்குகிறதென்ருல் அது ஒரு வியப்பாகும். காஷ்மீர் சைவத்திற்கும் தென்ஞட்டுச் சைவத் திற்கும் என்ன தொடர்பு? ராஜேந்திரன் படை எடுத்துச் சென்று கங்கைக்கரையிலே இருந்து சிவனடியார்களைக் கொண்டுவந்தான். அவர் களுடைய விக்ரகங்களைச் சில கோயில்களிலே நாம் காண்கின்ருேம். ஆகையால் கௌட நாட்டிலே இருந்த சைவத்திற்கும் இந்நாட்டுச் சைவத்திற்கும் ஏதோ ஒரு வகையாகத் தொடர்பு இருந்திருக்கிறது. இவையெல்லாம் எந்த வகையாக இருந்தது? இவற்றினுடைய தொடர்பு என்ன ? காஷ்மீர் சைவத்தின் தரிசனம் தான் இங்கே வந்தது என்று சொன் ஞல் நான் ஒத்துக்கொள்ள முடியாது. காலம் ரொம்ப முன்னே போகின்றது. அந்த நூல் அங்கேயிருந்து வந்தது என்பதால் வெறுக்க இல்லை. கயிலையில் தொடர்பு உடைய - சிவத் தொடர்பு உடைய ஒருவர் திருமந்திரத்தைப் பாடியதுபோல் தோன்றுகின்றது.

உலகத்திலே இருக்கிற ஏழை எளியவர்கள் ஜாதியால் உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர் ஆகிய எல்லோருக்கும் வேண்டிய உண்மைகள் இந் நூலில் விளங்குகின்றமையாலே - தாயின்மடி யிலே இருந்து பால் உண்டு கொஞ்சிய செந் தமிழ்ப்பாடல்களால் ஆனமையாலே இந்த அரிய பெரிய நூலைப் பாடியவர் சிவபெருமா ஞேடு தொடர்புடையவராகவேண்டும்.

சிவகணமாக இருந்து, அகத்தியரோடு ஒத்து நிற்கின்ற தவமனிதராய் இருந்தாலும், பேராசிரியராயிருந்தாலும் அவர் நம்முடைய நாட்டில் ஏழை எளியவனுக வரவேண்டும் என எண்ணுகிறது இந்நூலைப்படிக்கின்றவர் களுடைய உள்ளம். அப்படித்தான் அவரும் வந்திருக்கிருர். அந்தக்கதையின் உண்மையைச் சொல்ல வரவில்லை. நம்முடைய உள்ளத்திலே இப்படி இருக்கவேண்டும் என்று தோன்று கிறது. இதைப் பாடியவர் ஒரு ஏழை இடையர் என்ற உண்மையை இந்த உலகத் திலே காண்கின்ருேம்.

மூவாயிரம் ஆண்டுகள் தவம் இருந்து தான் இதை ஒவ்வொரு ஆண்டுக்கு ஒன்ருகப் பாடியிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. பொருளாழம் உடையவை. ஒவ்வொரு பாட் டிலும் இருக்கின்ற உண்மைகள் ஏழை

மக்களுக்கு விளங்காது. ஏழை இடையனும் அறிந்துகொள்ள முடியாது என்று சொல்ல லாம். இப்படிப்பாடிய பாடல்களைப்பார்க்கும் போதுதான் விளங்காத பாடல்கள் உண்மை யிலேயே விளங்காத பாடல்களாக இருக்க முடியுமா என்று எனக்கு எண்ணம் தோன்றி யது. ஏழை எளியவர்களுக்குப் புரியாத பாடல்களைத் திருமூலர் பாடியிருப்பாரா என எண்ணவேண்டி இருக்கின்றது. ஆகையால் மேலும் மேலும் இதனை ஆராயவேண்டியிருக் கிறது. இந்த நாட்டிலே இருக்கிற சுவடி களைக் கொண்டுவந்து ஒருமுகமாகச் சேர்த்து அதில் இருக்கிற பாடங்களைப் பார்ப்போமா னால் அந்தப் பாடல்கள் இவ்வளவு அறிய முடியாததான பாடல்களாக இருக்கமாட்டா: எல்லாம் அறியக்கூடியவைகளே என்று ஒரு எண்ணம் தோன்றுகிறது. எத்தனையோ பாடல் சொன்னவுடனே விளங்குகிறது. ஆனால் சில பாடல்கள் இப்படி விளங்காது இருப்பதற்குக் காரணம் திருமூலரைப்போல அப்படி பாடல் பாடத் தெரியாதவர்கள் இதிலே நுழைத்ததாக இருக்கலாம். பாடபேதங்கள் நமக்குத் திருப் பிக் கிடைக்கின்ற ஒரு பெரும் பொறுப்பு இந்த நிலயம் ஒப்புக்கொள்ளுமானால் அதை விடத் தமிழ்மக்களை உய்விக்கும் வழி வேறு ஒன்றும் இருக்கவே முடியாது.

இந்தத்திருமந்திரத்தைப் பல ஆசிரியர்கள் எடுத்து வழங்கியிருக்கின்றார்கள். அதற்குப் பொருளுங்கூட ஆங்காங்கு சொல்லியிருக்கின் றார்கள். அவற்றையெல்லாம் தேடித் தொகுப் போமானால் நல்ல நூல் நமக்குக் கிடைப்ப தோடுமட்டுமல்லாமல் நல்லஉரையும் நமக்குக் கிடைக்கும். சில பழைய உரைப்பகுதிகள் இப்பொழுது புத்தகமாக இவ்வாதீனத்தின் சார்பில் வெளிவந்திருக்கின்றன. இத்தகைய தொண்டு தொடர்ந்து நிகழுமானால் மிகச் சிறப்பாக இருக்கும்.

திருமந்திரத்திலுள்ள பலபகுதிகள் எளிய தமிழ்மொழியில்குழந்தைகளுக்குங்கூட நன்கு புரியக்கூடிய நடையில் அமைந்திருக்கின்றன. ஆகவே தமிழ் மொழியை வளர்க்கவேண்டும்; தமிழ்ப்பண்பாட்டைப் பின்பற்றவேண்டும்; தமிழன் கண்ட பல உண்மைகளை அறிந்து கொள்ளவேண்டும் என்ற அவா பெருகித் திளைத்துவரும் இந்தக்காலத்தில் திருமந்திரம் பெரும் அளவில் பரப்பப்படவேண்டுவது மிக அவசியமே. அந்த முறையில் இத்திருமந்திர மாநாட்டைக் கூட்டிய குருமகா சந்நிதானம் அவர்கள் பெருங்கருணைக்கு நன்றி தெரிவித் துக்கொண்டு தலைமையுரையை முடித்துக் கொள்கிறேன்.

“போற்றிசெய் அந்தண் கயிலைப் பொருப்பனை
நாற்றிசைக் கும்நடு வாய்நின்ற நம்பனைக்
காற்றிசைக் கும்கமழ் ஆக்கையைக் கைக்கொண்டு
கூற்றுதைத் தான்றன்னைக் கூறிநின் றுய்மினே.”

ஏழாந்தந்திரம் : ‘ இதோபதேசம் ’

## திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் M. A.,

ஆசிரியர் ‘கலைமகள்’, சென்னை.

ஞானச்செங்கோல் செலுத்தியருளி, இந்த ஆதீனத்தை நன்கு பரிபாலித்து வருகின்ற குருமகாசந்நிதானம் அவர்களது திருவடிக்கு வணக்கம்புரிந்து, இங்கு எழுந்தருளி இருக்கிற அடியார் கூட்டத்திற்கும், மற்றைய அன்பர் களுக்கும் நமஸ்காரம் தெரிவித்துக் கொள்ளு கிறேன்.

திருமந்திர மாநாட்டின் மூன்றுவதுநாள் விழாவிலே எனக்கும் ஓரிடம் கொடுத்துப் பேசுவதற்குப் பணித்த திருவருளுக்கும், அத் திருவருளின் உருவாக விளங்குகின்ற குரு மகாசந்நிதானத்தின் திருவடிக் கமலங்களுக் கும் மீண்டும் நன்றியறிதலோடு வணக்கம் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

தலைவர் அவர்கள் முன்னுரையில் பேசிய போது, ஒரு அழகான கருத்தை அதாவது கயிலையில் பிறந்த ஒளி நம் தமிழ்நாட்டிலே இடையன் உருவத்தில் புகுந்து உபதேசம் செய்தது என்று சொன்னுர்கள். நமது பாரத நாட்டில் இதற்குவேண்டிய ஒற்றுமை உண்டு. கயிலையில் பிறந்த ஒளி இடையன் உடலில் புகுந்து உபதேசம் செய்ததைப் போலவே, வைகுந்தத்தில் தோன்றிய ஒளி இடையர் குலத்தில் பிறந்து கீதோபதேசம் செய்தது. இது இதோபதேசம். அது கீதோபதேசம். ஆக நம்நிலையில் இறங்கிவந்து செய்கின்ற உப தேசந்தான் பலருக்கும் பயன்படும் என்பதான திருவருட் குறிப்பை இந்த அரிய நிகழ்ச்சிகள் காட்டுகின்றன.

திருமூலர் திருமந்திரத்தில் ஒன்பது தந்திரங் கள் உண்டு. ஏழாவது தந்திரத்தின் முப்பத் தெட்டாவது பகுதி இதோபதேசம். இந்த இறுதிப் பகுதியில் இருபது பாடல்கள் இருக் கின்றன. இந்த இதோபதேசத்தைப் பார்க்கும் போது மற்றெருநினைவு உண்டாகிறது.

தமிழில் நல்ல உபதேசங்களைச் செய்கின்ற தன்மை கதை நூல்களுக்கு உண்டு. அதற் குப் பஞ்சதந்திரம் என்று பெயர். அதை வேறு வழியில் செய்கின்ற ஒரு நூல் இதோப தேசம். நவதந்திரத்தில் ஒரு உபதேசம் இருக் கின்றது. இவற்றில் பஞ்ச தந்திரம் சிறந்த தொரு உபதேசமாக நம் நாட்டில் இன்றும் திகழ்ந்து வருகின்றது.

இனி, எடுத்துக் கொண்ட பொருளைப் பற்றிச் சற்று ஆராய்வோம். இருபது பாடல் களில் செய்யப்படுகிற இதோபதேசம் என்ன? ‘இத உபதேசம்’ அதாவது நன்மையைச் சொல்வது. மக்களுக்கு இன்பத்தைத் தரு கின்றது எதுவோ அதனை - உயிருக்கு இன்பத் தைத் தருகின்றது எதுவோ அதனை உரைக் கின்ற நல்லுரையே இதோபதேசம்.

மக்களுக்கு நன்மையாவது யாது ? ஒரு வன் நீர் வேட்கையினுல் வாய்வறண்டு உலரத் தவிக்கிருன். நாக்கு அண்ணத்தோடு ஒட்டிக் கொள்ளுகின்றது. அவனுக்கு இதோபதேசம் எது ? அவனுக்கு இன்பம் தருவது எது ? அவனிடத்தில் உள்ள நீர்வேட்கையாகின்ற துன்பத்தைப் போக்குவதே இன்பம். அவ னுக்கு ஒரு டம்ளர் குளிர்ந்த நீர் கொடுத்து உதவினுல் அது அவனுக்கு மிக இன்பமாகும். ஆகவே இன்பம் உண்டாவதற்கு முன்னுலே இருக்கின்ற துன்பத்தை நீக்குவதே இன்பத் தின் திருவாசல் என்று சொல்லலாம்.

மனித வாழ்க்கையில் நமக்கு உண்டாகக் கூடிய துன்பங்கள் பல. நோயால் துன்பம் ; வறுமையால் துன்பம் ; உடம்பைச் சார்ந்தன இவை. மனதைப்பற்றிய பல கவலைகள். இத்தனைகவலைகட்கும் மூலகாரணம் மனிதப் பிறவி. இந்த உடம்பு பிறவியை எடுத்திருக் கின்றது. இப்பிறவியை நாம் இறப்பினுலே

தொலைக்கிறோம். ஆகவே எல்லா வகையான துன்பங்களையும்விட மிகப் பெரிய துன்பத்தைச் சாவு சாவு என்று சொல்லுவார்கள். திருவள்ளுவருங்கூட "சாதலின் இன்னுதது இல்லை" என்கிறார். மனிதனுக்குப் பெரிய துன்பம் சாகும் துன்பந்தான். சாகுந்துன்பம் உலகத்தில் பிறந்ததினால் உண்டாகிறது.

பிறப்பே ஒரு துன்பம். பிறந்தவுடன் மற்றொரு துன்பம் காத்து நிற்கிறது. பிறந்த உடம்புகளெல்லாம் இறக்கின்றன என்பதே அது. ஆகவே எல்லாத் துன்பங்களுக்கும் மூலகாரணமாயிருக்கின்ற 'பிறப்பு, இறப்பு' ஆகிய இரண்டு துன்பங்களும் நீங்கினால்தான் நமக்கு இதம் உண்டாகும்.

இந்த இதம் வேண்டுமானால் நாம் என்ன செய்ய வேண்டும் என்பதைத்தான் இந்த இருபது பாடல்களில் திருமந்திர ஆசிரியர் சொல்லுகிறார். இந்த இருபது பாடல்களுக்கும் ஒரு தலைப்பு; அதுதான் இதோபதேசம்,

வாழ்வுக்கு இதம் தாழ்வைப் போக்குவது. அகிதம் நீங்கினால் இதம் உண்டாகும். உயிர்களுக்கு இருக்கின்ற பெரிய அகிதம் 'பிறப்பு' 'இறப்பு' ஆகிய இரண்டுமேதான். இந்த இரண்டையும் நீக்கிக் கொள்வதற்கு எது வழியோ அதுவே இதோபதேசம்.

இதோபதேசத்தில், பிறந்தவன் இறக்குந் துன்பத்தை அடையாமல் இருக்கவும், இறந்தபின் மீட்டும் பிறக்குந்துன்பத்தை அடையாமலிருக்கவும் ஆகிய இரண்டு துன்பங்களையும் நீக்க வழி கூறுகின்றார். இதனை இரண்டு பகுதிகளாகச் சொல்லியிருக்கிறார். முற்பகுதி பதினாறு பாடல்கள், பிறப்பு இறப்பை ஒழிக்கின்ற சிவநெறியை ஆன்மாக்கள் தேடுகின்ற வழி. சிவகதியைத் தேடவேண்டும் என்ற உள்ளக்கிடக்கை உடையவன், சிவபெருமானின் திருவருள் நெறியில் சென்று வழி காட்டும் குருவின் திருவருளைப்பெறவேண்டும் என்பது பிற்பகுதி நான்கு பாடல்களால் வற்புறுத்தப்படுகின்றது.

இப்பொழுது பிறந்திருக்கிற நாம் எல்லோரும் உடனே தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்று உண்டு. அதாவது உடம்பு எடுத்திருக்கின்ற நாம் எல்லோரும் இறந்துபடுவோம்; அப்படி இறக்கின்றகாலத்தில் நமக்கெல்லாம் துன்பம் உண்டாகாமல் இருக்கவேண்டும்; அதற்காக இறக்கும்பொழுது நாமெல்லோரும் என்ன செய்யவேண்டும் என்பதை முற்பகுதியில் காணலாம்.

ஒருவர் ஒரு ரயிலில் போகின்றார், எந்த இடத்திற்குப் போகவேண்டுமென்பதே தெரியாமல் போகிறார். ஆனால் அவரிடம் ஒருவர், "அப்பா! நீ இந்த இடத்தில் இறங்கினால் உனக்கு வாழ்வு கிடைக்கும்; உத்தியோகம் கிடைக்கும்; நீ சந்தோஷமாக இருக்கலாம்" என்று ஒரு ஊரைக் குறிப்பிடுகிறார்.

வண்டியில் செல்லுகிறவர், உடனே அந்த ஊர் எங்கே இருக்கின்றது என்று தெரிந்து கொள்ள வேண்டும். அந்த ஊர் வருவதற்குள் வண்டியைத் திறந்துகொண்டு கீழே இறங்குவதற்குத் தயாராக இருக்கவேண்டும். ஊர் வந்தவுடன் திறந்து கொள்ளலாமே என்று இருந்தால் அவ் ஊரில் வண்டி நிற்கிற இரண்டு நிமிஷத்திற்குள் இவரால் கதவைத் திறக்க முடியவில்லையாயின் கதவைத் தாண்டியே குதிக்கவேண்டும். அப்படி கீழே குதிக்கும் போது அடிபட்டாலும் படும். ஆகவே கதவை முன்னரேயே திறந்துவைத்திருந்தால் ஊர்வரும்போது தாண்டிக்குதிக்காமல் - அடிபடாமல் கீழே இறங்கிவிடலாம். "தன் வாழ்வு செம்மையுற அந்த ஊரில் தான் இறங்க வேண்டும்" என்ற சிந்தனையே இல்லாமல் இருக்கின்றவர்கள், அந்த ஊர் வந்தாலுங்கூட கீழே இறங்கமுடியாது.

அதேபோல் உயிரின் இன்பத்தை நாடி நிற்பவர்கள் அதனை அருளக்கூடிய இறைவன் திருவடிப்பேற்றை எண்ணி வாழ்ந்து இருக்க வேண்டும். சாவு வந்தபோதும் இறைவனை நினைக்கவேண்டும். அதனால்தான் திருமூலர்,

*" இறந்தொழி காலத்தும் ஈசனை உள்கும் "*

*" சாகின்ற போதும் தலைவனை நாடுமின் "*

என்று வற்புறுத்துகிருர்.

இந்தப் பிறவியிலே இனி நாம் எதிர்பார்த்திருக்கின்ற துன்பம் இறக்கும்துன்பம். இறக்கின்ற துன்பம் ஒருவனுக்கு உண்டாகாமல் இருக்கவேண்டுமானுல், இந்தப் பிறப்பினுல் ஏற்பட்டிருக்கின்ற உடம்பு அழிகின்ற காலத்தும் இந்தப் பிறப்பு இறப்புக்குக் காரணமாயிருக்கின்ற இறைவனை நினைக்கவேண்டும்; வாழ்த்தி வணங்கவேண்டும். அப்படிப்பட்டவர்களுக்கு இறப்புத்துன்பமில்லை என்பதாகக் கூறுகின்ருர் திருமூலர்:

*" மறந்தொழி மண்மிசை மன்னுப் பிறவி*
*இறந்தொழி காலத்தும் ஈசனை உள்கும்*
*பறந்தல மந்து படுதுயர் தீர்ப்பான்*
*சிறந்த சிவநெறி சிந்தை செய்யீரே "*

இந்த உலகத்தில் ஒவ்வொரு உயிரும் மறைந்துபோகின்றது. அப்படி மறைந்து ஒழிவதற்குக் காரணமான நிலையில், மன்னுப் பிறவியில், இறந்தொழிகாலத்தும் இறைவனை நினையுங்கள்.

*" புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்*
*பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்*
*கல்லாய் மனிதராய் "*

இப்படியாகப் பல பல பிறவிகளில் பிறந்து, பற்பல கூடுகளில் புகுந்து, துன்பத்தை அடைகின்ற துயர் தீரும்பொருட்டுச் சிவநெறியில் செல்லுங்கள் என்கிருர்.

அப்படியானுல் - ஞானிகள் இறைவனின் திருவருள் பெற்றவர்கள் இறப்பது இல்லையா? உடம்பு எடுத்தவர்கள் எல்லோரும் இறக்கத்தானே வேண்டும்? நாம் இறக்கின்றபொழுது இறைவன் திருவடியை நினைத்திருப்பதால் இறப்பதில் இருக்கின்ற துன்பம் எப்படிப் போகும்? உயிர் உடம்பைவிட்டுப் போகாதா? என்ற கேள்வி எழும்.

ஞானிகள், அஞ்ஞானிகள் ஆகிய இருவர்களுடைய உடம்புகளிலிருந்தும் உயிர் பிரிந்து போகிறதே என்ருல், ஆம்; அது பிரிந்துதான் போகின்றது; என்ருலும் இரண்டிற்கும் வித்தியாசம் உண்டு.

சென்னை நகரில் உள்ள ஜெயிலில் இரண்டு கைதிகள் இருக்கின்ருர்கள். சிறைக் கதவைத் திறந்து இருவர்களையும் சிறைக்காவலர்கள் வெளியில் அழைத்துத்தான் வந்தார்கள். அவர்கள் இருவருக்கும் சிறையிலிருந்து விடுபட்டு வெளியேவந்ததில் மகிழ்ச்சிதானே இருக்கும் என்று கேட்கலாம். ஆனுல் ஒருவன் மிக மகிழ்ச்சியோடு காணப்படுகிருன் ; மற்ரெருவனின் முகத்தில் பீதியும், பயங்கரமுந்தான் குடிகொண்டிருக்கின்றன. காரணம் என்னவாக இருக்கும்?

முன்னவன் தேசவிடுதலைக்காக சத்தியாக்கிரகம் செய்த குற்றத்தில் சிறைப்பட்டவன். அவன் வெளியேவந்தபோது வெளியே கூடியிருந்த மக்கள் எல்லாம் ஜெயகோஷமிட்டு, மாலை சூட்டி, அற்புதமான காரிலே ஏற்றி அவனுடைய சொந்த இல்லத்திற்கு அவனை அழைத்துச் செல்லுகிருர்கள். ஆகவே அவன் மகிழ்ச்சி எக்களிக்க நடக்கிருன்.

மற்ரெருவனைச் சுற்றியும் பத்து இருபது பேர்கள் இருக்கிருர்கள். அவனையும் அவர்கள் காரில் ஏற்றித்தான் செல்லுகிருர்கள். இருந்தாலுங்கூட அவன்முகத்தில் சந்தோஷம் குடிகொள்ளவில்லை ; அதற்குக் காரணம் என்ன? அவன் கைகளிலுள்ள விலங்குகள் தறிக்கப்படாததற்குக் காரணம் என்ன ?

சென்னைச் சிறையிலிருந்து அவன் வெளியே அழைத்து வரப்பட்டாலும், அவனைச் சுற்றி நிற்கின்றவர்கள் அவனை வேலூர் சிறைக்கு அழைத்துப்போகிருர்கள். ஆகவே அவனுக்கு சிறைமாற்றம் ஏற்பட்டிருக்கிறதே தவிர சிறையிலிருந்து விடுதலை கிடைக்கவில்லை. ஆகவேதான் அவனது முகத்தில் கவலையும் பீதியும் தோய்ந்து கிடக்கின்றன. சிறிதும் மகிழ்ச்சியைக் காணேம்.

பிறவிச் சிறையில் ஞானிகளும், அஞ்ஞானிகளும் அடைபட்டிருக்கின்றார்கள் என்றாலும், சிறையிலிருந்து விடுபடும்பொழுது - இறக்கும்பொழுது, இறப்பினால் ஞானிகளுக்குத் துன்பமே இல்லை. காரணம், ஏறுடை இறைவனையே நம்பி வாழ்ந்தவர்களல்லவா? ஆகவே இனி அவர்களுக்கு ஏது சிறை மாற்றம்? அவர்கள் உள்ளத்தில், சென்னைச் சிறையிலிருந்து விடுபட்டு வீடு நோக்கிச் செல்கின்ற கைதியின் உள்ளத்தில் ஏற்பட்டிருந்த எக்களிப்பே மிஞ்சிநிற்கின்றது.

அஞ்ஞானிகளுந்தான் இறக்கின்றார்கள். இறந்தாலுங்கூட அவர்கள் இறப்பினால் துன்பம் அடைகிறார்களே தவிர இன்பமுறவில்லை. ஏன்? இங்கே விடுதலையில்லையே; இந்தப் பிறவியிலிருந்து இன்னொரு பிறவிக்குத் தானே மாறுகிறார்கள். சென்னைச் சிறையிலிருந்து வேலூர் சிறைக்கு அழைத்துச் செல்லப்படுகிற கைதியைப்போலத்தான் வாடுகிறார்கள்; பயமும் பீதியும் உறுகிறார்கள்.

காரணம் என்ன? சென்னைச் சிறையில் சிலகாலம் இருந்ததினால் அந்தக் கைதிக்கு இந்தச் சிறையிலுள்ள காவலாளிகளைத் தெரியும். அந்தப் பழக்கத்தினால் அவர்கள் இவனை அதிகம் துன்புறுத்துவதில்லை. சிலசமயங்களில் துண்டுப் பீடியும் கொடுப்பார்கள், ஆனால் புது ஜெயில் வார்டர்கள் எப்படி இருப்பார்களோ? அவர்களோடு இவனுக்குப் பழக்கமில்லாததினால் 'அடிப்பார்களோ? உதைப்பார்களோ? பீடி பிடிக்கக்கூட அனுமதி மறுப்பார்களோ?' என்று நினைக்கும்போது அவன் பீதி அடைகிறான்; சென்னைச் சிறையிலேயே இருந்து விடலாமே; நம்மை வேறு சிறைக்கு மாற்றுகிறார்களே என்று துயருறுகிறான்.

இரண்டு கைதிகளும் சென்னைச் சிறையிலிருந்து வெளியே வந்தாலுங்கூட ஒருவருக்கு மட்டும் விடுதலை. அவர் மகிழ்ச்சியாகக் காணப்படுகிறார். சிறையிலிருந்து வெளியேவருவது அவருக்கு மகிழ்ச்சியைத்தான் கொடுக்கிறது. ஆனால் மற்றவருக்கு விடுதலை இல்லை. சிறை மாற்றமேதான். ஆகையால் சிறையிலிருந்து வெளிவருவது அவருக்கு மிகுந்த துன்பத்தைத் தான் கொடுக்கிறது.

இதைப்போலவே வாழ்க்கையில் ஞானிகளும், அஞ்ஞானிகளும் இறக்கிறார்கள் என்றாலும் இருவரும் மரணம் அடைந்தார்கள் என்று சொல்ல முடியுமா? ஞானிகளுக்கு மரணம் இல்லை. ஏனென்றால் அவர்களுக்கு மறுபிறப்பே கிடையாது. 'மரணம்' என்ற ஒன்றினால் அவர்கள் தங்களுக்குக் கர்மபந்தத்தினால் ஏற்பட்ட உடலைவிட்டுத் தங்களுக்குச் சொந்தமான வீடு எதுவோ - தங்களுக்கு உரிமையான வீடு எதுவோ அந்த வீட்டுக்குச் செல்லுகின்றார்கள். ஆகவேதான்சொந்தமான வீட்டுக்குச் செல்கின்ற அவர்கள் முன்னாலே இருக்கின்ற ஐம்புலன் குடிசையை விட்டுச் செல்வதை சந்தோஷத்தோடு வரவேற்கிறார்கள். அதிலே உண்மையான இன்பத்தையும் காண்கிறார்கள்.

ஆனால் அஞ்ஞானிகள் இறக்கிறார்கள்; இறந்து பிறக்கப் போகிறார்கள். அக்காயம் நீக்கி இனியொரு காயத்தில் புகப்போகிறார்கள். ஆகவே சென்னைச் சிறையிலிருந்து வேலூர் சிறைக்கு மாற்றப்பட்ட கைதி, அந்தச் சிறை எப்படி இருக்குமோ என்று அஞ்சுவதைப்போலவே அஞ்ஞானிகள் - திருவருட் பேற்றை நினையாதவர்கள், இனி வரப் போகும் பிறவி எப்படி இருக்குமோ என அஞ்சுகின்றார்கள்; பீதி அடைகின்றார்கள். சென்னைச் சிறையிலேயே இருந்துவிடலாமே என்று எண்ணும் கைதியைப்போல 'இவ்வுடற்சிறையிலேயே இருந்துவிடலாமே; சாவு வந்துவிட்டதே' என்று துயருறுகிறார்கள்.

சென்னைக்கு வந்து பாருங்கள். உண்மையிலேயே, அழுகு தொழுநோயராக, எத்தனை பேர்கள் தெருக்களிலே பிச்சை வாங்கிக் கொண்டு தவிக்கிறார்கள். அவர்கள் விரும்பினால் ஒரே நிமிஷத்தில் இறந்து போவதற்குச் சென்னையில் வசதியா இல்லை? மின்சார ரயில் வண்டிகள் நிமிஷத்திற்கு ஒன்றாகப் பறந்து கொண்டிருக்கிறதே. அலைமோதும் மாகடல்

'ஓ' வென்று இரைந்து கைகளை வீசிக் கூவி அழைக்கின்றதே. பணக்காரர்கள் வைத்திருக் கின்ற கார்கள்தாம் பூலோக யமன்களாகக் காட்சி அளிக்கின்றனவே. இவை எவற்றிலா வது தங்கள் உயிரைப் போக்கிக்கொள்ள அவர்கள் விரும்புகிருர்களா? இல்லேயே. ஏன்? இறப்பைக்கண்டு அஞ்சுகின்ருர்கள். பழகிப் போன உடலேவிட்டுப் பிரியப் பயப்படுகிருர் கள். இறந்தாலும் இனி நாம் எந்தமாதிரியான பிறவி எடுத்து வருந்தவேண்டி வருமோ என நடுங்குகின்ருர்கள். சாவினுல் இவர்களுக்குத் துன்பமே நிகழுகிறது.

ஆனுல் ஞானிகளுக்கு - இறைவனின் திருவருட்பயன் பெற்றுக்கொண்டு நிற்பவர் களுக்கு உடம்பிலிருந்து உயிர்போவது இன் பத்திற்குக் காரணம்; துன்பத்திற்குக் காரணம் அல்ல. ஆகவே என்றைக்கு இந்த உடலில் இருந்து உயிர் நீங்கி இறைவன் திருவடி நிழலே அடையப்போகிருேம் என்று ஏங்கிக் கொண்டிருக்கிருர்கள் அவர்கள்.

*'' விதிகாணும் உடம்பை விடா வினேயேன் ''*

என்று அருணகிரிநாதர் பாடுகிருர்.

ஆகவே, பிறப்பு இறப்பு ஆகிய இரு துன்பங்களேயும் நீக்க, பிறப்பு எடுத்த உடம்பு கள் எல்லாம் இறக்கின்றபொழுது துன்பம் உருமல் இருக்கவும், இறந்தவுடன் திரும்பப் பிறக்காமல் இருக்கவும் ஈசன் திருவடியை நினேயுங்கள் என்கிருர் திருமூலர்.

*'' இறக்கின்ற காலத்தும் ஈசனே உள்கும் ''*

இறந்தொழி காலத்தும் ஈசனே உள்கும் என்று உம்மைபோட்டுச் சொல்வதிலிருந்தே சாகிறபோதுமாத்திரம் இறைவனே நினேயுங்கள் என்று சொன்னதாகப் பொருள்கொள்ளல் ஆகாது: நன்ருக வாழ்கின்ற காலத்தும் ஈசனே உள்குங்கள் என்று சொல்வதாகவே கொள்ளவேண்டும். இறக்கும்பொழுது ஈசனே நினேக்க வேண்டுமானுல் - சாகின்ற காலத்தும் கடவுளேக் கருதுகின்ற மனநிலே நமக்கு வேண்டுமானுல் நன்ருக வாழுகின்றகாலத்தும் நாம் இறைவனே நினேந்துநினேந்து பழகியிருக்க வேண்டும். அப்பொழுதுதான் அம்மனநிலே வரும். ஆத்மானுபவத்தோடு கூடிப் பழகி யிருந்தால்தான் வரும். பழக்கமில்லாவிட்டால், சாகும் காலத்தில் சங்கரா சங்கரா என்று சொல்ல நினேத்தாலும் வருமா ? வாராது.

நாமும் சாப்பிடுகின்ருேம், குழந்தையும் தான் சாப்பிடுகின்றது. இலேயிலே உணவை வைத்தால் நாம் கையினுல் வாரி வாரி விழுங்கு கின்ருேம். ஆனுல் ஒரு ஆறுமாதக் குழந்தை நம்மைப்போல் கையால் எடுத்துச்சாப்பிடுமா? கை வாய்க்கு எட்டாதே. மூடியிருக்கின்ற கையைக்கூட முதலில் விரிக்கத்தெரியாதே.

நாம் யார் எதுகேட்டாலும் 'இல்லே இல்லே' என்று கையைவிரிக்கிருேம். ஆனுல் குழந்தை இறைவனேப் பற்றிக்கொண்டு கையைக்கூட விரிக்காமல் இருக்கிறது. தாய்தான் குழந்தை யின் கைகளே விரித்து விரித்துப் பழக்கம் செய் கிருள். வெள்ளிக்கிண்ணத்தில் உணவைப் பிசைந்துவைத்து. தானே எடுத்து உண்ணப் பழக்குகிருள். அப்படிச் சிறு குழந்தையிலே பழக்கப்பட்ட நாம் எல்லோருமே இன்று வாரிவாரி நாமே எடுத்து உண்ணப் பழகிவிட் டோம். இப்படி எதுவாக இருந்தாலும் அது பழக்கத்தினுல்தான் வரவேண்டும்.

இப்படி உணவை எடுத்துண்ணுவதற்கே பழக்கம் வேண்டியிருக்கிறது. நன்ருக வாழ் கின்ற காலத்திலே 'சிவன்' நாமத்தை நினேந்து நினேந்து பழக்கம் இருந்தால்தான் இறக்கும் காலத்தும் இறைவனேநினேக்க எண்ணம்வரும். நாம் வேலேயிலிருந்து ஓய்வுபெற்ற பிறகு, அது தான் இந்தியாவிலுள்ள ஜனங்களின் சராசரி வயது ஐம்பத்தைந்து என்கின்ருர்களே, அந்த சராசரி வயது ஐம்பத்தைந்துக்குப் பிறகு சைவசித்தாந்தம் பயின்று இறைவனே வழிபட ஆரம்பிக்கலாம் என்று ஒருவன் இருப்பானே யாகில் சாவு ஐம்பத்தைந்துக்குப் பிறகுதான் வரும் என்று என்ன நிச்சயம் ? ஆகவே சாவு எப்பொழுது வந்தாலும் வரலாம் அல்லவா ?

ஆகவே இப்பொழுதிருந்தே இறைவனை நாம் வந்தித்து வாழ்ந்தால் எமனை ஜெயிக்கலாம்.

நல்ல அரனெறி உபதேசங்களைச் செய்யும் போது, கொஞ்சம் கொஞ்சமாக என்ன என்ன செய்யவேண்டும் என்பதை எடுத்துச் சொன்னால்தானே நமக்கெல்லாம் அவற்றைப் பின்பற்ற மலைப்பு ஏற்படாது; அச்சம் ஏற் படாது. இதோபதேசமாயிருந்தாலும் எல்லா வற்றையும் ஒரேயடியாகச்சொன்னால், 'அடே யப்பா இவற்றை எல்லாம் எப்படிப்பின்பற்ற முடியும்' என்றபயம் உண்டாகிவிடும்.

ஆகவேதான் திருமந்திர ஆசிரியர் முதலில், 'இறந்தொழி காலத்தும் ஈசனை உள்கும்' என்பதாக – இறக்கும்பொழுதும் கடவுளை நினையுங்கள் என்று சொன்னார். அடுத்து,

*செல்லும் அளவும் செலுத்துமின் சிந்தையை*
*வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை*
*இல்லை எனினும் பெரிதுளன் எம்இறை*
*நல்ல அரனெறி நாடுமுன் நீரே.*

என்று கூறுகிறார்.

சாகின்றபொழுது இறைவனை நினைக்க வேண்டுமானால் நாம் வாழும்போதும் நினைந்து நினைந்து பழகினால்தான் வரும். அப்பழக்கமும் வெறும் நாவிலிருந்துவரும் பழக்கமாக இல்லா மல் உள்ளத்திலிருந்தே தொடங்கவேண்டும்.

மனத்துக்கண் மாசு இலனாக இருந்தால் தானே, வாழ்விலும் மாசு இல்லாதவனாக இருக்க முடியும். உடம்பிலுள்ள எல்லாக் கரணங்களுக்கும் மூல ஸ்விச் மனம். அவ்வ வற்றுக்குரிய நல்லறங்களைப் புரிய வேண்டு மானால், மனமாகிற கரணத்தை அவ்வவ் வழியே நன்கு பண்படுத்தவேண்டும். இந்த நாட்டின் பண்பாடு எல்லாமே மனத்தைத் தானே தொடுகின்றது.

சின்னஞ்சிறு குழந்தைக்கு உபதேசம் செய்ய வந்த ஔவையார், "அறம் செய்" என்று மாத்திரம் சொன்னாரா? இல்லையே. அறம் செய்ய வேண்டுமானால். அறம் செய்ய மனம் பழகவேண்டமா? ஆகவே "அறம் செய விரும்பு" என்றுதானே சொல்லியிருக் கிறார். உயிருக்கு இன்பம் தருகின்ற அறத் தைச் செய்ய மனம் விரும்பிப் பழகிவிட்டால், பின் 'மறம்' செய்ய விரும்புமா? ஆகவே எதைச் செய்ய வேண்டுமானாலும், அதனைச் செய்ய வேண்டுமென்ற மனநிலையை உண்டு பண்ணிக்கொள்ள வேண்டும். அந்த நிலை உண்டானாலேயே அதனைச் செய்யவேண்டும் என்ற உரமும், உறுதியும் தானேயுண்டாகும். செயலிலும் வரும். ஆகவே சாகின்றபோதும் தலைவனை நாடவேண்டுமென்றால், வாழ்கின்ற போதே அவனை நாடவேண்டும் என்ற பெரும் வேட்கை மனத்தில் உண்டாகிவிடவேண்டும். அதனால் இறைவன்பால் "செல்லும் அளவும் செலுத்துமின் சிந்தையை" என்கின்றார் நமது திருமூலர்.

தினமும் நாம் எவ்வளவுநேரம் கடவுளைத் தியானிக்கவேண்டும்? நாம் தினமும் வழிபட வேண்டுமா? வாரத்திற்கு ஒரு நாள் வழிபட் டால் போதுமா? என்றெல்லாம் கேட்காது, வயிறு கொள்கின்ற அளவும் சாப்பிடுவதைப் போல், சிந்தை செல்லுமளவும் செலுத்துமின் என்கிறார்.

இறைவன்பால் சிந்தையை நிலைநிறுத்த நமக்கு எல்லாம் உறுதுணையாக இருப்பன மந்திரங்கள். நமக்கு எவ்வளவு வன்மை உண்டோ அவ்வளவுக்கும் அவற்றை ஜபிக்க வேண்டும்.

இறைவனது மெய்மை சேர்ந்த புகழை விரும்பினாரிடத்து, மயக்கத்தைப்பற்றி வரும் நல்வினை, தீவினை ஆகிய இரண்டு வினைகளுமே அண்டாது.

*"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"*

என்கிறார் திருவள்ளுவர்.

இறைவன் ஒருவனே மெய்யானவன். அவன் புகழே உண்மையானது. ஏனையோர் புகழ் எல்லாம் ஒருகாலத்தில் உண்மையானது

எனத் தோற்றினாலுங்கூட பிறிதொரு காலத்தில் பொய்யானதாகப் போய்விடக்கூடும்.

ஒரு பொருளை அழகாகச் செய்து விட்டால் அந்த அழகான பொருளைச் செய்தது இந்தக் கை என்று கை - உடம்பை புகழ்ந்து சொல்வார்கள். ஆனால் உலகிலுள்ள ஏனைய உயிர்கள் எல்லாவற்றையும் படைக்கின்ற, வண்ணம் மிக்க, வன்மைமிக்க திருக்கரங்களை உடைத்தான இறைவனைத்தவிர வேறு எந்தப் பொருள்கள் உண்மையில் புகழத்தக்கன? என்பதைச் சிந்திக்கவேண்டும். ஆகவேதான் மெய்ம்மையான இறைவனது திருவிளையாடல்களையெல்லாம் 'திருப்புகழ்' ஆகப் பாடுகிறார் அருணகிரிநாதர்!

*'' பொன்னானாய் மணியானாய் போகமானாய்*
*பூமிமேற் புகழ்தக்க பொருளே உன்னை*
*என்னானாய் என்னானாய் என்னின் அல்லால்*
*ஏழையேன் என்சொல்லி ஏத்துகேனே ''*

என்று அப்பர்சுவாமிகள் பாடுகின்றார்.

பூமிமேல் புகழத்தக்க ஒரே பொருளாய் விளங்குகின்ற இறைவனை, தன்னால் எப்படி எல்லாம் புகழ முடியுமோ, அப்படி அப்படி எல்லாம் மனத்தில் உணர்ச்சி ததும்ப, அவன் உள்ளத்திலே உணர்த்துகின்ற வண்ணமெல்லாம் வாழ்த்திச், சிந்தை செல்லும் அளவும் இறைஞ்ச வேண்டும்.

*'' யாம் ஓதிய கல்வியும் எம் அறிவும்*
*தாமே பெற வேலவர் தந்ததனால்*
*பூமேல் மயல் போய் அற மெய்ப்புணர்வீர்*
*நாமேல் நடவீர் நடவீர் இனியே''*

என்றும்,

*'' அருணதள பாத பத்மம் அது நிதமுமே துதிக்க*
*அரிய தமிழ் தான் அளித்த மயில் வீரா ''*

என்றும் அருணகிரிநாதரைப் போல் நாமும் பாடவேண்டும்.

என்னென்ன வல்லமை நமக்கு உண்டோ, அந்தந்த வல்லமையினால் இறைவனை இறைஞ்ச வேண்டும். அப்பொழுதுதான் கவித்துவம் பெற்றதின் பயன் பூர்ணமாகக் கிடைக்கும்.

ஒரு புலவர் மிக அழகாகக் கவிதைகள் இயற்றினார். தம் வாழ்நாள் எல்லாம் பற்பல மக்களின்மீது புகழினையும் பொருளினையும் வேண்டிக்கவிதைகள் புனைந்து குவித்தவண்ணமிருந்தார். இருந்தாலும் அவரது மனத்திலே அமைதி பிறக்கவில்லை. சாந்தி குடிகொள்ளவில்லை. அவரது வாழ்விலே திருப்தியை ஏற்படுத்தும் அளவு ஊதியம் கிடைக்கவில்லை.

ஒருநாள் ஏதோ அகஸ்மாத்தாகப் பழனி ஆண்டவன் சந்நிதிக்கு எதிரேபோய் நின்றார். இத்துணை நாளும் அவர் உள்ளத்திலே ஏற்படாத ஓர் அமைதி அன்று வந்தது. அந்த அமைதியில்,

*'' ஏட்டுக் கணக்கும் எழுத்தாணி தேய்ந்ததும்*
*யாங்கள் விற்ற*
*பாட்டுக் கணக்கும் பயன் தரலாம் என்று*
*பாடிச் சென்ற*
*வீட்டுக் கணக்கும் தொகை பார்க்கில்*
*கார்க்கடல் வெண்மணலைக்*
*காட்டிக் கணக்கிடலாமே!*
*பழனிக் குருபரனே''*

என்று பாடுகின்றார்.

ஆகவே எத்துணை வன்மை நமக்கு உண்டோ, அத்துணையாலும் நாம் சொல்ல வேண்டுமாம். ''வாய்மையை வல்ல பரிசால் உரைமின்கள்'' என்கிறார் திருமூலர்.

கடவுள் இல்லை என்று கூறுவோர்கள் இன்றுமட்டும் இருப்பதாக நினைக்கின்றோம். அந்தக்காலத்திலுங்கூட 'இல்லை இல்லை' என்று சொல்பவர்கள் இருந்திருக்கிறார்கள். 'உண்டு' என்ற ஒரு சொல்லே 'இல்லை' என்ற சொல் இருந்திருந்தது என்பதைக் காட்டுகின்றது. ஆகவேதான்,

*'' இல்லை எனினும் பெரிதுளன் எம்இறை*
*நல்ல அரனெறி நாடுமின் நீரே ''*

என்கிறார் திருமூலர்.

அறிவினால் உயர்ந்தவர்கள் - அனுபவத்தினால் உணர்ந்தவர்கள் சொல்லுகின்றார்கள் "இல்லை எனினும் எம் இறை பெரிது உளன்" என்று. உங்கட்கு எங்தெந்த வகையிலெல்லாம் திறமை உண்டோ, அந்தந்த வகைகளிலெல்லாம் அவ் இறையின் வண்மையை வாழ்நாள் எல்லாம் புகழுங்கள். அப்படிப் புகழ்ந்து வாழ்ந்தால் இறக்கின்றகாலத்தும் அவனது திருவருள் கிடைக்கும். சாகுங்காலத்திலும் அவனை உள்குங்கள்.

*'' இக்காயம் நீக்கி இனி ஒரு காயத்தில்*
*புக்குப் பிறவாமல் போம்வழி தேடுமின் ''*

என்று, இதோபதேசம் முற்பகுதி பதினாறு பாடல்களால் சொல்லிமுடிக்கிறார் திருமந்திர ஆசிரியர். பிற்பகுதியில்,

*'' சிவனை வழிபட்டார் எண்ணிலி தேவர்*
*அவனை வழிபட்டங் காமாறொன் றில்லை*
*அவனை வழிபட்டங் காமாறு காட்டும்*
*குருவை வழிபடின் கூடலும் ஆமே ''*

என்பதாகப் பாடுகின்றார்.

இறைவன் தேவலோகத்திலே மகாதேவனாக இருக்கிறான். தேவர்களுக்கு நடுவில்வந்து வீற்றிருக்கிறான். நமக்குத் தேவர்களைப்போல் அவ்வளவு எளிதில் சானித்தியம் கிடைப்பது இல்லை. திருவடிநிழலில் வீழ்ந்து வீழ்ந்து நெடுநாள்செய்த புண்ணியவசத்தால் அவனது திருவுருவைக் காணப்பெற்றவர், நம்மில் எங்கோ சிலர்தான் இருக்கிறார்கள்.

ஆனால் தேவர்கள்நாட்டில் மகாதேவனாக இறைவன் எழுந்தருளி இருக்கிறான். அப்படி எழுந்தருளி இருந்துங்கூட முத்தி அவர்களுக்குக் கிடைப்பதில்லை. ஏனென்றால் அவரைச் சுற்றி நிற்கின்ற தேவர்களெல்லாரும் உளம் உருகி முத்திநெறி விரும்பிக் கேட்பதில்லை.

இந்திரன் தன்பதவி நீடித்திருக்கவேண்டும் என்று அவரை வேண்டி இறைஞ்சுகின்றான். அக்கினி தன்பதவி தன்னைவிட்டுப் போகக் கூடாதே என்று கெஞ்சிக்கேட்டு நிற்கிறான். இப்படியே எல்லாத்தேவர்களும் தங்கள் தங்கள் பதவிகளைக் காப்பாற்றிக் கொள்ளவே தொழுது நிற்கின்றார்கள். ஆனால் யாரும் தங்களுக்கு மோட்சம் வேண்டும்; தங்களுக்கு முத்திவேண்டும் என்று உளம் கசிந்துருகிக் கேட்டு நிற்பதாகத்தெரியவில்லை. ஆகவேதான் இறைவனை வழிபட்டும் அவர்களுக்கு அங்கு ஆமாறு ஒன்றும் இல்லை. மாணிக்கவாசகர் சொல்லுகிறார் '' தேவரும் அறியாச் சிவனே ! நான்முகன் முதலா வானவர் எல்லாம் வழுத்தியும் காணா உன் மலரடி இணைகள் '' என்பதாக. இறைவன் தேவர்கள் மத்தியிலே தான் வாழ்கிறான் என்றாலும் அவர்களுக்கு அவனால் அங்கு ஆமாறு ஒன்றும் இல்லை.

காவிரி இருக்கிறது என்றால் காவிரியின் நீரை நாம் குளிப்பதற்கு உபயோகிக்கலாம். நீர்வேட்கையைத் தீர்த்துக்கொள்ளுவதற்கும், எருமையைக் குளிப்பாட்டுவதற்கும், துணியைத் துவைப்பதற்கும் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். இருந்தாலும் அவற்றால் நாம் முழுப்பயன் பெற்றவர்களாக ஆகமுடியுமா? கால்வாய் வெட்டி, அதன் வாயிலாக நீரை நிலத்தில் பாய்ச்சிப் பயிர் செய்தோமானால் அப்பொழுதுதான் அதனை முற்றும் பயன்படுத்தியதாக ஆகும்.

*'' துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்*
*துப்பாயதூஉம் மழை ''*

என்பதுபோல, காவிரியாற்றுநீரால் உணவைப் பெருக்கி, எல்லோருக்கும் உணவையும் நாம் அளிக்கலாம்.

அதுபோல இறைவன் தேவர்கள் மத்தியிலேயே இருந்தாலுங்கூட அவர்கள் அவனை முற்றிலும் பயன்படுத்திக் கொள்ளவில்லை; தங்கள் தங்கள் பதவியையே காப்பாற்றிக் கொள்ள அவனைத் தொழுது நிற்கின்றார்கள். இறைவனைக் கண்ணாலே காண்பதைத் தவிர, பெறுகின்ற இன்பம் வேறு ஒன்றுமே கிடையாது. தொழிலில் சிறிது தவறினாலும் இந்தப் பூவுலகில் அவர்கள் பிறக்கத்தான் வேண்டும். இந்த நிலை அல்லாது முத்திநிலை வேண்டும் என்றால் என்னசெய்யவேண்டும் ?

காவிரியில் நிரம்ப வெள்ளம் வருகின்றது. இரு கரைகளையும் தொட்டுக்கொண்டு குமிழிட்டுச் செல்கின்றது நீர். கரைக்கு அருகிலேயே ஓர் வயல் இருக்கின்றது. அந்த வயலில் பயிர்செய்ய நீர் மிகவும் தேவைதான். அதற்காக அப்படியே ஆற்றினது கரையை உடைத்துப் பாசனம் செய்துவிட முடியுமா? கரையை உடைத்துவிட்டால் என்ன ஆகும்? ஆற்றுநீர் 'குபுகுபு' என்று வயலிலே பாயும். அதனைச் சுற்றியுள்ள எல்லா வயல்களிலுமே பாயும்; அத்தோடு நின்று விடுமா? எங்கும் ஒரே வெள்ளக் காடாகிவிடாதா? ஆற்று மணலெல்லாம் அடித்துச்செல்லப்பட்டுவிடும்; வயற்காடெல்லாம் ஒரே மணல்மேடாக ஆகிவிடாதா? காவிரியும் இல்லை; வயலும் இல்லை. நீரை எடுத்துப் பயிர் செய்ய நினைத்தோமே தவிர, நம்மால் பயிர்செய்யத்தான் முடிந்ததா? ஆகவே வயலுக்குப் பக்கத்தில்தான் ஆறு ஓடுகிறது என்ருலும் - வயலுக்குப் பக்கத்தில் தான் ஒரு பெரிய ஏரி இருக்கிறது என்ருலும் அதனுல் என்ன பயன்? தேவர்களுக்குப் பக்கத்தில்தான் நம் மகாதேவன் எழுந்தருளி இருக்கிருன் என்ருலும் அவர்களுக்கு என்ன பயன்? ஒன்றும் இல்லை.

வயலுக்குப் பக்கத்திலே ஆறு ஓடுகிறது ஏரி இருக்கிறது என்ருல் - வயலுக்கு அவற்றின் நீரால் பயன் ஏற்படவேண்டும் என்ருல் என்ன செய்ய வேண்டும்? முறைப்படி மதகு கட்டி, அந்த மதகின்வழியே நீரைக் கால்வாய்க்குக் கொணர்ந்து, வயலுக்கு மடை கட்டி, பருவம் பார்த்துப் பாய்ச்சினுல் அந்த வயல் நன்ருக விளையும். நீரைப் பயன்படுத்தியதாகவும் ஆகும். அதேபோல் இறைவன் திருவடிப்பேற்றை அடையவேண்டும் என்ருல் இறைவனை வழிபட்டு, நமக்கெல்லாம் இங்கு ஆமாறு காட்டுகின்ற குருவையும் வழிபடவேண்டும்.

வயலுக்கு ஆற்று நீர் பயன்பட வேண்டுமானுல் அது முறைப்படி வாய்க்காலின்வழியோடிப் பாய்ந்தாக வேண்டுமாப்போல, நம் இறைவன் திருவருள் நமக்கெல்லாம் சித்திக்க வேண்டுமாயின் ஸ்ரீ - ல- ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் மூலமாகத்தான் முறைப்படி அது வந்தாகவேண்டும்.

முப்பத்து முக்கோடி தேவர்கள் என்று சொல்வார்கள். அவர்களில் எத்தனையோபேர் திரும்பிப் பூலோகத்தில் பிறந்திருக்கிருர்கள். அவர்களின் தொகை எண்ணில் அடங்காது. இப்படி எண்ணில் அடங்காத் தேவர்கள் எல்லாருமே சிவனைத் தம்முடைய மத்தியிலே யிருத்தி வழிபடுகிருர்கள் என்ருலும் அவர்களுக்கு இறைவனுல் உதவி இல்லை.

ஆனுல் காவிரிநீர் வாய்க்காலின் வழியாக வயலுக்குச் சிறிதளவே பாயினும் வயல் பயன் உறுமாப்போல, இறைவன்பால் கலந்து அன்பாகி, கசிந்து உள் உருகும் ஞானிகளாகிய குருமூர்த்திகளின் திருவடிகளே சரண் என்று அடைந்தவர்கள், இறைவனது திருவருட்பேற்றைச் சுலபமாக அடைந்துவிட முடியும். அருள்நெறியில் கூடவும் முடியும்.

*'' சிவனை வழிபட்டார் எண்ணிலி தேவர்*
*அவனை வழிபட்டங் காமாறென் றில்லை*
*அவனை வழிபட்டங் காமாறு காட்டும்*
*குருவை வழிபடின் கூடலும் ஆமே ''*

என்று கூறுகின்ருர் திருமூலர். இப்படியாக மக்களுக்கு இதோபதேசம் செய்கின்ற பாடல்களாக மூவாயிரம் பாடல்கள் திருமந்திரத்தில் இருக்கின்றன. அவற்றில் உள்ள ஒரு அடி தான் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்பது. இதனைச் சிவன்கோயில்புகாத செந்தமிழர்களுங்கூடச் சொல்லுவார்கள். சமயத்தைப்பற்றி நினைக்காதவர்களுங்கூடச் சொல்வார்கள். அரசியல் மேடைகளிலுங்கூட இவ்வடி அடிபடுகின்றது. ஆனுல் அடுத்தாற்போல இருக்கின்ற அடிகளைச் சொல்ல அவர்கள் மறந்துவிடுகிருர்கள் அல்ல; மறைத்துவிடுகிருர்கள்.

*'' ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்*
*நன்றே நினைமின் நமனில்லை நாணுமே ''*

என்பதை நாம் மறக்கக்கூடாது.

பிறப்பு இறப்பு ஆகிய துன்பங்கள் உரு வண்ணம், உடம்பு எடுத்த மக்கள் சாவை நினைந்து, சாவினுல் ஏற்படும் துன்பத்தைத் தவிர்க்கவும், செத்தபின் மறுபடியும் பிறப்பு எடுக்காமலிருக்கவும் இதுதான் வழி எனச் சொல்வதே இதோபதேசம்.

இறைவன் திருவருள் நெறியில் சென்று அவனுடைய உயர்ந்த அருளேச் சிந்தித்து, சிந்தை செல்கின்ற அளவும் வாக்கினுல் அவன் புகழ்பாடி, நல்ல அவ்வரனெறியில் வாழ்ந்தால், இறக்கின்றபொழுது அவன் நினைப்பு வரும். சிறந்த சிவநெறியை இறந்தொழி காலத்தும் உள்கி, சிந்தை செய்தால் யமபயமில்லை. யமனை ஜெயிக்கலாம். இறப்பின் துன்பமும் உண்டா காது. மறுபடி பிறக்கும் துன்பமும் இன்றித் திருவருட்பேற்றைப் பெற்று முத்திநிலையை எய்தலாம்.

ஆகவே இறைவன் திருவருட்பேற்றைச் சுலபமாக அடைந்திட 'அவனை வழிபட்டு இங்கு ஆமாறு காட்டும் குருவையும் வழி படுங்கள்' என்பதாக இருபது பாடல்களிலே இதோபதேசம் செய்கிருர் திருமந்திர ஆசிரியர். அவர் வாக்குப்படி குருமகாசந்நிதானத்தின் திருவடிக் கமலங்களைப்பற்றி இறைவன் திரு வடிப்பேற்றைப்பெற்று உய்வோமாக என்ற அளவில் முடித்துக்கொள்கிறேன்.

"கூடியும் நின்றும் தொழுதுஎம் இறைவனைப்
பாடியுளே நின்று பாதம் பணிமின்கள்
ஆடியுளே நின்று அறிவுசெய் வார்கட்கு
நீடிய ஈற்றுப் பசுவது வாகுமே."

"ஏறுடை யாய்இறைவா எம்பிரான் என்று
நீறிடு வார்அடி யார்நிகழ் தேவர்கள்
ஆறணி செஞ்சடை அண்ணல் திருவடி
வேறணி வார்க்கு வினைஇல்லை தானே."

எட்டாந்தந்திரம் : ‘சோதனை’

**டாக்டர் திரு. டி. எம். பி. மகாதேவன் அவர்கள் M. A., Ph. D.**

*தத்துவத்துறைத் தலைவர், சென்னைப்பல்கலைக்கழகம்.*

மிகப்பெரிய தமிழ் அறிஞர் கூட்டத்தின் நடுவே என்னையும் புகுத்தி, எங்கும் பொங்கித் ததும்பி கரைபுரண்டு ஓடும் சிவானந்த வெள்ளத்திலே, ‘நீயும் சிறிது பருகுவாய்’ என்று அழைத்த ஸ்ரீ - ல - ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கு என்னுடைய வணக்கம்.

ஐக்கிய நாடுகளில், ‘கலைக்கழகம்’ என்று சொல்லப்படுகின்றதான ஸ்தாபனத்திலிருந்து சமீபத்தில் ஒரு விசாரணை வந்தது. அந்த விசாரணையின் நோக்கம் என்னவென்று கேட்டால், இப்பொழுது எங்குபார்த்தாலும் விஞ்ஞானம் வளர்ந்துகொண்டே வருகின்றது, இயந்திர சாதனங்கள் அபிவிருத்தி அடைந்து வருகின்றன. அப்படியிருக்கும்போது மனிதர்களுக்குத் தத்துவங்களையெல்லாம் மதிக்க உணர்ச்சி இனி இருக்குமா? இருக்காதா? நாஸ்திகர்களாக ஜனங்கள் மாறிவிடுவார்களா? முக்கியமாகக் கீழை நாடுகளில் இந்தியாவில் கடவுள்பால் பற்று இல்லாமல் போகுமா? என்பது அந்த விசாரணையின் நோக்கம்.

அநேக மேனாட்டு நண்பர்களும், சந்தேகத்துடன் கேட்கின்றார்கள். நம் இந்தியாவிலே மேனாட்டுக் கலாசாரம் பரவி வருகின்றது; அனேக உற்பத்திச் சாலைகள் நிர்மாணிக்கப் படுகின்றன; வெளிதேசங்களிலிருந்து பல புதுக் கருத்துக்கள் வந்து புகுந்துவிட்டன; இனி இந்தியாவின் கதி என்ன? சமயப்பற்று இருக்குமா? வேத வேதாகமங்களிடத்திலே ஜனங்களுக்குச் சிரத்தை இருக்குமா? என்று.

இந்த விசாரணைக்கும், சந்தேகத்திற்கும் நாம் பதில் காணவேண்டுமானால் இப்பேர்ப் பட்ட திருமடங்களுக்குத்தான் வரவேண்டும். இந்தியர்கள் ஒவ்வொருவருமே சாமானிய ஜனங்கள். ஏனைய ஜனங்களைப்போலத்தான் நன்ருக உண்ணவேண்டும்; நன்ருக உடுக்க வேண்டும் என்று ஆசை வைத்திருக்கின்றனர். அதேபோல், இந்தியர்கள் மாத்திரமே சமயப் பற்று உடையவர்கள், ஏனைய நாட்டவர்கள் எல்லாம் நாஸ்திகர்கள் என்று நாம் நம்புவதற்கு இடம் இல்லை.

ஆனாலும் இந்தியநாடு செய்த பாக்கியம் என்ன என்று கேட்டால், தொன்றுதொட்டு எப்பொழுதுமே இந்நாட்டிலே மஹான்கள் அவதரித்திருக்கின்றார்கள். அவர்களுடைய வம்சத்தைச் சேர்ந்தவர்கள் நாம்; அவர்களாலேயே அனுக்கிரகிக்கப்படுகிறவர்கள் நாம். இன்னும் நம்மோடு பல மஹான்கள் இருந்து வருகிறார்கள். அதனாலேயே நமது நாட்டைப் புனிதநாடு என்று கருதுகின்றோம். அப்பேர்ப் பட்ட மஹான்கள் - இதுபோன்ற திருமடாலயங்கள் இருக்கின்றவரையில் நம்முடைய மதத்திற்கோ, சமயத்திற்கோ ஹானி வரவே வராது என்று நிச்சயமாகக் கூறலாம். ஆகையால்தான் நான் இங்கு வந்திருப்பது மிகவும் சந்தோஷத்தை எனக்கு அளிக்கிறது. வெகு நாட்களாகவே திருமூலர் தவம்புரிந்து, ஞான உபதேசம்செய்த தலத்தைத்தரிசிக்கவேண்டும் என்ற அவா எனக்கும் உண்டு. என்னுடைய நண்பர்கள், தமிழ்ப்புலவர்கள் ஆகியோரை நான் அநேகமுறை கேட்டுக்கொண்டதும் உண்டு; திருமூலரின் திருமந்திரத்தை விளக்கி, நீங்கள் ஒரு நல்ல நூல் எழுதினால் நன்ருக இருக்கும் என்று. இந்த இரண்டு அவாக்களையும் பூர்த்திசெய்வதற்காகவே என்னைத் திருவுள்ளம் இங்கு அழைத்துவந்தது என்று நினைக்கிறேன்.

திருமந்திரம் மிகவும் ஆழ்ந்த தத்துவங்களைப் போதிக்கிற ஒரு பெரிய அருள் நூல். இதனுடைய ஒருபாட்டின் ஒருபதத்தைக் கூட அர்த்தம் செய்து கொள்வதற்குத் தன்னால் இயலவில்லை என்று தலைவர் அவர்கள்



மூன்ரும்நாள் விழாவில் திரு. T. M. P. மகாதேவன் பேசுகிருர்.

கூறினுர்கள். தமிழ்மகாசமுத்திரத்தில் நன்ருக நீந்தும் வல்லமை வாய்ந்த தலைவர் அவர்களே இவ்வாறு கூறினுராளுல் நான் என்ன சொல்வது என்று எனக்குத் தெரியவில்லை. அதுவும் எட்டாவது தந்திரத்தின் இறுதிப்பாகமாக இருக்கின்ற "சோதனை" என்ற பகுதியைப் பற்றி நான் கூற வேண்டும் என்று எனக்குப் பணி ஏற்பட்டிருப்பதும் ஒருசோதனையாகவே இருக்கவேண்டும் என்று நினைக்கிறேன்.

'சோதனை' என்ற சொல்லை நினைக்கின்ற போது ஏழு வருஷங்களுக்கு முன்னுலே நடந்த ஒரு சம்பவம் எனக்கு ஞாபகம் வருகிறது. ஆங்கிலத்திலே 'செக்' என்ற சொல்லானது அனைவருக்கும் தெரிந்திருக்கும். 'செக்' என்ருல் தடுப்பது, இடையூறு செய்வது, பரீட்சிப்பது, சோதனையிடுவது என்றெல்லாம் பொருள். நான் இங்கிலாந்திலிருந்து விமான மூலமாக அமெரிக்காசென்று இறங்கினேன். விமானநிலையத்திற்கு என்னை அழைப்பதற்காக இரண்டு அமெரிக்க நண்பர்கள் வந்திருந்தார்கள். அவர்கள் என்னை அழைத்துக்கொண்டு சமீபத்திலே இருந்த ஒரு சிற்றுண்டிச்சாலைக்கு இட்டுச் சென்ருர்கள். அங்குப் போனவுடனேயே "உங்கள் பெட்டியைச் செக் செய்யலாமா?" என்று கேட்டார்கள்.

எனக்குத் தூக்கிவாரிப்போட்டது. நான் அவர்களை நண்பர்கள் என்று எண்ணினேன். கஸ்டம் ஆபீஸையும் ஏற்கனவே தாண்டி வந்தாய் விட்டது. பெட்டிகளை இங்கே 'செக்' செய்ய வேண்டுமென்று சொல்லுகிருர்களே எதற்காக என்று எண்ணினேன்.

நான் இப்படியாகத் தயங்குவதைக்கண்ட அவர்கள், தாங்களாகவே என் பெட்டியை எடுத்துக்கொண்டுபோய் அந்தச் சிற்றுண்டிச் சாலையின் ஒருமூலையில் அதனைப் பத்திரப் படுத்திவைத்தார்கள். அப்புறந்தான் எனக்குப் புரிந்தது அமெரிக்காவில் 'செக்' என்ருல் பத்திரப்படுத்தி வைப்பது என்பதாக.

அதுபோலவே சாதாரணமாகச் 'சோதனை' என்று நாம் சொல்லும்போது சோதிக்கலாம் ஒருவன் எவ்வாறு இருக்கிருன் என்று, பார்க்கலாம் அவனுடையசக்தி எப்படி இருக்கிறது என்று என்பதாக 'examination' என்ற அர்த்தத்தில்தான் உபயோகம் செய்கிருேம்.

ஆளுல் தத்துவபரிபாஷையில் சோதனை என்பது நம்முடைய பரம புருஷார்த்தமாய் இருக்கின்ற மோட்சத்தை அடைவதற்கு வழி என்றே பொருள்படும். சோதிக்காவிட்டால் அதாவது விசாரம்செய்யாவிட்டால் தத்துவம் விளங்காது; தத்துவஞானம் உதயம் ஆகாவிட்டால் வீடுபெற முடியாது. ஆகையால் அந்த வழியிலே நாம் சென்ருல் பரமானந்தம் பெறலாம் என்று காட்டியிருக்கிருர்கள். 'விசார மார்க்கத்தில்' நாம் செல்லவேண்டும்; சோதனை செய்யவேண்டும்; நாம் சோதனை செய்யாவிட்டால் பரம்பொருளைக் காணமுடியாது; அடையவும் முடியாது.

ஆகையால் சோதனை என்ற சொல்லானது நம்முடைய சாஸ்திரங்களிலே மிகவும் முக்கியமான ஸ்தானத்தைப் பெற்றிருக்கின்றது. இந்தச் 'சோதனை' என்ற மார்க்கம் இருக்கிறபடியினுலேதான் நம்நாட்டில் சமயத்திற்கும் தத்துவத்திற்கும் விரோதமே ஏற்பட்டது கிடையாது.

ஆங்கிலத்தில் சமயத்தை faith என்றும், தத்துவத்தை philosophy என்றும் சொல்வார்கள். மேனுடுகளிலே சமயமும், தத்துவமும் ஒன்று சேராது, வெவ்வேருக வளர்ந்துவந்திருக்கின்றன. தத்துவசாஸ்திரி சமயத்தைப் பற்றிப் பேசமாட்டான்; சமயவாதி தத்துவத்தைக்கண்டு பயப்படுவான். இதுதான் மேனுடுகளிலே நாம் இப்பொழுது காணும் முறையாகும்.

ஆளுல் நம் நாட்டிலே சமயம், தத்துவம் ஆகிய இரண்டும் ஒன்று சேர்ந்தே வளர்ந்து வந்திருக்கின்றன. உதாரணமாக நாம் சமயத்திற்கு - தத்துவத்திற்கு வழங்கும் பெயரைக் கவனித்தாலேயே விளங்கும்.

சமயத்தை 'மதம்' என்று நாம் அழைக் கின்ருேம். 'மதம்' என்ருல் புத்தியினுலே தீர விசாரித்துத் தெளிவது என்று பொருள். 'மந்திரம்' என்ற சொல்லுக்கும் 'மதம்' என்ற சொல்லுக்கும் ஒரே ஒரு எழுத்துதான் பேதம். சமஸ்கிருதத்தில் 'மந்திரம்' என்ருல் தியானத் திலுலே - புத்தியின் கூர்மையினுலே - யூகத்தி னுலே விசாரித்துத் தெளிந்து சொல்லப்படு கிறது என்று பொருள்.

சமயம் என்பது மூடநம்பிக்கை அல்ல. கண்மூடித்தனமாக ஏதோ சில கருத்துக்களை வாங்கிக்கொள்வது என்ற பொருளும் அல்ல. 'மதம்' என்ருல் புத்தியினுலே - சுத்த மனத் தாலே விசாரித்துத் தெளிந்து, பின் தெரிந்து கொள்ளப்படுகிறது என்று பொருள்.

அதுபோலவே சாட்சாத்காரம், தரிசனம் என்ற பெயர் நம் மக்களிடத்திலே வழங்கி வருகிறது. தரிசனம் என்ருல் நேரான அனு பவம். தத்துவ விசாரணையானது அறையில் உட்கார்ந்துகொண்டு விஞ்ஞானிகள் எவ் வாறு தங்களுடைய மனத்திலுலே விசாரித்து, கருத்துக்களை வெளியிடுகின்ருர்களோ, அது போல் செய்யக்கூடிய காரியம் அல்ல. தத்து வத்தின் கடைசி முடிவு எது என்று கேட் டால், உணர்ந்த தத்துவத்தைத் தானே அனு பவிப்பதுதான். மதத்தின் எல்லை எதுவோ அதுவே தத்துவத்தின் நோக்கமும் என்று தரிசனம் என்ற பதம் காட்டுகிறது.

மந்திரத்தை எவர் தெரிசிக்கிருர்களோ, அவர்களைத்தான் மகரிஷிகள் என்று நாம் கூறுவது உண்டு. திருமூலர் மந்திரங்களைத் தெரிசித்தவர். ஆனபடியினுலே அவர் ஒரு மகரிஷியாக விளங்கினுர். ஆகையால் மதமோ அல்லது சமயமோ, தத்துவமோ அல்லது தரிசனமோ ஒன்று சேர்ந்தே நம் நாட்டிலே இதுவரையில் விளங்கி வந்திருக்கின்றன. ஆகையால்தான் சோதனை என்பதே விசாரம் என்பதற்கும் மதத்திற்கும் வழி. தத்துவத் திற்கும் வழி அதுவேதான்.

இந்தச் சோதனையானது எப்படி அமைய வேண்டும்? இந்த விசாரம் எவ்வாறு நடத்தப் படவேண்டும்? எவ்வாறு வெளியிலுள்ள பொருள்களை நாம் ஆராய்ந்து அறிந்து கொள் கின்ருேமோ அதுபோல இந்தத் தத்துவத்தை ஆராய்ந்து அறிய முடியாது. வெளிப்பொருளை அறியவேண்டுமாஞல் இந்திரியங்களுடைய உதவியைக்கொண்டு நாம் அறியவேண்டும். வெளிக்கரணங்களின் உதவியினுலே இந்திரி யங்கள் செயல்படுகின்றன. வெளி இந்திரி யங்களால் நாம் ஆராய்ந்து அறியும் பொருள் கள் எல்லாம் நாசத்தை அடையக் கூடியவை. இன்று தோன்றி நாளைக்கு மறைவன. இது உண்மை ஆகாது; தத்துவமும் ஆகாது. பகிர் முக திருஷ்டி; வெளியிலே செல்லும் நோக்கம். இந்த நோக்கத்திலுலே நாம் பரம்பொருளைக் காணமுடியாது.

ஆத்மசோதனையானது இதைக் காட் டிலும் வேறு. சாமான்யமாக நமக்கு வெளிப் பார்வைதான் இருக்கின்றது. இந்திரியங்கள் வாயிலாக விஷயங்களை நாம் அறிந்து அனுப விக்கிருேம். ஆனுல் இது அஞ்ஞானத்தினது செயல்.

எவன் வீரன்? எவன் வித்துவான்? என்று கேள்வி கேட்டால் எவன் ஒருவன் இந்திரியங் களின் வெளிப்போக்கை அடக்கி உள்முகப் படுத்துகிருனே - அந்தர்திருஷ்டியை அடை கிருனே அவனேதான் வீரன்; அவனேதான் வித்துவான். அவனுல்தான் தத்துவசோதனை யைச் செய்யமுடியும். அவன்தான் உண்மை யான ஞானத்தைப்பெறச் சக்திவாய்ந்தவன் என சகல வேதசாஸ்திரங்களும் கூறுகின்றன.

இதைத்தான் திருமூலர் ''சிந்தை திருத்து தல்'' என்று கூறுகின்ருர். சிந்தை திருத்த வேண்டும் என்ருல் வெளியிலே செல்லும் மனத்தினை அடக்கி உள்முகமாக ஆக்க வேண்டும். இதுவே சிந்திக்கத் தற்பரமாகும்.

இதே கருத்தை, கடோபநிஷத் மந்திரம் ஒன்று கூறுகிறது :

पराञ्चि खानि व्यतृणत्स्वयंभूस्तस्मात्पराङ् पश्यति नान्तरात्मन्। कश्चिद्धीरः प्रत्यगात्मानमैक्षदावृत्तचक्षुरमृतत्वमिच्छन् ॥

ஈஸ்வரன் நம்மை எவ்வாறு சிருஷ்டி செய்திருக்கின்றார் என்றால் வெளிப்பார்வை உடைய இந்திரியங்களை உடையோர்களாகச் சிருஷ்டித்திருக்கிறார். ஆகையால் நாம் நம்முடைய மனத்தை இந்திரியங்கள் வாயிலாக வெளிப்புறத்தே ஓட்டி, வெளியில் இருக்கும் விஷயங்களை அனுபவிக்கின்றோம். ஆனால் எவன் ஒருவன் இந்திரியங்களின் பார்வையை உள்முகமாகச் செலுத்துகின்றானே அவன் ஒருவனைத்தான் தீரன் என்று சொல்லலாம். அவனைத்தான் வீரன் என்றும் அழைக்கலாம். அவன் ஆத்மீக திருஷ்டியை அடைகிறான். கண்ணை உள்ளே திருப்புகிறான். தன்னுள்ளேயே சுயம் ஜோதியாய் விளங்குகின்ற பரம்பொருளைக் காண்கிறான்.

இந்தத் தன்மையை நாம் சோதனை மார்க்கத்தின் மூலம்தான் அடையலாம். இப்பேர்ப்பட்ட சோதனைமார்க்கத்தின்மூலம் நாம் நம் முன்னாலே காணுகின்ற பிரும்மாண்டத்தை மாத்திரம் அல்லாமல் நம் உள்ளே இருக்கும் தத்துவங்களையும் விசாரித்து அறிந்துகொள்ளலாம். இதைத்தான் திருமூலர், 'என்னைச் சோதிக்கும்போதே என்னுள் சோதியைக் கண்டேன்' என்கிறார்.

இந்த நாட்களிலே எந்தக்காரணத்தினாலே ஜனங்கள் அவஸ்தைப்படுகிறார்கள்? இன்னலுறுகிறார்கள்? எவ்வளவோ சுகசாதனங்களையெல்லாம் உடைய பணக்காரர்களுங்கூட ஏன் துக்கத்தை அநுபவிக்கிறார்கள்? துக்கம் எதனால் அபரிமிதமாகப் பெருகிக்கொண்டிருக்கின்றது? காரணம் நாம் நம்மையெல்லாம் நன்குசோதித்து அறிந்து கொள்ளவில்லை. நாம் சோதிப்பதை மறந்துவிட்டோம், தன்னைத் தானே விசாரித்து வருகின்ற தன்மையைக் கைவிட்டுவிட்டோம். அதனாலேயே எல்லா விதமான துன்பத்தையும் அடைகிறோம்.

இக்கால மக்கள் பல கலைகளையும் கற்க இச்சைப்படுகிறார்கள். ஆனால் கலைகளுக்கு எல்லாம் கலையாக விளங்கும் ஆத்ம வித்தையைக் கற்க வழிதோன்றாமல் இருக்கிறார்கள். திருமூலர் சொல்வதைப்போல, "கலையொரு மூன்றும் கடந்தப்பால் நின்ற தலைவனை நாடினால்" கலை வளரும்; கவலையும் குறையும். உலகத்தில் உள்ள பௌதிகமான கலைகளை அடைவதற்கு இச்சை இருக்கிறதே, அதை விட்டுவிட்டு அந்தர்முகமாக நாம் திரும்பினால் தான் பரமானந்தத்தைப் பெறலாம் என்று திருமூலர்போன்ற பல மகரிஷிகள் கூறுகிறார்கள். அந்தர்முகமாகச் சோதனையை நடத்த வேண்டுமானால் மிகவும் கூர்மையான புத்தியினாலேதான் செய்யமுடியும். புத்தி வேண்டாமென்று யாரும் சொல்லவில்லை. புத்தி இல்லாவிட்டால் தத்துவத்தை உணரமுடியாது. இப்பேர்ப்பட்ட கூர்மையான புத்தியைத்தான் கூர்மையான வாளுக்கு ஒப்பாக மகான்கள் பலர் கூறியிருக்கிறார்கள். ஞானவாள்கொண்டு நாம் நம்மையே சோதித்துக் கொள்ள வேண்டும். இப்படிச் சோதித்துச் சோதித்தே-விசாரித்து விசாரித்தே, விவேகத்தைப் பெற வேண்டும் என்கிறார்கள்.

கண்ணபெருமான் கீதையின் வாயிலாக அர்ஜுனனுக்கு இதே கருத்தைத்தான் வெளியிடுகிறார். அதாவது,

तस्मात् अज्ञानसम्भूतं हृत्स्थं ज्ञानासिनात्मनः
छित्वैनं संशयं योग मातिष्ठोत्तिष्ठ भारत ।

ஆத்மசோதனை என்ற ஞான வாளினாலே நமது கர்ம பந்தங்களையெல்லாம் அறுத்து எறியவேண்டும்; உண்மைகளை நாம் தெரிந்து கொள்ளவேண்டும் என்று சொல்லுகிறார்.

இதே கருத்தை, கடோபநிஷத் மந்திரமும் சொல்லுகிறது:

क्षुरस्य धारा निशिता दुरत्यया दुर्गं पथस्तत्कवयोवदन्ति ॥

இந்த விசாரணை மார்க்கம், சோதனை மார்க்கம் எப்படி இருக்கிறதென்றால், கூர்மையான

வாள்முனையின்மீது நடப்பதைப்போல இருக்கிறது. வாளை வீசுவதற்கு - வாளின் முனைமேல் நடப்பதற்கு எவ்வளவு சாதுர்யம்வேண்டுமோ அவ்வளவு சாதுர்யம் இருந்தால்தான் இந்த மார்க்கம் லயிக்கும். எவர்கள் இந்தச் சக்தியைப் பெற்றிருக்கிருர்களோ, அவர்களால் தான் இது முடியும். இந்த வாளை வீசும் திறமையை ஒருவன் முதலாவதாகப் பெற வேண்டும். ஆனுல் அந்தத் திறமையையும் இறைவன் அருளாலேதான் பெறமுடியும். திருமூலரும்,

*'' ஆதிப்பிரான் தந்த வாள் அங்கைகொண்டபின்*
*வேதித்து என்னை விலக்கவல்லார் இல்லை ''*

என்கிருர். சிவபெருமானுடைய அனுக்கிரகத்திஞல்தான் இந்தஞானவாளை நாம் அடைய முடியும். ஞானவாளின் உதவியிஞலே தத்துவத்தை நாம் உணரலாம்.

*'' எறிவது ஞானத் துறைவாள் உருவி*
*அறிவத ஞேடேஅவ் வாண்டகையானை ''*

என்பதாகக் கூறுகிருர் திருமூலர்.

உபநிஷத் வாக்கியமும் எவனுக்குக் கர்ம பந்தம் எல்லாம் போய்விட்டதோ, கர்மபந்தங்களிலிருந்து எவன் விடுதலை பெற்ருஞே எவனுக்குச் சோகம் மறைந்துவிட்டதோ அவன்தான் பரம்பொருளைக் காணுகின்ருன் என்று சொல்லுகிறது.

மனதிலே சோகம் இருக்கிறவரையில், கர்மபந்தங்களுக்கிடையே உழன்றுகொண்டு வாழ்கிறவரையில் அவனைக் காணமுடியாது. சோகம்போய் கர்மபந்தங்கள் நீங்கப்பட்ட விசாரத்தின் முடிவாகவே அவனைக்காணலாம். ஆனுல் இது எப்படிக் கிடைக்கும் என்ருல், 'தாதுப்பிரகாரேண' தான் கிடைக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இதற்கு இரண்டுவிதமாகப் பொருள் சொல்லலாம். ஒன்று, மனத்தின் சுத்தியிஞல் மனது பந்தங்களை அறுத்துக்கொண்டு விடுதலை அடைந்த பிறகு என்று சொல்வார்கள். இன்னெரு பொருள், எல்லாப்பொருள்களும் எல்லா வஸ்துக்களும் ஆகி, பற்றுக்களை அழித்த பிறகு பரம்பொருளின் அனுக்கிரகத்திஞல் அடையலாம் என்று சொல்லப்படுகிறது.

எவன் ஒருவன் அந்தர் திருஷ்டியை உடையவஞக, உள்முகத்தைப் பெற்று, சோகத்தைக் கடந்து, கர்மபந்தங்களை அறுத்து எறிந்துவிட்டாஞே அவன் பரம்பொருளின் அனுக்கிரகத்திஞல் பரமபுருஷார்த்தத்தைப் பெறுவான்,

ஆனுல் எப்படி அந்தப் பரம்பொருளை நாம் அறிவது? வெளியில் இருக்கின்ற ஒரு பொருளாய் இருந்தால் விஞ்ஞானத்திஞலே அறியலாம். ஆனுல் அந்தப்பொருள் ஸ்தூலமானதல்ல. ஆகையால் விசாரணுமுறையில் புலன்களின் திருஷ்டிகள் எல்லாம் உள்முகமாக அமையப்பட வேண்டுமென்று முன்பு சொன்னதுபோலவே, தற்பொழுது பரம்பொருளை அடைய ஸ்தூலத்தைவிட்டுச் சூட்சுமத்தை அடையவேண்டும். பரம சூட்சுமமாய் இருக்கின்ற பரம்பொருளை அறிவுக்கு அறிவாக நாம் அறிதல்வேண்டும். ஆனுல் இதை எவன் ஒருவன் அறிந்தேன் என்று சொல்லுகிருஞே அவன் உண்மையில் அறியாதவன்; எவன் அறியேன் என்று சொல்லுகின்ருஞே அவன் தான் உண்மையிலேயே இதனை அறிந்தவன் என்று மகரிஷிகள் எல்லாம் கூறுகிருர்கள்.

*'' அறிவறி வென்றங் கரற்றும் உலகம்*
*அறிவறி யாமை யாரும் அறியார்*
*அறிவறி யாமை கடந்தறி வாஞல்*
*அறிவறி யாமை அழகிய வாறே ''*

என்று திருமூலர் கூறுகின்ருர்.

இதே கருத்தை, கேஞேபநிஷத் வாக்கியம் ஒன்று நமக்குக் கூறுகின்றது:

नाहं मन्ये सुवेदेति नो न वेदेति वेद च ।
यो नस्तद्वेद तद्वेद नो न वेदेति वेद च ।।

எவன் ஒருவன் தான் அறிந்தேன் என்று மதிக்கின்ருனே, அவன் இதனை அறியாதவன்; ஏனென்ருல் அறிந்தேன் என்பவரால் அறிய முடியாத பொருள் இது; அறியாதவர்க்கு இது அறிந்தபொருள் என்பதாம்.

ஆகையால் ஆத்மதத்துவத்தை உணர்ந்து கொள்வது மிகவும் கடினமானது. அதிலும் வெளியில் செல்லும் விருத்தி உடையவர் களுக்கு அறிந்துகொள்வது மிகக் கடினம். எவர் ஒருவர் அந்தர்முகமாகத் தன்னுடைய திருஷ்டிகளை எல்லாம் திருப்புகின்ருரோ, வாக்கிய கரணங்களின் உதவி இல்லாமலேயே அகத்தே பார்க்கிருரோ அவருக்கே இது நன்கு புலப்படும் என்று தெளிவாக நாம் உணரலாம். ஆனுல் தனியான மனதோ புத்தியோ இந்தத் தத்துவத்தை உணர முடியுமா என்ருல் உணர முடியாது என்று கூறுகிருர்கள். உணர்ந்து கொள்வதற்கு தேவதா அனுக்கிரகம் வேண்டு மென்று முன்னமேயே சொன்னேன். அந்த அனுக்கிரகம் நமக்கு மந்திரங்களின் மூலமாக- வேதவாக்கியங்கள் மூலமாகக் கிடைக்கிறது. ஏனென்ருல் அவன் மந்திரங்களின் ரூபமாக - மறைகளின் ரூபமாக இருப்பவன். இதைத் திருமூலர் கூறுகின்ருர் :

*'' அறிவுடை யானரு மாமறை யுள்ளே*
*நெறிவுடை யான்மிகு தேவர்க்கும் தேவன்*
*பொறியுடை யான்புலன் ஐந்தும் கடந்த*
*குறியுடை யானெடும் கூடுவன் நானே ''*

வேதங்களுக்குள்ளே மறைந்து கிடக்கும் பொருளை வேதங்களின் மூலமாகத்தான் நாம் அறிந்துகொள்ளமுடியும். வேதங்கள் மந்திரங் கள் எல்லாம் வடமொழியில் இருப்பதினுல் நாம் அதனைத் தெரிந்துகொள்ள வேண்டியது இல்லை என்று கருதக்கூடாது.

எந்த மொழியில் இருந்தாலும் உண்மை யைக் கூறும் வாக்கியங்கள் எல்லாம் வேத வாக்கியங்களே; மஹான்கள் கண்ட அனு பவத்தைக்கூறும் வாக்கியந்தான். இந்த வாக்கி யங்களின் மூலமாகத்தான் நாம் விசாரணை செய்யவேண்டும்.

'இந்த ஆத்மாவை நீ பார்க்கவேண்டும்; முதலிலே சிரவணம் செய்யவேண்டும்; பிறகு மனனம் செய்யவேண்டும்; அதற்குப் பிறகு மஹான்களின் வாயிலாக - குருமூர்த்திகளின் வாயிலாக இந்த உண்மையைப்பற்றிக் கேட்க வேண்டும்; கேட்டதைச் சிந்திக்கவேண்டும்: சிந்திப்பதை அனுபவத்தில் காணவேண்டும்; அப்படி நாம் செய்தால் ஆத்மதரிசனத்தை - சிவதிருஷ்டியைப் பெறுவோம்' என்பதாக யாக்ஞவல்கியர் கூறுவதும் சிந்திக்கத்தக்கது.

சோதனை மூலமாக இந்த அனுபவ வாக்கி யங்கள் நமக்குக் கிடைக்கவேண்டும். இந்த வாக்கியங்களைச் சிரவணம் செய்து, அவற்றின் கருத்தைப்பற்றிச் சிந்திக்கவேண்டும். இப்படி நாம் விசாரித்துத் தெளிந்தால் பரம்பொருளைக் காண்போம். எங்கும் வியாபித்து இருக்கின்ற பரம்பொருளை நம்முள்ளேயே காண்போம். இதைத்தான் திருமூலரும் சொல்லுகிருர் :

*'' எந்தை வந்தான் என்று எழுந்தேன் எழுதலும்*
*சிந்தையின் உள்ளே சிவன் இருந்தானே ''*

ஈஸ்வரன் எங்கோ இருக்கிருன்; தொலைவி லிருக்கிருன் என்ற எண்ணத்திலில்லாமல் அவன் நம்மிடமே வந்திருக்கிருன் என்று எழுந்தேன்; அவன் எனது சிந்தையின் உள்ளேயே இருப்பதைக் கண்டேன் என்று ஆத்மானுபவத்தோடு பாடுகின்ருர்.

இந்த முறையாக நம்முடைய மதத்திலே ஈஸ்வர தத்துவம் மிகவும் அற்புதமான முறையில் போதிக்கப்பட்டிருக்கிறது. நம் முடைய மதத்திலே பரம்பொருளின் தத்து வத்தை உபதேசிக்கின்ற முறையைப் போல வேறு எந்த மதத்திலேயும் காணமுடியாது. பல பல மதங்களில் பலபலவகையாகக் கூறப் படலாம். ஈஸ்வரனை நம்மிலும் வேருனதாக வைத்து வழிபடவேண்டுமென்று போதிக்கப் படலாம். ஆனுல் நம்முடையமதத்தில் மிகவும் அற்புதமான முறையில் எங்கும் வியாபித் திருக்கின்ற பரம்பொருளைச் சோதிப்பதின் மூலமாக - விசாரணை செய்வதன் மூலமாகக் கண்டு கொள்ளலாம். எங்கு பார்த்தாலும்

வியாபித்து இருக்கின்ற பொருளை - எல்லாப் பொருளையும் கடந்து நிற்கின்ற பொருளை நம்மிடையே நாம் காணமுடியும் என்பதாக உபதேசித்திருக்கிருர்கள். திருமூலதேவரும் திருமந்திரத்தில்,

*''தொடர்ந்து நின்ருர் என்னைச் சோதிக்கும்போது*
*துடர்ந்து நின்ருனல்ல நாதனும் அங்கே*
*படர்ந்துநின் ருதிப் பராபரன் எந்தை*
*கடந்துநின் றவ்வழி காட்டுகின் ருனே''*

என்பதாகச் சுவானுபவத்தோடு பாடியிருக்கின்ற பாடல் கவனிக்கத்தக்கது.

அவன் இல்லாத இடமே கிடையாது. அவன் இல்லாத Continent கிடையாது. நாம் முதலில் நினைக்கலாம்; விவகாரம் வேறு பரமார்த்தம் வேறு என்பதாக. ஆனுல் உண்மையிலே பார்க்கின்றபோது விவகாரத்திற்கும், பரமார்த்தத்திற்கும் தொடர்புண்டு. எதனுலே தொடர்பு? ஈஸ்வரனுலே தொடர்பு. எவன் பரமார்த்தனே அவனுடன் தொடர்பு கொண்டது விவகாரம். நம் மனங்களை எல்லாம் பற்றிக்கொண்டிருக்கிற மாயை நீங்கினுல் நம் மனத்திலேயே அவனைப் பார்க்கலாம் என்று கூறுகிருர்.

ஆகவே ஈஸ்வரன் விவகாரத்திற்கும் பரமார்த்தத்திற்கும் தொடர்பு உடையவனுக இருக்கிருன்; பற்றறுத்து நின்று சர்வவியாபியாக இருக்கின்ற பரமாத்மா எல்லாப்பொருளையும் கடந்து நிற்கிருன்; எல்லாப் பொருளாகவும், அப்பொருளைக் காண்கின்றவனுகவும் இருக்கிருன். இப்படிப்பட்ட ஈஸ்வரதத்துவம் வேறு எந்தநாட்டிலும் போதிக்கப்படவில்லை. நம்நாட்டிலுள்ள வேதங்களேதான் போதிக்கின்றன.

நாம் எல்லோருமே மனிதர்கள் என்ற நினைவு நமக்கு இருக்கின்றவரையிலே நாம் கடவுளுக்கு ரூபத்தைக் கற்பித்துத்தான் அவனை உபாசிக்க முடியும். ஆகவே பகவானை ஒரு ரூபத்தில் பார்க்கிருேம்; அனுபவிக்கின்ருேம்; பக்தி செய்கின்ருேம்.

ஆனுல் சில மதக்காரர்கள், பகவானை விக்கிரகங்கள் மூலமாக எதற்காக ஆராதிக்க வேண்டும்? அப்படி ஆராதிப்பது பகவானை அவமதிப்பதுபோல் ஆகாதா? என்று கேள்வி கேட்பதைப் பார்க்கிருேம்.

பகவானைப் பரமபிதா என அழைக்கின்ற போதும் அவருக்கு ஒரு ரூபத்தைக் கற்பிக்கவில்லையா என்பதை நாம் சிந்திக்க வேண்டும். ரூபம் இல்லாவிட்டால் அவனை நாம் சிந்தையில் கொள்ள முடியாது. வாயாலும் வர்ணித்துப் பாடமுடியாது. ஆனுல் ஒரே ரூபத்தைமட்டும் கற்பித்து, அதிலேயே மூடநம்பிக்கையோடு போகாமல், உண்மையான தத்துவம் என்ன என்பதை நம்மக்கள் எல்லோரும் உணர்ந்து கொள்ளவேண்டும் என்பதற்காகத்தான் நம் நாட்டில், 'பகவானுக்கு ஒருஉருவம் கிடையாது. பெயர் கிடையாது. அவனே ஆயிரம் நாமம் உடையவன். அவனே ஆயிரம் ரூபங்கள் உடையவன். அவனை ஆணுகவும் வழிபடலாம். பெண்ணுகவும்வழிபடலாம். தந்தையாகவும் தாயாகவும் வழிபடலாம்' என்று உன்னதமான மார்க்கத்தைக் காட்டினுர்கள். இதனை நல்லது அல்ல என்று யார் எந்த வாதத்தைக்காட்டிச் சொல்லமுடியும்? ஆகையால்தான் திருமூலரும் 'எந்தைபிரான்' என்று ஈஸ்வரனைத் தந்தையாகவும், பின்னர் தாயாகவும் வாழ்த்துகிருர்.

இதே கருத்துதான் சுவேதாஸ்வதர உபநிஷத்தில் மிகவும் அழகாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மந்திரத்திலே பகவானைப் பார்த்து ஒரு பெரியவர் பாடுகிருர்.

'நீ சரீரியாய் இருக்கிருய். நீ புருஷனுய் இருக்கிருய். உன்னைக் குமரியாகவும், தடியை ஊன்றிக் கொண்டு போகும் வயது முதிர்ந்தவராகவும் காண்கிறேன். பச்சைக் குழந்தையாகவும், பாலையாகவும் காண்கிறேன்' என்பதாக மிகவும் நேர்த்தியாகப் பாடுகிருர்.

ஆகையினுல் சர்வப் பிரபஞ்சத்திலும், எல்லாப் பொருள்களிடத்திலும் ஈசுவரனைக் காண்பாய் என்று நம்முடைய முன்னேர்கள்

நமக்கு ஆணையிட்டார்கள். இந்த உண்மைத் தத்துவத்தை நாம் மறந்துவிடக் கூடாது. அவனன்றி வேறு பொருள் கிடையாது என்கிற சின்ன வாக்கியத்தை நாம் மறந்துவிடக் கூடாது. அவன்தான் உண்மைப்பொருள்; எங்கும் வியாபித்து இருக்கிற பரம்பொருள்; நம் எல்லோருடைய உள்ளங்களிலேயும் உறைந்து இருக்கின்ற பொருள் என்பதை சோதனை செய்துசெய்து நன்றாக உணர்ந்து கொள்ளவேண்டும்.

நம் நாட்டிலுள்ள மதங்கள் இதனைத்தான் உபதேசித்து வந்திருக்கின்றன. மார்க்கங்கள் வேறுபடலாம்; ஆனால் கடைசியான முடிவு ஒன்றுதான். ஆகையால்மதங்களுக்குள் வேற்றுமையையோ பகைமையையோ வளர்த்துக் கொள்ளக்கூடாது என்பதைத் தான் நாம் இந்தக் காலத்தில் முதன் முதலில் உணர்ந்து கொள்ளவேண்டும். உண்மையை அடைகிற வரையிலும் சிற்சில விரோதங்கள் இருப்பது போல் தோற்றலாம். உண்மைப்பொருளை அடைந்த பிறகு எவ்விதமான விரோதமும் பரமானந்தத்தை அடைவதில் கிடையாது என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும். இது சோதித்து அறிவதினாலேயே நமக்குப் புலப்படும். வெறும் சண்டைகள் போட்டுக் கொண்டிருந்தால் இது நமக்கு விளங்காது. சண்டைகள்தான் ஓங்கும். ஆகவே நாம் எல்லோரும் நம்மை நாமே சோதித்துக் கொண்டு உண்மைப் பொருளை அடைய முயற்சி செய்யவேண்டும்.

மேலும் இம்மாதிரியான கூட்டங்களில் நான் ஒன்று சொல்ல ஆசைப்படுகிறேன். தென்னாட்டில் சமஸ்கிருதமொழியின் பேரில் துவேஷம் வளர்ந்து வருகிறது. இந்தத் துவேஷத்திற்கு இடமே கிடையாதுஎன்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதற்காகத்தான் திருமூலருடைய உண்மை வாக்கியங்களை எல்லாம் எடுத்துச்சொல்லுகிறபோது இடையிடையே அதேகருத்துடைய உபநிஷத மந்திரங்களையும் எடுத்துச்சொன்னேன். எந்தபாஷையில் உண்மை இருந்தாலும் அது உண்மைதான். தமிழிலே ஒருவனை வையலாம். சமஸ்கிருதத்திலும் ஸ்துதி செய்யலாம். ஆகையால் ஆரம்பத்தில் தாய்மொழியைத் தவிர வேறு பாஷைகளைக் கற்கவேண்டிய அவசியம் இல்லையென்றாலும் ஓரளவு படித்த பின்பு வேறு பல மொழிகளையும், குறிப்பாகச் சமஸ்கிருதத்தையும் நம் மாணவர்கள் யாவரும் கற்றுக்கொள்வது இன்றியமையாதது. உலகம் பூராவுக்கும், தாய்மொழியின்பேரில் தாய்நாட்டின் பேரில் எவ்வளவு அபிமானம் இருக்க வேண்டியது அவசியமோ அவ்வளவு அபிமானம் சமஸ்கிருதமொழியின் பேரிலும் இருக்கவேண்டியது அவசியம் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இதைக் காட்டுவதற்காகத்தான் சித்தாந்தத்திற்கும், வேதாந்தத்திற்கும் உண்மையாக வேற்றுமை இல்லை என்று நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இதனை எடுத்து விளக்குவதற்காக, ஆச்சார்யர் ஸ்ரீ சங்கரர் சிவானந்த லஹரியில் எழுதியுள்ள இரண்டு சுலோகங்களை மட்டும் எடுத்துச் சொல்லிவிட்டு என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

முதல் சுலோகம்:

नालं वा परमोपकारकमिदं त्वेकं पशूनांपते पश्यन् कुक्षिगतां चराचरगणान् बाह्यस्थितान् रक्षितुम्। सर्वामर्त्यपलायनौषध मतिज्वालाकरं भीकरंनिक्षिप्तंगरळंगळेन गळितं नोद्गीर्ण मेवत्वया ॥

'நீ செய்த ஒரேஒரு பரோபகாரம் போதாதா? பசுக்களுக்கு எல்லாம் பதியாக இருக்கின்ற ஈஸ்வரனே! நீ செய்திருக்கும் பரோபகாரம் சாதாரணமானதா? தேவர்கள் எல்லாம் அம்ருதமதனம் செய்தபோது அம்ருதம் தோன்றுவதற்கு முன்னாலே ஆலகாலவிஷம் தோன்றியது. சர்வலோகங்களையும் நாசம் செய்யக் கூடிய விஷம் அது. மனிதர்கள் மாத்திரம் அல்ல. தேவர்களுங்கூட அந்தவிஷத்தைக் கண்டவுடன் பயந்து ஓட ஆரம்பித்தார்கள், அந்த சமயத்தில் யார் இவ்வுலகத்தைக் காப்பாற்றியது? உலகத்திலுள்ள மக்கள் எல்லாம்

அழிந்துபோய்விடப் போகிருர்களே என்ற கருணையினுல் நீயே அந்த விஷத்தை எடுத்து விழுங்கிஞய். வெளியிலே இருக்கிற ஜந்துக் களைக் காப்பாற்றுவதற்காக நீ அவ்விஷத்தை எடுத்துச் சாப்பிட ஆரம்பித்தாலும் சாப்பிட் டிருந்தால் என்ன ஆகியிருக்கும்? இவ்வுலக மெல்லாம் தங்கள் உடலுக்குள் அடங்கியது அல்லவா? உள்ளே போயிருந்தாலும் சகல ஜந்துக்களும் நாசம் அடைந்திருக்குமே? அம் மாதிரியாகப் பஸ்மீஹரம் ஆகிவிடக்கூடாது என்ற கருணையினுல் விஷத்தை உமிழாமலும் விழுங்காமலும் கண்டத்திலேயே வைத்துக் கொண்டு விட்டீர்கள். சகல தேவர்களும் ஓட்டம்பிடித்த காலத்தில், சகல ஜீவராசிகளை யும் காப்பாற்றுவதற்காகத் தாங்கள் செய்திருக் கும் இந்த பரோபகாரம் ஒன்று போதாதா?' என்று ஈஸ்வரனைப் பார்த்துக் கேட்கிருர்.

இன்ஞெரு சுலோகத்தில் சொல்லுகிருர் :

**सहस्रं वर्तन्ते जगतिविबुधाः क्षुद्रफलदाः न मन्ये स्वप्नेवा तदनुसरणं तत्कृतफलम् । हरिब्रह्मादीना मपि निकटभाजा मसुलभं चिरं याचेशम्भो शिवतवपदाम्भो जभजनम् ॥**

'அநேக தேவதைகள் இருக்கின்றுர்கள். இந்த லோகத்தை வேறுவழியிலே திருப்பும் ஆயிரக்கணக்கான தேவதைகள் இருக்கிருர் கள். ஆசைகாட்டி மயக்கும் தேவதைகள். சிறு பயன்களைக் காட்டி மயக்கும் தேவதை கள். நசிக்கக்கூடிய பலனைக் கொடுக்கின்ற தேவதைகள். இவைகளைப்பற்றி நான் கனவி லும்கூட நினைக்கவேமாட்டேன். இவர்கள் கொடுக்கும் பலனை நான் ஸ்வப்னத்திலுங்கூட இச்சிக்கமாட்டேன். எந்த ஒரு பதவியானது அத்வதீயமாக இருக்கின்றதோ அதைத்தான் நான் நாடுகிறேன். அதனைத்தான் நான் சதா காலமும் யாசித்துவருகிறேன். உன்னுடைய தாமரைபோன்ற பாதங்களை அடைய வேண்டு மென்பதுதான் என்னுடைய நோக்கம்'என்று கூறுகிருர்.

இதற்கு ஈடான பக்தி உண்டோ என்று கேட்கிறேன் ? ஆகையால் மொழியின் காரண மாகவோ அல்லது மதத்தின் காரணமாகவோ நாம் துவேஷத்தையோ - வெறுப்பையோ கொள்வதற்கு இடமே இல்லை என்று நாம் மனத்திலே வைத்துக்கொள்ளவேண்டும். அது தான் திருமூலர் போன்ற மகான்களுக்கு நாம் செய்யக்கூடியதான பெரிய பக்தி. அவர்கள் காட்டிச் சென்ற வழிகளைக் கடைப்பிடிப்ப தன் மூலமாகத்தான் நாம் அந்த மஹான் களுக்குப் பெரிய பக்தியைச் செய்தவர்களாக ஆவோம். நமக்கு எல்லாம் அவர்கள் சமரச சமயம் என்ற ஓர் வழியைத்தான் காட்டிச் சென்ருர்கள். அந்த வழியைப் பின்பற்றி இந்துக்களெல்லாம் ஒன்றுகூடி பரம்பொருளை நாடிஞல் சகல லோகங்களுக்கும் க்ஷேமம் உண்டாகும் என்பதில் சந்தேகமே கிடை யாது என்று சொல்லிக்கொண்டு, குருமகா சந்நிதானத்திற்கும், மற்றுமுள்ள அனைவருக் கும் வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்வ தோடு, பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

"பெம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத்
தம்மான் அடிதந் தருட்கடல் ஆடினேம்
எம்மாய மும்விடுத் தெம்மைக் கரந்திட்டுச்
சும்மா திருந்திடம் சோதனை யாகுமே."

'ஒன்பதாந்தந்திரம்' 'சூனிய சம்பாஷணை'

திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான்

## திரு. கே. ஆறுமுக நாவலர் அவர்கள்

நாகர்கோயில்.

குருமகாசந்நிதானமாக இங்கெழுந்தருளி சைவச் செங்கோல் ஓச்சுகின்ற ஸ்ரீ - ல - ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களது திருவடிக் கமலங்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

மூன்றும் திருமந்திர மாநாட்டில் இறுதிச் சொற்பொழிவாளனுக அடியேன் உங்கள் திரு முன்னிலையில் நிற்கிறேன். இப்பொழுது பேச யிருப்பது ஒன்பதாம் தந்திரம். தந்திரத்தின் கருத்துமாதிரி சூன்யமாய் சம்பாஷணைசெய்து விட கட்டளைபிறந்திருக்கிறது. அதன்பொருள் "உங்கள் சம்பாஷணை சூன்யம்" என்பது தானே, அதாவது உங்கள் பிரசங்கம் ஒன்றும் இல்லாதது என்பதாக நினைத்தாலுங்கூடச் சூன்யமாக உபதேசம் செய்யக்கூடியவர் ஒருவர் இருக்கிருர். அவரும் என்னைப்போல் சூன்ய சம்பாஷணை செய்பவர்தான். அவர் தான் தட்சிணுமூர்த்தி. சின்முத்திரை ஒன்றைக் காட்டி, "புரிந்ததா? போ" என்று சொல்லி விடுகிருர். அது ஒன்றுமே புரியாமல் இருக்க லாம். ஆன்மா ஆண்டவனை அடைந்த மாத் திரத்தில் ஆன்மாவைப் பற்றியிருக்கிற மலங் கள் தாமே விலகிவிடும் என்பதாகத் தத்துவப் பொருள் அந்த முத்திரையிலே புதைந்து கிடக் கின்றது. எனக்கு முன்னுல் பேசிய - தத்துவ சாஸ்திரியாக விளங்கும் பெரியார் அவர்கள் வேதாந்தம், சித்தாந்தம், சைவம் ஆகிய எல்லா வற்றுக்கும் உள்ள ஒருமைப்பாட்டை விளக் கினுர். வேதாந்த, சைவ சித்தாந்த சமரசம் விளங்கவேண்டுமென்ருல் இந்த ஒன்பதாவது தந்திரத்தைப் பார்க்கவேண்டும்.

இந்தத் துறைசை ஆதீனத்தில் திருமந்திர மாநாட்டைத் தொடர்ந்து நடக்க இருக்கிற குருபூஜை எதற்காக நடக்கவேண்டும்? ஏன் அதற்கு நாம் எல்லோரும் போகவேண்டும்? என்ற கேள்விகளைக் கேட்டுக்கொண்டால் அதற்கான பதிலை இத்திருமந்திரத்தின் ஒன்ப தாவது தந்திரத்திலுள்ள முதல் பாட்டே விளக்கிவிடும்.

குரு மடம் என்ருல் ஏதோ சாதாரண இடம் என்று கருதக்கூடாது. உலகிலுள்ள ஆன்மாக்களைப் பற்றியிருக்கின்ற மலத்தைக் குருவின் மலரடிசார்ந்து நின்றவர்கள் போக் கிக்கொள்ளுகிருர்கள், அப்பேர்ப்பட்ட குரு இருக்கின்ற திருமடமே ஆண்டவனது வீடு என்று சொல்லுகிருர்கள். குரு பார்க்கின்ற பார்வையிலேயே ஆன்மாக்களுக்குச் சிவ ஞானம் உண்டாகிறது.

பாம்பு தீண்டினுல் உடனேயே அதன் விஷத்தை எடுக்க விஷவைத்தியனிடத்தில் செல்லவேண்டும். விஷ வைத்தியர்கள் இந்தக் காலத்தில் இல்லாமல் இருக்கலாம்; முன்பெல் லாம் இருந்தார்கள். அவன் கருடோகம் பாவனையால் - கருட தியானத்தால் கருடனே ஆகவேண்டும். கருட மந்திரத்தை ஜபிக்க வேண்டும். அந்தக்கருடபாவனையால் விஷம் தானுகவே நீங்கும்.

அதைப்போலவே ஆன்மாக்களைப் பற்றிக் கொண்டிருக்கின்ற ஆணவ மலங்களாகிய விஷம் சிவமந்திர பாவனையால் - சிவமந்திர தியானத்தால் - சிவமேயாகிய குருமூர்த்தியின் திருவருளால் நீங்கப்பெறும்.

*"கருடன் உருவம் கருதும் அளவில்*
*பருவிடம் தீர்ந்து பயங்கெடு மாபோல்*
*குருவின் உருவம் குறித்த அப்போதே*
*திரிமலம் தீர்ந்து சிவனவன் ஆமே"*

எனத் திருமூலர் சொல்லுகிருர். சிவோகம் பாவனையால் - சிவமந்திர தியானத்தால், குரு வின் பார்வை நம்மேல் பட்டமாத்திரத்தில்

நம்மைப்பற்றி நிற்கின்றதான மலங்கள் அகன்று விடுகின்றன.

*'' பலியும் அவியும் பரந்து புகையும்*
*ஒலியும் எம்ஈசன் தனக்கென்றே உள்கிக்*
*குவியும் குருமடம் கண்டவர் தாம்போய்த்*
*தளிரு மலரடிச் சார்ந்து நின்றாரே ''*

என்பது திருமந்திரம்.

ஆன்மாக்களைப் பற்றியிருக்கிற மலத்தை நீக்குகிற வைத்தியசாலை குருமடம். உள்ள நோயை நீக்குவது குருமடம். உடலை வளர்க்காது உயிரை வளர்க்க, உயிரின் நோயைப் போக்க இருப்பது குருமடம்.

சூரியன் சந்திரன் இரண்டும் இந்த உலகத்திற்கு ஒளி அளிக்கின்றன. நம் உடம்புக்குள் ஒளி உண்டு என்றால் அது இறைவன் அருளால்தான் உண்டாகிறது. இருட்டு அறையில் கிடந்து தடுமாறும் குருட்டுக் கிழவிபோன்ற ஆன்மாக்களுக்குக் குருவின் அருளால் ஒளி கிடைக்கிறது. உள்ளமே தகழியாக, உணர்வு நெய்யாக, திடம்படு ஞானத்தீயை வளர்த்தால், இறைவன் கழலடி காணலாம். ஞான நிலை - முத்திநிலை எய்தலாம். பஞ்சாக்கரத்தை நான் பலதடவை ஜபித்தும் இறைவன் கழலடி காணப்பெற்றிலேன் என்று சொல்பவர், 'தீ' என்று எழுதி விறகுக்கு அடியில் வைத்துவிட்டு விறகு எரியவில்லையே என்பாரைப் போல்பவரே. ஆகவே உண்மைப்பொருளை அறிந்துகொள்ளாது சொல்வதினால் பயன் ஏற்படாது. அதனைக் குருவாயிலாக உணர்ந்து, உணர்ந்தபொருளை நன்கு தெளிந்து ஜபித்தால் பலன் உண்டு.

வெறும் உருத்திராட்சமாலை உருண்டால் மட்டும் போதாது; அந்த உபதேசத்தின் உட்பொருளை உணர்ந்து, தியானம் செய்ய வேண்டும். சி - சிவபெருமான். வ - அம்மை, அருள். ய - ஆன்மா. மாயாபோகத்தில் கிடக்கின்ற நம்மை அம்மை சிவபெருமான் திருவடி நிழலை அடையச் செய்கின்றாள். "நற்றவா உனை நான் மறக்கினும், சொல்லும் நா நமச்சிவாயவே '' என்று சொல்லியபடி பல அடியார்கள் வாழ்ந்திருக்கின்றார்கள்.

தீவினையாளர் சிவ சிவ என்று சொல்ல மாட்டார்கள். சிவ சிவ என்று சொன்னால் தீவினை மாளும்; சிவ சிவ என்றிடத் தேவரும் ஆவர்; சிவ சிவ என்னச் சிவகதி கிடைக்கும்.

நமது நாட்டில் வழங்கும் பல பழக்க வழக்கங்கள், நமக்கு உண்மைத் தத்துவத்தை விளக்கவே வந்தன. மார்கழி மாதத்தில் நம் நாட்டுப்பெண்கள் சாணியில் பூசணிப்பூவைப் புதைத்து வீட்டுவாயிலில் வைப்பதை நாம் பார்க்கிறோம். மலராகிய ஆன்மா, சாணமாகிற மலத்துள் புதைந்து கிடக்கிறது என்பதை அது விளக்குகிறது.

நமக்கு உபதேசிக்கின்ற குரு, நமக்கு என்ன உபதேசிக்கின்றாரோ அந்த நெறியில் அவர்களும் நின்று ஒழுகி உபதேசித்தால்தான் பயன் அதிகம்; புகை பிடிக்கும் ஆசிரியர், மாணவனிடம் 'நீ புகை பிடிக்காதே' என்று உபதேசிப்பதால் பயன் ஏற்படாது. ஒரு குருவினிடம் ஒருபாட்டி தன்பேரன் அதிக வெல்லம் சாப்பிடுகிறான் அந்தமாதிரி சாப்பிடாமல் இருக்கும்படி உபதேசம் செய்யுங்கள் என்று கேட்டாள். அந்த குரு ஒருமாதம் கழித்து வந்தால் உபதேசிக்கிறேன் என்று அனுப்பிவிட்டார். ஒரு மாதம் கழித்து வந்த பிறகு. அந்தப்பிள்ளையிடம், 'அப்பா! வெல்லம் அதிகம் தின்னாதே, அது உடம்புக்கு ஆகாது' என்று உபதேசித்தார். அதற்கு அந்தப் பாட்டி, இதை அப்போதே சொல்லக்கூடாதா?இதற்கு ஒருமாதம் கழித்துவரச்சொன்னீர்களே? ஏன்; என்று கேட்டாள்; அதற்குக் குரு "நானும் வெல்லத்தை அதிகம் தின்பவன்; இந்த ஒரு மாதத்திற்குள் கொஞ்சம் கொஞ்சமாக வெல்லம் சாப்பிடுவதை அறவே ஒழித்துவிட்டேன்; வெல்லம் நான் தின்னாத நிலையில் வெல்லம் தின்னாதே என்று பிறருக்கு உபதேசித்தால் எப்படி உபதேசம் பயன் தரும்; ஆகவேதான் ஒரு மாதம் கழித்து பிறகு வரச்சொன்னேன்" என்று குறிப்பிட்டார். ஆகவே எதையும் தான்கடைப்பிடித்து, பிறகு அதனைப் பிறருக்கு உபதேசிக்கின்றதே அதிகப் பயன்தரும்.

இறைவன் நடனத்தின் தத்துவத்தைப் பற்றித் திருக்கூத்து, சிவானந்தக்கூத்து, சுந்தரக்கூத்து, பொற்பதிக்கூத்து, பொற்றில்லைக் கூத்து, அற்புதக்கூத்து என்பவற்றைப் படிப் படியாகத் திருமூலர் விளக்கியிருக்கின்றார். "உங்கள் சாமி சுடுகாட்டிலா நடனமாடிக் கொண்டிருக்கிறார்?" என என்னிடம் வந்து ஒருவன் கேட்டதற்கு, 'உன் போன்றவர்கள் அங்கே வரப்போகிறார்கள்; அதற்காகத்தான் நடனமாடிக் கொண்டிருக்கின்றார்' என்று சொன்னேன். சிதாகாசத்தில் ஆடும் பொருளாக இருக்கும் ஆண்டவன் நம்மையெல்லாம் ஆட்டுவிக்கின்றான்; அவனது ஆடலினாலே உலகம் இயங்கிக்கொண்டிருக்கிறது.

ஆண்டவனது திருக்கூத்தைக் கண்டவர்கள் அந்த இன்பத்தைப்பெற மேலும் மேலும் துடிப்பார்கள். "ஆட்டை விட்டுப் போமோ சொல்லாய் அப்புலி" என்ற அடிகள் ஆட்டைப் பார்த்துவிட்டால் புலி அதனை அடித்துத் தின்னாமல் போகாது எனப் பொருள்படுமாப்போல், ஞானிகள் ஆடலைப் பார்த்துவிட்டால் அதாவது இறைவனது சிவானந்தக் கூத்தைப் பார்த்துவிட்டால் அவ்விடம் விட்டு அப்பால் நகரமாட்டார்கள். புளியம்பழத்தைக் கண்டவுடனேயே நாவில் ஜலம் ஊறுவது போல, ஆண்டவனது திருக்கூத்தைக் கண்டவர்க்கெல்லாம் அருட்கண்ணீர் பெருக, உள்ளத்தே ஆனந்த அமுது ஊறப்பெறுவார்கள். இதனைத்தான் திருமூலர்,

*" புளிக்கண்டவர்க்குப் புனல்ஊறு மாபோல்*
*களிக்கும் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்*
*அளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்*
*ஒளிக்குளா னந்தத் தமுதூறும் உள்ளத்தே"*

எனக் குறிப்பிட்டிருக்கிறார்.

சூனியசம்பாஷணை என்ற பகுதியிலுள்ள,

*" பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள*
*குட்டிப் பசுக்களோ ரேழுள ஐந்துள*
*குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்*
*அட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே "*

என்ற பாடல் எவ்வளவு அழகான பாடல் என்பதைப் பாருங்கள்.

*" பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு*
*மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன*
*மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்*
*பார்ப்பான் பசுஐந்தும் பாலாச் சொரியுமே "*

ஐந்து புலன்களும் ஐந்து பசுக்கள். அதனை அடக்காவிட்டால் வெறித்துத் தன் போக்குப் படி அவை ஓடும். அதனை அடக்கி, அதன் வெறியையும் அடக்கினால் அவை நாம் சொல்கிற வழிப்படி வந்து பால்போன்ற பல நன்மைகளைச் செய்யும். இது எவ்வளவு அழகான கருத்து. இதுபோன்ற பாடல்கள் அநேகம் உள்ளன.

இறைவன் திருவடி நிழலைப்பெற்று ஜீவன் முக்தர்களாக வேண்டுவோர் குருவை அண்டி அவரிடம் உபதேசம்கேட்டு, அவர் காட்டிய நெறியைப் பின்பற்றுங்கள் என்ற அளவிலே ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருவடிக் கமலங்களுக்கு வணக்கத்தைக் கூறிக்கொண்டு என் பேச்சை இத்துடன் முடித்துக்கொள்கிறேன்.

ஒன்றிநின் றுள்ளே உணர்ந்தேன் பராபரம்
ஒன்றிநின் றுள்ளே உணர்ந்தேன் சிவகதி
ஒன்றிநின் றுள்ளே உணர்ந்தேன் உணர்வினை
ஒன்றிநின் றேபல ஊழிகண் டேனே."

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

"வாழ்கவே வாழ்களன் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத் தாள்பதம்
வாழ்கவே வாழ்கமெஞ் ஞானத் தவன்தாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே."

— திருமூலதேவர்.

வெளியீடு எண் 115.

உ
சிவமயம்

நான்காவது

# திருமந்திர மாநாட்டு மலர்

[ துன்முகி - தை ]

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

21-வது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரியசுவாமிகள் அவர்கள்

கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.

திருவாவடுதுறை ஆதீனம்

1958 - ஜனவரி ] [ ஏவிளம்பி - தை



ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகளை
ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் வழிபடுதல்

உ

சிவமயம்

## வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

—ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

## ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் தோத்திரம் :

இருதய நாப்பண் அஞ்செழுத் துருவின்
இறைவனை உயிர்க்கொலை செயாமை
அருள்பொறி அடக்கல் பொறைதவம் வாய்மை
அன்(பு)அறி(வு) என்னும்எண் மலர்கொண்(டு)
ஒருமையொ(டு) அருச்சித் திடுகஎன்(று) அடியர்க்(கு)
ஒள்ளிய தீக்கைசெய் துணர்த்தத்
திருஅமர் துறைசை உறையருள் குருவாம்
திருநமச் சிவாயர்தாள் போற்றி.

—ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளுக்கு வணக்கம் கூறும் முறையில் ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகளால் பாடப்பெற்றது இச்செய்யுள். ஸ்ரீநமசிவாயமூர்த்திகள் திருவாவடுதுறை ஆதீனத்தை இன்றைக்குச் சுமார் ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னர்த் தோற்றுவித்த தெய்வீக அருளாளர் ஆவர். இவர்கள் கண்ட ஆதீனம், தென்னாட்டில் பலகோடி மக்களுடைய ஞானத்தையும் சமய உணர்ச்சியையும் நன்னெறியையும் நிலைபெறச் செய்வதற்கும் வளர்ப்பதற்கும் துணையாக இருந்துகொண்டிருக்கிறது. இவர்களால் கட்டளையிடப்பெற்ற நற்செயல்களும் இன்றுவரை நடைபெற்றுவருகின்றன.

நாட்டிலும் மக்கள் உள்ளத்திலும் எத்துணையோ மாறுபாடுகள் தோன்றினும், குருமூர்த்திகளுடைய கட்டளையும் திட்டமும் எள்ளளவும் மாறியன அல்ல. எடுத்துக் காட்டாகத் திருமடத்தின் அடுக்களையை மூர்த்திகள் அமைத்து, அதில் பொருத்திய நெருப்பு அணையாமல் நின்று என்றும் அடியவர்களுக்கு அமுதளிக்கவேண்டும் என அருளிய திருமொழி இன்றும் உண்மையாக இருந்து வருவது உலகம் அறிந்ததே. இந்த ஐந்நூறு ஆண்டுகளில் நிகழ்ந்த மாறுதல்களும், பஞ்சமும் எவ்வளவோ ஆயினும் இத்திருமடத்திலும் இதன் கிளைமடங்களிலும் இன்றுவரை பசிப்பிணி ஒன்று உண்டு என்பதை எவரும் அறியார். இத்திருமடம் எந்த நல்ல நோக்கங்களுடன் தோன்றியதோ அந்நோக்கங்கள் இன்றும் இங்கே நிறைவேறி வருகின்றன.

**ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்,** சங்கரர் இராமாநுஜர் ஆகிய இவர்களுடன் வைத்து எண்ணக்கூடிய ஒரு பெருந்தத்துவஞானி ஆவார்; இந்தத் திருமடத்தின் தம்பிரான்களில் ஒருவரும் ஆவர்.



ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகளை
ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் வழிபடுதல்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக மூர்த்திகளின் திருவருள் துணைக் கொண்டு, அவர்கள் குருபூசைத் திருநாளாகிய மகரத்தலை நாளையொட்டி, வழக்கம்போல் சென்ற துன்முகி ஆண்டிலும் நான்காவது - திருமந்திர மாநாடு நடைபெற்றது.

மாநாட்டில் சொற்பொழிவாளர்கள் தமது நீண்டநாள் அநுபவத்தைக்கொண்டு வேதாகம சாத்திர தோத்திர வரம்பிலே நின்று திரட்டிய கருத்துக்களை, மக்கள் அனைவரும் புரிந்துகொள்ளத்தக்க எளிய இனியநடையில் பேசுகின்றார்கள். அக்கருத்துக்களை அனைவரும் கேட்டுத் தம் வாழ்க்கை அநுபவத்தோடு ஒட்டிப் பயன் எய்துகின்றார்கள். இந்த அநுபவத்தை மாநாட்டில் கலந்துகொள்ளாத ஏனையோரும் அடைந்து உய்யவேண்டும் என்ற கருணைநோக்காலும், ஆண்டுகள்தோறும் எத்தகைய புதுமையானகருத்துக்கள் - சிவாநுபவச்செல்வங்கள் வெளிவந்திருக்கின்றன என்று திருமந்திர ஆராய்ச்சியின் உணர்ச்சிப்பெருக்கை அறிந்து கொள்ளும் நோக்குடனும் சென்ற ஆண்டு மாநாட்டுச் சொற்பொழிவுகள் அனைத்தும் தொகுத்து மலராக வெளியிடப்பெறுகின்றது.

சுருக்கெழுத்தாளர்கள் எடுத்துக்கொடுத்துள்ள சொற்பொழிவுகளின் சுருக்கங்கள், எழுத்துப்பிழைகளைத் திருத்தி அப்படியே அச்சிடப்பெற்றுள்ளன.

சைவத்தமிழ் உலகம் இந்த வெளியீட்டைப்பெற்று, கருத்துக்குவியலில் ஈடுபட்டுப் போற்றி மகிழுமாக.



திருவாவடுதுறை ஸ்ரீ கோமுக்தீசுவரர் ஆலயம்

தலச்சிறப்புகள்:

1. சிவபெருமானுடைய ஆணையால் பசுவடிவத்தைப் பெற்ற உமாதேவியார் இந்தத்தலத்துக்கு வந்து, சிவபெருமானைப் பூசித்துப் பசுவடிவம் நீங்கப்பெற்றார். 2. திருமூலநாயனர் மூவாயிரம் ஆண்டுகள் இத்தலத்திலே சிவயோகமிருந்து திருமந்திர மாலையை (மூவாயிரம் மந்திரங்களை) அருளிச்செய்தார். 3. போகநாத சித்தருடைய மாணவராகிய திருமாளிகைத்தேவர், ஆசிரியருக்குத் தொண்டுசெய்திருந்து அருள் பெற்று, சைவஸ்தாபனம் செய்து, மேலும் பல அற்புதங்கள் செய்து விளங்கினர். 4. தாம் தவஞ்செய்தமையால் பிற்காலத்து நவகோடிசித்தபுரம் என வழங்கப்பெறும் இத்தலத்தில் நவகோடி சித்தர்கள் சிவஞானம்பெறத் தவம் செய்தனர். 5. சைவ சமயாசாரியர்கள் நால்வருள் முதல்வரான ஆளுடையபிள்ளையார் தமது தந்தையார் யாகம் செய்யும்பொருட்டுத் தேவாரத்திருப்பதிகம்பாடி ஆயிரம்பொன் பெற்றனர். 6. தமது கட்டளையின்படியே தேவர்கள் படரரசு மரங்களாக, சிவபெருமான் அம்மர நிழலில் எழுந்தருளினர். 7 மகப்பேறு கருதி வந்து வழிபட்ட முசுகுந்தமன்னருக்கு இறைவன் இதனைத் திருவாரூராகவும், தம்மைத் தியாகேசப்பெருமானுகவும் காட்டிப் புத்திரப்பேறும் அளித்துப் புத்திரத்தியாகர் என்னும் பெயருடன் வீற்றிருந்தருளினர். 8. தருமதேவதை தம்மை வழிபட, பெருமான் அதனை இடபமாகக் கொண்டதன்றி, தம் சந்நிதியில் அரசமர நிழலில் கோயில்கொண்டிருக்கும்படி அதற்கு வரமும் தந்தார். 9. தேவர்களும் முனிவர்களும் வேண்டிக்கொள்ள அந்த வேண்டுகோளை ஏற்றுப் போதியம்பலத்திலே சிவபெருமான் மகாதாண்டவம் புரிந்தருளினர். 10. சில முனிவர்களுக்குச் சிவஞானுபதேசம் செய்தருளினர். 11. சில அந்தணர்களுக்கு வேதத்தை அருளிச்செய்தனர். 12. போகநாத சித்தர், நவகோடி சித்தர் முதலிய சித்தர்கள் விரும்பியவண்ணம் அவர்களுக்கு அட்டமாசித்திகளையும் பிறவற்றையும் அருளினர். இதுபோன்ற அற்புதங்கள் பல இத்தலத்திலே நிகழ்ந்தன. சித்தர்கள் பலர் இங்கே எப்போதும் வசிக்கின்றனர் என்ற ஐதிகமும் உண்டு.



திருவாவடுதுறை ஆதீன மடாலயம்

## நாட்டில் மடங்கள் :

அன்றுமுதல் நாள்தோறும் நாள்தோறும் அண்ணல்
அடியரஎ விறந்தபெயர் வந்தவர்கள் எல்லாம்
சென்றுறையத் திருமடங்கள் திருமடங்கள் தோறும்
திருவிளக்கு அங்கு அவர்சாத்த உள்ளுடை மேற்போர்வை
துன்றியசெங் நெலின்அடிசில் கன்னல்நறுங் கனிகள்
தூயஅறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட பால்தேன்
நன்றுதிருப் பண்ணியந்தண் ணீரமுதம் அடைக்காய்
நரபதி ஏவலின் அமைச்சர் நாள்தோறும் நடத்த.

—ஸ்ரீ உமாபதிசிவாசாரியார்.

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் போற்றிவருகின்ற சித்தாந்த உண்மைகளை உலகிற்கு உதவியருளிய சந்தாஞசாரியர்களுக்குள் நான்காமவராய் இன்றைக்கு அறுநூறு ஆண்டுகட்குமுன் எழுந்தருளியிருந்தவர் ஸ்ரீ உமாபதி சிவாசாரியசுவாமிகள். பன்னிரண்டாம் நூற்ருண்டில் நிகழ்ந்த வரலாற்றை அடிப்படையாகக்கொண்டு அவர்கள் அருளிச்செய்த சேக்கிழார்புராணத்தில் உள்ளது இச்செய்யுள். சேக்கிழார் அருளிய பெரியபுராணம் சோழ அரசர்களின் உள்ளத்தை உருக்கிய காரணத்தால், சோழ அரசர்கள் சோழ நாட்டில் பல திருமடங்களை நிறுவினர்கள். அந்தத் திருமடங்களெல்லாம், தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடுகின்ற முனிவர்கள் தங்கும் இடங்களாயின. முனிவர்கள் தாங்கள் ஆராய்ந்துகண்ட உண்மைகளையெல்லாம், தமிழ்நாட்டிற்குத் தத்துவசாத்திரங்களாகவும் சமயக்கோட்பாடுகளாகவும் வழங்கினர்கள். அவையே, நாட்டில் அரசியல் மாறுதல்களும் அமைதி இன்மையும் ஏற்பட்டகாலத்து மக்கள் மக்களாக வாழ்வதற்குப் பெரிதும் உதவி புரிந்தன.



திருமூலதேவர் திருவிழா

கயிலாயத்து ஒருசித்தராய் நந்திதேவர் திருவருளைப்பெற்ற சிவயோகி, தல யாத்திரையாகப் பொதியமலை நோக்கி வருகிறபோது, திருவாவடுதுறைக்கு வந்து பெருமானை வழிபட்டு அருகில் உள்ள சாத்தனூர் அடைந்தார்; அங்கு இறந்து கிடந்த பசுமேய்ப்போனாகிய மூலன் என்னும் இடையன் உடலில் புகுந்து மூலராக எழுந்தார் என்பது வரலாறு. இப்படி மூலராக எழுந்தவுடனே, எஜமான் இறந்த துக்கத்தால் கதறிய பசுக்கள், ஆனந்தமேலீட்டால் மோந்தன; நக்கின; கனைத்தன; துள்ளிக் குதித்தன. எப்படி எப்படியோ சந்தோஷத்தைக் காட்டிக்கொண்டன. மூலராகிய சிவயோகியும் மகிழ்ச்சியோடு பசுக்களை மேய்த்தார்; அவைகளைக் காவிரித்துறையிலே நீர் அருந்தச்செய்தார்; வெயில்நேரத்தில் நிழலுள்ள இடத்தில் தங்கச்செய்து பாது காத்தார். மாலைநேரம் வந்ததும் பசுக்கள் கன்றுகளை நினைத்துக்கொண்டே வீடுகளை நோக்கி நடந்தன. அவை தத்தம் வீடுகளை அடையும்வரை மூலரும் பின்னே தொடர்ந்து சென்றார். இப்படி மூலர் அன்றுமேற்கொண்ட பசுப்பணியும் முடிந்தது.

இப்படியாகப் பசுப்பணி முடிந்தபிறகுதான், திருவாவடுதுறையில் அரச மரத்தின்கீழ் மூவாயிரம் ஆண்டுகள் யோகத்திலிருந்து, அருந்தமிழ் மூவாயிரம் அருளி னார்; திருமூலதேவநாயனார் என்று சிறப்பிக்கப்பெற்றார். அருந்தமிழும் திருமந்திரம் என்ற பெயருடன் திகழ்கிறது.

இத்தகைய சிறப்போடுகூடிய திருமூலதேவநாயனாருக்கு, ஸ்ரீ கோமுக்தீஸ்வரர் கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறுகிற மகோற்சவ இரண்டாந்திருநாளில், தனிச் சிறப்புச் செய்யப்பெறுகிறது. அன்று காலை திருவீதியுலாவில் பெருமானுடன் திருமூல தேவநாயனாரும் எழுந்தருளுகிறார். அவர் மேற்கொண்ட பசுப்பணியின் நினைவாக அவருக்கு முன்பு, ஒரு பசுமாடு கன்றுடன் கொண்டு செல்லப்பெறுகிறது. திருவுலா முடிந்து ஆலயத்தை அடைந்ததும் சந்நிதியிலே ஆதீன ஓதுவாமூர்த்திகளால் திருமூலர் வரலாறு வாசிக்கப்பெறுகிறது. உடனே கோபூஜை நடைபெறுகிறது. பிறகு தீபாராதனை தரிசனம். இப்படி நிகழ்கிற திருமூலர் உற்சவக் காட்சியை இப்படம் காட்டுகிறது.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவன் ஆவடு தண்துறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே.

திருச்சிற்றம்பலம்

—திருமூலர்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## திருவாவடுதுறை ஆதீனம்

# நான்காவது திருமந்திர மாநாட்டுமலர்

## மாநாட்டு நிகழ்ச்சிகள்

**ஆணையின்வண்ணம்:**

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஸ்ரீ முத்திபஞ்சாக்கரதேசிக சுவாமிகள் ஆதீனத்து இருபத்தோராவது குருமூர்த்திகளாக ஞானபீடத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரியசுவாமிகள் அவர்கள் கட்டளையிட்டருளியவண்ணம் மெய்கண்டான் யாண்டு 734 துன்முகி ஆண்டு தைத் திங்கள் கரு-ம் நாள் (28—1—1957) திங்கட்கிழமை மாலை மூன்றுமணிக்கு, திருவாவடுதுறை ஆதீனமடாலய கொலுமண்டபத்தில் நான்காவது திருமந்திரமாநாடு தொடங்கி, மூன்றுநாளும் சிறப்பாக நடைபெற்றது.

**கொலுமண்டபம்:**

கொலுமண்டபம் மாநாட்டிற்கென அலங்கரிக்கப்பெற்றுத் தனிச்சிறப்புடன் திகழ்ந்தது. கல்லாலின்புடையமர்ந்து நான்மறை ஆறங்கங்களை அன்று சனகாதியர் கட்குச் சொல்லாமற்சொல்லி விளக்கிய ஆசாரிய மூர்த்திகளின் திருவருட்பொலிவு இப்படித்தானோ என்று அன்பர்கள் எண்ணி வியக்குமாறு ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள், முனிபுங்கவர்கள் புடைசூழக் கொலுமண்டபத்து எழுந்தருளிக் காட்சிவழங்கினார்கள். அவர்கள் திருமுன்பு சிவநேசச்செல்வர்களும், சிவயோகப் பயிற்சி மிக்க அன்பர்களும், பாவலர்களும், நாவலர்களுமாக இப்படிப் பல்லோர் ஒருங்கு கூடியிருந்தனர். ஆதீனத்து இசைப்புலவர்கள் திருமுறைமுழக்கம் செய்து கொண்டிருந்தனர். இந்நிலையில் கண்வழிபுகுந்து அனைவர் உள்ளத்தையும் ஒருமுகப் படுத்திப் பரவசப்படுத்தியது அங்குள்ள மற்றொரு காட்சி.

கொலுமண்டபத்தின் நடுவே திருவாவடுதுறை ஆதீன 21வது குருமகா சந்நிதானம், தமது ஞானகுருமூர்த்திகளாகிய ஸ்ரீ முத்திபஞ்சாக்கரதேசிக சுவாமிகள் எனப் போற்றப்படும் ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திக்குமுன் கைகூப்பியவண்ணம் தேஜோ மயமாக நின்று வணங்கிக்கொண்டிருக்கும் நிலையில் எழுதப்பெற்ற ஓவியக்காட்சி தான் அது.

மாநாட்டுக்கு வந்திருந்த சித்தாந்தச்சிவநேசச் செல்வர்களின் சிந்தைகளி லெல்லாம் அக்காட்சி,

**திருவடி ஞானம் சிவம் ஆக்குவிக்கும்**
**திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்**
**திருவடி ஞானம் சிறைமலம் நீக்கும்**
**திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே.**

என்ற திருமூலரது அருள்வாக்கை உபதேசிப்பதுபோல் இருந்தது.

**தொடக்கநாள்:**

28–1–57 திங்கட்கிழமை மாலை மூன்றுமணி. ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், தலைவரும் சொற்பொழிவாளர்களும் அன்பர்களும் புடைசூழ்ந்துவர, ஆதீன நாதஸ்வர வித்துவான் நடராஜன் நாதஸ்வரம் வாசித்துவர, கொலுமண்டபத்திற்கு எழுந்தருளினார்கள். திருவாவடுதுறை ஆதீனத் தேவார இன்னிசைப் புலவர்கள் திரு. சுந்தரேசஐயா, திரு. சோமசுந்தரம் தேவாரபாராயணம் நிகழ்த்த, திருமந்திரமாநாடு தொடங்கியது. நாகர்கோயில், தென்திருவிதாங்கூர் ஹிந்துகாலேஜ் பிரின்ஸ்பால் டாக்டர் திரு. B. நடராஜன் அவர்கள் தலைமைவகித்தார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் தலைவருக்குப் பொன்னாடை போர்த்தி, நிலைமாலை சூட்டி ஆசி அருளினார்கள். ஆதீன மகாவித்துவானும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துத் தமிழ் ஆராய்ச்சி விரிவுரையாளருமான திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் மாநாட்டுக்கு வந்திருந்தோர்களுக்கு வரவேற்புரை வழங்கினார்கள். விழா மூன்றுநாட்களிலுமே அவர்கள் கூறிய வரவேற்புரை சமயஉண்மைகள் பலவற்றை அன்பர்கள் அறிந்து கொள்ளத் துணைசெய்தது.

தஞ்சை சரஸ்வதிமஹால் நூல்நிலையக் கௌரவக்காரியதரிசி திரு. S. கோபால ஐயர் அவர்கள் திறப்புரை நிகழ்த்தினார்கள்.

அடுத்து, திருமந்திரமாநாட்டைப்பற்றி அன்பர்களிடமிருந்து வந்திருந்த வாழ்த்துச்செய்திகள் படிக்கப்பெற்றன. தருமபுர ஆதீனத்திலிருந்து அனுப்பப் பெற்றிருந்த ஆசியுரையை, அந்த ஆதீனத்தின்சார்பில் வந்திருந்த வித்துவான் திரு. வி. சா. குருசாமி அவர்கள் படித்து, ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களிடம் சேர்ப்பித்தார். தலைமையுரைக்குப் பிறகு விரிவுரைகள் முறையே தொடங்கின.

பழநி சித்தாந்தசரபம், மஹாமஹோபாத்தியாய சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள் '**சிவவேடம்**' என்பதுபற்றியும், ஆதீனவித்துவான் திரு. தே. ஆ. ஸ்ரீநிவாஸா சாரியார் அவர்கள் '**யோகம்**' என்பதுபற்றியும், திருவாவடுதுறை ஆதீனம் திருப்புகழ் திரு. தா. ப. வேங்கடசுப்பிரமணியம் அவர்கள் '**மருத்துவப்பகுதி**' என்பதுபற்றியும், சென்னை திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் '**புராணதத்துவம்**' என்பதுபற்றியும் விரிவுரை நிகழ்த்தினார்கள்.

**இரண்டாம்நாள்:**

29—1—57 செவ்வாய்க்கிழமை மாலை 3 மணிக்குத் திருமுறைப்பாராயணத் துடன் இரண்டாம் நாள் நிகழ்ச்சி தொடங்கியது. அன்றைய தலைவர், மதுரை திரு. கருமுத்து தியாகராஜ செட்டியார் அவர்கள். முதல்நாள்போலவே தலைவ ருக்குச் சிறப்புச் செய்யப்பெற்றது. சிறப்புக்களைப் பணிவுடன் ஏற்றுக்கொண்டு தலைவரவர்கள் முன்னுரை நிகழ்த்தினார்கள். அவர்கள் அச்சிட்டுக்கொண்டுவந்த அம்முன்னுரை அனைவருக்கும் வழங்கப்பெற்றது.

வித்துவான், திரு. ஜி. சுப்பிரமணியப்பிள்ளை அவர்கள் **சமயபேதங்களைப்** பற்றியும், சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள் **புவனபதிசக்கரம்** பற்றியும், ஆதீன மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் **ஒளி** என்பதுபற்றியும் நன்கு விளக்கிப் பேசினார்கள்.

**மூன்றாம்நாள்:**

30—1—57 புதன்கிழமை மாலை 3 மணிக்கு இசைவாணர்கள் திருமுறை ஓதினர், தலைவர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களுக்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்கள் சிறப்புச்செய்து ஆசியருளினார்கள். முன்னுரைக்குப் பிறகு **அவா அறுத்தல்** என்னும் தலைப்பில் மதுரை டாக்டர் திரு. M. இராசமாணிக்கனார் அவர்களும், **ஒழுக்கநெறிகள்** என்னும் தலைப்பில் பண்டித-வித்துவான் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்களும், **அடியார்பெருமை** என்னும் தலைப்பில் திருச்சி திரு. ஜி. வரதராஜன் அவர்களும் திருமந்திரக் கருத்துக்களை விளக்கிப் பேசினார்கள்.

இம்மாநாட்டு நினைவாக, அச்சிடப்பெற்ற மூன்றாவது ஆண்டு திருமந்திர மாநாட்டுச் சொற்பொழிவுகள் அடங்கிய மலர், திருமந்திரம் பாயிரப்பகுதி, திருமந்திரம் மருத்துவப்பகுதி என்ற மூன்று வெளியீடுகளும் அன்பர்களுக்கு வழங்கப்பெற்றன.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குலம்
மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன்
றன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி
யேபர விட்டெனுச்சி
அடிமன்ன வைத்த பிரான்மூல
ஞகின்ற அங்கணனே.

—நம்பியாண்டார் நம்பி.

தொடக்கநாள்விழாவில் :



திறப்பாளர் திறப்புரை நிகழ்த்துதல்.

# தொடக்கநாள் பேருரைகள்

## திறப்புரை :


தஞ்சை சரஸ்வதிமஹால் நூல்நிலையக் கௌரவக் காரியதரிசி,

### திரு. S. கோபால ஐயர் அவர்கள், B. A., B. L.,

அட்வகேட், தஞ்சை.


இத்திருமந்திர மாநாட்டிற்கு விஜயம் செய்திருக்கக்கூடியவர்களுக்கும், இங்குத் திருவீற்றிருக்கும் மகாசந்நிதானம் அவர்களுக்கும் என்னுடைய தாழ்ந்த வணக்கங்கள். இவ்வாண்டும் இந்த மாநாட்டுக்குத் திறப்பாளராக என்னை நியமித்ததற்கு மகாசந்நிதானம் அவர்களுக்கு என்னுடைய தாழ்ந்த நன்றியை மீண்டும் செலுத்தக்கடமைப்பட்டிருக்கிறேன். ஆதீன மகாவித்துவான் திரு. தண்டபாணிதேசிகர் அவர்கள் இங்கு என்னைப்பற்றிப் புகழ்ந்து பேசினார்கள். வழக்கறிஞரை வாய்மூப்பனார் என்று குறிப்பிட்டார்கள். என்னுடைய நண்பர் ஒருவர் சமீபத்தில் திருமந்திரமாநாட்டின் திறப்பாளராக நான் பணிக்கப்பட்டிருப்பதைப் பத்திரிகையில் பார்த்து, "என்ன ஐயா! வக்கீலுக்கும் திருமூலருடைய திருமந்திரமாநாட்டுக்கும் தொடர்பு இருக்கிறது?'' என்று ஒரு கேள்வி கேட்டார். ஆகவே வக்கீல்கள் எல்லோருமே இந்த மாதிரியான விஷயங்களுக்குத் தொடர்பு அற்றவர்கள் என்ற கருத்து சாதாரணமாக இருந்துவருகிறது. வக்கீல்கள் என்றால் அவர்கள் வாழ்க்கைக்குப் பயனற்றவர்கள் என்ற ஒருவிதமான தப்பு அபிப்பிராயம். எங்களைப்பற்றி அவர்கள் தவறுதலாக நினைத்ததற்காக நான் கவலைப்படவில்லை. ஏனென்றால், அப்படிச் சொல்வது இப்பொழுது ஒரு வழக்கமாக இருக்கிறது.

சென்ற ஆண்டு, சென்னையிலே ஒரு மாநாடுநடந்தது. முக்கியமாக இன்ஜினீயர்கள் அதில் பங்கெடுத்துக்கொண்டார்கள். அந்த மாநாட்டைத் திறந்துவைக்கின்றபோது கவர்னர், வக்கீல்களை இடித்து ஒரு கதை சொன்னார். அதைமட்டும் சொல்லுகின்றேன். அதாவது: சில டாக்டர்கள், சில இன்ஜினீயர்கள், சிலவக்கீல்கள், சில வியாபாரிகள் மற்றும் பலர் சேர்ந்திருந்த கூட்டத்தில், முதலில் இன்ஜினீயர்கள் சொன்னார்கள் " இந்த உலகத்தில் நாங்கள் இல்லாவிட்டால், உலகத்தையே வெள்ளம் அடித்துக்கொண்டுபோயிருக்கும்; நாங்கள் தான் அதற்கானபாலங்களைக் கட்டினோம்" என்று. அப்பொழுது டாக்டர்கள் "நீங்கள் பாலத்தைக் கட்டினால்மட்டும் போதுமா? உங்களுக்குத் தலைவலி வந்தால் நாங்கள் அல்லவோ வரவேண்டியிருக்கின்றது?" என்று தங்களது புகழைப் பேசினார்கள். உடனே வியாபாரிகள், "பாலத்தைக் கட்டி என்ன பயன்? மருந்து கொடுத்து என்ன பயன்? அதற்கெல்லாம் மூலகாரணமான பொருளாதார நிலைமையானது நாங்கள் இல்லாவிட்டால் மிகவும் கேவலமாகப் போய்விடுமே" என்று சொன்னார்கள். அப்போது வக்கீல்கள்மாத்திரம் வாயைத் திறக்கவே இல்லை. அங்கு இருந்தவர்கள் சும்மாவிடுவார்களா? "உங்கள் தொழிலைப் பற்றிச்சொல்வதற்கு ஒன்றும் இல்லையா?" என்று கேட்டார்கள். "இந்த உலகத்தை எதிலிருந்து கடவுள் அமைத்தார் என்று தெரியுமா? இந்த உலகம் ஆரம்பத்தில் பெரிய குழப்பமாக இருந்தது; குழப்பத்தில் இருந்து கடவுள் உலகத்தைப் படைத்தார்; அந்தக்குழப்பத்தை நாங்களே உண்டு பண்ணினோம்" என்றார்கள் வக்கீல்கள்.

மேல்நாடுகளிலுள்ளவர்கள் அமைதிக்கும், அரசியல் அமைப்புக்கும் வக்கீல்கள்தான் தூண்கள் என்று சொல்கிறார்கள். அதைப் பற்றி நான் புகழ்ந்துபேசவேண்டிய அவசியம் இல்லை. ஆனால், திருமந்திரத்தை வாழ்க்கைக்குப் பயனற்ற விஷயம் என்று சொல்வதைத்தான் நாம் இப்போது சற்று ஆராயவேண்டும்.

சாந்திநிகேதன் என்ற ஒரு ஸ்தாபனம் ரவீந்திரநாத்தாகூர் அவர்களால் ஸ்தாபிக்கப்பட்டிருப்பது எல்லோருக்கும் தெரியும். சில மாதங்களுக்கு முன்பு அங்கு பட்டமளிப்பு விழா நடந்தது. அந்தக் கூட்டத்தில் விழா உரை நிகழ்த்தியவரின் பெயரை நான் இப்பொழுது சொல்லவில்லை; அவர் பெரிய - பிரபல அரசியல் அறிஞர். அவருடைய உரையில் "மாணவ, மாணவிகளே! நீங்கள் எல்லோருமே ஏமாந்து போய்விட்டீர்கள். ஏனென்றால், சந்நியாசிகளால்—உலகத்தைத் துறந்தவர்களால் ஏற்படுத்தப்பட்ட நாகரிகத்தில் வசிக்கின்றோம். நாம் விரும்புகிற பொருள் வேறு. அவர்கள் விரும்பும் பொருள்வேறு. நமக்கு வேண்டுவது இதுதான்" என்று குறிப்பிட்டுத் தன்மணிப்பர்சை எடுத்துக் காண்பித்தார். இதைக் கண்டனம்செய்து பத்திரிகைகள் தலையங்கங்களும் எழுதியிருந்தன. சிலர் போற்றியும் எழுதியிருப்பார்கள் என்று எண்ணுகிறேன். என்போன்றவர் அங்கு இருந்திருந்தால் ஒரு விஷயத்தைச் சொல்லியிருக்கலாம்; "உங்களைப் போன்றவர்கள் விரும்பும்பொருள் அதுவாயிருக்கலாம்; ஆனால் நம்நீதிகள் கண்ட உண்மை உங்களுக்குத் தெரியுமா? தஞ்சை சரஸ்வதிமகாலில் நீங்கள்விரும்பும் பொருளாகிய தங்கம் எப்படிச் செய்வது என்று எழுதப்பெற்ற நூல்கள் இருக்கின்றனவே. எங்கள் சரபோஜிமன்னர் விஞ்ஞான முறையைக் கடைப்பிடித்து, தங்கத்தைச்செய்து காட்டினார்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டிருப்பேன்.

அரசியல் தலைவர்கள் பலர் தோன்றுவார்கள் என்று முன்னமேயே தெரியும். அரசியலில் மந்திரிகளை நியமிக்கவேண்டும் என்றால், எப்படி நியமிப்பது? எந்த நெறியைப் பின்பற்றவேண்டும்? என்றெல்லாம் அநேக நூல்களில் எழுதப்பட்டுள்ளது. வெளிநாடுகளில்கூட அதை உதாரணமாக எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். பதினெட்டாவது நூற்றாண்டில் பிரெஞ்சுதேசத்தில் வால்டேர் என்ற எழுத்தாளர் இருந்தார். அவர் அரசியல்தலைவர்களைத் தாக்கிப் பேசியதினால், அவர் பிரெஞ்சுதேசத்தில் இல்லாமல் வெளிநாட்டில் சென்று வசிக்க வேண்டியதாயிற்று. அவர் நமது நாட்டுக் கதைகளுக்குப் புதுரூபம் கொடுத்து எழுதி வந்தார்.

மேலை நாட்டில் ஒரு அரசன் ஒரு மந்திரியை நியமிக்கவேண்டியிருந்தது. அப்பொழுது அவருக்கு ஒரு பெரிய முனிவர் உபதேசம் கொடுத்தார். 'நீங்கள் ஒரு ஹாலைக் கட்டுங்கள்; அந்தமாதிரியான வேலைக்கு ஆள் வேண்டும் என்று விளம்பரம் செய்யுங்கள்; அந்த ஹாலுக்குப் பல வழிகளை அமையுங்கள்; ஒவ்வொரு கதவருகிலும் பணமுடிச்சுகளைக் கட்டிவையுங்கள்; அவர்கள் ஹாலுக்கு உள்ளே வந்தபிறகு, எனக்கு நாட்டியத்திலே மிகவும் பிரியம்; ஆகவே எனக்கு மந்திரியாகவும், அரசியல் உதவியாளராகவும் இருக்கவேண்டியவரை நியமிப்பதற்கு யார் நன்றாக நடனமாடுகிறார் என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டியிருக்கிறது என்று சொல்லுங்கள்; யார் இடுப்பைப் பிடிக்காமல் ஆடுகின்றாரோ அவரை மந்திரியாக நியமியுங்கள்' என்று சொன்னார். அப்படியே அரசன் செய்தபோது, ஒருவரும் இடுப்பைப் பிடிக்காமல் ஆடமுடியவில்லையாம். ஆகவே, பெரியோர்கள் இன்ன இன்ன வேலைக்கு இன்ன இன்ன தகுதிகளும், யோக்கியதைகளும் இருக்கவேண்டும் என்பதை நிர்ணயித்து வைத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட கருத்துக்களையெல்லாம் தொகுத்துக் கூறுகிற

திருமூலருடைய திருமந்திரத்தை மிகப்பய னற்றநூல் என்று சொல்வது எனக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கிறது.

திருமூலர் திருமந்திரத்தில் இல்லாத விஷயமே கிடையாது. அதில் இருப்பது தான் அறிவு, ஞானம்; அதில் இல்லாதது அஞ்ஞானம் என்று சொல்லலாம். ஏனென்றால், திருமூலர் போன்ற பெரியோர்கள் அக்காலங்களில் உலகத்தில் இது வேண்டாம், இது வேண்டும் என்று வற்புறுத்தும் வழக்கமே கிடையாது. இது ஒழிக என்று சொன்னதே கிடையாது. எல்லாம் வேண்டும், சகலவிதமான அனுபவமும் வேண்டும் என்று அனுபவித்தபின்னரே எல்லாவற்றையும் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளக்கினர் பெரியோர். அவர்கள் எப்படி இந்த உலகத்தில் தங்களுக்கு வேண்டியவற்றைத் தெரிந்துகொண்டார்கள் என்பதற்கு ஒரு வேடிக்கையான உதாரணம் உண்டு. அதை முற்றிலும் எடுத்துக் கொள்ள முடியாது. காளிதேவி தெனாலி ராமன்மீது மிகப் பிரியம்கொண்டு, அவன் எதிரிலே வந்து, தன்வலதுகையில் பால் வைத்துக்கொண்டு, 'இதை உண்டால் செல்வம் பெருகும்' என்றும், தன் இடது கையில் தயிர் வைத்துக்கொண்டு 'இதை உண்டால் ஞானம் பெருகும்' என்றும் கூறினாள். அவள் சொல்லிமுடிப்பதற்குள் தெனாலிராமன் அவ்விரண்டையும் பிடுங்கி உண்டுவிட்டான். அந்தமாதிரி தனக்கு வேண்டிய விஷயம், வேண்டாத விஷயம் என்று தவிர்க்கும் முறை அவர்களுக்குத் தெரியாது.

திருமூலரது திருமந்திரம் ஒரு நூல் என்று சொல்வது சரியல்ல. அதனை ஒரு சிருஷ்டி என்று சொல்லவேண்டும். திருமந்திரம் பழைய நூல். இந்த இடத்தில் நான் இது சொல்லவேண்டியதில்லை. நமது சைவத்திற்கே - சைவசித்தாந்த நூல்கள் எல்லாவற்றிற்குமே இது முதல் நூல்.

தொல்காப்பியரும் நிறைமொழிமாந்தர் என்றும், அவர்கள்சொல்லியது மந்திரம் என்றும் சொல்லியிருக்கிறார். உபநிடதத்திலுள்ள பல ரகசியங்களும் உண்மைகளும் திருமந்திரத்தில் புதைந்து கிடக்கின்றன. அப்பேர்ப்பட்ட ரகசியங்களையும் உண்மைகளையும் நாம் தெரிந்துகொள்ளவேண்டும். நாடி என்னும் விஷயத்தைப்பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார் திருமூலர். அதைப்பற்றிச் சில வார்த்தைகள் நான் சொல்லவேண்டுமென்று மகாசந்நிதானம் கட்டளையிட்டிருக்கிறார்கள். நான் அதைக் கரைத்துக் குடித்தவன் அல்ல என்றாலும், சில வார்த்தைகள்மட்டும் சொல்லத் துணிந்திருக்கிறேன்.

நாம் எல்லோருமே மிக நீண்ட ஆயுள் வேண்டுமென்று விரும்புபவர்கள். நீண்ட ஆயுளை விரும்பாமல், இந்த உலகத்தில் நாம் தோன்றியவுடனேயே மறைந்துவிட வேண்டுமென்று முன்னோர்கள் சொல்லவே இல்லை. தமிழ்நூலைப் படித்தவர்கள் சில சமயங்களில் வேடிக்கையாகச் சொல்வார்கள். நம் காரைக்காலம்மையார், "இடர் நீப்பது எஞ்ஞான்று?" என்று கூறியிருக்கிறாரே; அதற்கு என்ன சிரமம்? ஆர்ஸெனிக் உண்டால் போதுமே என்று சொல்வது வழக்கம். முன்னோர்கள் நாம் பிறந்தவுடன் இறந்துவிடவேண்டுமென்று சொல்லவில்லை. நூற்றுக்கணக்கான ஆண்டுகள் அவர்கள் உயிருடன் இருந்து நிதரிசனமாகக் காட்டியிருக்கிறார்கள். அவர்களில் மிகப்பெரியவர் திருமூலர். திருமூலர் வாழ்க்கை இதற்கு ஒரு உதாரணம். பல நூற்றாண்டுகள் அவரிருந்ததாகத் தெளிவு.

திருமூலர் தன்னுடைய உடம்பில் தான் வைத்திருந்த நம்பிக்கையைப்பற்றி அவரே சொல்லியிருக்கிறார். அதாவது:-

உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே.

அண்டம் சுருங்கில் அதற்கோ ரழிவில்லை
பிண்டம் சுருங்கில் பிராணன் நிலைபெறும்
உண்டி சுருங்கில் உபாயம் பலவுள
கண்டம் கறுத்த கபாலியு மாமே.

நாடி சம்பந்தமாக அவர் சொன்னது என்ன? உடல் அமைப்பைப் பற்றி, நீண்ட உயிர் பெறவேண்டுமென்று சொன்னதன் காரணம் என்ன? நாடியில் சூட்சுமம் இருக்கிறது. வைத்திய சாத்திரத்தில் "பல்ஸ்" என்ற பெயர் உண்டு. அதைப்பற்றி அவர் சொல்லவில்லை. நாடி மூச்சு; சுவாசம் ஓடும் வழி. தசநாடிகளுள் தலைசிறந்தது சுழுமுனை நாடி. நமது உடலானது ஒரு பணப்பெட்டி. அந்தப் பணப்பெட்டியில் நமது மூச்சுதான் பணம். அந்தப் பணத்தை அதிகமாக விட்டுக்கொண்டே வந்தால், கூடிய சீக்கிரத்தில் நாம் 'பாப்ப'ராவோம். ஆகையால், மூச்சைக் குறைத்துச் செலவழிக்கவேண்டும். மூச்சைக் குறைக்கக் குறைக்க ஆயுள் நீளும். மூச்சை முழுவதும் கட்டும் தன்மையுடையவர்கள் பல நூற்றாண்டுகள் வாழமுடியும். இப்படியாகத் திருமூலர் நாடியைப்பற்றிச் சொல்லியிருக்கிறார். இது நடக்காத காரியம் என்று பலர் நினைக்கலாம். ஆனால், அப்படி மறுக்கும் அவர்களே, மேல் நாட்டில் அங்கீகாரம் செய்திருந்தால், சகஜமாக ஒப்புக்கொள்வது வழக்கமாக இருக்கிறது.

சில ஆண்டுகளுக்கு முன் Paul என்று ஒரு ஆங்கிலேயர் ரமணரிஷியுடன் தங்கி இருந்தார். பல நீதிகளைப் பிரசாரம் செய்தார். "ஸேஜ் ஆப் ரமணரிஷி" என்று ஒரு புத்தகம் வெளியிட்டார். சென்னையில் மயிலாப்பூரில் தனக்கு நடந்த அனுபவத்தைப்பற்றிச் சொன்னார். அங்கு ஒரு முனிவர் பக்கத்தில் இருந்தவர் சுமார் 200, 300-வருஷங்கள் இருந்து வந்திருப்பதாகச் சொன்னார். இவர் போனசமயம் சமாதியில் இருந்தார். வைத்தியரை அழைத்துச் சென்றதில், முனிவரது கையைப்பிடித்துப் பார்த்து, பல்ஸ் வேலை செய்யவில்லை, பயன் இல்லை, மூச்சுபோனதுதான் என்று சொல்லிவிட்டார். அவருடைய சிஷ்யர், இரண்டு மூன்று நாள் கழித்து வாருங்கள்; சமாதியிலிருந்து எழுந்துவிடுவார்" என்று சொன்னார். அப்படியே அவரும் இரண்டு மூன்று தினங்களுக்குப் பிறகு சமாதியிலிருந்து விழித்து எழுந்தார். அவருடன் பேசி, சம்பாஷணை செய்த அந்த முனிவரைப்பற்றி அவர் எழுதியிருக்கிறார்.

குண்டலி என்று சொல்லும் விஷயம் உங்கள் அனைவருக்குமே தெரிந்திருக்கும். உடலில் அமைந்திருக்கும் அரவம் என்னும் சக்தி. இதைத்தேடி எழுப்பும் வழியில் பூர்ணசக்தி வாய்ந்திருக்கிறது. ஸர் ஜான் உட்ராப் மிகத்தெளிவாக எழுதியிருக்கிறார். மூச்சைக் கட்டினால் நீண்ட ஆயுள் பெறுவதுமட்டுமல்ல; அதனால் பலன் இல்லை; நீண்ட ஆயுளுடன் தீர்க்க திருஷ்டியும் உண்டாகிக் கண்ணால் நன்றாகப் பார்க்க வேண்டும். நாளைக்கு வருவதை இன்றே தெரிந்துகொள்ள வேண்டும். திரிகால ஞானியின் தன்மை மிகப்பெரியது. இது நம்நாட்டில் 'காலக்கட்டு' 'மூச்சுக்கட்டு' என்று நாடிப்பகுதியில் சொல்லப்பட்டிருக்கிறது. மூச்சைக்கட்டி, காலத்தைக் கட்டிவிட்டால், அவர்களுக்கு நிகழ்காலம், வருங்காலம் என்ற வித்தியாசமே கிடையாது. இதை நம்நாட்டில் மெய்ஞ்ஞானப் பகுதியாகக் கொண்டிருக்கின்றோம். அவர்கள் இதை விஞ்ஞானப் பகுதியாகக் கொண்டிருக்கிறார்கள். "நான்கு டைமன்ஷன்" என்ற ஒரு அல்ஜீப்ரா கணக்கு ரூபமாக எடுத்துச் சொல்லியிருக்கிறார். ஸார் என்பவர் ரஷ்யதேசத்தில் ஊஸ்பெர்க் என்ற இடத்தில் காலமே கட்டுப்பட்ட விஷயத்தைப்பற்றி, தன்னுடைய நூலில் எழுதியிருக்கிறார். ஜே. டபிள்யூ. டான் என்பவரும் அதைப்பற்றி எழுதியிருக்கிறார். ஜே. பி. பீஸ்ட் என்பவர் நான்காவது லைன் என்றால் என்ன என்று எழுதியிருக்கிறார். காலத்தை எப்படிக் கட்டமுடியும் என்று

சொல்லியிருக்கிறார். இது பெரிய விஷயம். இதைச் சுருக்கமாகச் சொல்லத் துணி கிறேன்.

சாதாரணமாக இப்பொழுது நாம் இருக்கின்ற உலகம் மூன்று பரிமாணம் பெற்ற உலகம். நீளம், அகலம் உண்டு. ஆனால், பருமன் கிடையாது. ஒரு சுவரில் ஒரு மனிதனுடைய படம் வரைந்தால், அதற்குப் பருமன் கிடையாது; நீளம் அகலம் உண்டு. அது இரண்டு டைமன்ஷன். மூன்றாவது உலகம் ஆகிய பரிமாணத்தில் நடக்கும் விஷயம் அவன் கண்ணுக்குத் தெரியாது. நான்காவது உலகம் காலம். ஒரு காகிதத்தை எடுத்துக்கொண்டால், அந்தக் காகிதத்தின்மேலே ஒரு எறும்பு ஊர்ந்தால், அந்தக்காகிதத்தின் ஒருபக்கத் திலிருந்து மறுபக்கம் அடைவதற்கு எவ் வளவு காலம் ஆகிறது என்ற கணக்குத் தெரியும். இது நான்காவது உலகம். இந்த நான்காவது டைமன்ஷன் உலகம் நமக்குத் தெரிகிறது. தஞ்சையிலிருந்து திருவாவடு துறை வருவதற்கு முன்னால், திருவாவடு துறை என்னும் ஊரே இல்லை என்றும் சொல்ல முடியாது. ஒன்றரை அல்லது இரண்டுமணி நேரம் காரில் வந்தால், ஊரை அடையலாம். அதற்கு ஒரு குறிப்பிட்ட காலம் வேண்டியிருக்கிறது. அந்தக் காலத் தைக் கட்டுப்படுத்த முடியாது. அதைக் கட்டுப்படுத்தினால், நாளை என்ன நடக்கும் என்பதை அறிந்து கொள்ளலாம். நாளை வருவதை இன்றே தெரிந்து கொள்வது தான் திரிகாலஞானம் என்பது. அதை எப்படித் தெரிந்து கொள்வது என்பது தான் சூட்சுமம்.

நான்காவது பரிமாணத்தை வென்ற வர்கள் பெரிய முனிவர்கள். அவர்கள்தான் திரிகாலஞானிகள். பலபெரியோர்கள் இந்த மகாநாட்டுக்கு வந்திருக்கின்றார்கள். அவர் கள் மிக அழகாகவும், தெளிவாகவும். உயர் தர பாஷையில் பேசும் சக்தி வாய்ந்தவர் கள். அவர்கள் இதைப்பற்றி விவரமாகப் பேசுவார்கள் என்று நம்புகிறேன்.

இப்பேர்ப்பட்ட சிறந்த ஒரு சிருஷ்டியை நமக்கு உண்டாக்கிக்கொடுத்த திருமூலரை நாம் எப்படிப் பெருமைப் படுத்துவது என்று காணவேண்டும். நோபல்பிரைஸ் கொடுக்க முடியுமா? முதல் உலகயுத்தத் திற்குப் பிறகு ஏற்பட்ட நாசத்தை நோபல் என்பவர் கண்டு விசனம் அடைந்தார். அவர் தான் ஈட்டிய பொருளையெல்லாம் தருமத்திற்கு எழுதி வைத்தார். உலக சமாதானத்திற்கு மிகச் சிறந்த வழியில் பாடுபடும் ஒருவனுக்கு ஒருலட்சம் ரூபாய் பரிசு கொடுப்பது என்பது அவர் ஏற்பாடு. விஞ்ஞானம், இலக்கியம் போன்ற பல பல துறைகளில் மிகுந்த ஆராய்ச்சி செய்தவர் கள் ஒவ்வொருவருக்கும் ஒருலட்ச ரூபாய் மதிப்புள்ள பரிசு என்று வகுத்திருந்தார்.

திருமூலர் நோபல்பரிசு பெறுவதற் கெல்லாம் மிக மேலாக உள்ள ஒருஜீவன். அவருக்கு வெகுமானம் எப்படிச் செய்வது? அவர் பெயராலேயே ஒரு பெரிய மகா நாட்டை மகாசந்நிதானம் அவர்கள் ஆண்டு தோறும் கூட்டுவது மிகவும் போற்றத் தக்க விஷயம். இந்த மகாநாட்டின்மூலம் திருமூலருடைய பெருமையை மகாசந்நிதா னம் அவர்கள் பரப்ப ஏற்பாடு செய்திருப் பதற்கு நாம் என்றென்றும் கடமைப்பட் டிருக்கிறோம். இந்த மகாநாடு இன்றும், நாளையதினமும், அதற்கு அடுத்த தினமும் மிகச் சிறப்பாக விளங்கி, மக்களுடைய அறிவுக்கண்ணைத் திறப்பதற்குச் சாதன மாக இருக்கும் என்று சொல்லி, இந்த மகாநாட்டைத் திறந்துவைக்கிறேன்.

தலைமையுரை :

## டாக்டர் திரு. B. நடராஜன் அவர்கள், M. A., D. Litt.,

பிரின்ஸிபால், தென் திருவிதாங்கூர் ஹிந்துகாலேஜ், நாகர்கோயில்.

இங்கு வீற்றிருக்கின்ற எங்கள் குரு மகாசந்நிதானத்திற்கு என்னுடைய தாழ்மையான வணக்கத்தை முதலில் தெரிவித்துக் கொள்கிறேன். அவையடக்கம் என்று நமது சேக்கிழார்சுவாமிகள், கம்பர் போன்ற பெரும் புலவர்கள், பிறநூலாசிரியர்கள் எல்லோரும் சொல்லித் தங்கள் நூலைத் தொடங்குவார்கள். நானும் பல கூட்டங்களில் பேசியிருக்கிறேன். அவையடக்கமும் சொல்லியிருக்கிறேன். ஆனால், இன்றுதான் இந்தக் கூட்டத்தில் காணும் அவையடக்கத்திலிருந்து 'அவையடக்கம்' என்ற சொல்லின் உண்மையான பொருளை உணருகிறேன். அவையடக்கம் என்னும் சொல்லின் உண்மைப் பொருள் இங்குக் காணப்படும் அவையடக்கத்தில் இருந்துதான் எனக்கு விளங்கிற்று. குருமகாசந்நிதானம் வீற்றிருக்கின்ற இந்தக் கூட்டத்திலே - எங்கள் சிவாசாரியார் போன்ற மகாபண்டிதர்கள் இருக்கின்ற இந்தக் கூட்டத்திலே அடியேனைத் தலைமையுரை நிகழ்த்தும் படியாகக் குருமகாசந்நிதானம் அவர்கள் ஆணையிட்டதை நான் எப்படி மறக்க முடியும்? அதற்கு எத்தனை அவையடக்கம் சொன்னாலும் என் குறைபாடு நீங்காது. ஆனால், சந்நிதானம் அவர்கள் ஆணையிட்டருளியபடியால் என்னிடம் காணப்படும் கூடுதல் குறைவு எல்லாம் சந்நிதானத்தின் அருளால் நீங்கக்கூடிய நிலைமை இன்று இருக்கிறது.

திருமூலர் இயற்றிய திருமந்திரத்திற்காக மகாநாடு கூட்டுவதில் இது நான்காவது மகாநாடு. மகாசந்நிதானம் பட்டத்திற்கு வந்ததும், இந்தமாதிரி மகாநாடு தொடங்கப்பெற்று இங்கே முறையாக ஆண்டாண்டு நடந்துவருகிற ஒருசெய்கை மிகவும் அருமையானது. இது மகாசந்நிதானத்தினுடைய ஆர்வத்தை நமக்கு நன்றாக எடுத்துக்காட்டுகிறது.

பன்னிரண்டு திருமுறைகளிலே திருமூலர் இயற்றியது பத்தாந்திருமுறையாக வைக்கப்பட்டிருக்கிறது. அதுதான் திருமந்திரம். மிகவும் அடிப்படையானது. "மூலம்" என்ற சொல்லுக்கே "அடிப்படை" என்று பொருள். ஆகவே திருமூலர் நம்முடைய சமயத்திற்குப் பொதுவாகவும் சைவசமயத்திற்குச் சிறப்பாகவும் அடிப்படையாகின்றார். இடையர் குலத்தில் திருமூலர் பிறந்தார்; அதனால் "மூலன்" "மூலர்" என்று வந்திருக்கவேண்டும் என்று சொல்லுகின்ற கதை ஒருபுறமிருக்கட்டும். மூலர் என்னும் வார்த்தைக்கு அடிப்படையானவர் என்று நாம் பொருள் கொள்ளலாம்.

திருமூலருக்குமுன் தமிழருக்குச் சமயம் இல்லையா? சைவம் என்ற ஒன்று அன்று இல்லையா? என்றால், தமிழருக்குச் சமயம் என்பது இருந்தது. ஆனால், **சமயத்தைப் பற்றிய நூல்கள் திருமூலருக்கு முன்னாலே இல்லை**; சமய நூலாக இல்லை. ஆனால் சங்ககாலத்துநூல்களில் சமயக் கருத்துக்கள் ஒன்றி, விரவி இருக்கின்றன. சமயநூல் என்பதாகத் தமிழில் தனியே சங்கநூலிலும் இல்லை. தொல்காப்பியம் தமிழ் இலக்கண நூல்களுக்கே முதல்நூலாக இருக்கின்றது. அதற்கு முன் எத்தனையோ இலக்கணங்கள் இருந்தன. அவை இன்று

தொடக்கநாள்விழாவில் :



தலைவர் தலைமையுரை நிகழ்த்துதல்.

காணமுடியாத நிலையில் அழிந்துவிட்டன. அதுபோன்றே சமயத்துறையிலும் எத்தனையோ நூல்கள் முன்னாலே இருந்திருக்கலாம். ஆனால், அவையெல்லாம் இன்று காணமுடியாத நிலையில் மறைந்துவிட்டன. நம்திருமூலருடைய திருமந்திரமே சமய நூல்களுக்கெல்லாம் முதல் நூலாக இன்று அமைந்திருக்கிறது.

இத்தகைய ஒரு அரிய நூலுக்கு இதுவரை ஒரு உரை வெளிவரவே இல்லை. பெரிய பெரிய இலக்கியங்களுக்கெல்லாம் பெரும் பெரும் உரையாசிரியர்கள் உரை எழுதியிருக்கின்றார்கள். திருக்குறளுக்கும், தொல்காப்பியத்திற்கும், இன்னும் பெரிய பெரிய இலக்கியங்களுக்கெல்லாம் பலபேர் உரை எழுதியிருக்கும்போது, ஏன் நமது திருமந்திரத்திற்குமட்டும் இதுவரை உரை யாரும் எழுதவில்லை? திருமந்திரம் அவர்களுக்கு எட்டமுடியாத பொருள் என்று விட்டுவிட்டார்களா? அப்படிச் சொல்ல முடியாது. ஏனென்றால் பின்னாலே வந்த உரையாசிரியர்கள் முன்னே சென்ற உரை ஆசிரியர்களுக்கு எள்ளளவும் பின்னடைந்தவர்கள் அல்லர் புலமையில். ஆகவே, ஏன் உரை செய்யவில்லை என்றால், வேண்டுமென்றே உரை செய்யாமல் விட்டுவிட்டார்கள். திருமூலருடைய நூலுக்கு உரை செய்வது முறையல்ல என்ற மரபு இருந்து வந்தது. மந்திரம் என்பது மறைத்து வைக்கப்பட வேண்டியதொன்று என்ற மரபினால், நம் திருமந்திரத்திற்கு உரை எழுதாமல் விட்டு விட்டார்கள் என்று கொள்ளலாம். ஆனால், அந்தப் பழைய மரபு இப்பொழுதுநீங்கி, புதுமரபு ஏற்பட்டிருக்கிறது. நாம் திருமுறைகளுக்கு உரை காணவேண்டும்; கண்டால்தான் நம் திருமுறைகள் உலகத்திலே வளரும்; பாமர மக்களுடைய உள்ளத்திலேயும் நன்றாகப் பதியும் என்ற எழுச்சி உண்டாயிருக்கிறது. இப்படிப் புதியமரபு ஏற்பட்டுள்ள இக்காலத்திலே உரை எழுதுவதற்கு ஆற்றல் உடையவர்களைக் காணோம். உரை அறிந்தவர்களுடையமரபு குறைந்துவிட்டது. இந்த நிலையிலே இந்தத் திருமந்திர மாநாட்டைக் கூட்டுவித்த வாலறிவுக்கு நாம் மிகவும் பாராட்டுச்செய்யக் கடமையுள்ளவர்களாக இருக்கிறோம். அங்கங்கே இருக்கும் புலவர்களுடைய சிந்தனையையெல்லாம் தூண்டக்கூடிய ஒரு பெரிய வாய்ப்பு இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது.

திருமந்திரம் ஒரு சாதாரண நூல் அல்ல. சமயத்திலே முதல்நூல் என்றேன். அதற்குமுன்னே சமயநூல் இல்லை என்று சொன்னேன். சைவத்தைப்பற்றித் தத்துவக் கருத்துக்களைச் சொல்லக்கூடிய 14 சாஸ்திரங்களுக்கும் முற்பட்ட நூல்—சித்தாந்த நூல் நம் திருமந்திரம். அப்படியான ஒருநூலை, திருமுறை வரிசையில் எவ்வாறு வைத்தனர்? 14 சாஸ்திரங்களை இம்முறையில் வைக்கவில்லையே! ஏன் திருமந்திரமாகிய சமயநூலை மட்டும் கொண்டுவந்து நம் திருமுறையில் வைத்தார்கள்? என்றால், அது சாத்திரநூல்மட்டும் அல்ல; தோத்திர நூலும் ஆகும். அப்பொழுதுதான் திருமந்திரத்தினுடைய சிறப்பு நன்றாகத்தெரியும். அது உயர்ந்த இலக்கிய நூல். அதற்கு ஒப்பாக நாம் இன்னொருநூலைச் சொல்ல வேண்டுமானால், திருவாசகத்தைத்தான் சொல்லவேண்டும். சாத்திரக் கருத்தும், தோத்திரக்கருத்தும் கலந்தநூல் திருமந்திரத்தைத் தவிர மற்றொன்று இருக்கிறது என்றால், அதற்குத் திருவாசகத்தைத் தான் எடுத்துக்கொள்ளலாம்.

சாதாரணமாக, திருமுறையைப் படிக்கும்போது பாட்டுக்கள் எளிய நடையிலே இருக்கின்றன. திருமந்திரத்தினுடைய ஒரு சிறப்பு எளிமையான பாட்டுகளாக அமைந்திருப்பதே. மிக எளியநடையில் பாட்டுக்கள் இருப்பதால் சில நன்மைகளும் உண்டு; சில தீமைகளும் உண்டு. எளிமையாக இருப்பதால் பலரும் அந்த நடையைப்

பின்பற்றிப் பாடல் எழுதுதற்கு வசதியிருக்கிறது; அதனுல் பல பாட்டுக்கள் திருமந்திரத்தில் இடைச் செருகலாக அமைந்து விட்டன என்று சொல்வது உண்டு. எது உண்மையில் திருமூலர் எழுதியது? எது பிற்காலத்தில் இடைச்செருகலாக வந்தது? என்று கண்டு பிடிப்பதற்குக்கூட அரிதாகி விட்டது.

திருமந்திரத்தின் மற்ருெரு சிறப்பு என்னவென்ருல், நம் தமிழ்நாட்டிலே ஒரு வகையான ஞானிகள் இருந்திருக்கிருர்கள்; பக்தர்கள் எத்தனேயோ பேர்கள் இருந்திருக்கிருர்கள். நால்வர் அவ்வரிசையிலே உள்ளவர்கள். அதுபோல் ஆழ்வார்கள் இருந்திருக்கிருர்கள். பெரிய தத்துவ சாத்திரம் அறிந்த தத்துவஞானிகளும் இருந்திருக்கிருர்கள். இவர்கள் அனைவருக்கும் புறம்பாக வேருெருவகையான ஞானியும் நமது நாட்டிலே இருந்திருக்கின்ருர்கள். தமிழ்நாட்டிலே சிறப்பாகச் "சித்தர்கள்" என்று சொல்லப் படுபவர்கள் இருந்திருக்கிருர்கள். திருமூலர் அச்சித்தர் பரம்பரையிலே வந்தவர். ஆகவேதான் அவருக்கு மூலர் என்ற பெயர் சாரும். மூலர் என்ருல் தமிழில் சமய சாத்திரத்திற்கு மூலமாக இருந்தவர் என்பது. தமிழிலே தோத்திர சாத்திரத்திற்கு மூலமாக இருந்தவர். தமிழிலே சித்த பரம்பரைக்கு மூலமாக இருந்தவர். ஆகவேதான் அவர் திருமூலர். தாயுமானவர் காலத்திலிருந்து ராமலிங்க அடிகள் காலம்வரை அச்சித்தபரம்பரை விடாது, நீங்காது, வாழையடி வாழையாக வந்து கொண்டே இருக்கின்றது. அந்த சித்த பரம்பரையினுடைய ஒரு லட்சியம் என்ன? அது சைவசமய லட்சியத்திற்கு மாறுபட்ட ஒருலட்சியமல்ல. அதாவது :- இந்த உலக வாழ்வானது நாம் புறக்கணிப்பதற்குரியது அல்ல. இந்த உடலும் நாம் வெறுக்கத் தகுந்தது அல்ல; போற்றிப் பேணத்தகுந்தது. உடல் ஒரு கோயில். அதில் இறைவன் குடிகொள்கிருன். அதை எவ்வளவுதூரம் நாம் பாதுகாக்கிருேமோ, எவ்வளவு வலிமையுள்ளதாக வைத்திருக்கின்ருேமோ, எவ்வளவுநாள் வாழும்படிச் செய்கிருேமோ, அவ்வளவுக்கு அவ்வளவு நமக்கு நல்ல வாழ்வும் இன்பமும் உண்டு; அதுவே கடவுள் நெறி.

உடலாகிய கோயிலே எவ்வாறு அமைத்துக் கொள்வது? இதற்குச் சித்தர்கள் எல்லோரும் விடைகாண விரும்பினுர்கள். அநேகர் விடையும் கண்டார்கள். ஒன்று யோக மார்க்கம். மற்ருென்று வைத்திய முறை. அடுத்தது ரசாயன முறை. இந்த மூன்று முறைகளிலே மூன்று சாத்திரங்கள் தோன்றின. யோகத்தினுல் மூச்சை அடக்குவதுபற்றி நண்பர் கோபால ஐயர் அவர்கள் சொன்னது போல, நாடியைத் திருத்தி, நெறிப்படுத்தி, அதன்மூலமாகப் பல்லாண்டு வாழ்வதற்கு உரிய காயசித்தியைக் கண்டார்கள் சித்தர்கள். பதஞ்சலி யோக சாத்திரங்கள் துணையாக இருந்தன. இந்த யோகசாத்திரம் சைவத்திற்கு மிகப் பழமையான சாத்திரம் என்பதைமட்டும் எடுத்துக்காட்டுகிறேன்.

இந்த நாட்டிலே இருப்பது என்ன சமயம்? குமரி முதல் காஷ்மீரம் வரையில் இருப்பது என்னசமயம்? காஷ்மீர், சைவத்திற்குத் தலையான தேசம். இன்று இருப்பது சைவ சமயம். நான் இதைச் சொன்னுல் ஏதோ தற்பெருமையாகச் சொல்லுகிறேன் என்று நீங்கள் கருதக் கூடாது. இன்று இந்த நாட்டில் இருப்பது ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இருந்த சமயம். அதாவது ஆகமசமயம். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே மொகஞ்சதாரோ என்னும் நாடு இருந்தது. சிந்துநதி பாயும் பஞ்சாப் நகரம் இருந்தது. அதற்கு நாற்பது மைல் வடக்கே ஹரப்பா இருந்தது. அரப்பா என்பது தமிழ்ப்பெயர். அரப்பா என்பதற்குச் சிவனுடைய நகரம் என்று பொருள். அரன் என்ருல் சிவன். சைவர்களுடைய நகரம் மற்ருென்றும் இருந்தது.

அந்த இரண்டு நகரங்களும் தனித்தனியாக அகழ்ந்து எடுக்கப்பட்டன. எடுக்கப்பட்டாலும் அந்த இரு நகரங்களின் நாகரிகமும் ஒன்ருகவே காணப்பட்டது. அங்கு உள்ள சிவவணக்கம், ரிஷபதேவருடைய காட்சி, சைவத்தின் அடிப்படையான கோயில்வழிபாடு அனைத்தும் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்பே சைவம் இருந்தது என்பதைக் காண்பிக்கின்றன. சிந்து என்ற பெயரே தமிழ்ப்பெயர். சிந்துதல் என்ருல் ஒழுகுதல், பொழிதல். இச் சிந்துவைக் கிரேக்கர்களும் பாரசீகர்களும் "இந்து" என்பர். ஆகவேதான் நாம் இந்துக்கள் என்று அழைக்கப்படுகின்ருேம். சிந்து என்பது தமிழ்; அதனுல், இந்துவும் தமிழேதான். சிந்து என்பதற்கு அதாவது சிந்தக்கூடியது, பொழியக்கூடியது என்பது பொருளாகும். இதனுல் என்ன தெரிகின்றது. சைவசமயமானது ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்பே நிலைபெற்றிருக்கின்றது என்பது புலனுகிறது.

திருமூலர் சொல்லுகின்ற யோகநிலையானது ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இருந்தது என்பதற்கு ஒரு அத்தாட்சியாக அங்கே நம் சிவபெருமான் யோகநிலையிலே வீற்றிருப்பது போன்ற உருவச்சிலைகளும், முத்திரைகளும் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. யோகப்பயிற்சியானது நம் சைவ சமயத்திற்கு மிகமிகப் பழமையானதே. அதையே நம் திருமூலர், பதஞ்சலி யோக சூத்திரத்தின்வழியாகக் கண்டார். பதஞ்சலி வடமொழியில் எழுதினர். சைவத்தினுடைய பல பழைய கருத்துக்கள் எல்லாம் வடமொழியில்தான் முதலில் எழுதப்பட்டன என்பதை நாம் மறக்கலாகாது.

அக்காலத்தில் வடமொழிதான் பண்டிதர்கள் அறிந்த ஒரு மொழியாக இருந்தது. ஆகவே, ஒரு நூல் எழுதவேண்டுமானுல், அந்த மொழியில் தேர்ச்சி பெற்ற பண்டிதர்கள் வடமொழியில் எழுதி வந்தார்கள். இன்று பொருளாதார ஆசிரியர் ஒருவர் பொருளாதாரத்தைப்பற்றி ஒரு நூல் எழுதவேண்டுமானுல், அதை எல்லோரும் மதிக்கவேண்டுமென்றுகருதினுல், முதலில் ஆங்கிலத்திலே எழுதவேண்டும் என்பது தான் அவர் கருத்துக்கு வரும். அதைப் போல் அந்தக்காலத்தில், உயர்ந்த கருத்துக்களை எழுதவேண்டுமானுல், வடமொழியிலே எழுதினுல்தான் அது உயர்வாக மதிக்கப்படும் என்று கருதியிருக்கக்கூடும்.

சைவத்திற்குச் சிறப்பாக இருப்பது முதலில் உருவ வழிபாடு; ஆகம சைவத்திற்கு இன்றியமையாதது. மொகஞ்சதாரோவில் இந்த உருவவழிபாட்டுக்கான அறிகுறிகள் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே காணப்பட்டன. உருவ வழிபாடு பக்திநெறிக்கு அடிப்படையாயிருக்கிறது. வேண்டுகின்றவன் வேண்டுதலைப் பெறுகின்ருன் என்ற தொடர்பும் உருவ வழிபாட்டில் ஏற்பட்டது. இதுபோலவே குரு வழிபாடு, கோயில்வழிபாடுபோன்ற கொள்கைகள் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உள்ளன.

இந்த ஆகம சமயத்திற்குப்பின் வேத சமயம் வந்தது. வரலாற்று முறைப்படி நான் இந்தக் கருத்தைச் சொல்லுகின்றேன். வேத சமயத்திற்கும் ஆகமசமயத்திற்கும் உள்ள வேற்றுமைகளை முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். வேத சமயத்தில் உருவ வழிபாடு இல்லை; பக்திநெறி இல்லை; வருணனைப்பற்றி ஒரே ஒருமந்திரந்தான் இருக்கிறது என்று டாக்டர் ராதா கிருஷ்ணன் சொல்லுகிருர். எங்கு உருவ வழிபாடு இல்லையோ அங்கே பக்திநெறி சிறப்பாக ஓங்குவதற்கு நியாயம் இல்லை. வேத வழிபாட்டுக்கு என்னசிறப்பு என்ருல், எல்லா இயற்கைப் பொருள்களிலும் கடவுளைக் காணலாம். நீரிலும் நெருப்பிலும் கடவுளைக் காணலாம். இதுதான் வேத நெறியினுடைய சிறப்பான கொள்கை. இந்த வேத நெறிக்கும் ஆகம நெறிக்கும் தமிழ்நாட்டில்தான் சமரசம் ஏற்பட்டது.

கீதையில் சமரசம் ஏற்பட்டது என்று சிலர் சொல்லுவர். ஆனால், திருமூலர் திருமந்திரத்திலேதான் சமரசத்தைக் காண்கிறோம். அவர், ஆகமம் இன்றியமையாததுபோல் வேதமும் இன்றியமையாதது என்ற உண்மையை நன்றாக எடுத்துச் சொல்கிறார். ஆகவே, இந்த சமரசத்தை ஞானத்தமிழ்ப் பரம்பரையில் வந்துள்ள திருமூலரிடத்தில் காண்கின்றோம். அந்த நெறியிலே தோன்றிய அவர் "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்ற உண்மையை வெளிப்படுத்துகிறார். வடமொழியைப் பயின்றோர் ஆயினும், தமிழ் மரபில் உள்ள உயர்ந்த கருத்துக்களை எடுத்துக்காட்ட மறக்கவில்லை. ஒன்றே குலம், ஒருவனே தேவன் என்ற அழகிய கருத்தைத் திருக்குறளிலும் காண்கின்றோம். ஒரு உயர்ந்த சமயம் என்று கருதவேண்டுமானால், அது ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். இதையேதான் திருமூலரும் முதல் தந்திரத்திலேயே வற்புறுத்துகிறார்.

தமிழ் மரபைத் திருமூலர் நுட்பமாகக் கடைப்பிடித்தார் என்று தெரிகின்றது. 'மூவரும் ஒன்றுதான்; மூவரையும் நீங்கள் பேதித்து எண்ணவேண்டாம்; மூவருக்கும் முதல்வன் சிவன்' என்று தன்னுடைய ஒரு கொள்கையை விட்டுக்கொடுக்காமல் சமரசம் பேசுகின்றமுறை மிக அருமையாக இருக்கிறது. அருமையான பாடல்களிலே இதைச் சொல்லுகின்றார். இந்தச் சமரசம் சொன்னவர் எந்தக்காலத்தில் இருந்திருக்கலாம்? பொதுவாகத் திருத்தொண்டத் தொகையிலே முதன்முதலாகத் திருமூலர் குறிப்பிடப்படுகின்றார். திருத்தொண்டர் காலம் எட்டாவது நூற்றாண்டு. அதற்கு முன்னே இவர் இருந்திருக்கின்றார். திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் தம் தேவாரத்தில் இவரைப்பற்றிக் குறிப்பிடவில்லை. குறிப்பிடாததால், இவர் அவர்கள்காலத்திற்கு முன் இருந்திருக்கலாம். திருமூலர் திருமந்திரத்திலே, திருநாவுக்கரசர் என்ற இச்சொல் ஒரு இடத்தில் வருகிறது; ஆகையால், அந்தச் சொற்றொடரை எடுத்து, திருநாவுக்கரசருக்குப் பிற்காலத்தில் பட்டமாகச் சூட்டியிருக்கலாம் என்றுகூடச் சொல்லுகிறார்கள். அது எங்ஙனமாயினும் திருமுறை நாயன்மார்களுக்கு முந்தியவர் திருமூலர் என்றே தெரிகிறது.

இவர் காலத்தில் நாட்டின் நிலைமை எப்படி இருந்தது என்பதை ஆராய்தல் ஓரளவு இவரது காலத்தை அறிவதற்குத் துணையாக இருக்கும். அரசர்களைப்பற்றி இவர் சொல்லும்போது, அரசர்கள் மக்களை அந்தந்தச் சமயத்திலே நிறுத்தி வைக்க வேண்டும்; அப்படி ஒரு சமயத்திலிருந்து இன்னொரு சமயத்திற்கு இழுத்துச்சென்றால், மறுமையில் அரன் தண்டிப்பான்; இம்மையிலே அரசன் தண்டிக்கவேண்டும் என்று சொல்கிறார். அதிலிருந்து அந்தக் காலம் ஜைனர்கள், பௌத்தர்கள் ஆட்சி மிகவும் வலுத்திருக்கிற காலமாக இருந்திருக்கவேண்டும். கி. பி. இரண்டாவது முதல் நாலாவது நூற்றாண்டுக்கு இடைப்பட்ட காலமாக இருக்கவேண்டும். பல்லவர் வருகைக்குச் சிறிது முந்தியதாக இருக்க வேண்டும். ஆனால், இவர் ஜைனர்களையோ பௌத்தர்களையோ நாயன்மார்களைப்போல் கண்டிக்கவில்லை.

அன்று ஒரு அரசு இருந்தது. அந்த அரசு வேற்றுச்சமயத்து அரசு. அந்த இடத்திலே இவர் செய்யவேண்டிய கடமை என்ன? ஒரு அரசன் செய்யவேண்டியது, ஒரு சமயத்திலிருந்து இன்னொரு சமயத்திற்கு மதம்மாற்றுவதற்கு விடக்கூடாது. அங்கே சைவ சமயத்திலிருந்த பெருவாரியான மக்களைச் சமண, பௌத்த மதங்களுக்கு இழுத்துச் செல்வது கூடாதென்று இவர் சொல்கிற வகையிலே அரசருடைய கடமையைச் சொல்கிறார். அதுமட்டுமல்ல; பூசை முடங்காதபடி பார்க்கவேண்டியதும் அரசருடைய கடமையே. இல்லாவிட்டால் நாட்டில் பஞ்சம் வந்துவிடும்; அரசாங்கம்

அழிந்துவிடும் என்றும் அவர் எச்சரிக்கை செய்கிறார். இதிலிருந்து கோயில் முடங்குவதற்கு வேண்டிய அரசாட்சி அன்று இருந்திருக்கவேண்டும்; அதற்கு ஒரு எச்சரிக்கை விடுகிறார் என்ற நிலைமை தெரிகின்றது. இந்துசமயம் என்று சொல்லும் சமயத்திலே கட்டுப்பாடில்லாது, குழம்பி இருந்தது என்றும் தெரிகிறது. பிராமணர்களைச் சொல்லுகிறபோது, பிராமணர்கள் நிரம்பிய ஒழுக்கமுடையவர்களாக இல்லை என்று வருந்துகிற முறையில் சொல்கிறார். உண்மையான பிராமணர்கள் இப்படிதான் இருக்கவேண்டும்; இவர்கள் இப்படி இல்லை என்ற குறிப்பு அங்கே நன்கு தெரிகின்றது. ஆகவே, இந்து சமயத்தின் தலைவர்கள் என்று கருதப்பட்டவர்கள் சமயத்தை நன்றாகக் காக்கவில்லை. இத்தகைய சூழ்நிலை பல்லவர்காலம் வருவதற்கு முன்னாலே, பிறமதத்தவரின் ஆட்சி வரத்தொடங்கிய காலத்தில் இருந்தது. அப்பொழுது இந்த நூல் செய்திருக்கலாம் என்று ஊகிக்க இடமிருக்கிறது.

திருமூலர் திருமந்திரத்தைப்பற்றிப் பெரிய ஆராய்ச்சிகள் செய்யவேண்டியிருக்கிறது. அடியேனுடைய ஒரு தகுதியைப் பற்றி அன்பர் திரு. தண்டபாணிதேசிகர் அவர்கள் குறிப்பிட்டார்கள். நான் ஏதோ சில திருமந்திரப்பாடல்களை ஆங்கிலத்திலே மொழிபெயர்த்தேன் என்பதைக் குறிப்பிட்டு, அதுதான் இங்கு நான் இம்மகாநாட்டில் தலைமை தாங்குவதற்குத் தகுதியாயிருந்தது என்று அவர் சொன்னார். இப்படித் திருமூலர் எழுதின சில பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்ததற்கே எனக்கு இவ்வளவு பெருமையைக் குருமகா சந்நிதானம் அவர்கள் இன்று செய்யும்படியான நிலைமை ஏற்படுமானால், திருமூலர் திருமந்திரத்தை நன்றாகப் படித்து, யோக சாத்திரத்தை நன்றாக அறிந்து வழிபடுகிறவர்களுக்கு என்னபேறு கிடைக்காது என்று நீங்களே இப்பொழுது நன்றாகத் தெரிந்துகொள்ளலாம்.

திருமந்திரம் கடினமான நூல் என்றே அதன்பக்கத்தில் பலர் போகாமல் இருந்தார்கள். எனக்கு வாழ்க்கையிலேயே ஒரு பழக்கம் உண்டு. அதாவது, எது கடுமை என்று பிறர் சொல்கின்றார்களோ அதை நாம் சிறிதுதொட்டுப் பார்ப்போம் என்பது. இந்தமுறையிலே திருமந்திரத்தைப் பிறர் அணுகாமல் இருக்கிற நிலைமையில் நாம் அணுகிப் பார்ப்போம்; எந்தப் பாட்டுக்குப் பொருள் நமக்குத் தெரியாமல் இருக்கின்றதோ அதற்குப் பலரைக் கேட்டுத் தெரிந்துகொள்வோம்; சபைகூட்டி சர்ச்சை செய்வோம்; ஏன் இத்தகைய ஒரு அரிய தமிழ் நூலை உலகம் தெரியாத முறையில் வைத்திருக்கவேண்டும் என்ற உந்துதல் காரணமாகத் திருமந்திரப் பாட்டுக்களை மொழிபெயர்க்கத் தொடங்கினேன். திருப்பனந்தாள் மடத்து அதிபர்கள் அதைத் தங்கள் ‘குமரகுருபரன்’ இதழில் வெளியிட முன்வந்தார்கள். அமெரிக்காவில் உள்ள ஹார்வர்டு யூனிவர்ஸிடியார் வேதங்களையும் உபநிஷதங்களையும் ஆங்கிலத்திலே மொழிபெயர்த்து, தொகுதிதொகுதியாகத் தந்திருக்கிறார்கள். அதுபோல, திருமந்திரத்திலுள்ள ஒன்பது தந்திரத்தையும் அப்படிப் பல தொகுதிகளாகக் கொண்டுவந்து, ஒவ்வொரு தொகுதிக்கும் அதற்குவேண்டிய முகவுரை, குறிப்புரை, ஆராய்ச்சியுரை முதலியன ஆங்கிலத்திலேயே எழுதி, அந்த நூலை வெளியிட்டு, மேல்நாட்டவர்களுக்கும் மற்றவர்களுக்கும் தெரிவிக்கவேண்டும் என்பது என்னுடைய மிகத்தாழ்மையான கருத்து. எந்தக்காலத்தில் கைகூடுமோ? ஈடேறுமோ? அறியேன். ஆனால், குருமகா சந்நிதானத்தினுடைய திருவருள் கிடைத்ததிலிருந்து என்னுடைய முயற்சியானது விரைவில் பயன்படும் என்ற உறுதி இருக்கிறது. மீண்டும் குருமகா சந்நிதானத்திற்கு என்னுடைய வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு இத்துடன் என்னுடைய உரையை முடித்துக்கொள்கின்றேன்.

'சிவவேடம்'

சித்தாந்த சரபம், மகாமகோபாத்தியாய,

## சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள்

பழநி.

கருணைக்கடலாகிய மகாசந்நிதானம் அவர்களுடைய திருமுன்பு விஞ்ஞாபனம். இந்தத் திருமந்திரமாநாட்டிலே மிகமிகத் தொன்மையும் நன்மையும் ஆகிய இந்தப் பத்தாவது திருமுறையின் நுட்பப்பொருள் களையெல்லாம் நமது சைவ மக்கள் நன்கு உணர்ந்து பயன்பெறவேண்டுமென்ற ஒரு பெரிய கருத்தோடு, ஞானப் பெருநூலை நெடுங்காலமாகச் சைவமக்கள் ஆராய்ந்து உணரக்கூடிய வாய்ப்பு குன்றி வருகின்ற இந்த நாளிலே நாம் கவனம் செலுத்த வேண்டும் என்ற திருவுள்ளங்கொண்டு, நுட்பப்பொருள்களையும் தத்துவப்பொருள் களையும் யோகசாஸ்திர ஞான சாஸ்திர முறையில் இந்தப்பெருநூலை ஆராய்ந்து திருமந்திரத்தின் பொருள் காண்பதற்குச் சந்தர்ப்பம் தந்து, நம்முடைய கவனத்தை அப்பெருநூலிலே செலுத்தும்வண்ணம் ஊக்குவித்து, ஆங்காங்கு நாம்காணுகின்ற பொருள்களையெல்லாம் தொகுத்து ஒரு சிறந்தநூலாக வெளியிட்டு, பின்பு அதிலே காணப்படுகின்றபொருள்களிலே மிகத்தலை சிறந்தபொருளை வடித்தெடுத்து, இன்னும் ஆராய்ந்து ஆராய்ந்து காணும்வகையிலே சிறந்ததொரு முயற்சியை மேற்கொண்டா லல்லது அந்த ஞானப் பெருநூலுக்கு விரைவிலே பொருள் காணுதல் அரிது. இப் பரிபாஷை நூலிலே நம்முடைய சிந்தனையைச் செலுத்தி, ஆங்காங்கு காணும் பல்வேறு பொருள்களை நாம் கற்று உய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு இந்தத் திருமந்திர மகாநாட்டைக் கடந்த நான்கு ஆண்டுகளாகநடத்தத் திருவுளம்கொண்ட குருமகாசந்நிதானத்தின் திருவடிக்கமலங் களில் மனதைச் சிந்தித்து, இங்கே சிறியே னுக்குக் கொடுத்துள்ள தலைப்பு ஆறும் தந்திரத்திலுள்ள "சிவவேடம்" என்ற பகுதி சிந்தனைக்குரியதாக அமைகிறது.

ஆறும் தந்திரம் 14 தலைப்புக்களோடு கூடியது. அதிலே 12 ஆவது பகுதி 'சிவ வேடம்' என்பது. இந்தத் தலைப்பு நம் முடைய அன்புக்கும் கவனத்திற்கும் உரிய மிகத் தலைசிறந்ததாக அமைந்திருக்கிறது. இந்தப் பகுதி நமக்கு இம்மையிலே உறு துணையாக இருந்து, பயன்தரத்தக்கதாக இருக்கின்றது. மானுடப்பிறவி நன்றாக நிலைக்கச் செய்வதற்கு வாய்ப்பாக இந்த யோகநூல் மருத்துவத் துறையோடு பல நல்ல பகுதிகளைக்கொண்டு, சிந்திக்கக் கூடியதாக, ஞானப்பேற்றினைப் பெருக்குவ தற்கான மானுடப் பிறவியை உய்விப்ப தற்கான ஒரு சாதனமாக அமைந்திருக் கிறது. பல துறைகளிலே காணவேண்டிய பொருள்கள் அமைந்திருப்பதினாலே, அந் தந்தத் துறைகளிலே தேர்ச்சி பெற்றவர் கள் சுலபமாகப் புலப்படுத்தக்கூடிய பரி பாஷை வாயிலாக அன்றி அந்த நூலைச் சொல்ல இயலாது என்பதனைத் தெரிந்து கொள்ளவேண்டும். அப்படியில்லாமல், பரி பாஷைகளை மக்கள் இந்தக்காலத்திலே அப்படியே தெரிந்துகொள்வது மிகக் கஷ்ட சாத்தியமாக இருக்கிறது. இதனாலே இந்த நூலிலே வருகின்ற பரிபாஷைகளுக்குப் பல பொருள்களில் தேர்ச்சிபெற்ற ஆசிரி யர்களைக்கொண்டு, இந்நூலைப்பற்றிச் சிந் திக்கச்செய்து, குறிப்பாகச் சில சொற்களை விளங்கச்செய்தால், இந்நூலுக்கு விளக்கம் காணுவதற்கு அது சிறிது உதவியாக இருக்கும். பெரும்பான்மையான ஒரு சில சொற்களைமட்டும் நாம் வைத்துக்கொண்டு பொருள் காணுதலைவிட, பலமுறைகள் படித்து, ஆங்காங்கே வருகின்ற குறிப்புக் களைக் கவனத்திலே வைத்துக்கொண்டு, குறிப்பாகத் தரப்படுகின்ற விளக்கத்தைக் கொண்டு பொருள் காணுதல் ஒருவாறு விளக்கம் காணுவதற்கு உதவியாகும்.

இந்தக் கண்ணோட்டத்தோடு ஓரளவு சிந்தித்துப் பார்த்தால் பொருள் சற்று எளிதாக விளங்கும். அந்தக் கருத்துக்களை நமது தலைவர் போன்றவர்களிடத்திலே ஞாபகப்படுத்தினால், முன்னமேயே அந்த உணர்ச்சியில் தலைப்பட்டவர்களுக்கு ஒரு நினைப்பூட்டக்கூடியதாக இருக்கும். ஆகவே அந்தக் கண்கொண்டு பார்க்கின்றபோது, நம்முடைய மனத்திலே இந்தக் குறிப்புச் சொற்களை இப்படி விளக்கியிருக்கின்றார் என்பது புரியும். ஆகவே, இப்படிச் சில குறிப்புக்களைக்கொண்டு ஓரளவு பரிபாஷை களைப் புரியவைப்பது, பரிபாஷைகளோடு ஒரு நூலைச் சொல்வது அந்நூல் முற்றுப் பெறுவதற்கு ஏதுவாகும்.

எப்பொழுதுமே ஒரு பெருநூலைப் பரிபாஷை கலவாதுசொல்லுதல் அந்நூலினுடைய உயர்வுக்குத் தடையாக இருக்குமென்பதை அந்த நூலைப் பயின்றவர்கள் அறிவார்கள். ஆசாரியர்களிடத்திலே பயிலுகிறபோது இந்தப் பரிபாஷைகளுக்கு விளக்கம் காணுவது சுலபமாகும். ஆகவே, அதற்குரிய அடிப்படையான நூல்கள் பல துறைகளாக அமைந்திருப்பதால், அதை நாம் பொறுத்திருந்து அறிந்துகொள்ள வேண்டும். ஏனென்றால், இப்படி கடினமான சொற்கள்கொண்ட ஒருநூல் கடினமான பரம்பரையைச் சார்ந்தவர்களாலேயே வந்திருக்க வேண்டுமென்ற கருத்தும் நிலவி வருகிறது. அவர்கள் எந்த பரம்பரையில் தோன்றினார்கள் என்று கருத்து அறியப் புகுதல் நூலை அறிகின்றமுறைக்கே பெருந் தவறு. அவர்கள் தோன்றிய பரம்பரைக்கும் நூலுக்கும் நெருங்கிய உறவு இருக்க வேண்டும் என்றும், அதுகொண்டுதான் அவருடைய நூலை ஆராயவேண்டுமென்றும் சொல்வது பொருந்தாது. அப்படி ஆராய்வது ஞானசம்பந்தருடைய இளமைக்கு ஏற்ற கருத்துக்களே அவருடைய திருப்பாடல்களில் இருக்கவேண்டுமென்று கருதுவதுபோலாகும். இப்படி ஒவ்வொரு நூலையும் கருதத் தலைப்பட்டால் வேடர் குலத்தில் தோன்றிய கண்ணப்பருடைய ஞான உணர்வுக்கும் பக்தி உணர்வுக்கும் நெருங்கிய தொடர்பைக் காண, பல தலைமுறைகள் காத்திருக்கவேண்டும். அதிர்ச்சி, எழுச்சி, உணர்ச்சி போன்ற அடுக்குச் சொற்களை எப்படி வியந்து பாராட்டுகிறார்களோ அந்த நிலையில் சிந்தித்தால், இன்னும் அரிய கருத்துக்கள் தோன்றுவதற்கு வாய்ப்பில்லாத பரம்பரையில் தோன்றியவர்களிடத்திலே இப்படிப்பட்ட ஞானம் உதித்ததல்லவா பெரிய விஷயம்? என்பது தெரியவரும். அதற்கு ஏற்ற சொற்கள் பொருள்களிலே இருக்க வேண்டுமென்று கருதியே நம்முடைய சைவ சமய உண்மை இக்கருத்தை வெளிப்படையாகச் சொல்லுகின்றது. தோன்றிய ஞானம் நிலைபெறுவதற்கு, சூழ்நிலையைத் துணையாகக்கொண்டிருக்கின்றதேயல்லாமல் அந்த ஞானம் எங்தெந்த இடத்திலே தோன்றும் என்று வரையறை செய்யப்படவில்லை. உயர்ந்த மரபின் காரணமாகவோ அவரவர்களுடைய இளமை முதுமை காரணமாகவோ இவை ஏற்படுவதில்லை. ஞானம் தோன்றுவதற்கு வாய்ப்பு அவரவர்களுடைய தவப் பயனே காரணமாகும். தவத்தாலேயே ஞானம் புலப்படும். தவத்தாலே ஞானம் ஏற்படுவதேயொழிய குலத்தாலே ஏற்படுவது அல்ல. ஞானம் தலைப்படுவதற்குக் குலம் தடையாக இருக்காது. ஆகவே, அவர்களுடைய நூலைச் சிந்தித்து, அவர்களுக்குத் தத்துவஞானமும் யோகசித்தியும் இவ்வளவு பெருநூலை அருளிச்செய்யக் கருவியாக இருந்தது என்று கருதவேண்டும். பெற்ற ஞானத்தைக் காப்பதற்கே குலம் துணையாக இருக்கும். சைவ நூல்களிலே குலநலன் போற்றப்படுவதற்கும் இதுவே காரணம்.

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே"

என்ற அவருடைய வாக்காலும் அந்தக் கருத்து நன்கு புலப்படும்.

இறைவனுடைய கட்டளையாக இருந்தது, இறைவன் தன்னை அப்படிப் பணித்தான், அந்த ஆணை நிறைவேற்றப்பட்டது என்றே அவர் இப்பாடலில் கூறுகின்றார். இந்தத் தத்துவம், யோகம் ஞானம் வாயிலாக நன்றாகப் புலனாகும். சமயாசாரியர்களுக்கு முற்பட்டவர் திருமூலரேயாயினும், சமயாசாரியர் பெருமையைச் சேக்கிழார் சுவாமிகள் எடுத்துக்கூறும்போது, நால்வருடைய ஞானம் மக்களிடையே ஓரளவு கேள்வி வாயிலாக நிரம்பப் பெற்றவர்களாகி விடுகிறார்கள்.

சமயாசாரியர்களுக்கு முன்னவராகத் திருமூலர்பெருமான் இருப்பினும் சமயாசாரியர்களுடைய இயல்பை வைத்து, அவர்கள் பெற்ற சிறந்த யோக ஞானத்தைப் புலப்படுத்தி, இப்படிப்பட்ட ஒரு நூல் திருமூலருடைய திருமந்திரம் என்று நமக்கு உணர்த்துவாராய், சேக்கிழார்சுவாமிகள் சிதாகாசமயமாகிய சிதம்பரத்திலே சுந்தரர் தரிசித்தபோது அருள் ஞானம் பெற்று அதன் வாயிலாகத் தில்லை நடராஜப் பெருமானைத் தரிசித்தார் என்பதனை "ஐந்து பேர் அறிவும் கண்களே கொள்ள......" என்ற திருப்பாடலால் புலப்படுத்துகிறார். அதே அனுபவத்தைத் திருமூலரும் பெற்றார் என்பதனை, "வவ்விய மெய்யுணர்வின் கண் வரும் ஆனந்தக்கூத்தை" என்ற பாடலால் புலப்படுத்தித் திருமூலருடைய அருள்ஞான நூலைத் தெளியச்செய்கிறார். இத்துணைத் தத்துவ ஞானமும் அருள் ஞானமும் கைவரப்பெற்றவர் திருமூலர் என்பதை நாம் எஞ்ஞான்றும் மறந்துவிடாது போற்றிக்கொண்டு, அந்தத் திருமுறைக்குப் பொருள் காணுதல் நமக்குச் சிறந்த கடனாகும்.

வேதாகமங்கள் மந்திரம் எனவும், தந்திரம் எனவும் பெயர்பெறும். அந்த இரண்டும் ஸ்தூல சூட்சுமமாக ஒரே பொருளை உணர்த்துவன. அவைகளின் சாரமே திருமந்திரம் ஆகும். அவற்றுள் மந்திரம் வேதமும், தந்திரம் சிவாகமுமாம். இவற்றைப் புலப்படுத்தவே இப்பெருநூல் திருமந்திரம் எனவும், இவற்றின் உட்பகுதி ஒவ்வொன்றும் தந்திரம் எனவும் பெயர் பெறுகிறது. சைவ சித்தாந்தத்திலுள்ள ஒரு பேறு ஞானமாகும். அந்த ஞானத்தைப் பெறுவதற்குச் சாதனம் தவமாகும். அந்தத் தவம் சரியை, கிரியை, யோகம் எனப்படுவன. இதனையே பரம சாதனமாகத் திருமூலரும் கொண்டு, இந்த அரிய சாதனத்தைக் கடைப்பிடித்து ஒழுகுதல் எல்லோருக்குமே அரிது ஆதல் கருதி, யோகத்தின் வகையாக அட்டாங்கயோகம் முதலியவைகளை எடுத்து விளக்கி, அதில் சிவயோகமே மிகச்சிறந்தது என எடுத்துக் காட்டுகின்றார். தலைவனைப்பற்றிய தெளிவு இல்லாத பல யோகங்கள் இருந்த அந்தக் காலத்தில் அவர் சிவயோகத்தை எடுத்துக் காட்டுவது எவ்வளவு சிறப்புடையது.

அவற்றோடு, கற்பம் முதலிய முறைகளினாலும் இன்னும் வேறு பல சாதனங்களினாலும், உடம்பை நிலைக்கச்செய்வதற்கு உரிய நெறிகளை எல்லாம் எடுத்துப் புலப்படுத்தி, அவ்வுடம்புகொண்டு ஈட்டப்படும் தவநிலையை மேற்கொள்ளவேண்டுமென்று வற்புறுத்துகின்றார். இவைகளெல்லாம் ஒருவாறு திருமந்திரத்தைப்பற்றிச் சிந்திக்கும் சிந்தனைக்கு அடிநிலையாக அமையும் என்று கருதிச் சிந்தித்து, இனி எடுத்துக்கொண்ட தலைப்பை நினைவுறுவோம்.

சிவவேடம் என்ற பகுதி ஆறாவது தந்திரத்திலே அமைந்தது. அது யாமளம் என்ற தந்திரத்தின் திரண்டபொருளாகும். அது 14 தலைப்புக்களை உடையது. அவற்றுள்ளே முதலாவது சிவகுருதரிசனம். மேலே கூறிய சாதனங்களெல்லாம் குரு அருளால் அன்றி நமக்கு அமையாது என்பதை அந்தத் தலைப்புப் புலப்படுத்தும். அதனால் சித்திக்கின்ற ஒருசிறந்த பேறு திருவடிப்பேறு ஆகும். ஆதலால், அது இரண்டாவதாக அமைந்தது.

பெறுவானும் பேறும் அதனைத் தருவானும் ஆகிய மூன்றினையும் வரையறைப் படுத்தினாலன்றிச் சைவநலம் ஒன்றும் சித்திக்காது. ஆதலினாலேயே "ஞாதுரு ஞான ஞேயம்" என்ற தலைப்பு தரப்பட்டுள்ளது. அங்ஙனம் நெறிப்படநின்று உணர்த்தவே நிலையில்லாத பொருளிலேயிருந்து நீங்குதல் புலப்படும்; ஆதலினாலே, துறவு என்னும் தலைப்பில் புலப்படுத்தப்பட்டுள்ளது. அங்ஙனம் நிலையாத பொருளினின்றும் நீங்கி, நிலைத்த பொருளாகிய சிவத்தைச் சாரவே. அச்சிவபெருமானது அருட்பேறு சித்திக்கும். அதனால் வரும் ஞானமே அருள் ஞானம் என்பது உணர்த்த "அருளுடைமையின் ஞானம் வருதல்" என்ற தலைப்பு வைக்கப்பட்டுள்ளது.

அதன் பின்பு, பெற்ற ஞானத்தை இழந்து போகாமல் காத்துக் கொள்ள வேண்டுமென்ற பகுதி சிவஞானபோதத்திலே 12வது சூத்திரத்தில் வருகிற பெரிய விஷயம். 10, 11வது சூத்திரத்தில் நாம் பெற இருக்கின்ற சிவப்பேற்றை ஓரளவு உணர்ந்தால், அதுவே பெறுகிற சிவப்பேறும். ஜீவன்முக்தர்களிடத்தில் வாசனாமலம் நீங்கும்வரையும் அவர்கள் சிறந்த தான நீதியின்கண் நிற்கவேண்டியவர்கள் ஆகிறார்கள். அந்தநீதியாவன சிவஞானிகளோடு கூடுதலும், அங்ஙனம் அல்லாதாரோடு கூடாமையும், சிவ வேடங்கள் சிவலிங்கங்கள் இவைகளை நினைந்து வழிபடுதலுமாம். இது அவர்களுக்குரிய கடப்பாடாகும். எங்கும் வியாபகமாக உள்ள சிவபெருமானை வெளிப்படப் புலப்படுத்துவது சிவவேடங்கள் ஆம். சிவவேடம் அஞ்ஞானிகள் தம்மைவந்து சேராவண்ணம் காப்பது. திருநீறு, காப்பு கவசம் எனப்படும்.

> "கங்காளன் பூசும் கவசத் திருநீறு"

என்று திருமூலரே இதனைப் புலப்படுத்துகிறார். இங்ஙனம் சிவபக்தர்களைக் காப்பதும், சிவபெருமானை நினைப்பூட்டுவதுமே சிவவேடங்களாகும். அங்ஙனம் சிவவேடம் சிவபக்தர்களையும் சிவபெருமானையும் நினைப்பூட்டுவது, சிவபக்தர்களை இன்னும் மகிழ்விப்பது என்பவையெல்லாம் பெரியபுராணத்தில் சேரமான்பெருமாணுயனார் புராணம் நன்குணர்த்தும். சேரமான்பெருமாணுயனார் யானைமீது பவனி வந்தபோது, ஆடை வெளுக்கிற வண்ணான் ஒருவன் உவர்மண்ணால் உடல்முழுவதும் வெண்ணீறு சண்ணித்த மேனியானைப்போல் காணப்பெறவே, அவனது காலில் சேரமான்பெருமாள்நாயனார் வீழ்ந்துவணங்கினார். வண்ணான் 'அடியேன் அடிவண்ணான்' என்று கூற, "அடியேன் அடிச்சேரன்" என்று வண்ணானது அடிகளில் மீண்டும் வீழ்ந்து வணங்கி, "திருவடிவத்தை நினைப்பித்தீர்; வருந்தாதே போம்" என்று சேரமான் அருளிச்செய்தமையால், சிவவேடம் சிவநினைப்பாகும் என்ற உண்மை நன்கு புலனாகிறது.

> "அருளால் அரனுக் கடிமைய தாகிப்
> பொருளாந் தனதுடல் பொற்பதி நாடி
> இருளான தின்றி இருஞ்செயல் அற்றோர்
> தெருளாம் அடிமைச் சிவவேடத் தோரே"

இங்கு முதலில் வரக்கூடிய "அருளால்" என்பதற்குக் "குரு அருளால்" என்று பொருள். இங்ஙனம் காணுதல் சிவஞானிகளுக்கே உரிய பேரியல்பாகும். அங்ஙனம் சிவஞானிகளைக்காணுதல் எல்லோருக்கும் அரிது ஆதல்பற்றிச் சிவ வேடங்களைக் கொண்டு வழிபடுதல் இன்றியமையாததாகின்றது. சிவஞானிகளிடத்தே காணப்படினும், சிவஞானத்தைப் பெறுவதற்கு ஏதுவாகிய நெறிகளிலே செல்வோரிடத்திலும் காணப்பெறினும், சிவவேடம் போற்றப்படுவதே. அத்துணைச் சிவவேடமானது, அதன்மேலே பற்றுவைத்து ஒழுகுகின்றவர்களிடத்தே காணப்படுமாயின், அந்த வேடம் தனக்குரிய நெறியிலே கொண்டு செலுத்தும் என்பது ஒருதலையாக உய்த்துணரற்பாலது. ஆனால், "அந்த வேடம் மட்டுமே கொண்டு, அதற்கு மாறான

நெறியில் செல்கிறவர்களிடத்திலே அந்த வேடம் காணப்படுமாயின், அரசன் அவர்களை ஒறுத்து நெறியிலே நிறுத்துதல் கடனாகும்" என்பது திருமூலதேவருடைய கருத்தாகும்.

இத்துணைச் சிவவேடங்களை மெய்ப் பொருள் எனக் கொண்டு ஒழுகுகின்றவர்கள், அந்த வேடம் எவரிடத்தே காணப் பெறினும், அந்த வேடத்தைக்கொண்டு சிவம் எனவே தேறி வழிபடுவாராயின் அவர் தனக்குரிய பலனை ஒருபொழுதும் இழந்துபோகமாட்டார். இதற்குப் பெரிய புராணத்தில் பேசப்பட்ட மெய்ப்பொருள் நாயனார் புராணமே சிறந்ததொரு சான்றாகும் என்பர். இங்ஙனம் சிவ வேடங்களை சிவன் நினைவாகவே நினைந்து வழிபடுதல் என்ற நியமம் குருஅருளைப் பெற்றவர்களுக்குரிய சிறந்த நியதியாகும். இதனைப் புலப்படுத்தவே, "அருளால் அரனுக்கு அடிமையதாகி" என்று திருமூலராலே சொல்லப்பட்டது. விபூதி அணிதல், ருத்திராக்கம் தரித்தல் ஆகிய இரண்டும் சிவ வேடம் என்று திருமூலரால் சொல்லப்பட்டது. விபூதி ருத்திராக்கங்களை அணிந்த சிவனடியார்களைச் சிவன் எனவே தேறிக் குலச்சிறைநாயனார் வழிபட்டமை நம் திருமுறையிலே சொல்லப்பட்டுள்ளது. அந்த விபூதியே பரமசிவனுடைய திருவருள் விளக்கத்திற்கு ஏதுவானது என்றும், சிவ ஸ்வரூபம் என்றும் உள்ளே தியானித்த பின் வெளியே அதனைப் பூசுதல்வேண்டும் என்றுசொல்லி, அதற்குரிய தியானங்களையும் சிவாகமங்கள் கூறுகின்றன. அந்த உண்மையை,

> "ஆற்றல் அடல்விடையேறும்
> ஆலவாயான் திருநீற்றைப் போற்றி"

என்ற ஞானசம்பந்தர் தேவாரம் விளக்கும். சிவவேடத்தை அறிவிலேசிந்தித்து, அவற்றின் சிறப்பியல்பை உணர்ந்து, புறத்தே வேடத்தைத் தரித்தலே நியதி. அங்ஙனம் உணராது புறத்தே மட்டும் தரித்தல் ஆகாது. அங்ஙனம் வஞ்சமின்றி, புறத்தே மட்டும் தவவேடங்களைத் தரிப்பாராயின், அகத்தே அவ்வேடத்தில் பற்று நிகழ்தலும் கூடும். ஆனால், அகத்தே வஞ்சகம் உடையோராகிப் புறத்தே அந்தவேடங்களைத் தரிப்பாராயின், அவ்வுடல் நீங்கும் போது அவ்வேடமும் நீங்கும் என்ற அளவிலே காலத்தின் அருமை நோக்கி, இத்துடன் நிறுத்திக்கொள்கிறேன்.

> உடலில் துவக்கிய வேடம் உயிர்க்காகா
> உடல்கழன் றல்வேடம் உடனே கழலும்
> உடலுயிர் உண்மையென் றோர்ந்துகொள் ளாதார்
> கடலில் அகப்பட்ட கட்டையொத் தாரே.
>
> —திருமூலர்.

**'யோகம்'**

திருவாவடுதுறை ஆதீன வித்துவான்,

## திரு. தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்கள்,

கடலூர்.

இங்கு எழுந்தருளியிருக்கும் திருவருள் உருவாகிய ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவடிகளைத் திரிகரணங்களாலும் வழிபடுகின்றேன். இங்குக் கூடியிருக்கும் அனைவருடைய திருவடிகளையும் தாழ்ந்து பணிகிறேன். இதுகாறும் நமது ஆகம மூர்த்தியாக விளங்குகின்றவர் பேசியது "சிவ வேடம்". அவருடைய காட்சியும் சிவ வேடம். அடியேன் வைணவ வேடம். சிவ வேடம் இதுகாறும் பேசப்பட்டது. அதனை அடுத்துப்பேச இருக்கிற யான் வைணவ வேடத்தோடு காணப்படுகிறேனே என்று ஒருசிலர் ஐயுறுதலுங்கூடும். அறிவுடைப் பெருமக்களாக இங்கு வீற்றிருப்பவர்கள் அப்படிக் கருதமாட்டார்கள். ஏனென்றால், சைவ, வைணவ ஆசாரியர்கள் திருமண்ணுக்கும் திருநீற்றுக்கும் வேறுபாட்டைக் காணவில்லை.

ஒருவரலாற்றில், திருஞானசம்பந்தர் இந்தத் தலத்திலே திருமந்திரம் என்ற நூல் இருக்கின்றதென்று காண்பித்தார் என்று நாம் அறிகின்றோம். திருமந்திர வாசனை வீசுகிறதே என்று ஞானசம்பந்தப் பெருமான் இந்த ஸ்தலத்திலே திருவாய் மலர்ந்தருளிய அன்றுதான், திருமந்திரம் என்னும் நூலைத் தேடிப்பார்த்ததாகவும், அது இங்குக் கிடைத்ததாகவும் இத்தல வரலாற்றினால் அறிகிறோம். இருப்பதை அறிவித்தவர் யாவர்? சத்புத்திரர். சத்புத்திரர் ஞானசம்பந்தப்பெருமான். திருஞானசம்பந்தரை ஸ்ரீ சுப்ரமண்யம் என்றும் கூறுவர். இங்கே எழுந்தருளியிருக்கிறவர் திருப்பெயரைக் கொஞ்சம் சிந்திப்போம். இங்கே யாருடைய திருப்பெயர் அமைந்திருக்கின்றது? ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் தந்தை முறையில் இருக்க, ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் திருப்பெயர் அந்தச் சத்புத்திரருடைய பெயராகவே அமையப் பெற்றிருக்கிறது. எனவே ஒருவாறு அந்த வரலாறு ஐயமாக இருக்குமோ என்று மயக்கமாகி விடாமல் இது மெய்ப்பிக்கிறது என்பதை நாம் உறுதியாகக் கண்டுவிடலாம். திருமந்திரம் என்னும் பொக்கிஷத்தை நாம் எல்லோரும் சிந்திப்பதற்கென்று இந்தப் பரம உபகாரத்தைச் சந்நிதானம் அவர்கள் செய்திருப்பதற்கு எழுமையும் நாம் கடமைப்பட்டிருக்கின்றோம் என்று தெரிவித்துக்கொண்டு, எனக்குக் கொடுத்திருக்கின்ற செய்தியில் செல்லுகிறேன்.

பேச இருக்கும் செய்தி "யோகம்". கருதுகின்றபோதே எனக்கே ஒருயோகந்தான் என்று நினைக்கிறேன். பேசமுடியாத செய்தி யோகம். பேசாநிலைக்குக் கொண்டு போவது யோகம். அதைப்பற்றிப் பேசும்படி ஆக்ஞை பிறந்திருக்கின்றது. ஆதலினாலே பேசத் தெரியாதவனும், யோகத்தைப் பயிலாத ஒருவனும் இந்தப் பெரிய அவையில் பேசுவதற்கு உரியவனாகலாம். இப்படி ஆணை பிறப்பித்திருப்பதைவிட ஒருவனுக்கு என்ன யோகம் வேண்டும்; ஆகையால் இதுவே ஒரு பரமயோகம்.

திருமந்திரமே ஒரு யோக சாஸ்திரம் என்று பெரியோர்கள் சொல்லுவதையும் நாம் நினைவுக்குக் கொண்டுவரவேண்டும். எதனால் இப்படி யோக சாத்திரம் என்று கருதியிருக்கிறார்கள் என்றால், யோகத்தின் முடிவான பயனாயிருக்கின்ற ஞானத்தைப் படிப்படியாக அடைவதற்கான வழிகளை இந்தநூல் சொல்லிமுடித்துவிடுகின்றது.

ஆதலினலே, யோகசாத்திரம் என்று கூறி யிருக்கிருர்கள் என்று நாம் கருதலாம். ஸ்தூலமாகத் திருமந்திரம் முழுவதையும் கருதிப் பார்ப்போமாஞல், முன்ஞல் இருக்கின்ற இரண்டு தந்திரங்களில் ஒருவனை முதலது யோகத்திற்கு முன்னே அடைய வேண்டியதாய் இருக்கிற அடிப்படையான ஒழுக்கத்திற்கு அருகதை ஆக்கிக்கொடுக்கிறது. ஒழுக்கம் அடைந்துவிடுவதற்கு இது போதுமானது. இரண்டாவது தந்திரத்தில் கடவுளிடத்து நம்பிக்கைவேண்டுமென்று பூரண கடவுட்கொள்கை நமக்கு வற்புறுத்தப்படுகிறது. ஒழுக்கமும் கடவுள் நம்பிக்கையும் ஆகிய இரண்டும் யோகத்திற்கு அடிப்படைச் சாதனமாம். இந்த இருதந்திரங்களில் சாதனம் கூறிய பிறகு யோகம் என்றே வெளிப்படையாகப் பெயரைக் கொடுத்துக்கொண்டு, மூன்ருந் தந்திரத்திற்குப் போகின்ருர். மூன்ருந் தந்திரம் அட்டாங்க யோகத்திலிருந்து தொடங்கிக் கொண்டு போகிறது. மூன்ருந் தந்திரத்திலேயிருந்து மற்ற நான்கு தந்திரங்களிலும் பல உட்பிரிவுகளிலும் ஏதாவது ஒரு வகையில் யோகத்தைப்பற்றி ஆங்காங்கே வந்துகொண்டிருக்கக்கூடிய செய்திகளைப் பார்ப்போமாஞல், யோகத்தை எவ்வளவு தூரம் அலசி நமக்கு இந்த ஒரு பிறப்பிலே அறியச்செய்யவேண்டுமென்று, திருமூலர், பலபல முறைகளைச் சொல்லி, எப்படியாவது மானிடரை இந்த ஒருபிறப்பிலேயே யோகிகளாக, தவ யோகிகளாக ஆக்கி, ஞானம்பெறச் செய்துவிடவேண்டுமென்று, தாம் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெறவேண்டும் என்று கருதிச் சொல்லி யிருக்கிருர் என்பது புலப்படும். பின்னே இருக்கிற 8, 9 ஆகிய இரண்டு தந்திரங்களையும் ஸ்தூலமாய்ப் பார்க்கின்றபோது, இவ்வாருன யோகத்தை அடைந்தவரிடையே மலம் தானே நீங்கிவிடும் ஆதலிஞலே, அந்த 8-ந் தந்திரம் மலநீக்க சூட்சுமத்தை உடையதாயுள்ள தந்திரம் என்பதும், சிவப்பேறு என்ற சூசகத்தலைப்புகளை அமைத்து 9 ஆம் தந்திரம் உள்ளதென்பதும், எனவே திருமந்திரநூல் ஒரு யோக சாத்திரம்போல் அமைந்திருக்கிறது என்பதும் பருப்பொருள்தன்மையிலே தெரிய வரலாம்.

நமக்கெல்லாம் தேவையாக இருக்கும் யோகம் என்ன என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். யோகம் என்னும் சொல்லுக்குத் தொடர்புசெய்வது, தொடர்பாய் இருப்பது என்பது பொருள். ஆகையால், நமக்கு என்னயோகம் தேவையாக இருக்கிறது என்பதைச் சிந்திக்கவேண்டும். அந்த யோகத்தை, சைவ சமயத்தைக் காட்டிலும் தெளிவாக எந்தச் சமயமும் எடுத்துக் கூறவில்லை என்று பெரியோர்கள் சொல்ல அடியேனும் கேட்டிருக்கின்றேன். என்ன எடுத்துச் சொல்லியிருக்கிருர்கள் என்பதற்கு சிறு உதாரணம்:—

இதோ இக்கடிகாரம் மேஜைமேலிருக்கிறது என்று நான்சொல்கிறேன். ஆஞல், இப்படி நான் சொல்லும்போது, ஒருசிலர் தடுக்கவும் கூடும். மேஜைமேல் விரிப்பு இருக்கிறது; அதன்மேல் கடிகாரம் இருக்கிறது என்று சொல்லத் துணிவார்கள். உண்மையில் இந்த விரிப்பின்மேலேதான் கடிகாரம் இருக்கிறது. விரிப்பே கடிகாரத்தைத் தாங்குமா என்று சற்று யோசனை செய்தால், மேஜைதான் விரிப்பையும் தாங்கிக்கொண்டு இந்தக் கடிகாரத்தையும் முறையாய்த் தாங்கிக்கொண்டிருக்கின்றது என்ற முடிவுக்கு வந்துவிடலாம். கடிகாரத்திற்கு யோகம் உள்ளது. என்னயோகம்? மேஜையிஞல் தாங்கப்பட்டுள்ள யோகம். மேஜையோடு நேராய்த் தொடர்பு இல்லாதபடி விரிப்பாகிய தடையை அது பெற்றிருக்கிறது. அதுபோலவேதான் ஆன்மாக்களாகிய நமக்கு ஒரு யோகம் அடித்துக் கொண்டிருக்கிறது. என்ன யோகம்? சிவநெறியே தொடர்பு பெற்றிருக்கக்கூடியவர்களாக ஆவதற்கு இடையிலே ஏதோ ஒரு

விரிப்புப்போன்ற (மறைப்பு) தடை இருக்கிறது. இந்தத் தடையை நாம் நீக்கிவிட்டால் கவலையற்று இருக்கலாம் என்று வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார் நமது திருமூலர்.

ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை
நீறிட்ட மேனி நிமிர்சடை நந்தியைப்
பேறிட்டென் னுள்ளம் பிரியகி லாவே.

ஆற்றுமணலை ஆறே சுமந்துகொண்டிருப்பதுபோல், எம்பெருமானாகிய சிவபெருமான் ஆன்மகோடிகள் அனைத்தையும் தானே தாங்கிக்கொண்டிருக்கிறான். இந்த உறுதியான எண்ணம் நமக்குப் படியவேண்டும். எப்போதும் சிவத்தோடு நேரே தொடர்புடையவராக ஆவதற்கு வேண்டிய யோகத்தைத்தொடரவேண்டும். இந்த நம்பிக்கை முதலில் வரவேண்டும். சிவத்தோடுதான் நாம் தொடர்புகொண்டிருக்கிறோம்; ஆனால், நம் எண்ணத்தில் அறியாமை இருப்பது நீங்கவேண்டும். குறுக்கே இருக்கிற அறியாமை என்ற விரிப்பைநீக்கவேண்டும். விரிப்பை எடுத்துவிட்டால், அறியாமை - மாயை - பாசம் அகலும். விரிப்பை அகற்றிவிட்டால் சிவத்திற்கும் நமக்கும் நேரான தொடர்பு உண்டாகும் என்று திருமூலர் கூறுகின்றார். இடையிலே இருந்து மறைத்துக்கொண்டிருக்கும் தடையை எவ்வாறு நிவர்த்தி செய்வது என்பதைத் தத்துவரீதியாகச் சுருக்கமாக விளக்கலாம். மனம் என்ற மாயை தடையாக இருக்கிறது. அந்தத் தடையை யோக நெறியால் நீக்கமுடியும். மனத்தை அடக்குவதற்குச் சில உபாயங்களைச் சிந்திக்கலாம். வாயுவை அடக்கினால் மனமும் அடங்கும் என்று சொல்லப்படுகிறது. அந்த மனத்தை எப்படி அடக்குவது? ஓடுகிற தண்ணீரில் பல துரும்புகளும் மிதக்கின்றன. அந்தத்துரும்புகளை நிறுத்தவேண்டுமானால், ஓடுகின்ற தண்ணீரையும் நிறுத்தவேண்டும். "தோயம் நிற்கத் துரும்பும் நின்றிடும்"; இல்லையேல் துரும்பும் தண்ணீரோடு ஓடிக்கொண்டு தான் இருக்கும். அதுபோல், ஓடுகின்ற வாயுவை அடக்கினால்தான் பிராணனோடு பிணைந்து இருக்கின்ற மனமும் நிற்கும். மனத்தை நிறுத்துவதுதான் சிவயோகத்தில் முதலில் பயிலவேண்டிய விஷயம். தாயுமானவரும் இதைத்தான் சொல்கிறார். முதல் சாதனமாவது, வெளியே ஓடுகின்ற வாயுவை உள்ளடக்கிச் சிவத்தை அறியக்கூடிய நிலையிலே மனத்தை நிறுத்திக் கொள்வது. இப்படி படிப்படியாகப் பல படிமுறைச்சாதனைகளைத் திருமூலர் மூன்றாந் தந்திரத்திலே சொல்லிக்கொண்டுபோகிறார். அவ்வளவையும் விரிவுபடுத்திச் சொல்வதற்கு இப்பொழுது நேரமில்லை.

மனத்தை நிறுத்தக் கருதுபவர்கள் அட்டாங்கயோகப்பயிற்சியை மேற்கொள்ள வேண்டும். இதனில் நம் திருமூலர் எட்டு விதப் படிமுறைகளை நமக்கு விவரித்துக் கூறுகிறார். அவற்றுள் இயமம், நியமம் என்பவை முதல் இரண்டாம். இவற்றிற்குத் தன்னிடத்தில் ஒழுக்கமும் பிறரிடத்தில் நடக்கவேண்டிய ஒழுக்கமும் என்பன கருத்தாம். இரண்டையும் இயமம், நியமம் என்று கொண்டு ஒழுக்கத்தையும் யோகமாகவே முதலில் சொல்லி வைத்திருக்கிறார். இந்த இரண்டும் கைவந்தால்தான், யோக நெறியில் மனத்தை நிறுத்துவதோ, அட்டாங்கயோகநெறியில் ஒருவன் வரிசையாய்ச் செல்லுவதோ முடியும். எப்படி ஓர் உயர்விடம் செல்வதற்கு அடிப்படிகள் வேண்டியிருப்பதுபோல் இயமம் நியமம் என்ற இரு ஒழுக்கமும் முதலில் மனிதனுக்கு வேண்டியிருக்கின்றன. இந்தத் தகுதியை முன்னமேயே உண்டாக்கிக்கொள்ளாமல் ஒருவன் யோகத்தில் நுழைந்தால் அந்த யோகம் சித்திக்காது என்று சொல்கிறார். கையில் கொடுவாள் வைத்திருக்கும் ஒருவனுக்கு ஜீவகாருண்யம் உண்டாக வேண்டுமானால், முதலில் அவன் கொடுவாளை எறிந்துவிடவேண்டும். அதைப் போல மனிதன் தன்னை யோக நெறியில்

கொண்டுசெலுத்திக் கொள்ளவேண்டுமா ஞல் இயமம், நியமம் ஆகிய ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். இதனுல் ஒழுக்க மில்லாமை என்கிற குற்றம்நீங்கும். ஒழுக்க மில்லாதவர்கள் யோகத்தில் தலையிடுவார் களானுல், அது சித்திக்காது. இயமம், நியமம் ஆகிய இரண்டு ஒழுக்கத்தையும் கடைப்பிடித்தால்தான் மனத்தை அடக் கும் முறைக்குச் செல்லமுடியும். மனத்தை அடக்கவேண்டுமானுல், அதற்காக நாம் ஓரிடத்திலும் நில்லாமல் ஓடிக்கொண்டே இருந்தால் முடியாது. நாம் ஓர் இடத்திலே உட்கார்ந்துதான் தீரவேண்டுமேயொழிய இங்கும் அங்கும் ஓடிக்கொண்டிருத்தல் தீதாம். ஆகவே நாம் ஓரிடத்தே உட் கார்ந்து தீரவேண்டும். அவ்வாறு உட்காரு வதில் எத்தனையோ விதமான "உட்காரு தல்" இருக்கிறது. அவைகளையெல்லாம் "ஆசனம்" என்ற பெயரால் "பங்கயம் ஆதி" என்னும் பாடல்களால் திருமூலர் பிரான் வருணித்திருக்கிருர். பிறகு சில ஆசன வகைகளைச் சொல்லி வைத்திருக் கிருர். ஆசனத்தின் எல்லாப் பெயர்களை யும் சொல்லி விஸ்தரிக்கவில்லை. மனத்தை அடக்க நினைத்துவிட்ட மனிதன், ஒரு இடத்தில் நிலையாய் உட்கார்ந்து தீரவேண் டும். ஆசனம் என்பது பலவகைப்படுமாஞ லும், எப்படி உட்கார்ந்தால் மனத்திற்கோ, தேகத்திற்கோ வலி தெரியாமல் இருக் குமோ அப்படி உட்கார்ந்தாலேபோதும். அதுவே சுலபமான ஆசனம் ஆகும்.

ஆசனத்திற்கு அடுத்தபடியாக முக்கிய மான ஒரு விஷயத்தைக் கொண்டுவந்து வைத்திருக்கிருர். முக்கியமான விஷயம் என்னவென்ருல், நாம் இந்த ஒரு பிறவி யிலேயே சிவப்பேற்றை அடைந்துவிட வேண்டுமென்பதுதான். பல பிறவிகள் எடுத்துக்கொண்டு அவதிப்படாமல், உடம் பாகிய கருவி கிடைத்திருக்கும்போதே, அதைக்கொண்டு, பிறப்பின் முடிந்த பயனை அடைந்துவிடவேண்டும் என்பதற்காகத் திருமூலர் பல உபாயங்களைச் சொல்லி யிருக்கிருர். முடிந்த பயன் என்னவென்ருல் சிவப்பேறு; சிவானந்த விளைவு. அதை விளைத்துக்கொள்ள வேண்டும் இந்தப் பிறப்பிலேயே. உடம்பு அதுவரை இருக் குமா? அதுவரை இருக்கத்தான் செய்ய வேண்டும் என்ற கட்டாயத்திற்கு நம்மை இழுத்துச் செல்லுகின்ருர். சிவானந்தப் பேற்றை அடைகின்றவரைக்கும் எடுத்த இந்த உடம்பை இருக்கத்தான் செய்ய வேண்டுமென்று சொல்கிருர். உடம்பை எத்தனை ஆண்டுகள் வைத்திருக்கவேண் டுமோ அதற்கெல்லாம் வழி சொல்கிருர். நரைத்துப்போகும் ரோமம் நரைக்காமல் கருமையாக இருப்பதற்கும், தேகத்தைப் பொன்னுக வைத்திருக்கவும் உபாயங்கள் சொல்லியிருக்கின்ருர். அவைகளைத் திரு மந்திரம் 571, 575 பாடல்களால் அறிய லாம். இவ்வளவு வசதிகள் இருக்கின்றன என்று சொல்லத்தான் "பிராணுயாமம்" என்றபகுதியை வைத்திருக்கிருர். பிராணு யாமம் என்ற பகுதியில் அநேக விஷயங் களைக் கூறியுள்ளார். வாயுவை அடக்கு வது, தடுப்பது போன்றவைகளின் அளவு முறைகளைச் சொல்லி வைத்திருக்கிருர். நம் உடம்பை நீடித்திருக்கச்செய்வதற்கும் பிராணுயாமத்திற்கும் என்ன தொடர்பு இருக்கிறது என்ருல், உண்மையாகவே அதிகத் தொடர்பு இருக்கிறது. இத்தனை ஆயிரம் சுவாசம், இத்தனை நேரத்திற்கு என்ற கணக்கெல்லாம் சொல்லுகின்ருர். நாளொன்றுக்கு இவ்வளவு சுவாசம் போகி றது என்று கணக்கு போட்டுச் சொல்வது ஐன்ஸ்டின் கணக்கு மாதிரித் தோன்றும். 12 அங்குல சுவாசம் வெளியே போய்க் கொண்டிருக்கிறது; வரும்போது இத்தனை சுவாசம் குறைந்து விடுகிறது; ஆக இத் தனை சுவாசம் நஷ்டம் என்றெல்லாம் கணக் கிட்டுச் சொல்லுகின்ருர். இந்த நஷ்டம் நிகழ்ந்து கொண்டே இருக்குமானுல் மனி தன் விரைவில் உயிர்விட வேண்டியது தானே? நஷ்டத்தை ஈடு கட்டினுல் அல் லாது அவன் எப்போதும் போல் இருக்க

முடியாது. உடல் வலிமையை அதிகப் படுத்திக் கொண்டால் அல்லாது அவன் நீடிக்க முடியாது. ஆகையால்தான், அந்தச் சரிக்கட்டிக் கொள்ளுகிற மார்க்கத்தைப் "பிராணுயாமம்" என்ற பகுதியில் வைத் திருக்கிருர்.

இனி, பிண்டத்திற்குள்ளே யோக வலிமை தலைகீழாய்ச் சுருட்டி வைக்கப் பட்டிருக்கிறது. அது அடி இடம். அந்த அடி இடத்தைக் "குண்டலி" என்ற பெயரால் திருமூலர் சொல்லிவைத்திருக் கிருர். அங்கேதான் மனத்தை ஒழுங்கு படுத்துவதற்கான ஆற்றல் இருக்கிறது. அந்த ஆற்றலைக் கிளப்புவதற்காகத்தான் இந்த வாயுவை நிறுத்தவேண்டியிருக் கிறது. அப்படிச் செய்யும்போது அதில் இருக்கிற ஆற்றல் வெளிப்படுகின்றது. ஆற்றல் என்ற பெயரை வைத்து அடி யேன் சொல்லிக்கொண்டு போகின்றேன்; திருமூலர்பிரான், பரிபாஷையில் வேறு வேறு பெயரைச் சொல்லிக்கொண்டே போகின்ருர். இயமம், நியமம், ஆசனம், பிராணுயாமம் இவைகளினுல் வெளியே ஓடிக்கொண்டிருந்த மனம், கட்டுப்பட்டுவிடு கிறது. இந்த முறைகளை நாமே செய்து கொள்ளுவோம் என்ருல் தவருன வழியில் சென்று விடுவோம். குரு அருளால் அல் லாமல் முடியாது. தவருன வழியில் சென் ருல் வியர்வை அதிகமாதல் முதலிய விப ரீதம் விளையும்; உடம்பு நடுங்கும் என்றெல் லாம் சொல்லுகிருர். ஆகவே, ஆசாரியர் களுடைய அருளின்பேரில் செய்யவேண் டும். இவ்வாறு அருளின் துணைகொண்டு ஆற்றும் பிராணுயாமத்தினுல் மனம் உள் முகமாகத் திருப்பப்பட்டுவிடுகிறது. இது பிரத்தியாகாரமாகும்.

வாசி என்று ஒரு பரிபாஷை சொல்லப் படுகிறது. சிவா என்பதின் மாறுநிலை வாசி என அமைகின்றது. வாசியினை மாற்றிச் சிவத்திற்குக் கொண்டுவந்து விட்டால் சிவத்தியானம் நிலைபெறும். அன்ருடம் காயத்திரிஜபம் செய்கின்றபோது இந்த முறையை ஒரு சூட்சுமமாகச் சொல்லி வைத்திருக்கின்ருர்கள். இது "உத்தமே சிகரே தேவி" என்ற மந்திரத்தில் சொல் லப்பட்டிருக்கிறது. இதை எல்லாம் செய்து விட்ட பிறகு, காயத்திரிஜபம் செய்யத் தொடங்குகிறோம்.

வாசி என்பதை (சிவா மந்திரத்தை) அம், சம் என்றும், இவ்வாறுவைத்து அம் சம் என்றும் சிவோகம் என்றும் கூறுவர். எனவே, இப்பொழுது பிராணுயாமநிலையில் வாயுவை, மனத்தைத்துணைகொண்டு நாம் உள்முகமாகத் திருப்புகிறோம். திருப்பின அந்த மனம் உள்ளே தங்கியிருந்தால் தானே நமக்கு நினைத்தபலன் கிடைக்கும். சம்பாதித்த பணம் கையில் இருந்தால் தானே இஷ்டப்படி பொருள் வாங்கமுடி யும். நழுவவிட்டுவிட்டால் சம்பாதித்த பயன் இல்லாமல் போய்விடும். அதுபோ லவே, உள்ளே திரும்பியமனத்தை நிலைத் திருக்கும்படிச் செய்யவேண்டியிருக்கிறது. அவ்வாறு நிலைத்த பழக்கத்தில் கொண்டு வருவதுபற்றித் தாரணை என்ற பகுதியில் திருமந்திரம் சொல்லுகிறது.

இந்தத் தாரணையால் உள்ளே திருப் பப்பட்ட மனம் அங்கேயே நிலைத்திருப் பதற்கான உபாயம் கிட்டுகிறது. இதனுல் விளையும் ஆற்றலானது யந்திரங்கள்வழி யாகப் பெறக்கூடிய ஆற்றல்போல் இருக் கிறது என்னலாம். என்ன ஆற்றல் வரு கிறது என்பதைப் பார்ப்போம். வாய்க் காலில் தண்ணீர் ஓடுகிறது. மடை கட்டி விட்டால் ஓடும் தண்ணீரானது தேங்கு கிறது. மடைகட்டியுள்ள அளவுக்குத் தண் ணீரின் மட்டமும் உயருகிறது. அதேபோல் மனமாகிய வாய்க்காலை 'யந்திரம்' என்ற தடைபோட்டு நிறுத்தினுல் மனத்தின் ஆற்றலும் உயருகிறது. அதன் துணை கொண்டு "தியானம்" என்று சொல்லக் கூடிய நிலையை அடைகிறோம். தியானம் முற்றினுல் வசியநிலை ஏற்படுகிறது. இந்தத்

தியான நிலையிலே மனமானது செயலற்று இருக்கும். இந்தநிலைக்குவர நாம் பழக வேண்டும். அப்படி மனத்தை நன்ருக நிறுத்தினல், அதுவே "சமாதி" நிலையாகும். இதுவே, அட்டாங்கயோகம் என்று சொல்லப்படுகிறது. இப்படிப் படிப்படியாக யோக முறைகளைத் திருமூலர் சொல்லிக் கொண்டுபோகின்ருர். நாம் அவர் சொல்கின்ற நிலைகளில் மனத்தை நிற்கச்செய்து பழக்கவேண்டும்.

இந்த அட்டாங்கயோகத்தின் பழக்க முதிர்ச்சிக்குப் பிறகு, தேவதைகளோடு ஒன்றுபடுத்துகிற ஆதார யோகநிலையும், சிவாகாரத்தே ஒன்றுபடும் நிராதாரயோக நிலையும் பேசப்படுகின்றன. இவற்றுள், ஆதாரயோக நிலையானது, ஆறு ஆதாரங்களாகச் சொல்லப்படுகிறது. எங்கெந்த ஆதாரநிலையிலே நிற்கவேண்டும் என்று விரும்புகின்ருேமோ அந்தந்த இடத்திலே நிலைக்கச்செய்யப் பழக்கப்படுத்திக்கொள்ள வேண்டும். இதற்கு மூல மந்திரமான அஜபாசக்தி துணை செய்கிறது. இப்படிப் பல யோகங்களைப் பயிற்சிபெற்று, கடைசியில் நிராதார அகண்டாகாரப் பிழம்பாகிய சிவயோகத்திற்கு வருகிருேம். மத்தியில் சில சங்கடங்கள் இருக்கின்றன.

இடையிலே யந்திரம், மந்திரம், சக்கரம் ஆகியவையெல்லாம் கடக்கவேண்டி வரும். இந்த நிலைகளைக் கடப்பதற்குச் சூட்சுமமான வழிகள் நூலில் ஆங்காங்கே சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளின் துணையறிந்து ஆறு ஆதாரங்களையும் ஒருவன் கடந்துவிட்டானுனல், அவனுக்குப் பரிபூரண இன்பநிலை தொடங்குகின்றது. அதையே அம்ருதபானம் என்று சொல்கிருேம். ஒருவன் பசியாது இருப்பதற்கு மாத்திரை சாப்பிட்டுவிட்டால் எப்படி அவனுக்குச் சாப்பாடு தேவையில்லையோ அதுபோலவே, இந்த நிலைகளையெல்லாம் கடந்துவிட்டால் அவன் பூரண சிவப்பேறு கிடைக்கக்கூடியவனுகிவிடுகிருன். இதுவே பிறப்பின் முடிந்தபேறு. இதனல் வருவதே சுத்த அத்துவித முத்திநிலை ஆகும்.

இப்படி ஒவ்வொரு படிநிலையாக யோக நிலைகளை நாம் எண்ணி ஆதார யோகத்திலிருந்து சிவப்பேறு அடையும் யோகம் வரையில் சிந்திப்பதற்கான வாய்ப்பை அளிக்கும் முறையிலே இந்தத் திருமந்திர மாநாட்டைக் கூட்டுவித்த ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்கள் திருவடிக்கமலங்களை வணங்கி, என்னுடைய சிற்றுரையை முடித்துக்கொள்கிறேன்.

நம்பனை யாதியை நான்மறை யோதியைச்
செம்பொனின் உள்ளே திகழ்கின்ற சோதியை
அன்பினை யாக்கி அருத்தி ஒடுக்கிப்போய்க்
கொம்பேறிக் கும்பிட்டுக் கூட்டமிட் டாரே.

—திருமூலர்.

## ‘ மருத்துவப்பகுதி ’

## திருப்புகழ் திரு. தா. ப. வேங்கடசுப்பிரமணியம் அவர்கள்,

சரஸ்வதிமஹால் நூல்நிலையம், திருவாவடுதுறை ஆதீனம்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் பொன்னுர் திருவடிகளுக்கு அடியேன் மனமார்ந்த வணக்கம். ஸ்ரீ முனிபுங்கவர்கட்கும், தலைவரவர்கட்கும் வணக்கம். சபையிலுள்ள அன்பேயுருவாம் அனைவர்க்கும் எனது வணக்கம் உரித்தாகுக.

குருமகாசந்நிதானம் அவர்கள் அடியேனுக்குப் பணித்துள்ள பொருள் மருத்துவப்பகுதியாகும். மருத்துவம், வைத்தியம் ஆயுர்வேதம் என்னும் இம்மூன்றும் ஒரே பொருளைத் தன்னுட்கொண்ட சொற்களாகும். அறம், பொருள், இன்பம், வீடு எனும் நாற்பேற்றையும் அடைவதே உருவத்தாலாய பயனும். “உடம்பாரழியில் உயிராரழிவர், திடம்படமெஞ்ஞானம் சேரவும் மாட்டார்” எனத் திருமந்திரத்திலே அறுதியிட்டுக் கூறப்படுகிறது.

இந்த மருத்துவப்பகுதியானது, கலைஞானம் அறுபத்துநான்கில் தாயகமாய் விளங்கித் தனித்தொளிர்கின்றது. நான்கு வேதங்களில் முதல்வேதமாகிய ரிக்வேதத்தின் உபவேதமும், அங்கவேதமுமாம். இது நான்மறைகளிலும் உரமாகக்கூடி நின்று, தனித்து வருகின்றகாலத்தில் ஐந்தாவது மறையாகின்றது என யூகிமுனிவர் வைத்திய சிந்தாமணி கூறுகிறது. “தானான நால்வேதத்தொருப்பாய் நின்ற, தாக்கான ஆயுருவே தத்தோ டைந்தாம்” என்ற பாடற்பகுதி இதனை அறிவிக்கும்.

அநாதி மலமுத்த சித்துருவாகிய ஸ்ரீ சிவபரம்பொருள், அநாதி மலபந்தராகிய ஆன்மாக்கள் இடர்க்கடல் நீங்கி இன்பத்துறை எய்தி இளைப்பாறுவதற்கு இன்றியமையாத மரக்கலமாகக் கூறிய சைவாகமங்கள் இருபத்தெட்டில் புரோத்கீதம் என்பதும் ஒன்று. அந்த ஆகமம் பதினறு பிரிவையுடையது. அதில் பதினோராவது பிரிவாகத் திகழ்வது ஆயுர்வேதம். உலகில் சகல ஜீவராசிகளும் இன்பத்தைத்தானே விரும்பும். நோய்வாய்ப்படில் இன்பம் ஏது? தோலால் சுவர்வைத்து, நாலாறு காலிற் சுமத்தி, இரு காலால் எழுப்பி, வளைமுது கோட்டிக் கைநாற்றின் நரம்பாலார்க்கையிட்டு, தசைகொண்டு மேய்ந்த அகம் ஆகிய இச்சரீரமாகிய கோட்டையில், வாத பித்த கபம் என்னும் மூன்று அரசர்கள் முறையே இருந்து அரசாட்சிபுரிகிருர்கள். இம்மூவரும் வெகு வேகமானவர்கள். இவர்கள் தம்நிலையில் சிறிது மாற்றமடைந்தாலும் நோயானது உண்டாகும். “நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்”. உடற்பிணி உண்டாவதற்கு மூலகாரணம், நோய், நோயின் குணம், தேகம், தேசம், காலம், ஜாடராக்கினி, உண்டி, பலம், வயது, நித்திரை, வாதாதிநாடிகளின் தன்னிலை, பிறநிலை, தொந்தம், பிறழல், குறுநாடி, லகுநாடி, நெடுநாடி, தசநாடி ஸ்தானம், அஷ்டபரீக்ஷை இவைகளையெல்லாம் நன்கு அறிந்து நோயைநீக்கும் வழிகளை எல்லாம் கூறும்பகுதியே மருத்துவப்பகுதி.

இப்பகுதி நூற்றிருபத்தாறு பாடல்களை அந்தாதித் தொடையாகத் தன்னகத்தேகொண்டு பிரகாசிப்பது. கருப்பத் திருமந்திரம் என்னும் பெயருடன்கூடியது. இப்பகுதி கருப்பக்கிரியை, பஞ்சபூத பிண்டோற்பத்தி முதலாகிய பல விஷயங்களை விளக்கமாகக் கூறுகின்றது. சரீரம் வந்த வகை, பொருந்திய பிராணன் வந்தவகை, பலம்பொருந்திய ஜீவனும் தத்துவங்களும் ஐம்புலன்களும் ஏற்பட்டவகை, பொருந்திய நவத்துவாரங்கள் தோன்றியவிதம் இவைகள் சமுத்திரத்திலுள்ள ஜலத்தைப்போல நிறைந்து காணப்படுகிற வேதாகமஸாரம் என்னும் ஆயுர்வேதசார சாத்திரம் இது.

பிறக்கும் குழந்தையானது பிறவியிலேயே ஊமையாகவும் குருடாகவும் மந்தமாகவும் இருப்பதற்குக் காரணம் பிராரத்தமா? ஆகாமியமா? சஞ்சிதமா? என்னும் கேள்வியும் அதற்குப் பதிலும் தன்னுள்ளடக்கி, உற்பத்திகாலத்திலே தாயின் வயிற்றில் மலம் மிகுதியாக இருக்குமானல் குழந்தை மந்தமாகவும், நீர் மிகுந்திருக்குமானல் ஊமையாகவும், இரண்டும் மிகுந்து இருக்குமானல் குருடாகவும் ஜனிக்கும் என்று கூறப்படுகிறது.

" மாதா வுதரம் மலமிகில் மந்தனும்
மாதா வுதரம் சலமிகி லூமையாம்
மாதா வுதரத் திரண்டொக்கிற் கண்ணில்லை
மாதா உதரத்தில் வந்த குழவிக்கே "

பிணி, குணங்கள், நீர், மலம், மெய், நாடி, காந்தி, நா எனும் எண்விதப் பரீக்ஷையால் நோயை நிச்சயிக்கவேண்டும். இவைகளில் நாடி பார்க்கும்போது வலது கரத்தின் பெருவிரலடியில் ஓரங்குலம் தள்ளி ஆள்காட்டிவிரல், நடுவிரல், மோதிரவிரல் மூன்றையும் சுகமாக அழுத்திப் பார்க்க வேண்டும். முதல் விரலில் வாதமும், நடு விரலில் பித்தமும், கடைவிரலில் சேத்துமமும் நடக்கும். இதை மிக நுணுகி நுணுகிப் பார்க்கிறகாலத்தில் ஓடும்நரம்பு ஒன்றே. மூன்று நாடிகளும் பாய்கின்றவேகத்தால் நடையைக்காட்டும்.

" குறியாம் வலக்கரம் குவிந்த பெருவிரல்
மறியா வதன்கீழ் வைத்திடு மூவிரல்
பிறிவாய் மேலேறிப் பிலத்தது வாதமாம்
அறிவாய் நடுவிர லமர்ந்தது பித்தமே "

" பித்தத்தின் கீழே புறண்டது ஐயமாம்
உற்றுற்றுப் பார்க்கவோர் நரம்பே யோடும்
பத்தித்த மூவரும் பாய்கின்ற வேகத்தால்
மத்தித்த நாளம்போல் வழங்கும் நரம்பிதே "

வாதம் ஒருமாத்திரையும், பித்தம் அரைமாத்திரையும், சேத்துமம் கால்மாத்திரையும் நடந்தால் யாதொரு வியாதியும் இல்லை என்றும் சொல்லப்படுகிறது.

" வழங்கிய வாதம் மாத்திரை ஒன்ருகில்
தழங்கிய பித்தம் தன்னி லரைவாசி
அழங்குங் கபந்தான் அடங்கியே காலோடில்
பிழங்கிய சீவர்க்குப் பிசகொன்றும் இல்லையே "

வாதம், மயில் அன்னம் கோழிபோலவும்; பித்தம், ஆமை அட்டை தவளைபோலவும்; சேத்துமம், பாம்புபோலவும் நடக்கும்.

உடம்பில் உஷ்ணத்தோடுகூடிய வாயு அதிகரித்தால் சரீரத்தில் எரிச்சலையும், கைகால்களிலும் இடுப்புச்சந்திலும் விலாப் பக்கங்களிலும் அதிக வலியையும் ஏற்படுத்தும். உடம்பெல்லாம் புண்ணுக வலிக்கும். வயிற்றுப் பொருமலையும் குடலிரைச்சலையும் உண்டாக்கும். அதிகக் குளிர்ச்சியினுல் மலத்தைக் கட்டியும், ஆசனத்தை மலரவிடாமல் உள்ளே சுருங்கச்செய்தும், மிகுதியான குளிரையும் சீதளத்தையும் உண்டு பண்ணும். இவை வாதத்தின்குணம்.

பலபல நினைவையும், வெளிப்படுகிற வாந்தியையும், நாவில் மிகுதியாக நீரூற்றத்தையும், உடலில் நிலையான எரிச்சலையும், அதிக தாகத்தையும், நாவில் கசப்பையும் உண்டாக்குவது பித்தத்தின் குணம்.

கபம் மேல்மூச்சை உண்டாக்கும். அது சுவாசப்பையில் தடுத்து நின்ருல் இருமலையுண்டாக்கும்; வெளிப்படாமல் உள்ளடங்கினுல் இலேசான சுரத்தை உண்டாக்கும்; கோழைஜலத்தை உண்டுபண்ணி மிகவும் சரீரத்தை மெலியச்செய்து இரத்தத்தை விழச்செய்யும். இவை ஐயத்தின்குணமாம்.

அக்கினியின் மந்தத்தால் வாயு உண்டாகும். அதிகரித்த அவ்வாயுவால் சகல விதமான நோய்களும் உண்டாகும். வாயுவுடன் கூடிய இம்மந்தத்தால் கொடிய ஜுரம் உண்டாகும். மந்தம், வாயு, ஜுரம் இம்மூன்றினுல் மூவகைத் தோஷங்களும் உண்டாகும். அமித போஜனத்தாலும், மாமிசத்தையும் மாப்பண்டங்களையும் மிக உண்ணலாலும், எருமைப்பாலைக் குடித்தலாலும் மந்தம் உண்டாகும்.

அன்னத்திஞலே இச்சரீரம் நிலைபெற்றிருக்கிறது. அன்னம் அளவுக்குமீறிஞல் சரீரத்தில் வியாதிகளை உண்டாக்கிக் கொல்லும். அன்னத்திஞலே ரக்ஷிப்பும் பக்ஷிப்பும் உண்டாகின்றது. அன்ன உற்பத்தியானது பலவித வித்துக்களிலும் உண்டாகும். இவைகளை ஆலோசித்தறிந்து மகான்கள் இதையே கவனித்துப் பார்ப்பார்கள்.

"மேவிய அன்னத்தால் விளங்கியது இச்சடம்
பாவியே கொன்று பழியுறும் அன்னந்தான்
ஆவின் மிதந்தப்பில் ஐயுற்று நோயாகும்.
காவி லிவையெல்லாம் கண்டுகொள் அன்னமே"

"அன்னம் பிறந்தது அனைத்து விதையிலும்
பன்னி யறிந்திதைப் பார்ப்பார் பெரியோர்கள்"

தைத்ரீய உபநிடதத்திலும், கிருஷ்ண யசுர்வேதத்திலும் கூறப்படும் கருத்துக்களை இப்பாடல் தன்னுட் கொண்டுள்ளது. அஃதாவது:-

'பூமியை அடைந்திருக்கிற தாவர சங்கமங்கள் என்றுசொல்லப்பட்ட சகல பிரஜைகளும் அன்னத்திஞல் ஜனித்தும் அதஞல் ஜீவித்தும் அதஞலே பேரானந்தத்தையும் அடைகிருர்கள். உலகத்தில் அன்னம் மிக மேலானது; ஆதலால் எல்லாவற்றிற்கும் மருந்தாகச் சொல்லப்படுகிறது. எவர்கள் அன்னத்தையும் பொருளாகத் தியானம் செய்கிருர்களோ? அவர்கள் எல்லா போக்ய வஸ்துக்களையும் அடைகிருர்கள். யாதொரு காரணத்தாலே அன்னமானது ஆகாயம் முதலிய பஞ்சபூதங்களுக்குள்ளே உயர்ந்ததோ? ஆகையாலே சகலவித ஓஷதிகளிலும் நின்றும் உண்டாவதாகச் சொல்லப்படுகின்றது. அன்னத்திஞலே பிராணிகள் உண்டாகின்றன. அவைகள் அன்னத்திஞலேயே விருத்தியடைகிறதுகள். அதுவே, மரணமும் அடைவிக்கிறது. ஆதலால் அந்த அன்னம் அன்னம் என்று சொல்லப்படுகிறது.'

'சாப்பிடத்தக்க வஸ்துவை நிந்திக்கக் கூடாது. அது அவனுடைய கடமை. பிராணஞனது சாப்பிடத்தக்க வஸ்து. உடல் அன்னத்தைச் சாப்பிடுகின்றது. பிராணனிடத்தில் உடலானது இருப்பையுடையது. அந்த இந்த அன்னமானது அன்னத்தில் இருப்பையுடையது. எவன் இந்தஅன்னத்தில் அன்னத்தை இருப்பையுடையதாகஅறிகிருனே? அவன் இருப்பையுடையவஞக ஆகிருன். அன்னத்தையுடையவஞகவும் அன்னத்தைச் சாப்பிடுகிறவஞகவும் ஆகிருன். பிள்ளையிஞலும் பசுக்களாலும் சிவதேஜஸ்ஸிஞலும் பெரியவஞகவும் ஆகின்ருன். கீர்த்தியிஞலே மகாஞகவும் ஆகின்ருன்.'

'உண்ணும் உணவுப் பொருள்களில் மறைந்திருந்துகொண்டும் குடிக்கும் நீர் முதலியவைகளில் மறைந்திருந்துகொண்டும் எவ்வுருத்திரர்கள் பீடிக்கிருர்களோ? எவ்வுருத்திரர்கள் பூவுலகில் இருக்கின்ருர்களோ? அவர்களில் எவர்கட்கு உணவுப்பொருள் அம்புகளோ? அவர்களின் பொருட்டு நான்கு திசையும் கைகூப்பி வணங்குகின்றேன்' என்ற கருத்துக்களால் உணவுப் பொருள்கள் எல்லாவற்றிலுமே நிறைந்தும் தனித்தும் விளங்குகின்றவர் ஸ்ரீ உருத்திர பரமேசுவரரே; அவரையே ஞானக்கண்ணிஞல் பார்ப்பார்கள் பெரியோர்கள் என்பது கொள்ளக்கிடக்கிறது.

மேகரோகம் இருபத்தொன்று என்றும், அவை ஏற்படும் காரணங்களையும் 63, 64, 65 ஆம் பாடல்களில் விளக்கமாகக் கூறப்படுகின்றன. அதிதீவிரமான பசியை அடக்குவதாலும், இன்பநுகர்வு காலத்தில் மலஜலத்தை அடக்குவதாலும், அயர்ந்திருக்கின்ற குண்டலிவட்டத்திற்குள்ளாக வாயுவானது உட்சென்றுவிடும். அபானத்தில் புகுந்த வாயுவானது மலாசயத்தில் உஷ்ணத்தைச் சேர்த்துக்கொண்டு, வறளையிஞல் மலமானது தீய்ந்து, மணி மணியாகத் திரண்டு, அது வெளிப்படுகிற காலத்தில் அபானத்தைச் சுருக்கி மேலே இழுத்துக் கொண்டு, கிழங்கு முளைபோல்

அபானஸ்தானத்தில் மூலரோகமானது உண்டாகும்.

பித்தமும் வாயுவும்சேர்ந்து தொந்தித்தால் சாப்பிட்ட அன்னமானது ஜீரணமாகுங்காலத்தில் வலியுண்டாகும். அன்னுசயத்தில் கபநீரூறி வாந்தியுமுண்டாகும். இதனைப் பித்தகுன்மம் என்பர். சீதளமாகிய வாதமும் உஷ்ணத்தைச்சேர்ந்த வாயுவும் சேர்ந்தால் வயிற்றில் புரண்டு புரண்டு வலிக்கும். கூரியமுள்ளினற்குத்துவதுபோல் குடலை முறுக்கிக் குத்தலை உண்டாக்கும். இதை வாதகுன்மம் என்பர். கபமும் வாயுவும் ஒன்றுசேர்ந்தால் உள்ளே செல்லுகின்ற அன்னத்தை ஜீரணசயத்திலே போய்ச்சேரவொட்டாதபடி வெந்த அன்னமானது புளிப்புண்டாகி நெஞ்சில் எரியேப்பத்தை உண்டாக்கி அப்போது உடலைத் திருகித்திருகி வலியை உண்டாக்குவது ஐயகுன்மமென்பர். வலியோடு கூடிய மேகமும் வாயுவும் ஒன்றுசேர்ந்தால் வழக்கமாய் வெளிப்படும் மலசலத்தைச் சிறுகச்சிறுகக் கட்டி இடப்புறம் வலப்புறங்களில் குடலை முறுக்கிக் குடலில் வலியை உண்டுபண்ணுவது மேகசூலைகுன்மம்.

இந்த நான்குவித குன்மத்தை எட்டு விதமாகச் சொல்லுவர் சிலர். பலம் மிக்க நோய்கள் பலவற்றுள்ளும் பொல்லாத நோய் இதுவே. இது மகாபாபிகளுக்குத்தான் வரும். நன்மையான தருமஞ்செய்யப்படும் நாட்டில் வசிப்பவர்கட்குக்கூட வாராதென்று தருமத்தின் பெருமை தோன்றக் கூறப்படுகிறது.

பூமியில் கடுமையானவெய்யிலில் நடத்தலாலும், கடுமையானவெய்யில் மேலேபடுதலாலும், எண்ணெய்முழுக்குத் தவறுதலாலும், அக்கினியைக் கண்ணல் பார்த்தலாலும், கொடிய பாஷாணங்களைத் தின்றதினலும், மேக ரோகத்தாலும், வெட்டை வாயுவாலும், மலசலக் கட்டினலும், புண்களின்மேல் போட்ட காரப் பிரயோகத்தினலும், காரசாரச் சரக்குக்களைச் சுருக்குக் கொடுக்கும்போது உண்டாகிற மேகத்தாலும், கொடிய இரசகந்தகப் புகையினலும், நவச்சாரத்தை மூக்கினற்கிரகிப்பதாலும், மிக்க பேதியாலும், பலவிதத் தண்ணீரின் பேதத்தாலும் கண்ணில் வியாதிகள் பல உண்டாகும் என்று அறிவிக்கிறது.

சுயமான கிரந்தியாலும் சுழல்கின்ற மேகத்தாலும் ஆறுவிதமும், மண்ணுணிப் பாம்பினலும் பலவித வண்டுகளினலும் எட்டுவிதமும், கிருமி கீடங்களால் நாலு விதமுமாகப் பதினெட்டுவிதமாகும் குஷ்டரோகம். அப்பிரகற்பத்தை சீந்திற்சருக்கரைகூட்டிஅன்று கடைந்தவெண்ணெயிற் கொடுக்க 21 விதமான மேகமும் நீங்கும். குன்மத்தினுக்கு மகாதிராவகத்தையும், குஷ்டத்திற்குக் கெந்தக பஸ்பத்தையும் கிராணிக்குப் பூநாகபஸ்பத்தையும், மூலத்திற்குத் தாம்பிரபஸ்பத்தையும் கொடுக்க நிவர்த்தியாகும்.

உடலைப்பற்றிய நோய்கள் 4448 என்று சொல்லப்படும். அவ்வளவு நோய்கட்கும் மருந்து சொல்லப்பட்டிருக்கிறது. மருந்தை உட்கொண்டால் நோய்களெல்லாம் தவிடு பொடியாய்விடும். சுத்திசெய்த இரசம், மேலான தங்கம், கட்டப்பட்ட கந்தகம், அதன் சத்து இந்நான்கையும் ஒன்ருகக் கூட்டிச் சிந்தூரம்செய்து சாப்பிட, சகல நோய்களுந்தீரும்.

உடலழியின் உயிரழியும். உயிரழியின் கடவுட்டன்மைபற்றிய அறிவைப் பெற்று அந்நிலையெய்துதல் கூடாதாகும். ஆகவே உடம்பை வளர்க்கும் நன்வகையையறிந்து, அதன் பயனக உடலை நிலைக்கச்செய்து, உயிரோடு வாழ்ந்து, சிவஞானம் பெற்று, உடலின்கண்ணமைந்த உயிர்க்கு உயிராயொளிர் பொருளே மேலோனகிய ஸ்ரீ சிவகுகப் பொருளெனக்கொண்டு, அதனைத் தொழுது, ஸ்ரீ குருவருளாம் திருவருளில் திளைத்துநிற்போமாக.

## ' புராணதத்துவம் '

திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள், M. A.,
ஆசிரியர் ' கலைமகள் ', சென்னை.

இறைவனுடைய திருவருள் யாண்டும் பரவவேண்டுமென்ற கருணையினுல் இந்த மாநாட்டைக்கூட்டுவித்த ஞானுசிரியராகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுடைய திருவடிகளுக்கு வணக்கத்தைத் தெரிவித்து, அவைத்தலைவர் அவர்களுக்கும் இங்கே உள்ள மற்றப் பெரியோர்களுக்கும் எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்கு முன்பே இங்கே பஞ்சமூர்த்திகள் எழுந்தருளிவிட்டார்கள். திறப்பாளர், தலைவர், பேச்சாளர்கள் மூன்றுபேர்கள் ஆக ஐந்து மூர்த்திகளும் எழுந்தருளின பிற்பாடு அநேகமாய்க் கூட்டம் கலைய வேண்டும்; ஆனுல், அப்படியில்லை. ஆகவே நான் இப்போது பேசவந்திருக்கிறேன்.

### பழமையும் புதுமையும் :

புராணம் என்ற வடசொல்லுக்கே பழமையும் புதுமையும் உடையது என்று பொருள். பழமைக்குப் பழமையாக இருக்கின்ற புராணங்கள், புதுமைக்கும் புதுமை உடையனவாய் இருக்கின்றன. தாம் தோற்றிய காலத்தைப் பார்த்தால் பழமையுடையவை; தான் வழங்குகின்ற காலத்திற்குப் பயன் தருவதனுல் புதுமையுடையன; ஆகவே "காலத்தால் பழையவை; பயனுல் புதியவை" என்று சொல்லவேண்டும்.

சில பொருள்கள் பழமையாக இருந்தாலும் எல்லாக்காலத்தும் பயன் உடைமையினுல் புதுமையாகத் தோற்றுவது உண்டு. சூரியன் எப்பொழுது தோன்றினுன் என்று தெரியாது. ஆனுல், தினந்தோறும் காலையிலே உதயமாகி ஒவ்வொரு நாளும் பயனளித்து வருகிறுன்.

இறைவன் எப்போது தோன்றினுன் எனச்சொல்லமுடியாது. அவனைக்காட்டிலும் பழையவன் வேறு யாருமே இல்லை. இருந்தாலும், எல்லாக் காலத்தும் வாழ்கின்ற மக்களுக்கு இன்ப நலங்கள் அளித்துக்கொண்டிருக்கிறுன். புதுமைக்குப் புதுமையாக வருகின்றவற்றுக்குப் பின்னும் புதுமை உடையவனுய் இருக்கிறுன்.

" முன்னைப் பழம் பொருட்கு
முன்னைப் பழம் பொருளே
பின்னைப் புதுமைக்கும்
பேர்த்தும் அப் பெற்றியனே "

என மணிவாசகப்பெருமான் அருளினுர்.

இறைவனைப் பற்றிய உண்மைகள், பூமிக்குக் கீழே ஓடும் வேர்போல இருக்கின்றன. வேரிலிருந்து மரம் வளர்ந்து நிற்கின்றது. மரத்தில் பூத்த மலர்களைப் போலப் புராணங்கள் இருக்கின்றன. அந்த மலர்களுக்கும் வேருக்கும் நேரான தொடர்பு இல்லை. ஆனுல், வேர் இல்லாமல் மலர் இல்லை. வேரின்சாரம் மலராக மணக்கிறது. பல அரிய தத்துவங்களை வேராகக் கொண்ட நமதுசமயத்தில் அத்தத்துவங்களிலிருந்து உரம் பெற்ற புராணங்கள் விரிவாக உள்ளன.

### நால்வகை நூல்கள் :

மக்களின்வாழ்வுக்கு உறுதி அளிக்கும் பொருள்களை விளக்கும் நூல்களை, நம் நாட்டுப் பெரியவர்கள் நான்கு வகைகளாகப் பகுத்தார்கள். பிரபு சம்மிதை, சுஹ்ருத் சம்மிதை, காந்தா சம்மிதை, சிசு சம்மிதை என்பன அவை. பிரபுசம்மிதை யாவது தலைவனின் வாக்குப் போன்றது. சுஹ்ருத் சம்மிதையாவது நம்முடைய நண்பனுக இருந்து, இங்கிதம் தெரிந்து,

காலத்திற்கு ஏற்ப, இடத்திற்கு ஏற்ப அறிவுரை கூறுவது போன்றது. காந்தா சம்மிதையாவது தங்களுடைய உள்ளத்திலே கொண்ட கருத்தை நேராகச் சொல்லாமல், அதற்கு நிலைக்களன் அமைத்து, இனிமை புலப்படும்படியாகச் சுற்றிச் சூழச் சொல்லும் மனைவியின் வார்த்தையைப் போன்றது. சிசுசம்மிதையாவது, கற்பனை நயங்களைக் கருத்தில் புகுத்தி, குழந்தைகளுக்குச் சொல்லும் கதைபோன்றது.

இந்த நான்குவகை நூல்களுக்குள்ளே பிரபு சம்மிதை வேதம். "இதைச் செய், இதைச் செய்யாதே" என்றால், "ஏன்?" என்று கேட்கக் கூடாது. தலைவன் கட்டளையிட்டால், "நீங்கள் கட்டளை இட யார்?" என்று கேட்பதோ, "செய்ய மாட்டேன்" என்று மறுப்பதோ அடிமைக்கு அழகல்ல. வேதாகமங்கள் சொல்லியவற்றை அப்படியே நம்புவது மரபு. ஆதலினாலே அவற்றைத் தலைவன் மொழி-பிரபு சம்மிதை என்று கூறினார்கள். அது வித்தாக இருப்பது.

காலத்திற்கேற்ப, இடத்திற்கேற்ப வித்தானது பரிணமிக்கும். எந்த எந்தக் காலத்திலே, எந்த எந்த இடத்திலே பழக்க வழக்கங்கள், பண்பாடு முதலியவற்றுக்கு ஏற்ப, "இப்படிச் செய்யலாம், அப்படிச் செய்யலாம்" என்ற வழி முறைகளைச் சொல்வது 'ஸ்மிருதி' என்று சொல்வார்கள். நண்பன் ஒருவன் காலம் அறிந்து, ஏவல் அறிந்து, பக்குவம் அறிந்து, நமக்கு நன்மை கருதிச் சொல்லுவதைப்போல் ஸ்மிருதி சொல்லுவதால் அதை சுஹ்ருத் சம்மிதை என்பர்.

மனைவி கோயிலுக்குப் போய்விட்டு வீட்டுக்கு வருகிறாள்; கணவனிடத்திலே பேசுகின்றாள். "கோயிலுக்குப் போயிருந்தேன்; பிரகாரம் வலம் வந்தேன்; அங்கே ஓர் அம்மாள் வந்தாள்; மிகவும் அழகாக இருந்தாள்; நெற்றியிலே திருநீறு விளங்கியது; குங்குமம் இலங்கியது; தேவாரம் வாசித்துக்கொண்டிருந்தாள். என்னுடன் வந்திருந்த அடுத்த வீட்டுத்தோழி, 'அந்த அம்மாள் கட்டி இருக்கும் புடவையைப் பார்த்தாயா? எவ்வளவு அழகாக இருக்கிறது. அது உன் உடம்பில் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்' என்று என்னைப் பார்த்துச் சொன்னாள். 'அது கிடக்கட்டும்' என்று சொல்லிச் சுவாமிதரிசனம் செய்துவிட்டு வந்துவிட்டேன். இந்தாருங்கள் பிரசாதம்" என்று சொல்கிறாள். அவளுடைய நோக்கம் என்ன? புடவை தனக்குவேண்டும் என்பதுதான். "எனக்கு அந்தப் புடவையை வாங்கித்தாருங்கள்" என்று நேர்முகமாகக் கேட்டால் நயம் இல்லை என்று கருதி, இப்படித் தன்னுடைய கருத்தை அதற்கு ஏற்ற சூழ்நிலை அமைத்து, இங்கிதமாக, மிக இன்பமாகச் சொல்லத் தெரிந்தவள் மனையாள். அப்படி மக்களுக்கு உறுதி பயக்கும் கருத்தை உள்ளடக்கி, அதைச்சுற்றிச் சூழ, இங்கிதமாக, இன்பமாகச் சுவையுடன் சொல்வது காவியம். காவியத்தைக் காந்தா சம்மிதை என்பர்.

சிசுசம்மிதை என்பது நாம் குழந்தைகளுக்குக் கதைசொல்வதுபோல அமைந்த புராணங்கள். ஆங்கிலத்தில் Parables என்று சொல்லும் வகையைச்சேர்ந்தது இது.

**ஈசாப்புக் கதைகள் :**

உலகம் போற்றக்கூடிய பெரிய எழுத்தாளர் ஈசாப் என்பவர். அவர் பல கட்டுக் கதைகளைக் குழந்தைகளுக்கு எழுதியிருக்கிறார். இன்றைக்கு அவற்றைச் சிறந்த குழந்தை இலக்கியம் என்று போற்றுகிறோம். தலைசிறந்த பேரறிஞர் என்று அவரைக் கொண்டாடி, அவர் கதைகளைப் பலர் தத்தம் மொழிகளிலே பெயர்த்து,

குழந்தைகள் உலகத்திற்குப் பயன்படுத்துகிறார்கள். நம்முடைய பெரியவர்களும், அறிவு ஆராய்ச்சியாளர்களும், புராணங்களைப்பற்றிக் குறைசொல்கிறவர்களும்கூட அக்கதைகளைப்படித்துவிட்டுப் பின் குறை சொல்வது இல்லை. ஓர் உதாரணம் சொல்கிறேன்.

ஒரு தவளை. தாய்த் தவளை. அதற்கு ஒரு குழந்தை; குட்டித் தவளை. இந்த இரண்டும் ஒரு குட்டையிலே வாழ்ந்து வந்தன. குட்டையில் ஊறிய மட்டைகளாக இருந்த அவை, குட்டையே உலகம் என்றும், அதில் தங்களைத்தவிர யாருமில்லை என்றும் நினைத்துக் கொண்டிருந்தன. ஒரு நாள் குட்டைக்கு ஒரு மாடு தண்ணீர் குடிக்க வந்தது. குட்டித் தவளை அந்த மாட்டைப் பார்த்தது. தான் வசித்த உலகமாகிய குட்டையிலே தன் அம்மாதான் மிகப் பெரியது என்று நினைத்துக்கொண்டிருந்த அந்தக் குட்டித் தவளைக்கு இந்தப் புதிய உருவத்தைப் பார்த்தவுடனே பிரமிப்புத் தட்டியது. மாடு தண்ணீர் குடித்துவிட்டுப் போய்விட்டது. குட்டித்தவளை தன் தாய்த் தவளையிடம் சென்று, "இங்கே உன்னைவிட ஒரு பெரிய தவளை வந்தது" என்று சொல்லியது. தன்னையும்விட ஒரு பெரிய தவளை இருக்க முடியுமா என்ற நினைப்பில் அத்தாய்த்தவளை தன்னுடைய உடம்பைச் சற்றுப்பெரிதாக ஊதி, "இவ்வளவு பெரிது இருக்குமா?" என்று கேட்டது. "இதையும் விடப் பெரிது" என்றது குட்டித்தவளை. இன்னும் கொஞ்சம் ஊதிக்கொண்டு "இவ்வளவு பெரிது இருக்குமா?" எனத் திரும்பவும் கேட்டது. இப்படியே ஊதி ஊதிக் கடைசியில் 'படார்' என்று வெடித்துவிட்டது தாய்த்தவளை. தவளை எவ்வளவு உடலை உப்பினாலும் பசுமாடு ஆகமுடியுமா?

இந்தக் கதையைக் கர்நாடக முறையில் நம் இந்தியர்கள் சொல்லவில்லை; மேல்நாட்டினர் சொன்னார்கள். இந்தக் கதைக்கு வண்ணப்படங்கள் போட்டு நல்ல காகிதத்தில் அச்சிட்டு விற்கிறார்கள். நம் நாட்டு அறிவாளிகளும்கூட வாங்கிப் படிக்கிறார்கள். நான் கேட்கிறேன் - "தவளை பேசுமா ஐயா? இது பகுத்தறிவுக்கு ஒத்தகதையா? இந்தக் கதையைக் குழந்தைக்குச் சொல்லலாமா? குழந்தைகளால் இதைப் புரிந்து கொள்ளமுடியுமா? என்று. இந்தக் கதைகளைப் பாராட்டுகிறவர்கள், நம் நாட்டுப் புராணக்கதையைச் சொன்னால்மாத்திரம் குருட்டுநம்பிக்கை என்று சொல்கிறார்கள்.

உலகமெல்லாம் போற்றக்கூடிய அக்கதையைத் தவறு என்று சொன்னால் யாருமே ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஆகவே, அதைத் தவறு என்று சொல்ல இவர்களுக்கு அச்சம். நம்முடைய புராணக் கதைகளைத் தவறு என்று சொன்னால், அப்படிச் சொல்லலாமா எனக்கேட்பதற்கு ஆள் இல்லை.

### கதையும் கருத்தும்:

ஈசாப்கதைகளை நன்கு அநுபவித்துப் பாராட்டும் அறிவைக்கொண்டு இவற்றைப் பார்த்தால் இவற்றினூடும் கருத்துக்கள் புதைந்திருப்பதைக் காணலாம். தவளை பேசவில்லை. மாடு பேசவில்லை. தன் நிலைக்கு மிஞ்சிய ஒருவனைப் போலத் தன்னைப் பாவித்து, தன்னுடைய நிலையில் நில்லாமல் அடக்கமின்றிப் பருத்தால் மோசம் வந்துவிடும். நிலையில் திரியாமல் அடங்கவேண்டியவன் நிலைக்குமிஞ்சிப் பெருமை அடைய வேண்டுமென்று நினைத்தானானால், என்ன ஆகும் என்பதை அழகாக அக்கதை சொல்கிறது என்பதை அறிவாளிகள் ஒப்புக்கொள்கிறார்கள்.

குழந்தைகளுக்கு நீதி சொல்லவேண்டியது அவசியம். இத்தகைய கதையைக் குழந்தைகளின் உள்ளத்திலே பதித்து வைத்தால், பிற்பாடு வருங்காலத்திலே

அவற்றின் நியதிகள் அவர்களது வாழ்க்கைக்குத் துணைபுரியும் என்கிற கருத்திலேயே அக்கதைகள் உருவாயின. இந்தக் கதைகளைச் சொல்லுகிறபோது, தவளை பேசுமா? மாடு பேசுமா? என்பன போன்ற கேள்விகளைக் குழந்தைகள் கேட்பதில்லை; ஆனால், மேடை ஏறிப் பேசுகின்றவர்கள் கேட்கிறார்கள். உலகிலுள்ள எல்லா நாடுகளிலும் இத்தகைய கற்பனைக் கதைகளை மனிதனுடைய உள்ளவளர்ச்சிக்குப் பயன்படும் என்று கருதிச் சொல்கிறார்கள். அப்படிச் செய்வது நன்மையானால், புராணக் கதையை மாத்திரம் தவறு என்று சொல்வதற்கு என்ன நியாயம் இருக்கிறது?

அந்தக் கதைகளுக்கு மூலமாக உள்ள கருத்து, கட்டுக்கதை அல்ல. அதைச் சொல்பவன் தன்னுடைய கற்பனையையும் சிறிது சிறிதாகச் சேர்த்து எங்கெங்கே அழகாகச் சொல்லியிருக்கிறான் என்று நாம் பார்க்கவேண்டும்.

## மூலமூர்த்தியும் உற்சவமூர்த்தியும்:

கடையிலே சரக்கு இருப்பது தெரிந்த ஒருவன் அங்கே சென்று சரக்கை வாங்கிக் கொள்கிறான். அதைப்போல, ஆலயத்திற்குத் தானேசென்று மூல மூர்த்தியை வழிபட்டு இன்பநலம் துய்க்கிறான் பக்தன். ஆலயத்திற்குச் செல்லாதவர்களும் இருக்கிறார்கள் அல்லவா? கடைக்கு வராதவர்களுக்கு ஒரு கூடையிலே பண்டங்களைக் கொண்டுபோய் அவர்களை வாங்கும்படி கூடைக்காரிகள் செய்வதில்லையா? அவர்கள் உள்ளத்தைக் கவருகின்றவகையில் விளம்பரப்படுத்துவதற்காக நல்லவற்றை முன்னே வைக்கிறாள் கூடைக்காரி. அப்படியே கோயிலில் இருக்கின்ற ஆண்டவனாகிய மூலமூர்த்தி, தன்னை நாடி வருகிற பக்தர்களுக்கு அங்கு இருந்துகொண்டே இன்பம் கொடுக்கிறான். ஆலயத்திற்கு வராதவர்களுக்காகத் தானே அவர்களுடைய வாயிலைத் தேடிச்சென்று அவர்கள் மனத்தைக் கவருகிறான். தன்னை நோக்கி, தன்னுடைய வாயிலுக்கு வராதவனிடம் போனால், எப்படிப்போகவேண்டும்? அலங்காரத்துடன் செல்லவேண்டும்.

> "நையாத உளத்தினரை நைவிப்பான் இத்தெருவே
> ஐயா நீ உலாப்போந்த அன்றுமுதல்"

என்பது திருவிசைப்பாவில் ஒரு பாட்டு. நைந்த உள்ளம் உடையவர்கள் மூலமூர்த்தி இருக்குமிடம் தேடிச்சென்று உய்கிறார்கள். நையாத உள்ளத்தினர் தன் இருப்பிடம் தேடிவரவில்லையே என ஆண்டவன் எண்ணமல், அவர்கள் இருக்குமிடம் தேடி, உற்சவமூர்த்தியாக, கைகால்களை எல்லாம் கட்டிக்கொண்டு, மாலைகளை அணிந்துகொண்டு, அலங்காரமூர்த்தியாக, நாயனங்கள் முழங்க, சதிர்க்கச்சேரிகள் முன்செல்ல வீதிவலம் வந்து, அவர்கள் உள்ளத்தையும் நையவைக்கிறான். ஆண்டவன் அலங்காரத்தோடு தன்னுடைய வீட்டு வாசலுக்கு முன்னாலே வந்து நிற்கும்போது, காது உடையவன் ஆதலால், நாகசுவரத்தைக் கேட்டு வீதிக்கு வருகிறான். கண்ணும் உடையவன் ஆதலாலே ஆண்டவன் திருமேனியை அலங்கரிக்கும் மாலைகளையும் ஆபரணங்களையும் பார்க்கிறான். வாய் உடையவன் ஆதலாலே, "யார் அது, என்ன?" என்று கேட்கின்றான். வீட்டு வாசலிலே நிற்கும் ஆண்டவனுடைய விசேஷங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கேட்டு அறிந்துகொள்கிறான். உற்சவரைப் பார்த்துவிட்டு உள்ளே போனவனுக்குப் பயன் இல்லை. உற்சவரால் உள்ளம் கவரப்பெற்று, மூலமூர்த்தியை நாடி ஆலயத்துக்குப் போய் அவன் பயன் பெறுகிறான். அவனை இப்படி வலியவந்து தான் ஆட்கொள்ளவேண்டும் என்ற பெருங்கருணையினாலே மூலமூர்த்தியாக ஆலயத்தில் உள்ளவன் விசேஷஅலங்காரத்தோடு உற்சவமூர்த்தியாக வெளி வருகிறான். வெளிவருகின்ற உற்சவருக்குக் கட்டப்பட்டிருக்கும் கை கால் எல்லாம் பொய்தான் என்றாலும், மூலம் பொய்யா?

கை கால்களைக் கட்டிக்கொண்டு அலங்காரத்தோடு வெளிவருகின்ற தோற்றம் தானே நையாத உள்ளத்தையும் நைய வைக்கின்றது?

**உள்ளம் கவர:**

இப்படியே புராணங்களின் மூலம் உண்மை. ஆனால், அறிவில் குழந்தைகளாக இருக்கின்ற பெரியவர்களின் உள்ளத்தையும் கவர்ந்து உண்மைக் கருத்திலே அவர்கள் மனம் ஈடுபடக்கூடிய வகையில் அலங்காரமாக, சுவை மிக்கனவாகப் புராணங்கள் சித்தரிக்கப்படுகின்றன. அவற்றின் அழகினைப் பார்த்து, நயத்தைப் பார்த்து, வியப்பதோடு நின்றால் பயன் இல்லை. வீதி வலம் வருகின்ற உற்சவரின் அழகைக்கண்டு உள்ளம் நைந்து, மூல மூர்த்தியைச் சென்று தரிசித்துப் பயன் பெறுவதுபோல, புராணக் கதைகளால் உள்ளம் கவரப்பெற்றவன் அதன் மூலத்தையும் பார்த்துப் பயன்பெறுவான். மக்களில் உடம்பால் குழந்தைகளாக இல்லாவிட்டாலும் அறிவினாலே குழந்தைகளாக இருப்பவர்கள் பலர். அக்குழந்தைகள் எத்தனையோ செய்திகளை இன்னும் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கின்றன. யாரைத் தெரிந்துகொள்ள வேண்டுமோ, அவரைத் தெரிந்து கொள்ளாமல், தெரிந்துகொள்ள வேண்டாதவர்களை எல்லாம் தெரிந்து கொண்டு வாழ்கிறோம். குழந்தைகளான நாம், யாரைத் தெரிந்துகொள்ள வேண்டுமோ அவரைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதற்காக நாம் வாழ்கின்ற உலகத்திற்கேற்பவே நம் உள்ளத்தைக் கவருகிற வகையில், புராணங்களைக் கற்பனை நயத்தோடு அமைத்திருக்கிறார்கள்.

**சரித்திரமும் புராணமும்:**

'சரித்திர உணர்ச்சி நமக்கு இல்லை என்று சிலர் சொல்வது வழக்கம். இக்காலச் சரித்திரத்திலே சாதாரணமாகக் காணப்படுவது என்ன? போர் நிகழ்ந்ததைப்பற்றியும், இந்த இந்த அரசர்கள் இருந்தார்கள், இறந்தார்கள் என்பதைப் பற்றிய பட்டியலையுந்தான் காண்கிறோம். குறைந்தது ஐந்தாறு போர்களாவது இல்லாவிட்டால், அது சரித்திரமாகக் கருதப் படுவதில்லை. இந்த இந்தப் புலவர்கள் இருந்தார்கள், நாடு வளர்ந்தது என்று சொல்வதில்லை சரித்திரங்கள். மக்களுடைய ஒழுக்கம் வளர்ந்ததை இக்காலச் சரித்திரம் காட்டுவதில்லை. போர் நடந்த குறிப்புக்களைச் சரித்திரமாகப் பாதுகாக்கின்றதை இந்த நவநாகரிக உலகத்தில் காண்கிறோம். அப்படிப் பாதுகாப்பது தவறு அல்ல. ஆனால், நம்முடைய பழங்காலத்து மக்கள், வாழ்க்கைக்குப் பயன்பட்ட பழைய சரித்திரமாக இருக்கும் ஒன்று இன்றைக்கு எந்தவகையில் நமக்குப் பயன்படும் என்று உணர்ந்து அதைச் சொல்லும் வகையில் சொன்னார்கள்.

பழையபொருள் என்று அதை அப்படியே வைத்துப் பாதுகாப்பது என்பது ஒன்று. அதை நமக்குப் பயன்படுகின்ற வழியில் உபயோகித்துக்கொள்வது ஒன்று. மொகஞ்சதாரோவில் கிடைத்த பெரிய பாண்டம் மியூசியத்தில் வைப்பதற்குரியது. ஆனால், அன்றாடம் செய்யப்படுகிற பாண்டங்கள் நம்முடைய தினசரி வாழ்க்கைக்குப் பயன்படுவது. அதேபோல, புராணங்கள் தத்துவத்தை உள்ளடக்கியவை. இன்றும் பயன்படுகிற புதுமை உடையன. தோற்றத்தால் புராணங்கள் பழைமையுடையன; அவற்றுள் சொல்லப்படும் மூலக்கருத்துக்களை உணர்ந்தால் அவை இன்றும் பயன்படும் புதுமை உடையனவாகத் தோற்றும்.

**கதையும் உட்பொருளும்:**

இந்தக் காலத்தில் கதைகளைப் படிக்க யாரும் சோம்புவது இல்லை. கதைகளில் உள்ள பாத்திரங்கள் கற்பனை என்று

தெரிந்திருந்தும், அவைகளிலுள்ள நிகழ்ச்சிகளும் கற்பனையே என்பதை உணர்ந்திருந்தும், பலர் தங்களுடைய வேலைகளையெல்லாம் விட்டுவிட்டுக் கதைகளைப் படித்துக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். அப்படிப் படிக்கும்போது கதைகளிலுள்ள பாத்திரங்களின் இயல்பை ஆராய்கின்றார்கள்; மூலக் கருத்தைத் தெரிந்து பாராட்டுகிறார்கள். அந்தக் கதைகளைப் பார்க்கும்போது போட்டுக்கொள்ளுகிற கண்ணாடி எதுவோ அதையே போட்டுக்கொண்டு புராணக் கதைகளை அவர்கள் பார்ப்பது இல்லை. பார்க்கத் தெரியவில்லை என்று சொல்வதைவிட அவர்களுக்கு மனம் இல்லை என்று சொல்லுவதுதான் பொருந்தும்.

கட்டுக்கதையைப் படித்து, அதிலுள்ள கருத்தை அறிய முற்படுகிறவர்கள், இந்தப் புராணக்கதையை - பெரியோர்கள் போற்றி வந்த கதையை - என்றோதோன்றின கதையைப் படித்து அதில் உள்ள கருத்தைப் போற்றுவதற்கு மனம் கொள்வதில்லை. மனம் இல்லையே அன்றி வழி இல்லாமல் இல்லை.

## காதலியின் கடிதம்:

இருபத்தைந்து வயசுடைய கட்டிளங் காளை ஒருவன் தன்னுடைய மாமன்மகளைக் கல்யாணம் செய்துகொண்டான். அழகி என்றும் பண்புடையவளென்றும் மணந்து கொண்டான். அந்தக் காளை மெத்தப் படித்தவன்; தமிழ் அறிவு உடையவன்; இலக்கியங்களைப் படித்தவன்; முத்து முத்தாக எழுதுபவன். அந்த மடமங்கையோ மூன்றாவது வகுப்புவரைதான் படித்தவள். திருமணத்திற்குப் பிறகு தன்னுடைய தாய் வீட்டுக்குப்போய்ச் சிலகாலம் இருந்து வருகிறேன் என்று சென்றாள் அவள். தாய் வீட்டில் இருக்கும்போது தினமும் தனக்கு ஒருகடிதம் போடவேண்டுமென்று சொல்லியனுப்பினான் அவன். ஊருக்குப் போனபின் அவன் தினமும் ஒரு கடிதம் எழுதினான். தன்னுடைய புலமையையெல்லாம் வைத்துக் கடிதம் எழுதினான். ஆனால், அங்கிருந்து ஒரு கடிதங்கூட வரவில்லை. தன் கணவனுக்குக் கடிதம் எழுதவேண்டாம் என்கின்ற எண்ணம் அவளுக்கு இல்லை. அவள் படியாதமங்கை. தினமும் பேனாவை எடுத்துக் கடிதம் எழுத நினைத்துப் பிறகு என்ன எழுதுவது என்று புரியாமல் வைத்துவிடுவாள். அவனோ தினந்தோறும் தபால்காரர்களை எதிர்நோக்கி ஏமாந்து போனான்.

ஒருநாள் 'இத்தனை கடிதங்கள் எழுதுகிறோமே; ஒன்றுக்காவது பதில் இல்லையே; நாம் என்ன வேலையற்றா இருக்கிறோம்?' என்ற உணர்வு ஏற்பட்டுக் கோபமாக ஒரு கடிதம் எழுதினான். அந்தக் கடிதத்தைப் பார்த்த அந்தப்பெண், எப்படியாவது ஒரு கடிதம் எழுதிவிடவேண்டுமென்று முடிவு செய்து அரும்பாடுபட்டு ஒரு கடிதம் எழுதினாள். அதாவது: "அநேக நமஸ்காரம். ஷேமம். ஷேமத்திற்குப் பதிள். தங்கல் உடம்பை நன்றாகப் பார்த்துக்கொல்லவும்" என்று நிறைய எழுத்துப் பிழைகளுடன் எழுதி அனுப்பிவிட்டாள்.

தபால்காரர் கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தார். கடிதத்தை வாங்கிக் கொண்டு, அவன் பூரிப்படைந்தான்; களிப்படைந்தான். தனியே அமர்ந்து படித்து இன்புற்றான். அதிலுள்ள குற்றங் குறைகள் அவனுடைய கண்களுக்குப் புலப்பட்டனவா? இல்லை. கடிதத்தில் அவனுடைய அன்பிற்கு உரிய மனையாளின் கையெழுத்தைக் கண்டான்; அதை எழுதின கரத்தைக் கண்டான்; கையை உடைய திருமேனியைக் கண்டான்; அவள் உள்ளத்தையும், அந்த உள்ளத்தில்சுரக்கும் காதலையும் கண்டான்; தங்கள் இரண்டு உள்ளங்களையும் பிணைக்கும் மின்சாரக்கம்பியாக அந்தக் கடிதத்தைக் கண்டான். அதனால் எழுத்துக்குற்றம் மறைந்தது; வாக்கியம் மறைந்தது; மொழி மறைந்தது. உள்ளம் காதல்

நிறைந்து இருந்ததுதான் காரணம். பிழைகளே கண்களுக்குத் தோன்றுதவாறு பார்க்கின்ற இயல்பு அவனுக்கு எங்கிருந்து வந்தது? பரிவு எங்கிருந்து வந்தது? உள்ளத்திலே கலந்த காதலினுல் வந்தது.

கையிலே உள்ள ஒரு கடிதம் குற்றமுள்ளதாக இருந்தாலும், அக்குற்றத்தை மறந்து, கடிதத்தைப் போற்றும் தன்மை அக்கடிதத்திற்கு மூலகாரணமான மனையாட்டியின்மேலுள்ள காதலினுலே உண்டாகிவிட்டது என்பதை யாவரும் ஒப்புக் கொள்வார்கள். அவர்களில் சிலர் புராணங்களில் குற்றங்குறைகளைக் கண்டுபிடித்துக் கொண்டிருக்கும் தன்மை, அப்புராணங்களுக்கு மூலமாக உள்ள ஆண்டவனின் மேல் காதல் உண்டாகிவிட்டால் மறைந்து விடும் என்று உணர்வதில்லை. உணர்ந்தால் குற்றம் குறைகளைக் காண்பார்களா? குருட்டு நம்பிக்கை என்று சொல்வார்களா?

## கோயில் :

கண்ணுக்குக் காட்சிப் பொருளாக அலங்காரங்களை எல்லாம் செய்துகொண்டு வெளிவரும் உற்சவவிக்கிரகம் மூலமூர்த்தி அல்ல; ஆனால், மூலமூர்த்தி இருக்கின்ற இடத்தை மறந்த மக்களுக்கு, அதனை நினைப்பூட்டுகின்ற ஓர் திருவுருவம் அது. கோயில் என்பதும் இறைவனை நினைப்பூட்டும் இடம். மடைப்பள்ளி என்ற உடனே எப்படி நமக்கு அங்கேயுள்ள சுவைமிக்க உணவு நமது கண்முன்னுல் தோன்றுகிறதோ, அதுபோலக் கோயில் என்று சொன்னவுடன் ஆண்டவன் நினைவு உண்டாகிறது. பல பல நினைவுகளால் சுற்றிச் சுழன்றுகொண்டிருக்கின்ற மக்கள் இறைவனை வற்புறுத்தி நினைப்பதற்காக அமைந்திருக்கின்றது கோயில். இறைவனுடைய நினைப்பை உண்டாக்குகின்ற இடமாகக் கோயில் இருப்பதனுல் 'கோயிலிலே இறைவன் இருக்கிறுன்' என்று சொல்கிறுர்கள். மற்ற இடங்களில் இறைவன் இல்லையா? என்றுல் மற்ற இடங்களிலே இறைவனைப் பார்க்கவோ நினைக்கவோ ஆற்றல் நமக்கு இல்லாமையால் மற்ற இடங்களைக் காட்டிலும் இறைவனுடையநினைப்பை அதிகமாக உண்டாக்குகின்ற இடம் கோயில் என்று சொல்கிறேம்.

மணிவாசகப்பெருமான் "கோயில் சுடுகாடு" என்று பாடினுர். "மயானத்தில் சுவாமி இல்லையே! பூசாரி இல்லையே! அது எப்படிக் கோயில் ஆகும்?" என்று கேட்கலாம். கோயிலுக்குப்போகாத ஒருவன் - சமய உணர்வில்லாதவன் - சாத்திரங்களை அறியாதவன், தன் நண்பன் இறந்துவிட்டானென்று சுடுகாட்டுக்குப் போகிறுன். செத்த பிணத்தோடு அவனும் சாகும் பிணமாகச் செல்கிறுன். சாத்திரம் படிக்காமலும், தேவாரம் படிக்காமலும் இருக்கும் அவனுக்கு அங்கே நிலையாமை தோன்றுகிறது. இறைவனை நினைக்கிறுன். இறைவன் நினைவை உண்டாக்குகின்ற இடம் கோயில் என்றுல், எல்லோருக்கும் பொதுவான - ஜாதி சமயம் கடந்து, எல்லா மக்களும் நிலையாமை என்ற நிலைக்களத்திலே இறைவனுடைய நினைவைப் பெறுகின்ற அந்த இடம் கோயில் அல்லவா? ஆகவே, இறைவனுடைய நினைப்பை எல்லாச் சமயத்தவருக்கும் உண்டாக்குகின்ற சுடுகாட்டை மனிதன் கட்டாத கோயில் என்று சொல்லலாம் அல்லவா?

## இறைவன் நினைப்பு :

புறத்திலே காணுகின்ற காட்சியிலே இறைவனை நினைப்பூட்டுகிற இடம் கோயில். அகத்திலே காணுகிற கருத்துக்களிலே இறைவன் நினைப்பை நன்றுக அழுத்தந் திருத்தமாகப் பதிய வைக்கிறது புராணம். கண்ணுடைய மனிதனுக்கு எப்படி ஆடை அணிகளோடு வெளிவருகின்ற உற்சவ மூர்த்தி இறைவனுடைய நினைப்பை அதிகமாக உண்டாக்கி, அருளைப் பெறவேண்டும் என்ற பசியை எழுப்புகிறதோ, அப்படியே

கருத்து அமைந்த மனிதனுக்கு, சொல்லினால் அமைந்த புராணங்கள், தன்னிடத்திலே உள்ள அலங்காரங்களினால் இறைவனிடத்தில் பக்தியை உண்டாக்கும்.

## கலைஞன் பிரமன் :

என்னை ஒருவர் கேட்டார்; "திருமூர்த்திகளில் ஒருவராகிய பிரம்மா, கலைமகளைத் தாமே படைத்திருக்க, அவருக்குத் தந்தை முறையிலே இருக்க, அந்தக் கலைமகளைக் கல்யாணம் செய்துகொண்டார் என்று புராணம் சொல்கிறதே! பெற்ற பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொள்பவர் கடவுளா? அதுவும் ஒரு சமயமா? அதிலும் முதல் தொழிலாகிய படைப்புத் தொழில் செய்யும் கடவுளே அதுமாதிரி செய்யலாமா?" என்றும் கேட்டார். நான் பேசாமல் இருந்தேன். பிறகு ஏதோ கதை அளந்தேன்.

ஒரு சபையில் பாடிக்கொண்டிருந்தார் ஒரு பாடகர். நேரம் ஆகிவிட்டது. வேற்றூருக்குப் போகவேண்டியிருந்தமையால் கச்சேரி முடிந்த உடனேயே யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் வேகமாகப் புறப்பட்டு விட்டார். தம்முடைய பாட்டு எப்படி இருந்தது என்று பிறரைக் கேட்காமலேயே வேகமாகப் போன அந்தப் பாடகரை ஒருவர் பார்த்து, "இன்று பாடினீர்களே; நன்றாய் இருந்ததா என்று யாரையும் கேட்காமல் போகிறீர்களே; யாரையாவது கேட்க வேண்டாமா?" என்று கேட்டார். "யார் சொல்ல வேண்டும்? நான் சுவைத்துப் பாடினேன்; நானே அநுபவித்துப் பாடினேன்; அதனால் நிச்சயமாக அது எல்லோருக்கும் இன்பமாகத்தான் இருந்திருக்கவேண்டும்" என்று அவர் விடை சொன்னார்.

கலைஞன் தான் படைத்த படைப்பிலே முதற்கண் இன்பம் அடைகிறான். சிற்பாசாரியார் ஒருவர் ஒரு விக்கிரகம் செய்கிறார். அவர் படைப்பைக் கோயிலில் வைத்து எல்லோருமே வழிபடுகின்றார்கள். தாம் படைத்த படைப்புத்தானே; தம் காலடியில் கிடந்த கல்தானே என்று அந்தச் சிற்பாசாரியார் நினைப்பதில்லை. தாமும் மற்றவர்களைப்போல் இரண்டணாவைக் குருக்களிடம் கொடுத்து, அருச்சனை தீபாராதனை செய்து அநுபவிக்கிறார். தாம் படைத்த படைப்பினால் அச்சிற்பாசாரியார் இன்பம் அடைகிறார்.

பிரும்மாவைவிடப் பெரும் கலைஞன் உண்டா? கலைஞனுக்கும் தொழிலாளிக்கும் வித்தியாசம் உண்டு. தொழிலாளி ஒரே மாதிரியான பொருளைச் செய்துகொண்டே இருப்பான். கலைஞன் வெவ்வேறுவிதமான சிருஷ்டிகளைப் படைத்து அதிலே இன்புறுவான். மாபெரும் கலைஞனாகிய பிரும்மாவும் மக்களைப் படைக்கின்றபோது அவயவங்களெல்லாம் அந்தந்த இடத்திலே காணப்பட்டாலும் மாறுபட்ட முகங்களை உடைய மக்களைச் சிருஷ்டிசெய்து தான் இன்பம் காண்கிறான். கலைஞன் தன் படைப்பிலே முதற்கண் இன்பம் கண்டான் என்பது கலையுலக உண்மை. அதையே புராணம் கதையாகச் சொல்கிறது. இது தவறா? இது இயல்புக்கு மாறுபட்ட செய்கையா?

## பொய் என்பது தவறு :

இவ்வாறு புராண தத்துவங்களையெல்லாம் கலை நோக்கோடு பார்க்கின்றபோது உண்மை புலப்படும். உண்மை ஒருவருக்குப் புலனாகாமல் இருக்கலாம். அதனால் பொய் என்று சொல்லக்கூடாது. ராமகிருஷ்ண பரமஹம்சர், "கடவுள் உனக்குத் தோன்றாமையால் கடவுளே இல்லை என்று சொல்லாதே" என்று சொல்கிறார். பகல் நேரத்தில் வானத்தில் நட்சத்திரம் தோன்றவில்லை என்பதனால் பகலிலே நட்சத்திரங்களே இல்லை என்று நாம் சொல்லலாமா? சொல்லக்கூடாது. புராணத்தில் உள்ள தத்துவம் எனக்கு விளங்கவில்லை என்று சொல்லலாம். ஆனால், அதில் தத்துவமே

இல்லை என்று சொல்லலாமா? ஒருவர் சொல்லும் விளக்கம் புரியாமல் இருக்கலாம். மற்றவர்கள் வேறு விளக்கம் கொடுக்கலாம். அதனால் புராணங்களிலே தத்துவமே இல்லை என்று சொல்லாதீர்கள். இல்லவே இல்லை என்பதற்கும் எனக்குப் புலனாகவில்லை என்பதற்கும் வேறுபாடு உண்டு. அதுபோல் புராணத்திலே தத்துவம் இல்லை என்று சொல்வது தவறு. புராணத்தின் தத்துவம் எனக்குப் புரியவில்லை என்று சொல்வது பொருத்தம்.

## புராணச் செய்திகள் :

திருமூலர் புராணங்களைப்பற்றிப் பல இடங்களில் சொல்லியிருக்கிறார். புராணக் கதைகள் இன்று நேற்று நடந்தவை என்று கொள்ளக் கூடாது. திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்திலும், அதற்கு முன்பு இருந்த காரைக்கால் அம்மையார் பாடிய திருப்பதிகங்களிலும் வேறு பழைய நூல்களிலும் சிவபெருமான் செய்த திருவிளையாடல்கள்பற்றிய குறிப்புகள் பல உண்டு. அத்தனை குறிப்புகளையும் காட்டும் புராணம் இல்லை. அவர்கள் காலத்தில் புராணக் கதைகள், வரலாறுகள் வழங்கிவந்தமையால் அவற்றை ஆங்காங்கே இடையிலே சொல்கிறார்கள். வழக்காறு இந்த நாட்டிலே இருக்கவேண்டுமானால், எவ்வளவோ காலமாக இந்த நாட்டில் புராண வரலாறுகளைப் பற்றிய அறிவு இருந்திருக்கவேண்டும். சங்க காலத்துப் புராணமாக ஒன்றும் இல்லையேயொழிய, புராணத்திலே காணப்படும் பல செய்திகள் கிடைக்கின்றன. சிவபெருமான், முருகன், திருமால் முதலியவர்களைப்பற்றிய பற்பல வரலாறுகள் பழைய நூல்களில் வருகின்றன. எம்பெருமான் இறைவன் திருமேனியில் ஒரு பாதி என்ற செய்தி பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்திலே காணக் கிடக்கிறது. நெற்றியிலே கண்ணுடையவன் இறைவன் என்னும் செய்தியும் பல இடங்களில் காணக்கிடக்கிறது. சிவபெருமான் தனக்குள்ளேயே பராசக்தியை அடக்கிக் கொண்டிருப்பான்; வெளிப்படுத்தவும் செய்வான் என்பதைப் புறநானூறு சொல்லுகிறது. இப்படித் துண்டு துண்டாகக் கிடைக்கின்றவற்றை, நமக்கு இப்போது கிடைக்கும் புராணங்களிலும் வரலாறுகளிலும் காணலாம்.

புராணங்களுக்கு எப்படிப் பொருள் செய்யவேண்டும் என்பதைத் திருமூலர் குறிப்பிக்கிறார். அது நிகழ்ந்ததா இல்லையா என்று ஆராய்வது அவர் நோக்கம் அல்ல. இன்று நமக்கு அதனாலே என்ன பயன்? அதுதான் நம்முடைய நோக்கம். அந்த வரலாற்றினூடே உள்ளகருத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

## முப்புரம் எரித்த கதை :

"அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யாரறிவாரே"

என்பது ஒரு திருமந்திரப் பாட்டு. "அப்பணி.........மூடர்கள்" என்று சொல் அளவிலே மக்கள் சொல்கிறார்கள். சொல்லியவர்கள் எல்லாம் மூடர்கள் அல்ல. சொல்லிய அளவில் நிறுத்திவிடுகின்றார்களே அவர்களையே மூடர்கள் என்கிறார். அவர்கள் அதற்குமேல் சிந்திப்பது இல்லை. 'கங்கையை அணிந்த பரமசிவனாகிய ஆதி புராதனன் மூன்று புரங்களை எரித்தான்' என்று சொன்ன அளவிலே நிறுத்திவிடுகிறவர்கள் அறிவு இல்லாதவர்கள். அந்தச் சொல்லுக்கு உள்ளே பொருளைத் தெரிந்து அதனூடே உள்ள உண்மையை உணர்ந்து அதனால் நலம் பெறவேண்டும். அதுதான் புராணத்தினுடைய பயன்.

பின்னாலே, "முப்புரமாவது மும்மல காரியம், அப்புரம் எய்தமை யாரறிவாரே" என்று பேசுகின்றார். திரிபுரத்தைச் சிவபெருமான் எரித்தது ஒரு புராணக்கதை. மதில்களையுடைய பெரிய மூன்று நகரங்கள்

இருந்தன; அந்த நகரங்களுக்கு மூன்று அரக்கர்கள் தலைவர்கள்; அந்த மூவர்களாலே உலகத்திற்கெல்லாம் துன்பங்கள் வந்துகொண்டிருந்தன; இறைவன் பார்த்தான்; சிரித்து எரித்தான் என்று சொல்வார்கள். ஞானக் கண்ணினால் எரித்தான் என்றும் சொல்வார்கள். எப்படியிருந்தாலும், இறைவன் முப்புரங்களை எரித்துவிட்டான். இதை எப்படிப் பார்க்கவேண்டும் என்பதைத் திருமூலர் சொல்கிறார். "முப்புரமாவது மும்மலகாரியம், அப்புரம் எய்தமை யார் அறிவாரே". மூன்று மலங்களோடு சம்பந்தப்பட்ட முறையினால் ஆருயிர் திரிந்து கொண்டிருக்கிறது. ஆருயிர் இந்த மூன்று மலங்களின் தொடர்பினால் தானும் துன்புற்றுப் பிறரையும் துன்பத்துக்கு ஆளாக்குகிறது. அம்மூன்று மலங்களையும் அழித்தான் ஆண்டவன்.

முப்புரத்தைத்தானே அழித்தான்; தலைவர்களை அழிக்கவில்லை. அந்தப்புரங்கள் அழிந்த பிறகு இறைவனுக்குத் திருத்தொண்டு ஆற்றப் புகுந்துவிட்டார்கள் அசுரர்கள். முப்புரங்களோடு எங்கும் திரிந்து வாழ்ந்தபோது அசுரர்களாக இருந்தவர்கள், முப்புரங்கள் போனபிறகு தொண்டர்களாகி விட்டார்கள்; இறைவனுக்கு அருகில் இருந்து வாழும் பேறு பெற்றார்கள். மும்மலத்தோடு சேர்ந்து ஆன்மாக்கள் ஒருகணமும் ஓய்வில்லாமல், நிற்கின்ற இடம் ஒன்று இல்லாமல், நிலையாமல் திரிந்துகொண்டே இருக்கின்றன. அதனாலே பிறருக்கும் துன்பம்; தனக்கும் துன்பம். இறைவன் திருவருளால் மூன்று மலங்களும் அழிந்துபோகும். உயிரானது மலம் நீங்கினவுடனே எம்பெருமானோடு இணைந்து இன்பமடையும். இக்கருத்தைத் திரிபுரசங்காரக்கதை சொல்கிறது.

ஆண்டவன் முப்புரம் எரித்த வரலாறு உண்மை. வரலாறு பழையது. நமக்கு அதனால் பயன் இல்லை. அதன் கருத்தே பயன் தருவதாம். அந்த முப்புரத்தை எரித்ததுபோல் மும்மல புரத்தை ஞான அக்கினியால் ஆண்டவன் எரிப்பான். இந்தத் தத்துவத்தைத் தெரிந்துகொள்ளாமல், சிவபெருமான் முப்புரத்தை எரித்தான் என்று வாயாலேமட்டும் சொல்லிக்கொண்டு போகிறவர்கள் மூடர்கள். அறிவு உடையவர் தத்துவத்தை உணர்வார்கள்.

நாம் முப்புரங்களோடு திரியும் அசுரர்களாக இப்போது இருந்தாலும், இறைவனுடைய ஞானக்கண்ணின் பார்வைபட்டு மூன்று புரங்களும் அழிய அவனுக்குரிய தொண்டராகவேண்டும் என்ற ஆர்வத்தை இந்த வரலாற்றிலிருந்து பெறவேண்டும். மும்மலக்கட்டு அறுந்தால் உயிரானது இறைவனோடு ஒன்றி இன்புறும் என்ற கருத்தாகிய விதை முப்புரசங்காரக் கதையாக விரிந்தது. கதையைக்கண்டு விதையையும் உணர்ந்தால் புராணங்களால் நாம் பெரும் பயன் பெறலாம் என்ற அளவில் நிறுத்திக்கொள்ளுகிறேன்.

திரிகின்ற முப்புரம் செற்ற பிரானை
அரியனென் றெண்ணி அயர்வுற வேண்டாம்
பரிவுடை யாளர்க்குப் பொய்யலன் ஈசன்
பரிவொடு நின்று பரிசறி வானே.

—திருமூலர்.

இரண்டாம்நாள்விழாவில் :



தலைவர் தலைமையுரை வாசித்தல்.

# இரண்டாம்நாள் பேருரைகள்

தலைமையுரை :

## திரு. கருமுத்து தியாகராஜசெட்டியார் அவர்கள்,

மதுரை.

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை மகாசந்நிதானம் அவர்கட்கு என் வணக்கம்.

அன்பர்களே! இரண்டாம் நாள் திருமந்திர மாநாட்டிற்குத் தலைமை தாங்கும் பெருமையைத் தக்கார் பலர் இருக்கத் தொழில் துறையில் மூழ்கிக்கிடக்கும் அடியேனுக்கு அளித்துச் சிறப்பித்த மகாசந்நிதானம் அவர்களின் பேரருளுக்கு என்னுளமார்ந்த நன்றியைச் செலுத்துவதல்லது வேறு யாது கைம்மாறு செய்யவல்லேன்!

கடவுட்பற்றுக் குறைந்து உலகியற் பற்று மேலோங்குங்காலத்திலே அருளாசிரியன்மார்கள் தோன்றுவதுபோல், சைவப்பற்றும் சமயஒழுக்கமும் குன்றிவரும் இக்காலத்தில் அவற்றைக்காக்கத் திருவாவடுதுறை ஆதீனம் போன்ற சைவத் திருமடங்கள் முன்வந்திருப்பது பாராட்டற்கு உரியது. இப்பணிகள் வெற்றி பெறுவதற்கு 'ஆவடு தண்துறை உறையும் அண்ணல்' அருள்புரிவாராக.

ஆவடுதுறை, சங்ககாலம் முதற்கொண்டே வரலாற்றுப் பெருமைசான்றது; சங்கச்சான்றோரான மாசாத்தனாரைப் பெற்றது; இதனால் இது ஒருகாலத்துச் சாத்தனூர் என்ற பெயர் பூண்டது; திருமூலரை ஈந்த பெருமையும் உடையது; சிவஞானபோதத்திற்குப் பேருரைகண்ட சிவஞான முனிவர்க்கு உறைவிடமானது; பிற்காலத்தில் திரு. மீனாட்சிசுந்தரம்பிள்ளையை வளர்த்தது. இவற்றிற்கெல்லாம் மேலாக ஞானசம்பந்தப்பெருமானுக்குப் பொற்கிழி அளித்தது; சமயகுரவர்களால் பாடப் பெற்றது.

இத்துணைச் சீரும் சிறப்பும் வாய்ந்த ஆவடுதண்துறையில் அருள் திரு. நமசிவாயமூர்த்திகள் சிவநெறியும் செந்தமிழும் வழிவழிவளர இத்திருமடத்தைத்தோற்றுவித்து அருளிப்போந்தார். அதை, வாழையடி வாழையெனவந்த திருவாவடுதுறைத் திருக்கூட்ட மரபினர் போற்றி வளர்த்து வருகின்றனர். நம் ஒப்பற்ற கருவூலங்களாகிய செந்தமிழ்த்திருமுறைகளையும், மெய்கண்டநூல்களையும், நந்தமிழ் இலக்கண இலக்கியங்களையும் சிறப்புறப் பேணிப் பாதுகாத்து வளர்த்த பெருமை இந்தத் திருவாவடுதுறைமடத்துக்கே உரியதாகும்.

எந்நாட்டவரும் எம்மொழியினரும் பெற்றிராத ஒப்பற்ற அருட்பெருஞ் செல்வமாகிய தேனினும் இனிய அருட்பாடல்களைப் பெற்றது நம் அருமைத் தமிழ்மொழியேயாகும். இப்பாடல்கள், இறைவனிடம் மனங்கசிந்து,

குலம்பொல்லேன்குணம்பொல்லேன்குறியும்பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோலமாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானியல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன் நடுவேநின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேசவல்லேன்
இலம்பொல்லேன் இரப்பதே ஈயமாட்டேன்
என்செய்வான் தோன்றினேன் ஏழையேனே.

என்றெல்லாம் தன்குறைகளை எடுத்து ஓதி உருகிப்பாடி ஆன்மா அவனருளைப்பெறச் செய்தற்குத் தன்னேரில்லாத் தன்மையுடையனவாகும். இதனாலன்றோ, திருமறையின் சிறப்பை,

கருங்கல் மனமும் கசிந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை யுலகில் மற்றையர் இலரே.

என்று சிவப்பிரகாசர் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

திருமுறை பன்னிரண்டனுள் பத்தாவதாக விளங்குவது திருமந்திரமாகும். மெய்கண்டார் அருளிய சிவஞானபோதப் பத்தாம் சூத்திரத்திற்குப் பொருந்திய இலக்கியமாக இஃது அமைந்துள்ளது என்பது மரபு. திருமந்திரம் அருமையான கருத்துக்கள் பொதிந்து, சிந்தைக்கு விருந்தளிக்கும் புதுமைமிக்க உண்மை நூலாக இருந்து வருவது; முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்குவது; புரட்சிக் கருத்துக்களைச் சைவப் பொதுமக்களுக்குத் திரட்டித்தந்து அவர்களைச் செந்நெறியில் செலுத்துவது; இறை, உயிர், தளை ஆகிய முப்பொருள் உண்மையை முதல்முதல் உரைத்தது; உலகியலையும் இறையியலையும் இணைத்து வாழ்க்கைத் துறையை அமைத்துத்தர எழுந்தது; கோயில் அமைப்பு, வழிபாட்டு முறை, பூசை இயற்றும் செம்மையான முறை ஆகிய இவற்றிற்கு இலக்கணம் வகுத்துக்காட்டுவது; உடல்வளர்ச்சியுடன் இறைவனோடு ஒன்றியுடனுதலின் வழியையும் கூறுவது; புராணக் கருத்துக்களுக்குத் தத்துவத்தை அறிவிப்பது; சைவ சித்தாந்தக் கருத்துக்களையும் தோத்திரக் கருத்துக்களையும் முறையாகக் கூறுவது.

உண்மையிலே சைவ நன்மக்களுக்கு என்றும் கலங்கரை விளக்கமாக இலங்குவது அரும்பொருள்களுக்கு இருப்பிடமான திருமந்திரமே என்பது மிகையாகாது என்று கூறலாம். இதனாலன்றோ பிற்காலத்து ஔவையார் பாடல் ஒன்று,

> தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
> மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
> திருவா சகமும் திருமூலர் சொல்லும்
> ஒருவா சகம்என் றுணர்.

என்று பாராட்டுகிறது. இத்தகைய தனிப் பெருமை வாய்ந்த திருமந்திரம் ஒன்பது தந்திரங்களைக்கொண்டது.

முதல் தந்திரத்தில்: இளமை யாக்கை செல்வம் ஆகியவற்றின் நிலையாமை, கொல்லாமை, புலால் உண்ணுமை, அரசன் கடமை, அறஞ்செய்தலின் சிறப்பு, விருப்பு வெறுப்பு அற்றநிலை, அன்பை வளர்த்தல் முதலிய அறவுரைகளைப்பற்றியும்;

இரண்டாம் தந்திரத்தில்: சிவபெருமானைப்பற்றியும், அவனது ஆக்கல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் ஆகிய ஐந்தொழில்களைப்பற்றியும்;

மூன்றும் தந்திரத்தில்: இயமம் நியமம் முதலிய எண்வகை உறுப்புக்கள்கொண்ட யோகமுறைகள், அவற்றால் விளையும் பயன்கள், உடலை வெல்லும் செய்திகள் இவை பற்றியும்;

நான்காம் தந்திரத்தில்: மந்திர வகைகள், சக்கரவகைகள் பற்றியும்;

ஐந்தாம் தந்திரத்தில்: சைவத்தின் பிரிவுகள், சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய வழிகள், இறைவனை நண்பனுக, தந்தையாக, ஆண்டானுக, கணவனுகக் கொண்டொழுகும் நெறிகள்; கடவுளோடு உடனுறைதல், அவனருகிருத்தல், அவனுருவடைதல், அவனோடு இரண்டறக் கலத்தல் ஆகிய முத்திநிலைபற்றியும்;

ஆறும் தந்திரத்தில்: சிவக்காட்சி, திருவடிப்பேறு, ஞானம், துறவு, தவம், அருளால் வாய்க்கும் அறிவு, அருளுக்கு உரியராம் நிலை, திருநீற்றின் பெருமை இவை பற்றியும்;

ஏழாம் தந்திரத்தில்: மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஆறு ஆதாரங்கள், அவற்றின் துணையால் ஐம்புலன்களை அடக்கும் முறை, உள்ளிருந்து இயக்கும் சிவனையும் குருவாக எழுந்தருளும் சிவனையும் வழிபடும் வகைகள், அடியவர்பெருமை, யோகிகள் உடலைவிடும் முறை முதலியன பற்றியும்;

எட்டாம் தந்திரத்தில்: உடலமைப்பு, மகாவாக்கியங்களின் விளக்கம், மூவராலும் அறிய ஒண்ணாத சிவனின் முதன்மை, அவா அறுத்தல், அன்பை வளர்த்தல், தூய்மைபெறுதல், விடுதலை அடைதலில் நாட்டங்கொள்ளல், விடுதலை பெறுவதற்காக உடலை நீங்கும் முறை முதலியன பற்றியும்;

ஒன்பதாம் தந்திரத்தில்: இறைவனது திருநடனங்களின் உண்மை விளக்கம், திரு ஐந்தெழுத்தின் சிறப்பு, அறிவு மலர்ச்சியால் தன்னையும் தலைவனையும் உணர்தல், சமாதிநிலை அடைதல் ஆகியவைபற்றியும்; திருமூலர் விரிவாக விளக்கியுள்ளார்.

திருமூலர் 'என்னை நன்றாக இறைவன் படைத்தான், தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே' என்ற பெருமிதம் கொண்டு, 'நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் அருட்பெருநோக்கோடு முத்துப் போன்ற மூவாயிரம் திருமந்திரத்தைத் திருவாய் மலர்ந்தருளியுள்ளார். 'சமயகோடிகள் எல்லாம் தந்தெய்வம் எந்தெய்வம் என்று' எங்கும் வழக்கிட்டு நின்ற பரம்பொருளை 'ஒருவனே தேவன்' என்று தீர்ப்பளித்த பெருமை நம் திருமூலரைச் சாரும். அவ்வாறே 'ஒன்றே குலம்' என்னும் உண்மையையும் உறுதிப்படுத்தியவர் இவரேயாவர். 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற இவரது பொய்யாமொழி பொன்னெழுத்தால் பொறிக்கத்தக்கதாகும்.

இனி, அன்பே சிவமென்னும் உண்மையை வலியுறுத்தி,

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே

என்று தெளிவாகத் திருமூலர் விளக்குகின்றார். இறைவன் அன்பு வடிவினன்; அவனையடையும் ஒரேவழி அன்பே; அன்பினும் சிறந்த பொருள் உலகில் வேறொன்றில்லை; இறைவனாலே படைக்கப்பட்ட உலகுயிர்களிடத்துக் காட்டுகின்ற அன்பே அவனுக்கு உகந்ததாகும் என்ற அரிய கருத்தைத் திருமூலர்,

படமாடக் கோயிற் பரமர்க் கொன் றீயின்
நடமாடும் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடும் கோயில் நம்பர்க்கொன் றீயின்
படமாடக் கோயிற் பரமர்க்கங் காமே

என்னும் பாடலில் நன்கு புலப்படுத்தியுள்ளார். மேலும் திருமந்திரம் இறையியலை மட்டும் கூறுவதோடுநில்லாது, இறைவனை அறிவதற்குக் காரணமாயுள்ள உடம்பைப் போற்றவேண்டும் என்னும் கருத்தையும் வற்புறுத்துகிறது.

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே

என்று திருமந்திரம் மக்கள் உடம்பின் மாண்பினை எடுத்துக் காட்டுகிறது. திருமூலர் உலக நிலையாமை, யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை இவற்றைக் கூறினும், இறைஞானம் எய்துவதற்குக் காரணமான அரும்பெறல் உடம்பை நல்வழியில் விரும்பி வளர்த்துப் போற்றுமாறு கூறுவது திருமந்திரத்தின் புதுமைத் தன்மையைப் புலப்படுத்துகிறது.

மற்றும், திருமூலர் விதியை வெல்ல முடியாது என்னும் கருத்தை மாற்றி, 'ஈசன் அருள்பெற்றார் விதியையும் வினையையும் வெல்லலாம்' என்னும் துணிவைத் திருமந்திரத்தில் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

வென்றிட லாகும் விதிவழி தன்னையும்
வென்றிட லாகும் வினைப்பெரும் பாசத்தை
வென்றிட லாகும் விழைபுலன் தன்னையும்
வென்றிடு மங்கைதன் மெய்யுணர் வோர்க்கே

என்னும் திருமந்திரம்,

'கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு'

என்னும் வள்ளுவர் குறளோடு ஒப்புநோக்கி இன்புறற்பாலது.

இனி, இறைவன் நாம் காணும் ஐம் பெரும் பூதங்களாலான ஒவ்வொரு பொருளிலும் நீக்கமற நிறைந்திருக்கின்ருன். ஆயினும் அவனைக் காணமாட்டாமல் உயிர்கள் பூதங்களைமட்டுமே காணுகின்றன. அவனருளால் அவனைக் காணும்நிலை கைவந்தவுடன் அவனையன்றிப் பூதங்கள் எவையும் புலனுவதில்லை. இவ்வரிய உண்மையைத் திருமூலர்,

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதமே

என்ற எளிய உவமையால் அழகாகவிளக்குகின்ருர்.

சிவநெறியாகிய மெய்ந்நெறி இறைவன், உயிர், உலகு என்னும் மூன்று பொருள்களை அடிப்படையாகக் கொண்டது. இவற்றையே பதி, பசு, பாசம் என்பர். இவற்றின் இயல்புகளையும் ஒன்றுக்கொன்று உள்ள தொடர்புகளையும் திருமூலனுர்,

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு பாசம் அநாதி
பதியினைச் சென்று அணுகா பசுபாசம்
பதியணுகில் பசுபாசம் நிலாவே

என்னும் பாடலில் சுருங்கக்கூறி விளங்க வைக்கின்ருர்.

அறிவுடைய உயிர்களாகிய நமக்கு ஐந்து கருவிகள் உண்டு. இவற்றை அறிகருவி (ஞானேந்திரியம்) என்று கூறுவது வழக்கு. இவற்றை அடக்கி ஆள்வது மனம். உலகியல் வாழ்வுதரும் காட்சியில் இவை ஈர்ப்புண்டு திரியும். இவற்றை அடக்கி ஒடுக்கி நெறிப்படுத்திஞல் மெய்யுணர்வும் பேரின்பமும் பெறலாம் என்பது சித்தாந்த உண்மை. இதனைத் திருமூலர் மிகவும் வேடிக்கையாகக் கூறத் தொடங்கி,

பார்ப்பான் அகத்திலே பால்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கிஞல்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாய்ச் சொரியுமே.

என்று இனிமையாகப் பாடுகின்ருர்.

'உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து'

என்னும் வள்ளுவர் வாக்கும் ஈண்டு நோக்கற்பாலது.

திருவருள் உணர்ச்சி குன்றியுள்ள இக்காலத்தில் திருமூலரது மெய்யுணர்வை அளிக்கும் இந்நூலின் சிந்தனை பெரிதும் பயன்தரத் தக்கதாகும். திருமூலரோடு நெருங்கிய தொடர்புடைய இத்திருமடம் அவர் அருளிய இவ்வரிய மூவாயிரம் திருமந்திரத்தையும் கரையானுக்கும் பிறவற்றிற்கும் இரையாகாமல் காத்ததுடன், ஆண்டுதோறும் பலருமறியப் பரப்பி வருவது மிகவும் போற்றற்பாலது.

திருமந்திரம் உள்ளிட்ட பன்னிரண்டு திருமுறைகளையும், பதினுன்கு மெய்ந்நூல்களையும், இன்னும் பல ஒப்பற்ற கருவூலங்களையும் பெற்றிருக்கும் சைவசமயம் உலகெங்கும் பரவி உயிர்களை உய்விக்கும் பெருமையும் சிறப்புமுடையது. ஆனுல் அது சுருங்கி நம் தமிழ்நாட்டில்கூடப் பரப்பப் படாமல் இருப்பது வருந்தத்தக்கது. இப்பெருங் குறையைத் தீர்க்கத் திருமடங்கள் முன்வந்திருப்பது நல்லதோர் அறிகுறியாகும். சைவசமயத்தைத் தமிழகம் மட்டிலுமன்றி, இந்தியாவிலும், உலகெங்கணும் பரப்பித் தென்னுடுடைய சிவனை எந்நாட்டவர்க்கும் உரியவனுக்குவது சைவர்களது முதற்கடமை ஆகும். இக்குறிக்கோளை அடைய நம் சமயநூல்களைப் பிறமொழிகளில் மொழி பெயர்க்கவும், நாடெங்கும் சமயக்கல்லூரிகளையும் தேவார திருவாசகப் பாடசாலைகளையும் அமைக்கவும் திருமடங்களுக்கு 'ஆவடு தண்துறை யுறையும் அமரர் ஏறு' துணை நின்று அருள் புரிவாஞக.

வாழ்க திருமூலர். வளர்க சிவநெறி.

## 'சமயபேதங்கள்'

வித்துவான் திரு. G. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் M. A., B. L.,
பேராசிரியர் - தமிழாராய்ச்சித்துறைத்தலைவர், அண்ணுமலைப்பல்கலைக்கழகம்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் பொன்னுர் திருவடிகளுக்கு என்னுடைய தாழ்மையான போற்றுதலையும் வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தலைவர் அவர்களுக்கும், இங்குக் கூடியிருக்கிற பெரியோர்களுக்கும் எனது தாழ்மையான வணக்கம்.

இன்று ஒரு நல்ல நாள். இன்று இந்தத் திருமந்திர மாநாட்டிலே தலைமை வகித்து இங்கு வீற்றிருப்பவர்கள் 'தமிழ் நாடு'க்கு அதிபர். அவர்கள் வந்து இங்கு வீற்றிருப்பது தமிழ்நாடே வீற்றிருப்பது போல் தோன்றுகிறது. பெயரிலே என்ன இருக்கிறது என்று கேட்கலாம். ரோஜா மலர் இருக்கிறது; அதற்கு ரோஜா என்கின்ற பெயர் இல்லாவிட்டால், மணம் குன்றிவிடுமா? என்று கேட்கலாம். ஆனுல் பெயரிலே எவ்வளவோ சங்கதி அடங்கியிருக்கிறது. ஒருவர் தம் பெயரைக்குறித்து அனுப்பினுல், ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருக்கின்ற நிபுணர்கள் ஜாதகம்கணித்து அனுப்புகிருர்கள். அதே போல் தலைவருடைய பெயரில் நல்ல அர்த்தம் இருப்பதைப் பார்க்கிறோம். 'கருமுத்து' என்ருல் கறுப்பான முத்து என்று அர்த்தம் இல்லை; வலியமுத்து என்று கொள்ள வேண்டும். ஒருவனைப் பார்த்து 'உன்னை மேலுலகத்துக்கு அனுப்பிவிடுகின்றேன்; போ' என்று கூறியபோது, அவன் 'மேலே இருக்கக்கூடிய சொர்க்க லோகத்திலே என்ன இருக்கிறது?' என்று கேட்டான். 'காமதேனுவும், கற்பகமரமும், சிந்தாமணியும் அங்கே இருக்கின்றன; நீ சுகமாய் வாழலாம்' என்று பதில்சொன்னுன். 'சரி உங்கள் சொர்க்கலோகத்திலே அவை எல்லாம் இருந்தாலும் முத்தும் முத்தமிழும் இருக்கின்றனவா? இவை இரண்டும் அங்கு இல்லையே; அப்படி இல்லாத அந்த மேல் உலகம் என்ன உலகம்?' என்ருன்.

> அத்தி ருத்தகு நாட்டினை அண்டர்நாடு
> ஒத்தி ருக்குமென் ருலுரை ஒக்குமோ?
> எத்தி றத்தினும் ஏழுல கும்புகழ்
> முத்தும் முத்தமி ழும்தந்து முற்றலால்.

என்பது கம்பருடைய பாடல்.

தமிழ்நாட்டைக் கம்பர் 'திருத்தகு நாடு' என்றுகுறிக்கின்ருர்; மேலுலகத்தை 'அண்டர் நாடு' என்கிருர். கீழ்நாடு என்கிற பொருள் அதிலே பொதிந்து கிடப்பதைப் பார்த்து அடியேன் மகிழ்ச்சியுறுவதும் உண்டு.

தமிழ்நாட்டிலே இந்த முத்தும் முத்தமிழும் இருக்கின்றன. இவை இரண்டும் பெற்ற மதுரைமாநகரத்தில் தமிழுக்குத் தொண்டுசெய்துவரக்கூடியவர்கள் இங்கு வீற்றிருக்கிருர்கள். கல்விக்காக இவர்கள் செய்துவருகிற தொண்டு மிகவும் போற்றுதற்கு உரியது. அங்கே சிறந்த கல்லூரி வைத்து நடத்தி வருகிருர்கள். அது ஒரு பெரும் பல்கலைக்கழகமாக மாறவேண்டும் என்ற எண்ணமும் அவர்களிடம் இருந்து வருகிறது. அப்பேர்ப்பட்ட ஒரு பெரியவர் இங்குதலைமைதாங்கும்படியாகத் திருவருள் கூட்டுவிக்கக் குருமகாசந்நிதானம் அவர்கள் அருட்பார்வை அவர்கள்மேல் விழுந்தது போற்றற்குரியது. மகாசந்நிதானம் அவர்கள் சைவ நெறியை வளர்த்துவருகின்ற நேர்த்தி, தெரிந்தவர்களுக்குத்தான் தெரியும். 'கண்ணை இமை காப்பதுபோல்' சைவசமயத்தை நமது குருமகாசந்நிதானம் அவர்கள் காத்து வருகிருர்கள்.

இங்கிருந்து ஆண்டுதோறும் திருவெண்ணெய்நல்லூரிலுள்ள மெய்கண்டார்

சந்நிதிக்குச் சென்று மெய்கண்ட சாத்திரங்களைப் பரிந்துபோற்றி வளர்த்து வருகிற ஒரு சிறப்பைத் தமிழ்நாடு அறியும். நம் சைவசமயத்திற்குத் திருமந்திரம் ஆதாரமான முதல்நூல் என்று இங்கு இருந்துகொண்டே அறிவுறுத்துகிறார்கள். திருவெண்ணெய்நல்லூருக்கும் சென்று அறிவுறுத்துவதைப் பார்க்கும்போது உண்மையிலேயே சைவத்தை, கண்ணை இமைகள் அசைந்தும் அசையாதும் காப்பதுபோல் காத்து வருகிறார்கள் என்று சொன்னால் அது மிகையாகாது.

தமிழ்நெறிக்கு ஆதாரமான நூலாகிய திருமந்திரத்தை, இவ்விதம் நான்கு ஆண்டுகளாகவே இங்கே மாநாடு கூட்டி, அதன் கருத்துக்களைப் பரப்பவேண்டுமென்கின்ற கட்டளையின்படி, இம்மாநாடு நடந்துவருகிறது. திருமந்திரம் தோன்றியபூமி இந்தத் திருவாவடுதுறை. திருவாவடுதுறையிலே இம்மாநாடு கூட்டுவதால், தமிழ்நாடு முழுவதும், ஏன் வெளிநாடுகளிலுங்கூடத் திருமந்திரம் என்றால் என்ன என்பதைத் தெரிந்துகொண்டார்கள். இம்மாதிரியான மாநாடு கூட்டிய பிறகு, இப்பொழுது எத்தனையோ புலவர்கள் நம் திருமந்திரத்திற்கு உரை எழுதி எழுதிக் குவிக்கிறார்கள். அந்த உரைகளை வெளியிடுவதற்கு வழி உண்டா என்று கேட்கிறார்கள். இந்நூல் எல்லோராலும் ஆராயப்பட்டு வெளியிடவேண்டிய ஒரு நூலாகும். அதன்பின்னரே உலகப் பொதுமக்களுடைய கைக்கு அது கிடைக்கும்படிச் செய்யவேண்டும். இதற்கு நம் குருமகாசந்நிதானம் வழிசெய்யவேண்டும்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இதற்கென்று ஒரு தனித்துறை ஏற்படுத்தி, ஆராய்ச்சி செய்ய ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். இன்னும் வருகின்ற ஆண்டிலே மிகவும் விரிவடைந்து பல ஆராய்ச்சி நூல்களை வெளியிடுவதற்கு ஏதுவாக வழிசெய்யப்படும். இதையெல்லாம் பார்க்கும்போது நமது குருமகாசந்நிதானம் உண்மையிலேயே நமது சைவ நெறிக்கு யாதொரு இடம்பமும் விளம்பரமும் இல்லாமல் பேச்சைவிடச் செயலே மேலானது என்ற முறையில் தொண்டுசெய்துவருகின்றார்கள். அக்காட்சியைக் காணும் சைவ உலகமானது மிகவும் களிபேருவகை எய்தும் என்பதில் தடை என்ன இருக்கிறது?

மகாசந்நிதானம் அவர்கள் விளம்பரத்தையோ பிரசாரத்தையோ விரும்பவில்லை. இந்த இரண்டும் இல்லாமையால், தமிழ்நாட்டில் இன்றும் பலர் திருவாவடுதுறை என்றால், அது எங்கே இருக்கிறது? அங்கு என்ன செய்கின்றார்கள்? என்ற நிலையில் இருந்து வருகின்றார்கள். மகாசந்நிதானம் பட்டத்திற்கு வந்தபிறகு அச்சடித்து வெளியாக்கியிருக்கிற நூல்கள் மிகப் பல. மேலும் இப்பொழுது அச்சகம் ஒன்று ஆரம்பித்திருக்கிறார்கள். இனிமேல் பல வெளியீடுகள் வந்துகொண்டேயிருக்கும் என்பதில் ஐயம் இல்லை.

எனக்குப் பேசும்படியாகப் பணித்த பொருள் சமயபேதம். சமயபேதம் என்பது பெரிய விரிவான ஒரு பொருள். அதைப் பற்றி மிகச் சுருங்கிய நேரத்திலே எவ்வாறு சொல்லமுடியும்? உலகத்திலே எத்தனை சமயம் இருக்கின்றது என்றால், 900-க்கும் மேலாகும். அவைகளுக்கும் மேலாக ஒவ்வொரு சமயத்திலும் பல உட்சமயங்கள் பரந்து விரிந்துபோகின்றன. சைவ உலகத்திலே ஒவ்வொரு சைவ மண்டலமும் ஒவ்வொரு சமயமாக இருக்கிறது. தமக்கென்று ஒரு நெறியை வகுத்துக்கொண்டு ஒவ்வொரு சமயமும் திரிகிறது. 'எத்தனை தலைகள் இருக்கின்றனவோ அத்தனை மனங்கள் உள்ளன' என்று ஆங்கிலத்தில் சொல்வதுபோல, உலகத்திலே எத்தனை தலைகளிருக்கின்றனவோ அத்தனை அபிப்பிராயங்கள் இருக்கின்றன. ஒவ்வொருவனுக்கும் உலகியலில் தனித்தனி அபிப்பிராயமும், கருத்து வேறுபாடும் இருக்குமானால், ஒன்றுந்தெரியாத சமயத்தைப்பற்றி,

கண்ணால் காணமுடியாத பரம்பொருளைப் பற்றி ஒவ்வொருவனும் என்ன கவனத்தில் கொண்டிருப்பான்? அதையெல்லாம் சமய மாகவே கருதியிருக்கிறான் என்று திருமூலர் சொல்கிறார். எண்ணற்ற சமயங்கள் உலகத்தில் உள்ளன என்கிறார் :

நூறு சமயம் உளவாம் நுவலுங்கால்
ஆறு சமயமவ் வாறுட் படுவன
கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லார்
ஈறு பரநெறி யில்லா நெறியன்றே.

திருமூலர் பலசமயங்களை எடுத்துப் பெயர் கூறித் திருமந்திரத்திலே சொல்லவில்லை. ஏன்? காலத்தைவீணாக்கவேண்டா என்றுதான் சொல்லவில்லை. உலகத்திலே ஆறு சமயங்கள் என்று பல பாடல்களிலே சொல்கிறார். ஆறுசமயங்கள் என்றுசொல்லும்போது, புறச்சமயத்தைச் சொல்லுகிறாரா? அகச்சமயத்தைச் சொல்கிறாரா? என்று தெளிவாகச் சொல்லமுடியாதபடி சொல்லியிருக்கிறார். அப்படிச் சொல்லும்போது, 'சமயபேதங்கள் பேசுவது இருக்கட்டும்; திருமந்திரத்திலே திருமூலர் என்ன சமயத்தவர் என்று தெரிகிறதா? எந்த சமயத்தை அவர் பின்பற்றுகிறார்? எந்த சமயத்தை வலியுறுத்துகிறார்? அது தெரிகிறதா?' என்று கேட்டால், அதைப் பல பாடல்களிலே சொல்லியிருக்கிறார். ஒரு பாடலைப் பார்ப்போம்.

சைவ சமயத் தனிநா யகன்நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கம் சேர்ந்துய்ய
வையத்து ளார்க்கு வகுத்துவைத் தானே.

ஒரு நெறி; பல பேதங்களுக்குள்ளே என்றும் உளதாகிய உண்மையான நெறி ஒன்றுண்டு என்று எடுத்துக்காட்டுகிறார். அதுதான் தெய்வச் சிவநெறி; சன்மார்க்க நெறி; உலகத்தில் எல்லோரும் பற்றவேண்டிய குருநெறி; இதனை இறைவன் உண்டாக்கி வைத்திருக்கிறார்.

மனிதனைக உண்டாக்கும் சமயத்தை நம் நாட்டவர் ஒப்பவில்லை. அழியாதசமயம் ஒன்று இருக்கவேண்டுமானால், அழியாத ஒருபொருள்தான் ஆக்கவேண்டும். திருமூலர் வற்புறுத்தும் எல்லாக்குறிப்பையும் உணரவேண்டும். இதைத்தான் திருவள்ளுவரும் தம்நூலில்,

" பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார் "

என்ற குறளால் விளக்குகிறார். அதுதான் சன்மார்க்கநெறி; சைவநெறி.

கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்
முற்பத ஞான முறைமுறை நண்ணியே
தொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே.

சைவ சித்தாந்தந்தான் சிறந்த நெறி. அது ஞான நெறி. அதாவது சன்மார்க்க நெறி; சிவஞானசித்தியார், சிவஞான போதம் முதலிய மெய்கண்டசாத்திரங்களில் கூறப்படுவது. நான்கு நெறிகளில் ஞானநெறி மிக்கது என்பதை,

ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே.

என்ற பாடலால் விளக்குகிறார். தலைவர் அவர்கள் சொல்லும்போது,

ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாய்உனை நானும் தொழுவனே.

என்ற அப்பருடைய தேவாரத்தை நினைவூட்டினார்கள். ஆனால், திருமூலர் திருமந்திரத்திலே பிறசமயங்களைப்பற்றி ஒன்றுமே பேசவில்லையா? என்றால், பல பாடல்களிற் சொல்கிறார். வைணவர்கள், வேதாந்திகள், மாயாவாதிகள் இவர்களையெல்லாம் புறச்சமயத்தவர் என்று எதற்காகச் சொல்லிவிட்டார் என்றால், தத்துவங்களைப்பற்றிச் சொல்லும்போது, உலகத்திலே 96 தத்துவங்கள் இருக்கின்றன; 36 தத்துவங்களை சைவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள்,

மற்றும் வேதாந்திகள் 28 தத்துவங்களை யும், வைணவர்கள் 24 தத்துவங்களை யும், மாயாவாதிகள் 25 தத்துவங்களையும் கொண்டிருக்கிறார்கள் என்பதை மிக அழ காக ஒரு சிறிய திருப்பாடலில் பட்டியல் கொடுக்கிறார்:

ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுஎன்பர்
ஆகின்ற வாறு றருஞ்சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ் வேதாந்தி வயிணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே.

இதைப் பார்க்கும்போது பல சமயங்களைத் தெரிந்திருக்கிறார் இவர் என்பது விளங் கும். இவர் தம் காலத்திலேயிருந்த சமயங் களைக் குறிப்பிடுகிறார். இன்னும் பல சமயங் கள் வாமத்தோர் மார்க்கம், சக்தி மார்க்கம் போல்வனவாம். சக்திவழிபாட்டை இவர் கண்டிக்கிறார். கள்ளை உண்ணுதல் தீது என்பர். கள் உண்பதை ஒரு குற்றமாகக் கருதுகிறது திருக்குறள். சக்திவேண்டிக் கள்ளைக் குடிக்கிறார்கள் என்று சொல்லப் படுகிறது. ஆனால், உண்மையிலே சக்தி அழிந்துபோனதை அவர்கள் நினைக்க வில்லை. சக்தி அழிந்துபோவதுதான் உண்மை என்பர்.

சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்
சத்தி யழிந்தது தம்மை மறத்தலால்.

வாமத்தோர் தாமும் மதுவுண்டு மாள்பவர்.

என்றும் பாடியுள்ளார் திருமூலர்.

சைவத்தை நான்கு பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்கள். அவை சுத்தசைவம், அசுத்தசைவம், மார்க்கசைவம், கடுஞ் சுத்த சைவம் என்பன. ஒவ்வொன்றையும் எடுத்து நாலைந்து பாடல்களிலே விளக்கு கிறார். அவற்றைப் பார்க்கும்போது, ஒன்றி லிருந்து ஒன்றைப் பிரித்து வேறுபாடு காண்பது மிக அரிதாக இருக்கும். எதைச் சுத்த சைவம், எதை அசுத்த சைவம், எதை மார்க்கசைவம், எதைக் கடுஞ்சுத்த சைவம் என்று சொல்வது என்று நாம் பார்க்கும்போது, சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் இந்நான்கு நெறிகளைப் பிரித்துக் காட்டுகிறார். சுத்த சைவமானது சரியை. அவர்கள் இறைவனைத் தோயாமல் தோய்வர். அசுத்த சைவர் சரியை கிரியை இரண்டையும் மேற்கொண்டவர் ஆவர். மார்க்க சைவர் யோக நெறியைக் கடைப் பிடிப்பவர். கடுஞ்சுத்த சைவர்கள் புற அனுபவங்களைக்கொண்ட ஞானிகள். இப் படியாக நான்கு மார்க்கங்களை எடுத்துக் கூறுகிறார். இப்படிப் பலபல சமயங்களை எடுத்துத் திருமூலர்சொல்லும் காரணம் நன்குணர்ந்தால், சமயவாதிகள் கற்றுக் கொள்ளவேண்டிய ஒரு சிறந்த கொள்கை உண்டு என்பது தெரியும். அது என்ன? அதைப் பார்க்கும்போது, பிற சமயங்களில் இல்லாத ஒரு சிறப்பு சைவத்தில் என்ன இருக்கிறதென்றால், பிற மதங்களில் சொல் வதைக் காதுகொடுத்துக் கேட்கவேண்டும் என்ற மனப்பான்மை சைவத்தில் உண்டு. ஆனால், சைவசமயம் அல்லாத பிறமதத் தவர் தம்தத்துவங்களைக் காட்டி ஒப்புக் கொள்ளச் சொல்வர். சைவசித்தாந்திகள் குற்றங்குறை நீக்கி நல்லதை ஏற்றுக் கொள்வர். மற்றைச் சமயவாதிகளுடைய கொள்கையைக் காட்டி, குழிகளில் விழாமல் காத்துக் கரைசேர்ப்பது சைவசித்தாந்தம்.

பிறசமயங்களின் ஆராய்ச்சியாளர்கள் தென்னாட்டிலே தொன்மைக் காலத்தி லிருந்தே தோன்றியிருக்கிறார்கள் என் பதைச் சிலப்பதிகாரத்தில் பார்க்கிறோம். 'பாசண்டச் சாத்தன்' என்பான், 96 வகை யான சமயசாத்திர கருத்துக்களை உணர்ந் தவன்; பல சமயங்களினுடைய நூல்களைக் கற்று வல்லான். இதைப்போலவே, மணி மேகலையிலும் பல பல சமய ஆராய்ச்சிகள் மறைந்துகிடக்கின்றன. அதுபோலவே, திருமூலர் திருமந்திரமும் பல சமயங்களைப் பற்றி அறிவதற்கு மிகவும் உதவியாக இருக்கிறது. அகப்புறச் சமயங்களை அகம், புறம், அகப்புறம், புறப்புறம் என்று நான்குவிதமாகப் பிரித்திருக்கின்றார்கள். அவற்றைத் துருவிப் பார்க்கவேண்டாம்

என்று சொல்லுகின்றார் திருமூலர். ஏன்? அகச்சமயங்கள் ஆறும் சிவத்தையே சென்றடைவனவாயுள்ளன.

ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே.

ஓர் ஊர் இருக்கிறது. அதற்கு நான்கு இடங்களில் வழி இருக்கிறது. எந்த ஒரு வழியாக வந்தாலும் அங்கு வந்துசேரலாம். இப்பொழுது ஓர் எண்ணம் தோன்றுகிறது. திருவாவடுதுறை ஆதீனம் என்ற உடனேயே சைவத்திற்கு முதன்மையான இடம்; சிவ ராஜதானி; சைவகுரு இருக்கும் பீடம் என்ற மனப்பான்மை தமிழ்நாட்டில் இருக்கவேண்டும். எப்படி ரோமாபுரியில் உள்ள 'வேட்டிகன்' என்னும் நகரத்தைச் சொன்னவுடனே போப்பாண்டவர் நினைவு உலகத்திலுள்ள கிறித்தவர்களுக்கு உண்டாகின்றதோ, அப்படி திருவாவடுதுறை என்றவுடனே சைவகுரு ஞானபீடத்தில் வீற்றிருக்கிறார்கள் என்ற நினைவு தமிழ் நாட்டிலுள்ள அத்தனை சைவ நன்மக்களுக்கும் ஏற்படவேண்டும். ஆனால், இன்று நம்முடைய சமய தத்துவங்கள் தெரியாத நிலைதான் நாட்டில் இருந்துவருகிறது.

நம்முடைய குருமகாசந்நிதானமவர்கள் இறைவனுடைய பிரதிநிதியாக இங்கே தங்கியிருக்கிறார்கள். இந்த இடத்திற்குப் பல வழிகள் இருக்கின்றன. ஆனால் எல்லா வழிகளும் ஒரே இடத்திற்குத்தான் கொண்டு சேர்க்கின்றன. அதேபோல், பல சமயங்கள் பரந்துகிடக்கின்ற இந்நாட்டிலே எல்லாச் சமயங்களும் கடைசியாக ஆண்டவனிடத்திலே போய்ச் சேருவதைத்தான் குறிப்பிடுகின்றது.

இதுவே நல்லசமயம், அதுவே நல்ல சமயம் என்று கூறிக்கொண்டிருப்பது 'மலையைப்பார்த்து நாய் குரைப்பது'போலாகும். சந்திரனைப்பார்த்து நாய்குரைப்பது என்று சாதாரணமாகச் சொல்லுவது வழக்கம். சோழநாட்டிலே மலை கிடையாதாகையால், ஆகவே நாய்களை அடிக்கவுங்கூட, கல் கிடைக்காததலால் அப்படிச் சொல்வார்கள். ஆனால், மலை தொடர்ச்சியாக இருக்கின்ற இடத்தில் மலையைத் தொடர்ந்து பார்த்தால், அது ஓடிக்கொண்டிருப்பது போல் தெரியும். அப்பொழுது நாய் குரைக்கிறது. ஒரு சமயம் இன்னொரு சமயத்தைப் பார்த்துக் குரைப்பது, மலையைப்பார்த்து நாய் குரைப்பது போலாகும். இதனையே கம்பர் ஒரு இடத்தில் காட்டுகின்றார்.

சீதையைத் தேடி வருகின்ற ராமனின் மருண்ட கண்களுக்கு மலை உருண்டோடுவதைப்போல் தெரிகிறது. 'நீ சீதையைக் கண்டுபிடித்துக்கொண்டுவந்தால் என்ன?' என்று மலையைப்பார்த்துக் கேட்கிறான்.

குன்றேகடி தோடினை கோமளக் கொம்ப ரன்ன
என்தேவியைக்காட்டுதி காட்டலையென்னில் இவ்அம்பு
ஒன்றே யமையும் உன்னுடைக்குலமுள்ளவெல்லாம்
இன்றே பிளவா வெரியாக் கரியாக்க வென்றான்.

'என் மனைவியைத் தேடிக் கொண்டுவந்து காட்டாவிட்டால், இந்த ஒரு அம்பினால் உன்னைப் பிளந்து கரியாக்கிவிடுவேன்' என்று ராமன் மலையைநோக்கிச் சொல்வதாகக் கம்பர் நயம்படக் கூறுகிறார்.

இத்தவம் அத்தவம் என்றிரு பேரிடும்
பித்தரைக் காணின் நகுமெங்கள் பேர்நந்தி
எத்தவ மாகிலென் எங்குப் பிறக்கிலென்
ஒத்துணர் வார்க்கொல்லை யூர்புக லாமே.

என்று சைவசமயத்தில் ஒரு சிறந்த மேற்கோளைக் காட்டுகிறார் திருமூலர். எல்லாச் சமயங்களிலுமுள்ள பரந்தகொள்கையை மேலோங்கிய நிலையில் சொல்லக்கூடியது சைவசித்தாந்தமாகும். ஓருலகக்கொள்கை நன்கு சைவத்திலே காணப்படுகின்றது. சமயத்தின்பேரால் மேலைநாடுகளிலும் மற்ற நாடுகளிலும் எத்தனை படை எடுப்புகள், எத்தனை யுத்தங்கள் நடந்திருக்கின்றன?

எவ்வளவு ஆயிரக்கணக்கான மக்கள் படுகொலைக்கு ஆளாகியிருக்கிறார்கள் சமயத்தின் பேரால். ஆனால், சைவசமயத்தின் பேரால் யாராவது போர் புரிந்ததாகக் கேள்விப்படவில்லை. 'சமயத்தைக் கண்டிப்பாய் சுமத்தக்கூடாது' என்பது நம் நாட்டு மக்களுடைய கொள்கை. அவனவன் அனுபவித்து இன்பத்தைக் காணவேண்டும். சமயம் என்பது புறக்கோலத்தைச் சுமத்தி வலுக்கட்டாயப்படுத்திப் புகுத்தக் கூடியதன்று. அதைத்தான் திருமூலர் கடைசியாகச் சொல்கிறார்.

ஆறு சமயமும் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவனலன்
தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்
மாறுதல் இன்றி மனைபுக லாமே.

சமயத்தைக் கண்டிப்பாக வற்புறுத்திப் புகுத்துவதால் என்ன பயன்? அவனவன் தெளியவேண்டும். சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் கதை எதற்காக என்றால், ஒரே ஒரு கருத்தை விளக்குவதற்காகத்தான். இளங்கோவடிகள் 'தெய்வம் தெளிமின்; தெளிந்தோர்ப் பேணுமின்' என்று வற்புறுத்துகிறார். ஆனால், நாடகமாடிகளோ அந்தக் கருத்தை விட்டுவிடுகின்றார்கள். இந்த ஒரு கருத்தை வற்புறுத்தத்தான் சிலப்பதிகாரமே எழுதப்பட்டது. திருமந்திரத்தைப் படித்துவிட்டு மோட்சம் எங்கே என்று கேட்டால் முடியுமா? அதில் தேறித் தெளியவேண்டும்; ஊறித் திளைக்கவேண்டும்; அவன்தான் பயனைப் பெறுவான் என்ற அளவிலே அமர்கின்றேன்.

சைவப் பெருமைத் தனிநா யகன்தன்னை
உய்ய உயிர்க்கின்ற ஒண்சுடர் நந்தியை
மெய்ய பெருமையர்க் கன்பனை இன்பம்செய்
வையத் தலைவனை வந்தடைந் துய்மினே.

—திருமூலர்.

## ‘புவனபதிசக்கரம்’

சித்தாந்த சரபம், மகாமகோபாத்தியாய,

சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள்,

பழநி.

கருணைக்கடலாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுக்கும், முனிபுங்கவர்களுக்கும், இதர பெரியோர்களுக்கும் என் வணக்கம். இன்று சிந்தனைக்குத் தந்துள்ள பகுதி ‘புவனபதிசக்கரம்’ என்னும் அரிய பகுதி. ஆண்டுதோறும் நமது சிந்தனைக்கு உரியதாகிய இந்த அரிய திருமந்திரத்தை, இந்த நாட்டில் என்னைப்போன்றவர்கள் நினைவுறுவதற்கு வாய்ப்பாக, திருமந்திர மாநாட்டை மகாசந்நிதானம் கூட்டிவைக்கின்றார்கள். இந்த அரிய பெருநூலிலே எங்களுடைய சிந்தனை செல்லுமுகத்தான் இத்திருமந்திரத்தின் திசையை அறிந்து கொள்ளவேண்டும் என்ற கருணையாலே, ஆங்காங்கே பல மக்கள் சிந்தனை செய்யும் வண்ணம், இந்த மாநாட்டின் சிந்தனையிலே காணுகின்ற பொருளையெல்லாம் தொகுப்பித்து, அவைகளை, இங்கேவந்து கேட்பதற்கு வாய்ப்பு இல்லாதவர்களும் ஆங்காங்கே அதனைப்படித்து அதற்கு உரிய நெறியிலே ஒழுக, எழுத்தாளர்களைக் கொண்டு எழுதுவித்து, அதை நூல் வடிவாகவும் பதிப்பித்து, அச்சிட்டு வழங்குகின்றது பெரியதொரு செய்கையாகும்.

‘புவனபதிசக்கரம்’ என்னும் இப்பகுதி நான்காவது தந்திரத்தில் அமைந்துளது. இதில் உள்ளபகுதிகள் பதின்மூன்று. பன்னிரண்டாம் பகுதி புவனபதிசக்கரம் என்பது. அதற்குமுன்னால் பதினொரு தலைப்புகள் உள்ளன. முதல் தலைப்பு ‘அஜபை’ என்பது. மந்திரங்களையெல்லாம் ஆசாரியர் மூலமாகத்தான் நாம் கேட்கவேண்டுமென்பது சைவசம்பிரதாயம். ஆசாரியராவார் மெய்யுணர்வு அளிப்பவர். அவ் ஆசாரியர் மூன்று தரப்படுவார் பிரேரகாசாரியர், போதகாசாரியர், முத்திதாசாரியர் என. அவற்றுள் பிரேரகாசாரியர் ஆசாரியனைச் சார்விப்போர் ஆவர். போதகாசாரியர்கள் சைவ சாத்திரங்களைப் போதிப்பவராவர். முத்திதாசாரியர் தீட்சையினால் முத்தி விளக்குபவராவர். இவர்களுள், முன்னைய இரண்டு ஆசாரியர்கள் நிலையிலேவைத்து, மங்கையர்க்கரசியம்மையாரைச் சேக்கிழார் சுவாமிகள் நமக்குப் புலப்படுத்துகிறார்.

மதுரைக்குச் சம்பந்தர் வந்தபோது, சம்பந்தர் பெயரை மற்றவர்கள் சொல்ல அரசர் கேட்டிருப்பார். ஆனால், சம்பந்தர் இருந்த திருமடத்திலே இட்டநெருப்பு மீண்டும் பாண்டிய மன்னனை விரைந்து சாரும்போது ‘பையவே சென்று பாண்டியற்காக’ என்று ஞானசம்பந்தர் அருளிச்செய்ய, அதனால் மன்னன் ஜுரநோயால் மிகவும் வருந்துகின்றான். வருந்துகின்ற மன்னனை நோக்கி, ‘ஞானசம்பந்தர் வந்தால் இந்நோய் தீரும்’ என்று அம்மையார் கூறி அருளினமையை ‘ஞானசம்பந்தர் என்னும் நாம மந்திரத்தை மெய்யுணர்வு அளிப்போர் கூறினர்’ என்று சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்கிறார். அங்ஙனம் மெய்யுணர்வு உடையோர் அந்த நாம மந்திரத்தைக் கூறவே, மன்னன் கேட்டு, அயர்ச்சி நீங்கினான் என்றமையாலே, அங்ஙனம் மெய்யுணர்வுடையோர்கள் வாயிலாகக்கேட்பதே உபதேசமாகும். அங்ஙனம் கேட்ட மந்திரத்தைச் சிந்தித்து அந்தமயமாக ஆகிவிடுதல் ‘அஜபை’ ஆகும்.

அந்த அஜபாசித்தி கைவந்தவர்களே ஆசாரியர் ஆவர். அந்த அஜபை பிரணவமாகும். அதுவே சுத்த மாயை ஆகும்.

அந்தப் பிரணவம் ஐந்து கலைகளோடு கூடியது. எல்லாத் தத்துவங்களுக்கும் காரணேஸ்வரர்களுக்கும் அடி நிலையும் அதுவே. அதுவே பஞ்சாட்சரம் முதலிய மந்திரங்களுக்கு நிலைக்களமானது. இந்த உலகமும், அதிலுள்ள எல்லாப் பொருள் களும், உயிர்களும் மந்திரங்களாலேயே தோன்றி இயலும் தன்மை உடையவை. அந்த மந்திரங்களை அதற்குரிய முறைப்படி ஆசாரியன்வாயிலாக உபதேசிக்கப்பெற்று அது சித்தியாவதற்குரிய எண்ணிக்கை அளவுகொண்டு ஜபிப்பது மந்திரசித்தியா கும். ஒரு ஆசாரியர் தன்னுடைய ஆன்ம லாபத்தின்பொருட்டு ஜபிக்கும் மந்திரங் களோடு, உலகப் பயனை நோக்கித் தம்மு டைய மாணுக்கர்கள்பொருட்டு, காம்ய மந்திரங்களை ஜபித்து, சித்தி கைவரப் பெற்று, பின்னர் மாணுக்கனுக்கு உபதே சிப்பார். அந்த மந்திரங்கள் உலக உயிர்ப் பொருள்களையும் அவ்விரண்டையும் இட மாகக்கொண்டு மக்கள் விரும்புகிற அதே மந்திரங்களின் தலைவர்களாகிய காரணேஸ் வரர்களையும் நடத்துவிக்கும் தன்மையுடை யன ஆதலினாலே, அங்ஙனம் போகபோக் கியங்களை மந்திரங்களிடமாக நின்று நமக் குத் தருகின்ற தேவர்களைத் திருவாசகம் 'ஆட்டுத் தேவர்கள்' என்று அருளுகிறது. வினைக்கேற்பப் பிறவிகளையும் போகபோக் கியங்களையுந்தந்து நடாத்துவிக்கிற தேவர் கள் என்பது அதற்குப் பொருள்.

மந்திரத்தால் விஷசக்தி நீங்குமாறு போல், பஞ்சாட்சர ஜபத்தால் மலசக்தி நீங் கும். அங்ஙனமே மக்கள் விரும்பிய காம்யப் பேறு அந்த மந்திரங்களாலே பெறத் தருந்த முறை, யந்திர சக்கரத்துள்ளே அமைந்து காணப்படுகிறது. யந்திரத்தை அமைத்து, முறைப்படி பூசித்தால் ஒரு தனி மனிதனேனும், தேசப் பிரஜைகளே னும் விரும்பிய பேற்றை அந்த மந்திர யந்திரங்களினாலே பெறுவர். மந்திரத்தை ஜபிப்பவன் மந்திரமயமாக ஆகிவிடுவான். ஆகமங்களிலே இது மந்திரான்மா என்று சொல்லப்பட்டிருக்கிறது.

திருக்கோயிலிலே காணப்படுகிற அரிய வடிவங்கள் எல்லாம் மந்திர, யந்திரங்க ளாலே சாந்நித்யம்பெற்று விளங்குவதே. இந்த யந்திரம் முப்பத்தாறு தத்துவங் களையும் தன்னகத்தே கொண்டது. உலக மும் உயிர்களும் இந்த முப்பத்தாறு தத்து வங்களுக்குள்ளே அடங்குவனவாம். அத் தத்துவ அமைப்பே யந்திரத்தில் காணப் படுகின்ற மந்திரங்களாகும். அவற்றிலே பிந்து என்பது யந்திரத்தின் நடுவே அமை கிற வட்டம். அது மேலான தத்துவம். 'பூபுரம்' என்பது யந்திரங்களின் கடைசி அங்கமாகும். அது பிருதுவி தத்வமாகும். ஏனைய யந்திர உறுப்புக்கள் ஏனைய அங்கங் கள் ஆகும். இதனால் முப்பத்தாறு தத்து வங்களும் அந்த யந்திரங்களுக்குள்ளே அடங்குகின்றன. எல்லா இன்பப் பேறு களும் அதனுள்ளே அடங்குகின்றன.

நாம் விரும்புகிற பேறு, ஒருசில உயிர் கள் வாயிலாக அல்லது ஒருசில பொருள் கள் வாயிலாகவே அமையும். அந்தப் பொருள்களுக்குரிய மந்திரங்களும் நமது பேற்றுக்குரிய முறையிலே அந்த எழுத்துக் களை வசியம், ஆகர்ஷணம் முதலிய முறைக் கேற்ப அமைத்து வழிபடின் நமது விருப் பத்திற்கேற்ற பேற்றைப் பெறுவதற்கு அந்த யந்திரம் சாதகமாகிறது. புவனம் உலகம். அதன் தலைவி புவனாபதி ஆவாள். அந்தத் தேவியைக் குறித்த சக்கரம் புவனா பதி சக்கரமாகும். அந்த யந்திர உபாசனை, எல்லா உலகங்களையும் உலகங்களிலுள்ள பேறுகளையும் நமக்குச் சித்திக்கச் செய்வ தாகும். புவனாபதி சக்கரத்தைப்பற்றிய பலவகையான விளக்கங்களை இந்தச் சிறிய குறிப்பினைக்கொண்டு ஒருவாறு தேர்ந்து உணர்ந்துகொள்வோமாக.

## ' ஒளி '

ஆதீன மகாவித்துவான்,
### திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்,
தமிழாராய்ச்சித்துறை விரிவுரையாளர், அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

திருவருள் துணைகொண்டு, இங்கு எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ - ல - ஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்களுடைய பொன்னார் திருவடிகளுக்கும், முனிபுங்கவர்களுடைய திருவடிகளுக்கும், அறிவுடைப் பெருமக்க ளுடைய பாதத்திற்கும் அடியேனுடைய வணக்கம் உரியதாகுக. இன்று மிகுதியான கடைசிப் பேச்சாக அமைந்திருக்கின்றது ' ஒளி '. அருள்விளக்கத்தின் ஒளியாலே அடியேனுக்கு இப்பணி உதவப்பெற்றது. இந்த ஒளி என்பது என்ன? என்று எப்படி வந்தது? என்பதைப்பற்றி நாம் எண்ணிப் பார்க்க நமக்கு எத்துணையோ வழிதுறைக ளுண்டு. அடியேனுக்கு முன்பு பேசிய இரண்டு பெருமக்கள் ஒளியைப் பெறுவ தற்குரிய உபாயங்களைச் சொல்லியதோடு, மிகச்சிறந்த ஒன்றாகிய சக்கரத்தைப்பற்றி யும் கூறினார்கள். சக்கரம் என்றவுடனே, அடியேனுடைய எண்ணத்திலே திருமாலி னுடைய கையில் வைத்திருக்கும்படியான சக்கரம் நினைவிற்கு வந்தது. அந்தச் சக்க ரத்தின் பெருமை என்ன என்பதைப்பற்றி நினைக்கத் தூண்டியது. திருமாலினுடைய கையில் இருக்கும்படியான சக்கரத்திற்கு எவ்வளவு பெருமை உண்டு என்பதை நாம் எண்ணும்போது, புவனபதிசக்கரத்தின் பெருமை சொல்லத் தேவையில்லை. அது உலகமுழுவதையும் நடத்தக்கூடியதான சக்கரம். அந்தச் சக்கரத்தின் ஒளியை நாம் அடையவேண்டுமானால் இறைவன் பாதத் தையும் நாம் அடையவேண்டும்.

தேனீ சிறு சிறு துளியாகத் தேனைச் சேகரித்து வைத்திருக்கிறது போலவே, மனிதன் கொஞ்சம் கொஞ்சமாக ஆயிரம் வெண்பொற்காசுகளைச் சேகரித்து வைக்க முயற்சிக்கிறான். அதுபோல் திருவருளின் பேரொளியை நாம் அடையவேண்டுமானால், சிற்றொளியாகக் கொஞ்சம் கொஞ்சம் சேக ரித்து, அதனின்று பேரொளியை அடைய முயற்சிக்கவேண்டும். ஒருவனுக்கு மணம் ஆகிறது. மணமாகிப் பல வருஷங்களாகி யும் குழந்தை பிறக்கவில்லை. ஒரேகவலை. அவன் இன்பமாக வாழவேண்டும் என்று பெற்றோர்களால் மணமுடிக்கப்படுகிறது. ஆனால் அவனுக்கோ பல வருஷங்கள் ஆகியும் குழந்தைப்பேறில்லை. கடைசியில் பல ஆண்டுகள் கழித்து, குழந்தை பிறக் கிறது. ஆனால் குழந்தையின்கண் திறந்த பாடில்லை. பத்து ஆண்டுகள் கடந்தன. அப்போதும் குழந்தையின் கண் திறக்க வில்லை. மருத்துவக் கலைஞரிடத்தில் அக் குழந்தையைக் காட்டுகின்றான். காரணம் என்னவென்று மருத்துவக் கலைஞர் ஆராய் கிறார். பின்னர் மையிட்டு ஊசியால் குழந் தையின் இமையைச் சற்று விலக்குகிறார். அந்த மருத்துவக்கலைஞர். குழந்தையின் கண் சற்றுத் திறக்கின்றது. திறந்ததும் சிற்றொளியானது அதன் கண்ணில் படு கிறது. பின்னர் அந்தச் சிற்றொளி கொஞ் சம் கொஞ்சமாக அதிகரிக்கப் பேரொளி யைக் காணக்கூடிய பேற்றை அக்குழந்தை பெறுகிறது. அதைப்போல ஆணவ மலத் தில் மூழ்கியிருக்கும் நம்போன்ற மக்களுக் கும் ஆண்டவனிடத்திலே அருள்பிறந்து, அவன் அருளும் நமக்குக்கிட்டி, கொஞ்சம் கொஞ்சமாக ஆணவ மலத்திலேயிருந்து வெளிப்பட்டு, ஆண்டவனுடைய பேரொளி யைக் காணவேண்டும். இதனைச் சகல ஆன்மாக்களும் உணரத் தலைப்பட்டால் குருஅருளும் கிட்டும். அதன்வாயிலாகப் பேரொளியைக் காணத்தலைப்பட்டுப் பேரா னந்தப் பெருவாழ்வையும் எய்தமுடியும். இவைகளைப்பற்றியெல்லாம் ஏழாவது தந்தி ரத்திலே ஒளி என்ற தலைப்பிலே விளக்க மாகக் கூறப்படுகிறது.

அடுத்து, நம்முடைய சமயாசாரியப் பெருமக்கள் இறைவனை எங்கும் எவ்விடத்திலும் ஜோதியாய், சுடராய்க் காண்கிறார்கள் என்பதைப் பார்ப்போம். மணிவாசகப் பெருமான் எடுத்த எடுப்பில் "சோதியே! சுடரே! சூழ் ஒளி விளக்கே!" என்று சோதியை அற்புதமாக வைத்துப் பாடியிருக்கின்றார். இருள் சூழ்ந்திருக்கின்ற மனத்தே ஒளிபெற்று இறைவனை உணரத் தலைப்படுதலையே இந்தப்பாட்டால் அவர் விளக்குகின்றார். அப்படி ஒளியை - சோதியைப்பற்றிக் கூறும்போது அது ஒன்றைப் பற்றியே நிற்கும் என்பதைச் சுடரே என்று எடுத்துக் காட்டுகின்றார். சோதியோடு நின்றுவிட்டால் போதாது; அதனின்றும் இறங்கி வந்து சுடராய்நின்று ஒளிபெற்று இறைவனை அடைதல் வேண்டுமென்றும் கூறுகின்றார். அதைத்தான் "சூழ் ஒளி விளக்கே" என்று அவர் குறிப்பிடுகிறார். இதைப்போலவே திருமுறைகளிலே "ஒளி வளர் விளக்கே" என்றும்கூறப்படுகிறது. அப்பர் "நல்லக விளக்கது நமச்சிவாயவே" என்று சொல்லுகின்றார். அதில் "இல்லக விளக்கது" என்று அதன் பெருமையைச் சேர்த்துக் கூறியிருப்பதையும் நாம் காணுகின்றோம்.

சேக்கிழார் சுவாமிகள் 12 ஆம் திருமுறையிலே "ஆதியாய் நடுவுமாகி அளவிலாச்சோதியாய்" என்று ஆன்மஅறிவின் அனுபவங்கொண்டு அளவிட்டு, அதன் எல்லையைக் காணவேண்டுமாயின் ஆன்மா அறிவுபெற்று, ஆனந்தக் கூத்தனுடைய ஒளியை அடையவேண்டும் என்று கூறியிருக்கின்றார். திருமந்திரத்திலே பாயிரப் பகுதியிலுள்ள முகவுரையைப் படித்துப் பார்த்தால் நூல்முழுதும் சிற்றொளியைப் பற்றியும், பேரொளியைப் பற்றியும் உள்ள பொருள்கள் அடங்கியிருப்பதைக் காணலாம். சிதாகாச ஒளிக்கு அடிப்படை பூதாகாச ஒளி என்பதனைச் சிறப்புப் பாயிரப் பகுதியிலே எடுத்துக் காட்டுகின்றார். ஒன்பதாம் தந்திரத்திலே மூன்றாவது பகுதியில் உள்ள முதற்பாடலோடு, முதல்தந்திரத்திலே உபதேசப் பகுதியிலுள்ள ஒருபாடல் ஒத்திருப்பதைக் காணலாம்.

> வெளியில் வெளிபோய் விரவிய வாறும்
> அளியில் அளிபோய் அடங்கிய வாறும்
> ஒளியில் ஒளிபோய் ஒடுங்கிய வாறும்
> தெளியும் அவரே சிவசித்தர் தாமே.

சிவசித்தர்கள் என்றால் அவர்களுக்கு ஒரு தனிப்பெருமை உண்டு என்பதைத் திருமூலர் கூறுகின்றார். சிவசித்தர்கள் என்றால் 'வெளியில் வெளிபோய் விரவிய வாறும்' என்ற முறையில் அடங்கியவர்களாக, பூதாகாசத் தோற்றமானது சிதாகாசத்திலே சென்று அடங்கியதை அனுபவத்தில் தெரிந்து உள்ளவர்களே சிவசித்தர்கள் ஆவார்களென்று அவர்களுக்கு இலக்கணம் வகுத்துள்ளார். 'விரவிய வாறும்' என்று சொல்கிறபோது பார்ப்பதற்கு இரண்டும் கலந்து இருப்பதுபோல் தோற்றம் அளித்தாலும், அது பார்க்க முடியாதஅளவில் பாலும் நீருமாகக் கலந்திருக்கின்றது என்று எடுத்துக் காட்டுகின்றார். சிதாகாசமும், பூதாகாசமும் கலந்தாலும்கூட அது உண்மைக்கலப்பு அல்ல என்பதைக் காட்டுகின்றார். திருமந்திரத்திலே வெற்றுச்சொற்களுக்கு இடமில்லை என்பதை நாம் சிந்திக்கவேண்டும். 'ஒளியில் ஒளிபோய் ஒடுங்கியவாறும்' 'அளியில் அளிபோய் அடங்கிய வாறும்' ஆகிய இந்த இரண்டும் கலந்த அனுபூதி நிலையில் வைத்தே சிவசித்தர்களின் பெருமையை எடுத்துக்காட்டுகின்றார்.

இதையெல்லாம் விளக்குவதற்காக ஒன்பதாம் தந்திரத்திலே பல தலைப்புக்கள் கொடுத்து விளக்குகின்றார். அதில் ஒரு தலைப்பான "ஒளி" என்பது எனக்குப் பொருளாகக்கொடுக்கப்பட்டுள்ளது. இந்த ஒளியை மறைவான, தடிப்பான இடத்திலோ அல்லது மலைகளிலுள்ள குகைகளிலோ காணமுடியாது. நாம் ஒளியை அடையவேண்டுமானால் ஒளி இருக்கின்ற

இடத்தைத் தேடிச் சென்றுகவேண்டும். அதற்கான முயற்சிகளைச் செய்யவேண்டும். அதற்கு ஒரு நல்லதோரிடம் – குரு நித்திய வாசம் செய்கிற திருமடம் அதாவது சிவ மடம் என்று குறிப்பிடுகின்ற முறையிலே 'குருமடதரிசனம்' என்ற ஒரு தலைப்பைக் கொடுத்துள்ளார். குரு என்று சொல்லும்போது அந்த குருவானவர் மனிதர் என்று சொல்லாமல் அந்த இடம் சிவமயமாக இருக்கவேண்டுமென்று, அடுத்தாற்போல் 'சிவ தரிசனம்' 'சிவ சொரூப தரிசனம்' என்ற தலைப்புக்களிலே அத்தரிசனத்தின் சிறப்பை எடுத்துக் கூறுகிறார். சிவனை நாடினால் ஒளியின் அனுகூலம் முளைக்கும் என்பதை ஒன்பதாம் தந்திரத்தின் முதல் வாயிலாக இருக்கின்ற 'குருமடதரிசனம்' காட்டுகிறது.

இவனில்ல மல்ல தவனுக்கங் கில்லை
அவனுக்கும் வேறில்லம் உண்டா அறியின்
அவனுக் கிவனில்ல மென்றென் றறிந்தும்
அவனைப் புறம்பென் றரற்றுகின் றாரே.

என்ற பாடலால் அறியப்படுகிறது. சிவன் இல்லாத இடம் எங்குமில்லை என்பதனை இப்பாடல்மூலம் மறைமுகமாக விளக்கு கின்றார் திருமூலர். ஆசாரியனைச் சிவ சொரூபமாகவே எடுத்துக் காட்டுகின்றார். ஒளியை அடைய விரும்பும் உயிர்களுக்கு ஒளியைக் காட்டும் முதல்பகுதி 'குருமட தரிசனம்'. அந்தக் குருவாகிய சிவன் எங்கும் இருந்தாலும், அவனது உறை விடம் கோயில் என்பதை நம்பக்கூடிய முறையில் எடுத்துக்காட்டவே அவன் உறைவிடம் கோயில் என்பதைச் சொல் கின்றார். சிவன் எங்கிருந்தாலும் சரி, உயிர் களுக்குக் கோயிலின்தொடர்பு மடத்தின் தொடர்பு இருந்தால் இருள் நீங்கும் என்ற காரணத்தைத் தெரிவிக்கின்றார். ஆகவே ஒளியை அடைவதற்கு ஒளியிருக்கின்ற கோயில்வாயிலை அடையவேண்டும் என்று அடுத்து ஞானகுருவை எடுத்துக்காட்டு கின்றார். அவரே ஒளி; அவரே ஆசிரியர் என்றும் கூறுகின்றார்.

கருடன் உருவம் கருதும் அளவில்
பருவிடம் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவின் உருவம் குறித்த அப்போதே
திரிமலம் தீர்ந்து சிவனவன் ஆமே.

குருவினுடைய உருவம் எந்த இடத்திலும், எதிர்முகமாக இல்லாதபோதும் அந் நினைப்பை நினைத்தபோது, பையனுனவன் புத்தகத்தை எடுத்துப் படிப்பதுபோல, ஞானகுரு வசிக்கும் இடமாகிய கோயிலின் நினைவு ஒருவனுக்கு ஏற்படுமாகில் அந்த நினைவால் அவன் ஒளிபெற முடியும் என் பதனை இப்பாடல் எடுத்துக்காட்டுகின் றது. இந்த லட்சியத்தைச் சிந்திக்கிறவன் மலங்களினின்றும் விடுபட்டுச் சிவனாகவே ஆகின்றான் என்பதும் இந்தப்பாடலால் புலப்படுகிறது. ஒரு வயலில் ஒருவன் வேலை செய்துகொண்டிருந்தான். நண்டு இருக் கின்ற ஒரு வளையில் ஒரு நச்சரவம் வெளிப் பட்டு, அவனைத் தீண்டிவிட்டது. அப் போது அவன் மனத்திலே கருட உரு வத்தை நினைக்க, கருட பார்வை அவன் மேல் விழும்போதே விஷமானது இறங்கு கின்றது. அம்மாதிரி கருட பார்வைக்கே விஷம் இறங்குமானால், சிவயோகம் பெற்ற வர்களின் அருட்பார்வை பட்டால் ஏன் மலங்கள் எல்லாம் அகலா என்பதே இங்கு எடுத்துக் காட்டப்படுகின்றது. இதனை 'ஞானகுருதரிசனம்' என்ற தலைப்பிலுள்ள பல பாடல்கள் நன்கு விளக்குகின்றன. அடுத்து, ஓங்காரம் என்னும் சொல்லிலே ஐம்பூதங்களாகிய உயிரெழுத்துக்கள் இருக் கின்றன என்பதை ஒரு பாடலால் விளக்கி யிருக்கின்றார்:

ஓங்காரத் துள்ளே உதித்தஐம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே உதித்த சராசரம்
ஓங்காரா தீதத் துயிர்மூன்றும் உற்றன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே

ஓங்கார தியானத்திலே இடைவிடாமல் இருப்பவன் ஒளியை அடைவான். ஒளியை அடையக்கூடிய இடம் பிரணவம் ஒன்று தான். ஒளியை அடையக்கூடிய மற்றொரு இடந்தான் ஞானகுருமடம். அடுத்து ஒரு

தலைப்பில் ஒளி என்றால் என்ன என்பதனை விளக்குகின்றார்.

ஒளியை அறியில் உருவும் ஒளியும்
ஒளியும் உருவம் அறியில் உருவாம்
ஒளியின் உருவம் அறியில் ஒளியே
ஒளியும் உருக உடனிருந் தானே.

ஒளி என்பது இங்கே சிவஒளியாகிய சிற்றொளி. 'விளங்கு ஒளியாவது உள்நின்ற சீவன்' என்ற அடியிலிருந்து விளங்கும். ஆகையால் ஆன்மதரிசனம்பண்ண ஒருவன் ஆரம்பித்தால், அவன் அதிலிருந்து சிவதத்துவம் முதலான எல்லாவற்றையும் அறியத் தொடங்குவான். அப்போது உருவம் மறையும்; ஆனால் ஆன்மா மறையாது. ஆன்மாவுக்கும், ஒளிக்கும் உருவம் கிடையாது. திருமூலர் இறைவனை ஒளியுருவில் காட்டுகிறார். சூரியனும், சந்திரனும் ஒளியானாலும்கூட, சந்திரனுக்கு எப்படி இயற்கை ஒளி கிடையாதோ, அதேபோலச் சூரியனிடத்திலுள்ள ஒளியும் இயற்கையொளியாகாது. சந்திரன் எப்படிச் சூரியனிடம் இருந்து ஒளிபெறுகின்றதோ, அதுபோல் சூரியனும் ஆண்டவனுடைய பேரொளியைப் பெற்றுச் செயற்கையொளியாகவே நமக்குக் காட்சியளிக்கின்றான்.

இப்படி ஒளியின் பெருமையை உணர்ந்தவர்கள், அந்த ஒளி என்றும் நீங்காமல் தன்னிடத்திலே நிலைத்து நிற்பதற்காகத் "தூல பஞ்சாக்கரத்"தை ஜெபிப்பதன் மூலம் பல நிலைகளைக் கடந்து, கடைசியில் ஆண்டவன் ஆனந்தக்கூத்தைத் தரிசிப்பார்கள். அதாவது தில்லைக்கூத்து. அங்கே அவர்களுக்கு ஞானோதயம் உண்டாகும்; சிவதரிசனம் சித்திக்கும். இது மிக எளிதில் அடையக்கூடியது அல்ல. குருவைக் கொண்டு, பிரணவ சமாதி நிலையைக் கடந்து, ஒளிகண்டு, பஞ்சாக்கரத்தைச் சிந்தித்து, அதன்பின்னர் எய்தக்கூடிய ஒன்றுதான் சிவசொரூபதரிசனம். அதாவது முக்தி. அவர்கள் எப்படி இருப்பார்கள் என்று பார்த்தால், சூனிய சம்பாஷணை நிலையில் இருப்பார்கள்.

பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள
குட்டிப் பசுக்களோ ரேழுள ஐந்துள
குட்டிப் பசுக்கள் சூடப்பால் சொரியினும்
பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே.

ஒருவன் மலையின்மீது ஏறியபின்னர், திரும்பிப் பார்க்கும்போது அவன் 'இத்தனை தூரம் நாம் கடந்து வந்துவிட்டோமே' என்று எண்ணுவதுபோல், சூனிய சம்பாஷணைநிலைக்கு வந்துவிட்ட ஒருவன், பின்னுள்ள படிநிலைகளை நினைத்துப்பார்க்கும்போது ஆன்மதத்துவ பலம் அவனுக்கு ஏற்படுகிறது. அந்நிலையை அடைந்தாலுங்கூட, தோத்திரம் ஒருவனுக்கு மிகவும் அவசியமானது; சித்திக்கக் கூடியது என்பதையெல்லாம் ஒன்பதாம் தந்திரத்திலே சைவசித்தாந்த உண்மைகளை அடிப்படையாக வைத்து, சற்று விரிவாகச்சொல்லுகின்றார். முத்தான்மாவாக இருந்தாலுங்கூட இறைவனைத் தோத்திரம் செய்தல் வேண்டும் என்று கூறி, கடைசியாக வாழ்த்துப் பாடலையும் கூறுகின்றார்.

வாழ்கவே வாழ்கஎன் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத் தாள்பதம்
வாழ்கவே வாழ்க மெய்ஞ்ஞானத் தவன்தாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே.

விளங்கொளி மின்னொளி யாகிக் கரந்து
துளங்கொளி ஈசனைச் சொல்லுமெப் போதும்
உளங்கொளி ஊனிடை நின்றுயிர்க் கின்ற
வளங்கொளி எங்கும் மருவிநின் றானே.

—திருமூலர்.

மூன்றும் நாள் விழாவில் :



தலைவர் தலைமையுரை நிகழ்த்துதல்.

# மூன்றும்நாள் பேருரைகள்

**தலைமையுரை :**

பன்மொழிப்புலவர்,

**திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள், M. A. B. L., M. O. L.,**

தமிழ்ப்பேராசிரியர், அரசினர்கல்லூரி, சென்னை.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுடைய திருவடிகளுக்கும், பெரியோர்கள் திருவடிகளுக்கும் என்னுடைய அன்பு கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

எனக்கு ஒரு நல்லகாலம் எப்பொழுதும் இருந்துகொண்டே வருகிறது. இன்றுபோல், அடிக்கடி நல்ல பேச்சுக்களையே பேசும்படியான ஒருவாய்ப்பு நம் குருமகா சந்நிதானத்தின் திருவருளாலே என்றைக்கும் கிடைக்கும் என்று எண்ணுகிறேன். சென்ற ஆண்டுபோல் இந்த ஆண்டிலும் இந்தத் திருமந்திர மாநாட்டிலே கலந்து கொள்கிற ஒரு நல்லசந்தர்ப்பம் எனக்குக் கிடைத்திருப்பதை நான் உணருகிறேன். உண்மையிலேயே திருமந்திரத்தை உலகமறியச் செய்யும் நாள் வாராதா? அதற்கு நம்மாலானது ஏதேனும் ஒன்று செய்ய முடியாதா? என்று ஆண்டவனை வேண்டிக் கொண்டிருந்தேன். ஆனுல், ஒரு விளக்கமும் கண்டேனல்லேன். அந்த வேண்டுகோளின் பயன் தான்போலும் இங்கேவந்து உங்கள் முன்பு இப்போது நிற்கிறேன்.

திருவாவடுதுறை மண் மிகப் பெருமை வாய்ந்தது என்பதை நன்கு உணருகிறேன். மண்ணுக்கும் ஒரு பெருமை உண்டு. விக்கிரமாதித்தனின் கதையிலே, ஒரு நிகழ்ச்சி. அவன் ஏறி அரசாண்ட சிம்மாசனம் புதையுண்டு கிடக்கிறது; போஜன் அதனைத் திரும்பப்பெற விரும்புகிருன்; அப்போது மண்தான் அதன் இருப்பிடத்தைக் காட்டிற்று. அதுபோல இத்திருவாவடுதுறை மண் ஞானவிளக்கத்தைக் கொடுக்கிறது. விஞ்ஞானிகள் அணுவைப்பிளந்து, அதன் உள்ளே அற்புதங்களைக் காண்கிருர்கள். இன்று சென்னைப் பல்கலைக்கழகத்து நூற்றாண்டு விழாவில் நம்முடைய நாட்டின் தலைசிறந்த விஞ்ஞானியாகிய ஸர் ஸி. வி. ராமன் அவர்கள் அணு அற்புதத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கலாம். ஆனுல், அதே சமயத்தில் இந்தத் திருவாவடுதுறையின் மண்ணை அவர் ஆராய்ச்சிசெய்து பார்த்தால், உலகை உய்விக்கின்ற அருள் மண்ணைக்காணலாம். இம்மண் பலநூற்றாண்டுகளாக - ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக ஞானத்தொடர்புடையதாய் விளங்கிவருகிறது. அதனுலேதான் என் போன்றவர்களும் இந்த மண்ணிலே கால்வைத்தவுடனே, இப்படியாவது பிதற்றுகிற ஒரு பேறு கிடைக்கிறது. திருமூலர் பல இடங்களை நோக்கிச்சென்றும், கடைசியாக இந்த மண்ணில் கால் அடிவைத்த பிறகுதான், திருமந்திரம் பாடுகிற வாய்பினைப்பெற்ருர். தமிழிலே பாடுவதற்காகத்தான் ஆண்டவன் தன்னைப் படைத்தான் என்று இங்கு அவருக்குத் தோன்றியிருக்கவேண்டும்.

இருபதாவது நூற்றாண்டிலே விஞ்ஞானம் என்னென்னவோ அற்புதங்களைச் செய்துவருகின்றது. காற்றில் பறக்கவும், உலகத்தைச் சுற்றிவரவும் மனிதன் கற்றுக்கொண்டான். ஆனுல், அவன் மனம் ஓர் அமைதியைப் பெறவில்லை. இந்தநிலை மாற வேண்டுமானுல், எல்லாவற்றிற்கும் உள்ளீடாக இருக்கின்ற ஒன்றினைத் தெளிந்து அதன்சார்பிலே வாழ மனிதன் கற்றுக் கொள்ள வேண்டும். தாய் குழந்தையைச் சுற்றித் சுற்றித் திரிகிருள். ஏன்? பால்

தன்னிடம் இருக்கிறது; அதைக் குழந்தை உண்டு வாழவேண்டும் என்பதுதான் அத் தாயின் நோக்கம். ஆனால், குழந்தையோ சண்டித்தனம் பண்ணுகிறது. இங்குமங்கும் ஓடுகிறது. அதுபோலத்தான் இந்த உலகம் இன்று ஓடுகிறநிலை. பசியினால் ஓடுகிற குழந்தை, தன்னுடைய தாய்ப்பக்கம் திரும்பினால் பசி நீங்கும்; சண்டித்தனம் செய்ய வேண்டியநிலை ஏற்படாது; தாயும் பேரின்பத்தைப் பெறமுடியும். அந்த நிலையில் தான் இன்று மனிதன் தனக்கு உள்ளிருந்து உணர்த்திவருகிற, உலகப்பெரும் தாயாகிய ஆண்டவனைப் பார்க்கவும் அஞ்சி ஓடுகிறான். எதைத்தர, ஆண்டவன் பின் வருகிறானோ, அதைத் திரும்பிப் பார்த்துப் பெற்றுக்கொள்ள மறுத்து, வீணே திரிந்து அலைகின்றான். இந்தநிலை மாறுமேயானால், அணுகுண்டு அருள் குண்டாக மாறும். சண்டித்தனம் ஒழியத்தான் போலும், நம் குருமகாசந்நிதானம் திருமந்திரமாநாட்டை நடத்தி வருகின்றார்கள்.

திருமந்திரமானது தத்துவத்தையும் அனுபவத்தையும் மட்டும் சொல்லவில்லை. விஞ்ஞானமுறையிலே ஆத்மீக வாழ்வைக் காண உதவுகிறது. விஞ்ஞானிகள் இந்த நூலிலே ஈடுபடுவார்களானால், தங்கள் உள்ளம் குளிர, தாங்கள் எதை எதை நாடுகின்றார்களோ அதற்கெல்லாம் வழி காண வாய்ப்பு உண்டு. அதனைப் பயன் படுத்துங்காலம் தொலைவில் இல்லை. ஆத்மீக முறைகளைப்பற்றி ஆராய்ச்சிசெய்ய மேல்நாட்டுப் பல்கலைக் கழகங்களெல்லாம் தொடங்கி வருகின்றன. அவைகள் இந்த நூலினை அறியக்கூடிய ஒரு வாய்ப்பினை நாம் செய்து தரவேண்டும்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்கு ஒரு வேண்டுகோள். ஆண்டுக்கு ஒருமுறை எங்களைப் போன்றவர்களை வரவழைத்து பேசக் கட்டளையிடுவதோடு, திருமந்திரத்திலுள்ள ஏதாவது ஒரு குறிப்பிட்டபொருள் பற்றி எங்களால் இயன்றவரை தொடர்ந்து சிந்திக்கின்ற வாய்ப்பினையும் பணித்தால், ஒவ்வொரு ஆண்டிலும் ஒவ்வொரு நூலை நல்ல முறையில் குருமகாசந்நிதானத்தின் திருவடிக்கமலங்களில் சமர்ப்பிக்கலாம்.

அறிஞர்கள்கூட்டம் இங்கே உருவாகிக் கொண்டு வருகின்றது. சிவஞானமுனிவர் விருத்தியுரை, கணபதிபோன்ற பற்பல நல்ல வெளியீடுகளை இவ்வாதீனத்தார் வெளியிட்டு உதவுகின்றனர். இத்தொண்டு போற்றற்குரியது.

திருமந்திரம், திருமுறையிலே ஒன்றாக வைக்கப்பட்டிருக்கிறது. திருமூலர் ஒரு ஆண்டுக்கு ஒரு திருப்பாட்டாகப் பாடினார் என்று கூறப்படுகிறது. நாம் ஒரு நாளில் எவ்வளவோ பேசிக்கொண்டு போகிறோம். ஆனால், திருமூலரோ 365 நாட்களிலும் சிந்தித்து, அச்சிந்தனையின் சாரமாக ஒரு பாட்டை அருளிச்செய்திருக்கிறார். ஆகவே தான், இதை நாம் ஞான நூலாகக் கருத வேண்டும்.

இந்த ஆண்டில் பாயிரத்துக்கு ஒரு உரை எழுதி வெளியிட்டிருக்கின்றார்கள். இப்படிப் பேருரை எழுதி ஆண்டுதோறும் ஒன்றிரண்டு வெளியிடுவதைக் காட்டிலும் எல்லாவற்றிற்குமே மொத்தமான பேருரை விரைவிலே வந்துவிடாதா என்ற பேராசையால் துடிதுடிக்கிறேன். இப்போது இந்தத் திருமந்திரத்தை ஆராய்ச்சிசெய்வதற்காக, பலர் முற்பட்டிருக்கின்றனர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரும் இந்தத் தொண்டினை மேற்கொண்டுள்ளனர்; ஆராய்ச்சி நடந்தேறி வருகிறது. இப்படி எங்கும் ஒரு விழிப்புணர்ச்சி ஏற்பட்டிருப்பதை இந்த நூற்றாண்டில் பார்க்கிறோம். இது ஒரு நல்ல காலமேதான். இன்னும் பல பெருமக்கள் பேச இருக்கின்றார்கள்; அவர்கள் பேசுவதையொட்டித்தான் நான் பேச வேண்டியிருக்கிறது. ஆகவே முடிவுரையில் ஏதாவது சொல்லலாம் என்று கருதி அமர்கின்றேன்.

## முடிவுரை :

பெரியோர்களே ! மிக அழகிய, எளிய கருத்துக்கள் நிறைந்த மூன்று சொற் பொழிவுகளை இன்று கேட்டோம். "அவா அறுத்தல்'' என்ற பொருள்பற்றிப் பேசிய நண்பர் அறிஞர் திரு. ராஜமாணிக்கனார், இன்றைய இளைஞர் உலகுக்குப் பழம் பெருமைகளை ஆராய்ச்சி செய்வதற்குத் தகுந்த வாய்ப்பினை நாம் கொடுக்கவில்லை என்று தெரிவித்தார். அண்மையிலே சிவ போகசாரம் என்னும் பொருளைப்பற்றிய போட்டி, கல்லூரி இளைஞர்களிடை நடத் தும் பொறுப்பு எங்களது கல்லூரிக்குக் கிடைத்தது. இளைஞர்களெல்லாம் அதில் வெற்றிபெற மெய்ம்மறந்து தீவிரமாக ஈடு பட்டார்கள். கடைசியில் அவர்களுடைய முடிவுகளைப் பார்க்கும்போது இன்றைய இளைஞர்களும் பழம்பெருமைகளை மறந்து விடவில்லை; நம்மைக்காட்டிலும் அதிக கவனம் செலுத்துகின்றார்கள் என்ற பிர மிப்பு ஏற்பட்டது. இப்போட்டியில் இந்து மாணவர்கள்மட்டுமல்லாமல், கிறித்துவ இஸ்லாமிய மாணவர்களும் கலந்துகொண் டார்கள். எல்லோரும் ஆராய்ந்து கண்ட முடிவினைப் பார்க்கும்போது எல்லா மதத் தின் முடிவும் ஒன்றாகத்தான் இருந்தது.

இவைகளை எல்லாம் நன்குபார்க்கின்ற போது மாணவர்களை நாம் அணுகாதது தான் குறை என்பது எனக்குத் தெளிவா யிற்று. இளைஞர் உலகம் நன்கு பக்குவப் பட்டிருக்கிறது. தங்களுடைய சுயநலத்திற் காகப் பாடுபடாமல் குறிக்கோளுக்காக வாழுகிற, அதாவது ஓடும் பாம்பை மிதிக் கிற வீர உணர்ச்சி அவர்களுக்கு இருந்து வருகிறது. சமய உண்மைகளை அவர்க ளிடத்திலே நாம்பரப்புவோமானால், நண்பர் சொல்லுவதுபோலே இளைஞர்கள் காது கொடுத்துமட்டும் கேட்க மாட்டார்கள்; மனதும் உருகிக் கேட்பார்கள். அந்த வழி யிலே அவர்களைச் செலுத்தினால் எதிர்கால உலகம் செம்மைப்படும் என்பதை இங்கே அன்பர்கள் முன்னிலையிலும், நம் குருமகா சந்நிதானம் அவர்களின் திருவடிகளிலும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அவா அறுத்தல் என்று சொன்ன வுடனேயே இது மிகக் கஷ்டமான காரிய மாயிற்றே என்று யாரும் அஞ்சவேண்டாம். அதனை எவ்வாறு அறுப்பது என்பதைப் பற்றிக் கடைசியாகப் பேசிய இரு சொற் பொழிவாளர்களும் கூறியுள்ளார்கள். மாம் பழமானது இனிப்பாயிருக்கிறது. ஓரளவு சாப்பிட்டவுடன் அது உடலுக்கு ஒத்துக் கொள்கிறது. ஆனால், நம் நாவோ மேலும் மேலும் வேண்டுமென்று அவா உறுகின் றது. வேண்டும் என்று நா கேட்கிறதே என்ற அவாவுக்கு உட்பட்டால் அவாவில் உழல்பவர்களாக ஆகிவிடுகிறார்கள். அதி லிருந்து மீள்வதற்கு ஐந்தையும் அடக்க வேண்டும்; அடக்கினால் இறைவனைக்காண லாம் என்றதை எடுத்துக்காட்டினார்கள்.

ஒருவர் ஐந்து புலன்களையும் அடக்க வேண்டுமென்று, நீருக்குள்மூழ்கிக் கண்ணை மூடிக்கொண்டிருந்தாராம். சிறிது காலம் சென்றபிறகு நீருக்குள்ளேயே கண்ணைத் திறந்து பார்க்கும்போது, அங்குள்ள ஆண் பெண் மீன்கள் கொஞ்சிக் குலாவிக்கொண் டிருப்பதைக் கண்டு, தான் கருத்தழிந்து, 'நாமும் ஏன் இப்படி பூமியில்வாழக்கூடாது' என்று நீரிலிருந்து வெளியே வந்து, ஒரு மங்கையை மணந்து வாழ்ந்தாராம். ஆகை யால், அவா அறுத்தல் என்று கூறிக் கொண்டு இப்படியெல்லாம் செய்து பயன் இல்லை. பெருவெள்ளத்தை அணைபோட்டு மடக்கி, சிறு சிறு வாய்க்கால்கள்வழியே தண்ணீர்விட்டு, நாட்டிலுள்ள நிலங்களில் பயிர் செழிக்கச் செய்வதுபோல் ஐம்புலன் களையும் அடக்கி, சிறுகச்சிறுக நம்முடைய கருத்தை இறைவனிடத்திலே செலுத்தி னால் அவனுடைய பேரின்பப் பேற்றை அடையலாம். இதுவே அவா அறுத்தலின் பொருளாகும். இறைவனிடத்திலே அருட் கண்களோடு பார்த்தால் அப்போதுதான்

இறைவனுடைய ஆனந்தப்பேறு நன்கு விளங்கும். அப்படியில்லாமல் நெஞ்சில் ஏற்படுகின்ற வேட்கைக்கு இடம் கொடுத்தால் அவா நம்மைச் சூழ்ந்துகொள்ளும். ஆகவே, சிவபெருமான் பாதத்தை அடைய ஆயிரம் அருட்கண்களோடு அன்பு வடிவில் சிந்தித்து, ஐந்தெழுத்தைச்செபித்து வாழ்ந்தால் இறைவன் திருவடியை அடையலாம். அவ்வாறு அவா அறுத்தல் ஒருவகையில் கைகூடும்.

அடுத்து 'ஒழுக்க நெறிகள்' என்பதைப்பற்றி நண்பர் திரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் பேசினார்கள். ஒழுக்கந்தான் உண்மையிலேயே நமக்கு உயிராய் இருப்பது என்ற கற்பனையை எடுத்து விளக்கினார்கள். அது மிகவும் பாராட்டத் தக்கது. இதையே இராசமாணிக்கனாரும் வற்புறுத்தினர். மதத்தைப்பற்றிப் பேசிக் கொண்டே போகின்றவர்கள் அறநெறியை மறந்துவிடுகிறார்கள் என்றும் அவர் குறிப்பிட்டார். மதம் இன்று அறநெறியிலே நிற்கவில்லை என்றும் கூறினார்கள். ஆனால், இவைகளையெல்லாம் அடைய, திருமந்திரத்திலே காட்டியிருக்கின்ற ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தால்தான் முடியும் என்பதனை இராமநாதன் செட்டியார் அவர்கள் வற்புறுத்துகின்றார்கள். அப்படி அவர்கள் ஒழுக்கத்தை வற்புறுத்துகிற சொற்களிலே அறநெறி தோன்றுவதைக் காணலாம்.

வாய்மை என்றால் துறவறம் என்பது பொருளல்ல. வாய்மை என்பது தூய்மை என்பதையும் அவாவின்மை என்பதையும் குறிக்கும். அந்த அவா இன்மை ஆகிய அழுக்கை நீக்கினால், அது முத்தியிலே கொண்டுபோய்விடும் என்பதே இங்குப் பொருள். இங்கே வாய்மை என்பது ஆத்ம சுத்திக்குக் கொண்டுபோய், சிவத்தைக் காணுகிற காட்சிநிலையில்தான் சொல்லப்படுகிறது. சிவன் பலவித ஆனந்த வடிவிலே அனுபவிக்கப்படவேண்டியவன் என்னும் பொருள்பட, பலவேறு காட்சிகளால் வருணிக்கப்படுகின்றான். அந்த அற்புதக் காட்சிகளைக் காணவேண்டுமென்று விரும்புகிறவர்கள் யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை போன்ற பல படிகளைக் கடந்து போனால், பின்னே சிவத்தை ஒரு அழகான உருவில் காண முடியும் என்ற முடிவுக்கு வந்துள்ளனர்.

ஒரு முகமதியனிடத்தில் போய், சைவ உணவிலே சிவன் இருக்கிறான் என்று சொன்னால், அவன் ஒப்புக்கொள்வானா? உணவிலே போய் சைவமா? அல்லது சிவமா? என்றுதான் கேட்பான். ஆனால், நம்முடைய உணவிற்கும் சைவத்திற்கும் சிவத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதைக் காணலாம். தூய்மையான சைவ உணவை உட்கொள்ளுதலே சிவத்தை அடைவதற்கான முதற்படி என்று நமது மதத்திலே கூறப்படுகின்றது. இதற்குத் திருமந்திரத்திலே ஒரு பாடலும் இருக்கிறது. இதன் அடிப்படையாகக் கொல்லாமை என்ற தலைப்பு திருமந்திரத்திலே கொடுக்கப்பட்டிருப்பதையும் காணலாம். கொல்லாமை என்பதிலிருந்து ஆண்டவன் எங்கும் இருக்கின்றான் என்பது புலப்படுகிறது. பழத்திலேயும் ஆண்டவன் இருக்கிறான். முட்டையிலேயும் சிவத்தைப் பார்க்கலாம். ஆண்டவன் எங்கும் எப்போதும் ஆனந்தக் கூத்துருவில் ஆடிக்கொண்டே இருக்கிறானென்பது கசிந்த உள்ளத்தோடு பார்ப்பவர்களுக்குத் தெரியும். எங்கு கசிவு இல்லையோ அங்குச் சைவம் பழுப்பதில்லை. கொல்லாமை என்பது நமது வயிற்றுக்காகத்தான் என்று பொருள் கொள்ளக் கூடாது. கொல்லாமை, புலால் மறுத்தல் என்பதிலிருந்து அன்பு முளைக்கின்றது. ஆண்டவனிடத்திலே அன்பு செலுத்துவதற்கு முதற்படியாகக் கொல்லாமையைத் திருவள்ளுவரும் வற்புறுத்திக்கூறுவதைக் காணலாம்.

இரண்டாவதாக, துறவறத்தின் மூலம் பரம்பொருளைக் காணமுடியும் என்பதும்

வலியுறுத்தப்படுகிறது. காரணம், காவி யுடை அணிந்தால், அதன்மூலம் சற்று மனத்தூய்மை ஏற்படும் என்னும் பொரு ளாலேயே துறவறம் இரண்டாவதாகக் கூறப்படுகிறது. அவ்வுடை அணிந்தால் ஓரளவு வேட்கையும் தணியும் என்றபொரு ளும் அதிலே அடங்கியிருக்கிறது. இவை களையெல்லாம் சிவனை அடைதற்கு, சிறந்த ஒழுக்கமாகக் கொண்டிருந்தார்கள் என்று தெரியவருகிறது.

இப்படியெல்லாம் திருமூலர் பலபடி களைச்சொல்லிக்கொண்டுவந்து கடைசியில் அன்புதான் கடவுள் என்று முடிக்கிறார். "Love is God" அன்பு என்பதுதான் கடவுள் என்று முடித்தவர்கள் யாருமில்லை. அன்பை எழுவாயாக எந்த மதமும் வைத் துச் சொல்லவில்லை. ஆனால், நம்முடைய சைவமதமோ அன்புள்ளந்தான் ஆண்ட வன் என்பதைப் புலப்படுத்தும் முகத்தான் "அன்பே சிவம்" என்ற இரண்டு சொற் களினால் அழகாகச் சொல்வதைக் காண லாம். இவ்வாறு ஒழுக்க நிலைகள் மூலம் சிவனை அடையலாம்; ஒழுங்காக யோகங் கள் செய்தால் சிவனை அடையலாம் என்று கூறப்படுகிறது.

அடுத்து, அன்பர் வரதராஜன் அவர் கள், அடியார் பெருமையைப்பற்றி, பலபல சிக்கலான கேள்விகளையெல்லாம் கேட்டு நாமெல்லாம் வியக்கும்படிப்பேசியது கண்டு நான் பெருமகிழ்ச்சியடைகிறேன். அடியார் என்பதற்குப் பல பொருள்கள் சொன்னார். அடியார் - அடிக்காதவர். அடி - திருவடி, என்ற இரு பொருள்களைத்தவிர பாக்கி யுள்ள எல்லாப் பொருள்களையும் திருமுறை களிலிருந்தெல்லாம் மேற்கோள் காட்டி விளக்கியது போற்றுதற்குரியது.

'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்று நமது இந்துமதசாத்திரம் கூறு கிறது. அமைதி வேண்டும் என்று இஸ்லா மிய மதம் வற்புறுத்துகின்றது. ஆனால், கிறித்துவமதமோ பேரரசனானாலும் அவன் தினமும் ஆண்டவனை நோக்கி 'எனக்குத் தினமும் சாப்பிடுதற்குவேண்டிய ரொட்டி அதாவது ஆகாரம் கொடு என்று கேட் பதை வற்புறுத்துகின்றது. இது எதைக் குறிப்பிடுகிறது என்பதைப் பார்க்கின்ற போது, அரசனுக்கு அரசனாயிருந்தாலும் - அரசனுடைய மாளிகையிலே வேண்டிய அளவு ஆகாரம் இருந்தாலும், அவன் மாளிகையிலுள்ள அத்தனையும் ஆண்டவ னுடையதே; அவனிடத்திலிருந்துதான் நாம் பெற்றுக்கொள்ளவேண்டும் என்பதை உணரும்படியாக இருக்கின்றது. ஆகவே தனக்கு என்று ஒரு பொருளும் இல்லை என்ற முடிவான நிலையே அடியார் பெருமை ஆகும் என்பதனை அன்பர் வரதராஜன் அவர்கள் அழகாக எடுத்துக் கூறினார். இப்படிப்பட்ட அடியார் ஒருவர் இருப்பா ரானால், உலகமெங்கும் மழை பெய்யும்; அதனால் உலகம் நன்றாக வாழும் என்ற கருத்தினையும் அவர் கூறினார்.

உலகத்திலே இருக்கின்ற உயிர்களுக் கெல்லாம் அவரவர்களுடைய உடலே ஒரு சிவலிங்கமாக இருக்கிறது என்ற பெரிய உண்மையையும் எடுத்துச் சொன்னார். சைவர்களுக்கு மட்டுமேதான் இந்த நியதி என்று இல்லாமல், வைணவர்களாயிருந் தாலும், கிறித்தவர்களாக இருந்தாலும், முகமதியர்களாக இருந்தாலும் எல்லோ ருடைய யாக்கையும் சிவலிங்கமாகவே திரு மூலர் கருதி, மனிதவடிவத்திலே இருக்கும் அனைவருக்கும் தொண்டு செய்வது சிவ பூசை என்பதைவிளக்குகிறார். மகாத்மா காந்தியடிகளும், தரித்திரநாராயணர்களுக் குத் தொண்டு செய்யவேண்டும் என்று வற்புறுத்திவந்தார். மக்களுக்குச்செய்வது சிவத்தொண்டாகும் என்பதையே திரு மந்திரக்காரர் மிக அழகாக வற்புறுத்தி யிருக்கிறார் என்று சொல்ல வேண்டும். ஆயிரம் கோயில்கள் கட்டினால் ஏற்படக் கூடிய பலனைக்காட்டிலும், திருவடிஞானம் உடைய ஒரு அடியவருக்கு ஒரு பகல்

உணவு அளிப்பது மிக மிக உயர்வானது என்பதனையும் திருமந்திரத்தில் காண்கின்றோம். திருவடிஞானம் வந்தவர்களுக்கு ஒருபிடி சோறு அளிப்பதால் ஏற்படுகிற பலன் பெரிது; கோடி அசுவமேத யாகத்திற்கு உதவி அதனால் வருகிற பலன்கூட இதற்கு நிகராகாது. திருவடிஞானத்தைப் பெற்ற ஒரு அடியாருக்கு ஒருபகல் உணவு அளித்தால் பெரிய பலன் கிடைக்கிறது என்று சொன்னால், அடியார் என்ற பதத்தின் பெருமையைத்தெரிந்துகொள்ளலாம்.

ஆண்டவன் அடியார்கள்மூலமேதான் நாட்டை உய்விக்கவேண்டுமென்று கருதினான் என்று நாம் சொல்லலாம். அதன்படி அரசர்கள் மூலமாக, சிவயோக ஞானமுள்ள அடியார்களைப் போற்றிப் பேணி அவர்கள் மூலம் நாட்டை உய்விக்கும்படிச் செய்தார் என்றும் கூறலாம். அப்பேர்ப்பட்ட அடியார்கள் நாட்டிலே தோன்றவில்லையானால், இன்று சைவமே நாட்டில் இல்லாமலிருந்திருக்கும். அவர்கள் கொடுத்த பிச்சையே இது. நம் தமிழ்த்தாத்தா திரு. உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் இந்த நாட்டிலே தோன்றாவிடில் இன்று பத்துப்பாட்டும் சங்கநூல்களும் கிடைத்திருக்குமா? இந்த மாதிரி பல அடியார்கள் நமது நாட்டிலே தோன்றி, அரும்பாடுபட்டு, அவ்வப்போது சைவத்தையும் தமிழையும் காத்துவந்திருக்கிறார்கள். இந்த நாட்டிலே சைவம் இருக்கிறது என்றால், அது அடியார்களின் பெருமையினால்தான் என்பது நன்கு புலனாகிறது. அவர்கள் அன்று இல்லையானால், சைவம், சிவம் என்ற பெயரே இல்லாமல் அழிந்தொழிந்திருக்கும்.

நம்மையெல்லாம் உய்விப்பதற்காகவே ஆண்டவன் அடியார்களைத் தோற்றுவித்து, குருவடிவில் அடியார்களைவைத்து அதன்வழியிலே நின்று, சிவனை அடையும் பெருமையை நாட்டிற்கு எடுத்துத் தந்திருக்கின்றான். அத்தகைய பரம்பரையிலே வந்த நமது குருமகாசந்நிதானம் அவர்களும், அதேவழியைப் பின்பற்றி, சைவத்தின் பெருமையையும், தமிழின் பெருமையையும், திருமந்திரத்தின் உயர்வையும் தமிழ்நாடு அறிந்துகொள்ளுகிறவகையில் ஆண்டுகள் தோறும் சைவப்பெருமக்களை ஒன்றுசேர்த்து, இந்த விழாவின்மூலம் சைவத்தையும் சிவத்தையும் தமிழையும் நினைவுபடுத்திக்கொள்வதற்குரிய சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக்கொடுக்கின்றமைக்கு, சைவ உலகம் என்றும் கடமைப்பட்டிருக்கிறது என்பதைக் கூறிக்கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித்துக் கொள்கின்றேன்.

உறுதுணை நந்தியை உம்பர் பிரானைப்
பெறுதுணை செய்து பிறப்பறுத் துய்மின்
செறிதுணை செய்து சிவனடி சிந்தித்து
உறுதுணை யாயங்கி யாகிநின் றானே.

—திருமூலர்.

## அவாஅறுத்தல்'

**டாக்டர் திரு. M. இராசமாணிக்கனுர் அவர்கள்,** M. A. L. T., M. O. L., Ph. D.
தமிழ்ப்பேராசிரியர், தியாகராஜர்கல்லூரி, மதுரை.

ஸ்ரீ - ல - ஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவடிகளுக்கும், இணையற்ற அவைத் தலைவர் அவர்களுக்கும், ஏனைய அடியார் பெருமக்களுக்கும் அடியேனுடைய மிகத் தாழ்ந்த வணக்கம்.

திருமந்திரமாநாடு மிகச் சிறந்தமுறையிலே இங்கு நடைபெற்று வருகிறது என்பதை இங்குவாராத தமிழன்பர்கள் பலரும் நன்றாக அறிவர். எங்கள் பீடுமிக்க சைவப் பெருமக்கள் இம்மாநாடு நடைபெறுவதைப் பற்றி மிக மிகப் பாராட்டிப் பேசி வந்திருக்கின்றார்கள். நம்முடைய மகாசந்நிதானம் அவர்கள், அருட்செங்கோல் செலுத்தத் தொடங்கியது முதல், தமிழகத்திலே சைவம் நல்ல முறையிலே - மிகவேகமாகப் பரவ வேண்டுமென்ற முறையிலே காரியங்கள் செய்கிறார்கள் என்பதை நாம் அறிகிறோம்.

ஆறு ஆண்டுகளுக்குமுன்னர் நம்நாடு இருந்த நிலைமை வேறு; இன்று இருக்கின்ற நிலைமை வேறு. கல்லூரி இளைஞர்களிடத்திலேயும், பலதுறை அலுவல்களை மேற்கொண்டிருக்கின்ற இளைஞர்களிடத்திலேயும் இன்று சமய உணர்ச்சியானது தோன்றிவருகிறது. ஒரு கல்லூரிப் பேராசிரியர் என்ற முறையிலும், தமிழகத்தில் பலகல்லூரிகளுக்கும் சென்று பேசி வருகின்றவன் என்ற முறையிலும், நூற்றுக் கணக்கான உயர்நிலைப் பள்ளிகளில் பேசி வருகின்றவன் என்ற முறையிலும் நான் காணுகின்ற ஒரு காட்சி இளைஞர்களிடத்திலே சைவம் நன்றாகப் பதிந்து வருகிறது என்பது. அதுவும் அறிவோடு பொருந்தி ஓரளவு நன்றாக வளர்ச்சி பெறுகின்றது. இந்த வளர்ச்சிக்குக் காரணம் இத்தகைய பலமாநாடுகளும், மாநாடுகளில் வெளியிடப்படும் நூல்களும், தலைவர் அவர்களைப் போன்றபேரறிஞர்களுடைய இனிமையான முறையில் தோன்றுகின்ற சைவவிளக்கங்களும் ஆகும். இத்தகைய ஒரு திருத்தொண்டைத் தொடங்கி வைத்து, நாட்டிலே இருக்கின்ற நல்லறிஞர் பலரையும் வரவழைத்து, அவர்களைப் பேசவைக்கிற சிறப்பு குருமகாசந்நிதானம் அவர்களுக்கே உரியதாகும்.

திருமந்திரம் சைவசமய ஒளிவிளக்காக இருக்கிறது. அந்த ஒளிவிளக்கு தோன்றுவதற்கு அடிப்படையாக இருப்பது பல்லாயிரம் ஆண்டுகளாக இந்த நாட்டிலே விளங்கி வந்த சைவசமயம். சைவ சமயம் உலகத்திலேயே பழையசமயங்களில் ஒன்று என்று, நான் சொல்லவில்லை; கிறித்து மதத்தைச்சேர்ந்த நடுநிலை வாய்ந்த சிறந்த ஆராய்ச்சி அறிஞர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். உலகத்தின் பலபாகங்களிலே காணப்படும் பொருள்களை அவர்கள் ஆராயும்போது, எல்லா இடங்களிலும் பூமியைத் தோண்டிப் பார்க்கும்போது சிவலிங்கத்தைக் காண்கிறார்கள். மத்தியதரைக்கடல், மால்டாதீவு, எகிப்து போன்ற பல்லாயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ள இடங்களிலும் சிவலிங்கத்தைப் பூமியிலிருந்து அகழ்ந்தெடுத்திருக்கின்றார்கள். இன்று ஈராக் முஸ்லிம்வாழுமிடமாக இருக்கிறது. அங்கே இன்று சைவர்கள் இல்லை. ஆனால், அவர்களைத் தாங்குகின்ற நிலத்திற்கு அடியிலே சிவலிங்கம் இருக்கிறது. ஆகவே, பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் தமிழ்நாகரிகம் பரவியிருந்த காலத்திலே அவர்களுடைய சின்னங்களாகப் பல சிவலிங்கங்கள் கிடைத்திருக்கின்றன. இதை எல்லாம் பார்க்கும்போது மேல்நாட்டு அறிஞர்கள் வியப்பு அடைகிறார்கள். உலகத்தில் மிகப்பெரிய சமயமாகச் சைவசமயம்

இருந்தது; இன்றும் இருந்து வருகிறது. தோன்றிய காலம்முதல் வழக்கத்தில் இருப்பது சைவசமயம்தான் என்று மேல்நாட்டார் எழுதிவருகிறுர்கள். இளைஞர்கள் இப்பொழுது படிக்கிறுர்கள்; படிக்கும்போது இவ்வளவு பழமைவாய்ந்த சமயத்தைச் சார்ந்தவர்களாக நாம் இருக்கிறேம் என்ற உணர்ச்சி ஏற்பட்டு, அந்தச் சமயத்தின் உண்மையை அறியவேண்டும் என்கிற ஆர்வம் நம் இளைஞர்களுக்கு ஏற்படுகிறது. அதனுலே இளைஞர்கள் எதிர்காலத்திலே சைவசமயத்தை நல்லமுறையிலே வளர்க்க முன்வருவார்கள் என்கிற நம்பிக்கையும் இருக்கிறது.

இந்தியாவின் பலபாகங்களிலே பூமியை அகழ்ந்து பார்க்கும்போது வட இந்தியாவிலே சிந்துநதி பாய்கின்ற இடத்தைச் சார்ந்திருக்கிற மொகஞ்சதாரோ, அரப்பா ஆகிய இடங்களில் ஆங்காங்கே சிவலிங்கங்கள் கிடைப்பதாக இந்திய ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்து, தோண்டி எடுத்திருக்கின்றுர்கள். அவற்றை எல்லாம் வைத்து, நம் நாட்டுமக்களும் சைவசமயத்தினுடைய பழமையை எண்ணிப் பெருமை அடைகின்றுர்கள். நம்முடைய நூல்களை எடுத்துக்கொண்டாலும், சமய நூல்களில் மட்டுமல்லாமல் இலக்கிய நூல்களிலும் சைவசமயம் உயர்ந்த சமயமாக இருந்து வருவதை நாம் அறிவோம்.

சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற பழைய காவியங்களிலுங்கூட, சிவபெருமானுடைய கோயில்தான் முதலிலே வைத்துப் பேசப்படுகின்றது. சொன்னவர்கள் சைவர்களல்ல; சமணர்களும், பௌத்தர்களும் இம்மாதிரி பேசியிருக்கின்றுர்கள். சிவனுடைய தன்மையைச் சங்ககாலத்திலிருந்து பார்க்கிறேம். மிகப் பழைய காலம் முதல் தொன்றுதொட்டே வளர்ச்சி குன்றுமல், ஒழுங்காக வளர்ந்துகொண்டுவருகின்ற சிறந்த சமயம் சைவம் என்பது சங்க நூல்களிலிருந்து தெரிகிறது.

உலகத்தின் பலபாகங்களில் கிடைத்த சிவலிங்கத்தை எல்லாம் ஆராய்ச்சிசெய்து பார்த்தபோது, இந்தியாவில் சில இடங்களில் கிடைத்த சிவலிங்கங்கள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதாக இருக்க வேண்டுமென்று கணக்கிட்டிருக்கிறுர்கள். திருப்பதியை அடுத்த ஒரு இடத்திலே கிடைத்த சிவலிங்கமானது மிகப் பழமையானது என்று கணக்கிட்டு அதை லக்னே மியூஸியத்தில் வைத்திருக்கிறுர்கள். இப்படி ஒவ்வொரு துறையிலும் எடுத்துக் கொண்டு பார்ப்போமானுல், சைவ சமயம் மிகப் பழமையானதும், போற்றத்தக்கது மான சமயம் என்று தெரியும்.

சமயவளர்ச்சி உண்டானபிறகு சமய நூல்கள் தோன்றுவது இயல்பு. அம்மாதிரி தோன்றிய தமிழ்நூல்கள், சங்ககாலத்தில் இருந்து, பிற்காலத்தில் அழிந்துவிட்டன. இன்று இருக்கக்கூடிய சமய நூல்களில் காலத்தால் முற்பட்டதாகக் கருதப்படுவது திருமந்திரந்தான். தேவார ஆசிரியருக்கும் முற்பட்டவர் திருமூலர் என்று ஆராய்ச்சியாளர்கள் முடிவுக்கு வந்திருக்கிறுர்கள். திருமந்திரத்திலே இருக்கும் உண்மைகளையும், அதிலே கையாளப்பட்ட தொடர்களையும், பிற்காலத்தில் தேவாரம் முதலிய நூல்களிலும் சித்தாந்தநூல்களிலும் நாம் காணலாம்.

திருமந்திரம் மக்களுக்குப் புரியாத முறையில் சைவசமய உண்மைகளை எடுத்துச் சொல்லவில்லை. சைவன் எவ்வாறு வாழவேண்டும் என்பதற்கான அடிப்படைகளை மிக நன்றுக ஒன்பது தந்திரத்திலே சொல்லியிருக்கிறுர் திருமூலர். பல மந்திரங்கள் நமக்குப்புரியாமல் இருக்கலாம்; சில புரியலாம். ஆனுல், சைவன் வாழவேண்டிய நெறி எது? எந்த முறையைப் பின்பற்றி வாழவேண்டும்? என்று மிக அழகாக நீதி நூல்களில் குறிப்பிட்டிருக்கும் உண்மைகள் பலவற்றைத் திருமந்திரத்திலே காணலாம். சைவநன்மக்கள் எவ்வாறு வாழவேண்டும்?

நேர்மையான வாழ்க்கை எவ்வாறு இருக்க வேண்டும்? என்று பெரியோர்கள் வரையறுத்துச் சொன்ன முறைகளையெல்லாம் திருமந்திரத்திலே காணலாம். சைவன் என்றால், கோயிலுக்கு மாத்திரம் போகின்றவன் என்று சொல்லமுடியாது என்றும், மனிதப் பண்போடு வாழ்கின்றவன் கோயிலுக்குச் செல்லாமலிருந்தாலும் அவன் சைவனாகக் கருதப்படுவான் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

மனிதனுக்கு மிகவும் முக்கியமானது ஒழுக்கநெறியே. இந்த ஒழுக்கநெறிகளைத் திருமந்திரம் நன்றாக விளக்குகிறது. திருக்குறளைப் போலவே திருமந்திரத்திலும் புறங்கூறாமை, பொய் பேசாமை போன்ற பல ஒழுக்கநெறிகளெல்லாம் ஆங்காங்கே சொல்லப்பட்டிருப்பதை நாம் காணலாம். சைவன் என்று சொன்னால் திருநீறு பூசுதல், கோயிலுக்குப் போதல் என்ற இரண்டொரு விதிகள் ஒரு காலத்தில் இருந்தது. அதனால், பிற்காலத்தில் சிறிது ஒழுக்க நெறி சிதறியது. அந்த ஒழுக்கத்தைக்கூட வற்புறுத்துகிறது திருமந்திரம். அந்த ஒழுக்க நெறிதான் மனிதனுக்கு மிகமுக்கியமானது. அதைப் பின்பற்றிச் சென்றால், இறைவனுடைய அருளை எளிதில் பெற முடியும் என்பதைக் காட்டுகிறது. இப்பொழுது எனக்குக் கொடுத்துள்ள பொருளாகிய “அவா அறுத்தல்” என்பதைப் பற்றிச்சொல்கிறேன்.

எனக்கு ஐம்பது ஆண்டுகளாகிறது. முப்பது ஆண்டுகளாகத் தமிழாசிரியனாக இருந்திருக்கிறேன். சில உயர்ந்த தாழ்ந்த இடங்களிலெல்லாம் பழகியிருக்கின்றேன். என்ன இதுவரையில் அனுபவித்தோம்? என்ன கண்டுவிட்டோம்? என்றெல்லாம் நினைக்கின்றபோது, ஐம்பது வயதுக்கு மேற்பட்ட காரணத்தினாலோ அல்லது வேறு எக்காரணத்தினாலோ இந்த உடம்பானது நிலையாதது என்பது நன்கு புலப்படுகிறது. அனுபவம் வளர வளர, வயது அதிகமாக ஆக, நன்றாகப் புலப்படுகிறது. ஆசை என்பது எங்கே இருக்கிறது என்று பார்த்தால், நாம் விரும்புகின்ற பொருள்களிடத்தில் இருக்கின்றது என்பது புலனாகிறது. குழந்தை வளர்ந்தவுடன் படிக்க வேண்டுமென்று தோன்றுகிறது. பி. ஏ. படித்து, பின் உத்தியோகத்திற்கும் போக வேண்டும் என்று அடுத்து நாம் எண்ணுகிறோம். படிப்புக்கு ஏற்ற உத்தியோகமல்ல இது; இன்னும் சிறந்த உத்தியோகத்திற்குப் முயற்சிக்கவேண்டும் என்ற அவா மேலும் மேலும் ஏற்பட்டுக்கொண்டே வருகிறது. பிறகு, இப்பொழுதுதானே உத்தியோகத்திற்கு வந்திருக்கிறோம்? வயது 22 தானே ஆகிறது? நாம் ஒரு நல்ல அழகிய நங்கையை மணந்துகொள்ள வேண்டாமா? மணந்து பின் இல்லறத்தை நடத்தவேண்டாமா? என்ற அந்த அவாவுக்கு மனம் இழுத்துச் செல்லப்படுகிறது. அதோடு அவா நின்றுவிட்டதா என்று பார்த்தால், இல்லை. மேலும், இப்பொழுதுதானே திருமணம் ஆயிற்று; குழந்தை இல்லையே என்ற அவா ஏற்படுகிறது. ஐந்தாண்டுகள் ஆகின்றன; பத்து ஆண்டுகளாகின்றன; குழந்தை இல்லை. வர வர மகன் இளைக்கிறான். அவன் மனைவியும் இளைக்கின்றாள். இன்னும் அவா அறுந்தபாடில்லை. கடைசியாக அவாவானது குழந்தை பிறக்க வேண்டும் என்ற நிலையிலே கொண்டுபோய் விடுகிறது. குழந்தை பிறக்கிறது; நன்றாக வளர்கிறது.

வீட்டிலே ஒரு கொட்டகை இருக்கிறது. குழந்தை அதிலே சென்று விளையாடிக்கொண்டிருக்கிறான். கொட்டகை தீப் பிடித்துக் கொண்டது. விஷயம் தெரிந்தவுடன் தகப்பன் விழுந்தடித்துக்கொண்டு ஓடுகிறான். ஆனால், தீயோ அளவுக்குமேல் போய்விட்டது. அப்பொழுது அங்குள்ள ஒருவராவது அந்தக்குழந்தையைத் தூக்க முன்செல்லவில்லை. அப்போது அந்தக் குழந்தைமீது இருந்த அவாவின் நிலையானது அறுபட்டு, தனது அளவிலே

வந்துவிட்டது. இந்த அவா அறுத்தல் திருமந்திரத்திலே அழகாகச் சொல்லப் பட்டிருக்கிறது.

ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனே டாயினும் ஆசை அறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே.

ஈசனோடாயினும் ஆசையை அறுக்க வேண்டும் என்ற கருத்துப்பட அவா அறுத்தலைத் தனிப் பகுதியாக வைத்து, பத்துப்பாக்கள் பாடியிருக்கிறார் திருமூலர். இதனை நன்கு சிந்திக்கவேண்டும். படிக் கின்றதோடு நின்றுவிடக்கூடாது; சொற் பொழிவு கேட்பதோடுமட்டும் நின்றுவிடக் கூடாது; பேசுவதோடுமட்டும் நின்றுவிடக் கூடாது. நாம் கூடுமானவரையில் இடம் பொருள் ஏவல்கள் அறிந்து, பெரியோர் களுடைய அறிவுரைகளைக் கேட்பதோடு, நல்லுரைகளை விடாப்பிடியாக உருவாக்கிப் பயிற்சிசெய்தால் உண்மையாகவே அவா அறுத்து, சிவத்தைக்காணுகின்ற இறுதி யான நிலை ஏற்படும்.

சைவ சமயத்தை வளர்க்க நாயன்மார் கள் என்ன பாடுபட்டார்கள்? இக்காலம் போல் போக்குவரத்து வசதி இல்லாத அந்தக் காலத்தில் அதாவது 7வது நூற் றுண்டில் திருநாவுக்கரசர் - கிழவர் - 300க்கு மேற்பட்ட சிவ ஸ்தலங்களுக்குக் கால்நடை யாகவே சென்று, பதிகத்தைப்பாடி, ஊர் மக்களைத்திரட்டி, சைவ சமய உண்மையை எடுத்துச் சொல்லி வளர்க்க என்ன பாடு பட்டிருப்பார்கள்? ஒவ்வொரு நாயன்மாரும் எவ்வளவு கஷ்டப்பட்டு நம் சைவத்தைப் பரப்பினார்கள் என்று எண்ணிப்பார்த்தால் தான் இந்த சைவம் இந்த நாட்டில் நிலைக்க வேண்டும்; வாழவேண்டிய ஒருசமயத்தைப் பின்பற்ற வேண்டியது நம்முடைய கடமை என்ற உணர்ச்சி உண்டாகும். அதோடு கூட, சைவசமய உண்மைகளை மக்களுக்கு எடுத்துச் சொல்லி, வாழ்க்கை நெறிகளை நினைப்பூட்டி, மக்களையும் நல்வழிப்படுத்த வேண்டும். கதை சொல்லிவிட்டுப் போய் விட்டால் சமுதாயம் உருப்படாது. கொள் கைகளை மனிதன் எவ்வெவ்வாறு கைக் கொள்ளலாம் என்பதைத் திருமந்திரம் படிப்படியாக வழிகாட்டுகிறது. அந்த நெறி களைப் பின்பற்றினால் — சைவனுடைய பண் பிலே வாழ்ந்தால், சைவம் இந்த நாட்டிலே நல்லமுறையிலே வளரும். குறைவற்ற நிலை யிலே சமுதாயத்தை வளர்க்கவேண்டியது ஒவ்வொரு சைவனுடைய கடமையுமாகும். பல ஆயிரம் ஆண்டுகள் பேணி வளர்க்கப் பட்ட சைவசமயம் நம் நாட்டிலே என்றும் நிலைபெற்றிருக்கும்.

ஒழுக்கநெறிகளையோ, இறைவனுடைய தத்துவங்களையோ பெரியவர்களுக்கு நாம் அவ்வளவாகச் சொல்லவேண்டிய அவ சியம் இல்லை. ஆனால், இளைஞர்களுக்கு மட்டும் வற்புறுத்திச் சொல்லவேண்டிய கடமை இருக்கிறது. ஆண்டவன் இருக்கி றான்; எங்கும் பரந்துள்ள பரம்பொருள் ஒன்று இருக்கிறது; உலகத்தை இயக்கும் பேராற்றல் அந்தப் பரம்பொருளுக்கு இருக் கிறது என்பதை இளைஞர்களுக்கு நன்றாக வற்புறுத்தவேண்டும். எத்தகைய கேள்வி கேட்டாலும், பதில் சொல்லி இறைவனை உணரவைத்தால், எதிர்காலத்திலே நம் முடைய சமுதாயம் தாழ்வுறாது. இந்த அடிப்படையை நாம் மனத்தில்கொண்டு, இளைஞர் உலகத்தையும் நாம் மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இளைஞர்க ளுடைய உள்ளம் நன்கு பண்படவேண்டும். இளைஞர்கள் சமயத்தைப்பற்றி நினைக்க நாம் பாடுபடவேண்டும். இளைஞர்களுடைய உள்ளத்தில் கடவுள் உணர்ச்சியைப் படிப் படியாக வளர்த்து, சைவசமயச் சிறப்பை அவர்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டும். திருமந்திரத்தில் அவர்கள் பின்பற்றக் கூடிய நெறிகள் இன்னது என்று எடுத்து அழகாகச் சொல்லவேண்டும். அப்போது தான் இப்பொழுது வாழ்கின்ற சைவம் நல்ல நிலையிலே வாழ வசதி இருக்கும். அத்தகைய முறையிலே நம்முடைய தலைவர்

அவர்கள் தெரிவித்ததுபோல், விளக்கமானமுறையிலே திருமந்திர நூல்கள் பல படிப்படியாக வெளிவரவேண்டும். அவற்ருேடு கல்லூரி இளைஞர்கள் படிக்கத் தக்க முறையிலே சிறு சிறு வாக்கியங்களில் வெளியிட்டால், திருமந்திரத்தில் உள்ள உண்மைகள் கல்லூரிமாணவர்கள் மனத்தில் நன்கு பதிய உதவும்.

ஐம்பது வயதுக்கு மேற்பட்டவர்களுடைய மனம் பக்குவப்படுவதினுல்மட்டும் சைவத்தை வளர்த்துவிட முடியாது. எதிர்காலத்திலே இந்த நாடு வாழவேண்டும்; இந்த சமுதாயம் வாழவேண்டும்; இந்த சைவம் வாழவேண்டும்; கோயில்கள் எல்லாம் வாழவேண்டும் என்ருல், இளைஞர்களுடைய உள்ளத்தை நாம் பக்குவப்படுத்தவேண்டும்; அதற்குரிய நூல்களைத் தயார்செய்யவேண்டும். நம் கல்லூரிகளில் எல்லாம் பிற சமயங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்து படிப்பதை நினைத்துப் பார்க்கும்போது, நம்முடைய சைவசமயமும் அதோடு ஆராய்ச்சி செய்யப்பட வேண்டுமானுல், எளிய நூல்களை அச்சிட்டு நல்ல முறையிலே வழங்கினுல், உண்மையிலே மக்களுடைய உள்ளம் பண்படும். இத்துறையில் நம் குருமகாசந்நிதானம் அவர்கள் கருணைகூர்ந்து ஆண்டுதோறும், அதற்கிடையேயும் பல வெளியீடுகளை வெளியிட்டு உதவுவது சைவசமய வளர்ச்சிக்குப் பேருதவியாக இருந்துவருகிறது. சென்ற பதிப்புக்களையெல்லாம் பார்த்து, அடியேனுக்குத் தோன்றிய சில கருத்துக்களைக் குருமகாசந்நிதானம் அவர்களிடத்தில் விண்ணப்பித்துக் கொள்கின்றேன். அதாவது நாட்டிலே இளைஞர்களுடைய உள்ளம் நன்ருக வளரவேண்டும்; அதுதான் எதிர்காலத்திலே நம்முடைய நாட்டுச்செல்வம். எதிர்காலச் சைவம் அங்கேதான் இருக்கிறது. அதை நாம் கருத்திற்கொண்டு, வளர்க்கப் பாடுபடுவோமாக. இச்சந்தர்ப்பத்தில் அடியேன் பேசும்படியான வாய்ப்பை அளித்த குருமகா சந்நிதானம் அவர்களுக்கு என்னுடைய வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கின்றேன்.

உய்ந்தனம் என்பீர் உறுபொருள் காண்கிலீர்
கந்த மலரில் கலக்கின்ற நந்தியைச்
சிந்தையில் வைத்துத் தெளிவுறச் சேர்த்திட்டான்
முந்தைப் பிறவிக்கு மூலவித் தாமே.

—திருமூலர்.

## ' ஒழுக்கநெறிகள் '

பண்டித - வித்துவான்,

### திரு. L. P. KR. இராமநாதன் செட்டியார் அவர்கள்,

பேராசிரியர் - தமிழ்த்துறைத்தலைவர், அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கும், தலைவர் அவர்களுக்கும், அடியார் பெருமக்களுக்கும், அவையில் குழுமியிருக்கும் அறிஞர்பெருமக்களுக்கும் என்னுடைய மனமார்ந்த வணக்கம்.

தமிழ்நூல்களில், பழமையான முதல் ஞானநூல் திருமந்திரம் என்பதை எனக்கு முன்பு பேசிய அறிஞர்கள் கூறினர்கள். திருமந்திரம் பன்னிரு திருமுறைகளிலே பிற்பட்டு, பத்தாவது திருமுறையாக வைக்கப்பட்டிருப்பினும், அது காலத்தால் முற்பட்டது என்று தலைவர் அவர்கள் கூறினர்கள். திருமந்திரத்திற்கு உள்ள மற்றொரு சிறப்பு - வேறொன்றுக்கும் இல்லாத ஒரு அமைப்பு, ' தந்திரம் ' என்ற உட்பிரிவைக் கொண்டிருப்பது. இலம்பகம் என்ற பிரிவு சீவகசிந்தாமணிக்குச் சிறப்பாக அமைந்திருப்பதுபோல, தந்திரம் என்னும் உட்பிரிவு திருமந்திரத்திற்குத் தவிர வேறு எந்த நூலுக்கும் இல்லை. இப்பொழுதுள்ள ஞான நூல்களிலே முதல்நூல் என்று கருதப்படுவது திருமந்திரமே. ஞானக் கருத்தினைத் தமிழ்மக்கள் கற்றும் கேட்டும் உணர்ந்து நல்வாழ்வு வாழவேண்டும் என்னும் பெரு நோக்கங்கொண்டு, கடந்த நான்கு ஆண்டுகளாகப் பல அறிஞர்களைக் கூட்டி, சிறப்பாகச் சொற்பொழிவு ஆற்றச் செய்துவரும் குருமகா சந்நிதானம் அவர்களுக்கு என்றென்றும் கடமைப்பட்டுள்ளோம்.

இந்த ஆட்சியிலே இதற்குமுன் பல குருமகா சந்நிதானங்கள் இருந்தும், அவர்களுடைய திருவுள்ளத்திலே தோன்ருத ஒரு பேரொளி, இப்பொழுது இங்கே வீற்றிருக்கும் குருமகாசந்நிதானம் அவர்கள் திருவுள்ளத்தில் தோன்றியது நம்முடைய பெரிய பேறு ஆகும். இதனல், முன்னேர்களுக்கு நான் குறைகற்பிப்பதாக யாரும் எண்ணவேண்டாம்; உள்ளதை ஒளிக்காமல் சொல்லத்தானே வேண்டும்.

இம்மாநாட்டின் சொற்பொழிவுகளைப் பத்திரிகை வாயிலாகமட்டும் சைவநன்மக்கள் அறிந்தால் போதாது; அதனை அச்சிட்டு ஆண்டுதோறும் மலராகவும் வெளியிடுவதால், பலர் அதனைக் கற்று அறியக் கூடிய வாய்ப்பு ஏற்படும் என்ற நோக்கோடு புலவர்கள் பேசி வருகின்ற பேச்சுக்களை சுருக்கெழுத்தாளர்களின் உதவிகொண்டு திரட்டி, திருமந்திரத்திற்குத் துணைநூலாக வெளியிடுவது போற்றற்குரியது. இதனல், எப்போது வேண்டுமானலும், படித்துக் கொள்ளவும் வாய்ப்பு ஏற்படுகிறது. அது மட்டும் போதாது. தலைவர் அவர்கள் கூறியதுபோல் ஒவ்வொரு ஆண்டிலும் குறிப்பிட்ட பகுதிகளை விளக்கமாக வெளியிடும் பொறுப்பைத் தலைசிறந்த புலவர்களுக்கு விடுவார்களானல், இன்னும் இத்தகைய தொண்டு வளருவதற்கு ஒரு நல்ல வழி காட்டும் என்பது என் கருத்து.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை இப்பொழுதுதான் முதன்முதலாகப் பார்க்கிறேன்; என்ருலும், அவர்களைப் பற்றி நன்ருகக் கேள்விப்பட்டிருக்கிறேன். எந்தச் செயலையும் நன்ருக எண்ணித்தான் துணிவார்கள் என்றும், துணிந்துவிட்டால் செயலிலே உறுதியான முயற்சியுடன் ஈடுபடுவார்கள் என்றும் அறிந்திருக்கிறேன். அதனலேதான் இந்தத் திட்டத்தையும் அதன் நுட்பத்தையும் இந்த அவையில் எடுத்துக்காட்டி அதைச் செய்யவேண்டும்

என்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன். இப்பொழுது நீங்கள் குருமகாசந்நிதானம் அவர்களை நோக்குங்கள்; முகமலர்ச்சியோடு வீரத் தோற்றத்தோடு அவர்கள் காட்சி யளிப்பதைக் காணலாம். இது எதைக் காட்டுகிறது? இந்த மாநாட்டிலே தனக்கு ஆர்வம் அதிகம் இருக்கிறது என்பதையும் மேலும் மேலும் ஒவ்வொரு ஆண்டிலும் இன்னும் சிறப்பாக நடத்தமுடியும் நடத்து வேன் என்பதையும் அறிவிப்பதுபோல் - உணர்த்துவதுபோல் காணப்படுகிறது.

வெளிநாடுகளில் ஒவ்வொரு நூலுக்குமே பல துணைநூல்கள் தோன்றுவது உண்டு. நாம் ஒருநூல்நிலையத்தில் சென்று பார்த்தால், ஒரு நூலுக்குத் துணையாகப் பல கட்டுரைகள், பல குறிப்புகள் எல்லாம் கிடைக்கும். அதுபோலவே இன்னும் சில ஆண்டுகளில் திருமந்திரத்திற்குத் துணை யாக வெளியாகும் நூல்கள் எத்தனை எத்தனை ஏற்படப்போகிறது பாருங்கள். முதலாக இந்த இடத்திலே மாநாடுகள் கூட்டுவதற்கும், நூல்களை வெளியிடுவதற்கும் காரணம்,இந்தஇடத்திலேதான் திருமந்திர நூல் முதன்முதலாக இயற்றப்பட்டது என்பதே.

நமது திருஞானசம்பந்தப் பெருமான் இந்தத் தலத்துக்கு வந்தபோது, "இங்கே தமிழ் மணம் நாறுகிறதே" என்று சொன்ஞராம். உடனே அவ்விடத்தில் தோண்டிப் பார்த்ததில் திருமந்திரத்தின் செப்பேடுகள் கிடைத்தனவாம். இதனை நண்பர் திரு தண்டபாணி தேசிகர் அவர்கள் கூறிஞர்கள். அவ்வளவு சிறப்பு இதற்கு உண்டு.

இப்போது எனக்குக் கொடுக்கப்பட்டுள்ள "ஒழுக்க நெறிகள்" என்ற பொருளைச் சற்று ஆராய்வோம். ஒழுக்க நெறியைப்பற்றி, திருவள்ளுவர் முதலதிகாரத் திலேயே குறிப்பிட்டிருக்கிருர்.

> பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
> நெறிநின்ருர் நீடுவாழ் வார்.

ஒருவன் ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தால் அவன் நெடுங்காலம் உலகில் வாழமுடியும். ஒழுக்கமுறையாவது வேத விதியின்படி அருச்சித்தல், பூசித்தல் என்றே கருதப் படும். மற்ருெருவிதத்தில் பொருள் பார்த் தால் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியவைகளையும் கூறலாம். ஒழுக்கம் என்று சொன்னவுடன் அவற்றை ஆரம்ப நிலையில் இருந்தே கைக்கொண்டால்தான் பயனடைய முடியும் என்பது வற்புறுத்தப் படுகிறது. ஒழுக்கமாவது நல்லொழுக்கம் தீய ஒழுக்கம் என இருவகைப்படும். நல் லொழுக்கத்தை ஆரம்பத்திலிருந்தே ஒருவன் பயின்ருல்தான் அவன் உண்மையான ஒழுக்க நெறி நின்று இறைவனை அணுக முடியும். இதனைப்பற்றியெல்லாம் நமது திருமந்திரத்திலே உள்ள அடிப்படையான சில கருத்துக்களைக்கூற விரும்புகின்றேன்.

ஏனைய ஞானநூல்களைப்போல் அல்லாது, திருமந்திரத்திலே பல கருத்துக்கள் அடங்கிக் கிடக்கின்றன. எல்லோரும் கைக்கொள்ளவேண்டியதான நல்லொழுக்கங்கள் என்ன? தீய ஒழுக்கங்கள் என்ன? என்பதை ஆங்காங்கே திருமூலர் சொல்லிக் கொண்டு போகிருர். ஒழுக்கநெறியை எல்லோரும் கற்றுக்கொள்ளும் எளியமுறையிலே, உரைநடையிலே தேசிகர் அவர்கள், "திருமந்திர முன்னுரை" என்ற ஒரு நூலை வெளிப்படுத்தியிருக்கிருர்கள். மாணவர்கள் படித்து உணரக்கூடிய முறையில் எளிதாக, அழகாக எழுதியிருக்கிருர்கள் என்பதை நான் இந்தச் சமயத்திலே குறிப்பிட விரும்புகிறேன்.

ஒழுக்கத்தைப்பற்றிச் சொல்லுகின்ற போது, அதற்கு முற்பட்டு கல்விஅறிவு நமது நினைவுக்கு வரும். கல்வியின் பயன் அறிவு. அறிவின் பயன் ஒழுக்கம். ஒழுக்கந் தான் கல்வியின் முடிந்த பயன். எவ்வளவு கல்வியாளனுக இருந்தாலும், எவ்வளவு பேரறிஞனுக இருந்தாலும் ஒழுக்கம் இல் லாதவனுக இருந்தால், இகழப்படுவான்;

வாழ்க்கையின் பயனை அவன் அடைய மாட்டான் என்பது முடிந்த முடிபு.

> உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
> கல்லார் அறிவிலா தார்.

என்பது இப்பொழுது நம் கவனத்திற்கு உரியதாகும். ஆகையால், ஒழுக்கம் தலை சிறந்தது; முடிந்தபயன் அதுவே என்பதை விளக்குவதற்காகத்தான், திருவள்ளுவர் கல்வியைப்பற்றிச் சொல்லும்போது, கல்வியைக் கண் என்றும், ஒழுக்கத்தை உயிர் என்றும் கூறினர்.

> எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
> கண்ணென்ப வாழும் உயிர்க்கு.

என்று கூறிய திருவள்ளுவர்,

> ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
> உயிரினும் ஓம்பப் படும்.

என்றும் சொல்கிருர். ஒழுக்கம் இல்லாதவன் உயிரில்லாத நடைப்பிணம் என்று நாம் சுருக்கமாக உணரவேண்டும். ஒழுக்கங்களைப்பற்றித் தொகுத்து விரிவாகக்கூறிய முதல்நூல் திருக்குறள்; அடுத்தபடியாக, தலைப்பிட்டுச் செம்மையாகச் சொல்லுகிற நூல் திருமந்திரந்தான் என்று நாம் உறுதியாகக் கூறிவிடலாம்.

நம் திருமந்திரத்திலே கொல்லாமை, பிறர்மனைநயவாமை, கள்ளுண்ணமை, சிவநிந்தை குருநிந்தை மயேசுர நிந்தை செய்தல் ஆகாது, புறங்கூருமை முதலியவைகளை நன்கு உணரக்கூடியமுறையில் கூறியிருக்கிருர். பிறகு அன்புடைமை, பெரியாரைத் துணைக்கோடல் என்று பல தலைப்புக்களிலும் விளக்கியிருக்கின்ருர். இந்தத் தலைப்புக்களையெல்லாம் சொல்லும்போது, இங்கே குழுமியுள்ள அறிஞர் பெருமக்களாகிய உங்களுக்குத் திருக்குறளை விளக்குவதுபோலத் தோன்றும். ஆனல், இத் தலைப்புக்கள் அனைத்தும் திருமந்திரத்தில் வருபவை. இவைகளைப் பார்க்கின்றபோது திருக்குறளும், திருமந்திரமும் கருத்தில் ஒத்து நிற்பவை என்பது நமக்கு நன்கு புலனகும்.

திருக்குறள் படிக்கும்போது சிலர்க்கு அருத்தம் புரிந்துகொள்வது மிக எளிமையாகக் காணப்படும். ஆனல், திருமந்திரம் கொஞ்சம் கடினம்; பொருள் விளங்கிக் கொள்ள முடியாது என்ற கருத்து பலரிடத்தில் பரவியிருக்கின்றது. ஆனல், குருமகாசந்நிதானம் அவர்கள் திருமந்திர மாநாட்டைத் தொடங்கியபின் பலருக்குத் திருமந்திரத்தைப்பற்றிய நினைப்பு வந்தது. பலர் அதனைப் படிக்கின்றேம்.

திருமந்திர ஆராய்ச்சியிலே நாங்களும் பணிசெய்யவேண்டும் என்று எண்ணி, அண்ணுமலைப்பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் திரு. டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அவர்களும், இணைவேந்தர் திரு. ராஜா முத்தையா செட்டியார் அவர்களும், இந்தத் துறையிலே மிக அதிக ஊக்கம் செலுத்தி, திருமந்திரத்திற்கு ஒரு விரிவுரை வெளியிடவேண்டுமென்று பணித்திருக்கின்ருர்கள். அதுபற்றி ஆராய்ச்சி செய்யும்போது, அதற்கான துணை நூல்களைச் சேகரித்துக்கொண்டிருக்கிறேம்.

திருமந்திரத்தைப் படித்துப் பார்க்கும்போது, சில வரிகள் மிகவும் எளிதாகவும், சில வரிகள் சற்றுக்கடினமாகவும் தோன்றுகின்றன. பலமுறை ஆராய்ந்து தெளியவேண்டுமென்று இறுதியாக முடிவு செய்துள்ளோம். எளிதாகப் புரியக்கூடிய சில பாடல்களை இங்கே எடுத்துக்கொள்வோம்.

இறைவனுக்கு அருச்சனை செய்வதற்காக மலரை எடுக்கும்போதுகூட, கொல்லாமையைக் கையாளவேண்டும் என்று வற்புறுத்தப்படுகிறது. நாம் அருச்சனைக்கு பூ எடுக்கச் செல்லுகின்றபோது, அந்தப் பூவின்கீழோ அல்லது அப்பூவின்மேலோ

பூச்சி ஒட்டிக்கொண்டிருக்கலாம். அதற்கும் கெடுதல் இல்லாமல் மலரை எடுக்க வேண்டும் என்று சொல்லுகிறுர்.

பற்ருய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்ருேர் அணுக்களைக் கொல்லாமை

என்பது திருமந்திரம்.

கொலையே களவுகள் காமம் பொய்கூறல்
மலைவான பாதக மாம்அவை நீக்கித்
தலையாம் சிவனடி சார்ந்தின்பம் சார்ந்தோர்க்(கு)
இலையாம் இவைஞாஞ னந்தத் திருத்தலே.

இது எவ்வளவு எளிதாகப் பொருள் விளங்குகிறது பாருங்கள். இதைப்போல எளிதான பாடல்கள் பல இருக்கின்றன.

ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறும் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே.

வீட்டில் காய்க்கும் பலாப்பழத்தை உண்ணுமல், ஈச்சம்பழத்திற்கு ஏங்கிநிற்க வேண்டாம் என்னும் பொருள்பட, பிறன் மனை நயவாமை என்பதனை அழகாக - எளிதாக விளக்குகின்றுர். இதையே நாலடியாரில்,

புக்கவிடத் தச்சம் போதரும்போ தச்சம்
துய்க்குமிடத்தச்சம் தோன்ருமல் காப்பச்சம்.

என்று, ஒருவன் பிறர்மனையை நாடுவதால் ஏற்படுகின்ற அச்சத்தையும் அதனுல் ஏற்படுகின்ற தீமைகளையும் விளக்குகின்றுர்.

அன்புடைமையைப்பற்றிக் கவனிப்போம். தமிழிலே எந்த நூலைப்பற்றி நாம் சிந்தித்தாலும் ஆசிரியர் நூலினுடைய பயன் என்ன என்று கூறுவர். பயனைச் சொல்லியே நூலைச் சொல்லிக்கொடுக்க வேண்டும் என்று பாயிரம் கூறுகிறது. அகப்பொருள் இலக்கணத்தைப் படித்த பிறகு முடிந்தபயன் என்ன என்ருல் நன்ருக இன்ப வாழ்வு வாழலாம் என்று சொல்லுவர் சிலர். அறிஞர்பெருமக்கள், அவ்வாறு சொல்லாது முடிந்தபயன் வீடுபேறு என்று சொல்வர். ஆனுல், வாழ்வின் அடிப்படை என்ன என்ருல், இருவருக்கும் நல்ல அன்பு, ஒத்த அன்பு இருக்கிறது என்பதுகருத்து; அதனுல் ஆழ்ந்த அன்பு, உண்மை அன்பு, முதிர்ந்த அன்பு இறைவனிடத்திலே செல்கிறது; அதனுல் நாம் நல்லகதி அடைகிறேும் என்று சொல்வார்கள். இப்படித்தான் அகப்பொருள் பயனைச் சொல்வது. திருமூலரே அதனை ஒரு இடத்தில் அழகாக,

புணர்ச்சியுள் ஆயிழை மேல்அன்பு போல
உணர்ச்சியுள் ஆங்கே ஒடுங்கவல் லார்க்கு
உணர்ச்சியில் லாது குலாவி உலாவி
அணைத்தலும் இன்பம் அதுவிது வாமே.

அனைவரும் அன்புவழியில் உணர்ச்சிவசப்பட்டு, பக்தியில் ஈடுபட்டால் இறைவனேடு கலந்துவிடலாம் என்பதனை நான்கு அடிகளில் அழகாகச் சொல்லிவிட்டார். அத்தகைய உணர்ச்சியும் அன்பும் உண்டாகக்கூடிய நிலைமை ஏற்படவேண்டும். அதுவே, மகிழ்ச்சிக்குரியதாகும்.

நடுவுநின் ருர்க்கன்றி ஞானமும் இல்லை
நடுவுநின் ருர்க்கு நரகமும் இல்லை
நடுவுநின் ருர்நல்ல தேவரும் ஆவர்
நடுவுநின் ருர்வழி நானும்நின் றேனே.

இந்தப்பாடல், படிக்கிறபோது யாருக்கும் சுலபத்தில் பொருள் விளங்குவது போல் எளிதாக அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

பெரியாரைத் துணைக்கோடல் என்பது இரண்டாந்தந்திரத்திலுள்ள பகுதி. அதில் ஒருபாடல். சாதாரணமாக, பெரியவர்களைக் கண்டதும் நாம் வணங்குகிறேும். வரலாறுகளைப் படித்தாலும், அவர்களின் துணைகொண்டே உலகம் முன்னேறியிருப்பதைக் காண்கின்றேும். இந்த உலகத்தைவிட்டு ஒருவர் சிவலோகத்திற்குச் சென்ருராம்;

அங்கே போனவுடன் "நான் வந்திருக்கின்றேன்" என்பதனை அவர் வெளியே உள்ளவர்களிடம் சொன்னாராம்; பிறகு உள்ளே அழைக்கப்பட்டாராம். இம்மாதிரியான நிகழ்ச்சிகளைக் கனவாக வைத்துப் பேசுகின்றார்.

உடையான் அடியார் அடியா ருடன்போய்
படையார் அழன்மேனிப் பதிசென்று புக்கேன்
கடையார நின்றவர் கண்டறி விப்ப
உடையான் வருகென ஓலமென் றாரே.

இங்கு அடியார் என்பது சாதாரண மனிதரையும் உடையான் என்பது அடியானை ஆட்கொள்கின்ற இறைவனையும் குறிக்கிறது. உடையானவான், சிவலோகத்தில் வீற்றிருப்பவன். அடியானாகியவன் அங்கு சென்று இறைவனுடைய அருளைவேண்டி, வணங்கி, வாழ்த்தி, தான் வந்திருப்பதாக உடையானிடம் அறிவிக்கும்படிச் சொல்பவன். உடையான் "உள்ளே வரலாம்" என்று உத்தரவிடுபவன். அதன்படியே அடியான் உடையானை அடைந்ததாகவும் இங்கே நாம் பொருள்காணுதல் வேண்டும். இந்தமாதிரியான அருத்தத்தில் வேறு யாராவது சொன்னால் பயித்தியம் என்று சொல்லுவார்கள். உண்மையாக நடக்கக்கூடியதுதானா என்றும் கேட்டுவிடுவார்கள். ஆனால், இங்கு உண்மைப் பொருளைக் கனவாக விளக்குகின்றார் திருமூலர்.

அடுத்து, ஐந்து இந்திரியங்களை அடக்குதலைப்பற்றி விளக்கமாகப் பேசுகின்றார். மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்தினையும் அடக்கி அதனால் இறைவனை அடையும் தத்துவத்தை இங்கே கூறுகின்றார். ஐந்தினை அடக்கிவிட்டால், இறைவனை எய்துதல் மிகவும் எளிது என்று காட்டுகின்றார்.

அஞ்சுள சிங்கம் அடவியில் வாழ்வன
அஞ்சும்போய் மேய்ந்ததுமஞ்சுக மேபுகும்
அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்
எஞ்சா திறைவனை எய்தலும் ஆமே.

இதில் அருமை, முறைமை என்ற இரண்டினையும் கூறுகின்றார். அதாவது, ஐந்து புலன்களையும் அடக்கிவிடுதல் என்பது மிகஅருமையான காரியம் என்று சொல்லி, அதேசமயத்தில் அவற்றினை முறைமையாகப் பயின்றால் அடக்க முடியும் என்பதனையும் வலியுறுத்துகின்றார். காட்டில் வாழ்கின்ற சிங்கத்தையும் முறையாகப் பழக்கினால் அதைவீட்டில் அடக்கிவைக்கமுடியும் என்பதுபோல, ஐம்புலன்களை முறையாக அடக்கிப் பழகினால் இறைவனை எளிதில் அடையலாம் என்பதை விளக்குகின்றார். அதைவிட்டு, மாயவரம் ஸ்டேஷன் வந்தால், அங்கு காப்பி நன்றாக இருக்கும்; பேரளம் வந்தால் வடை நன்றாக இருக்கும்; கும்பகோணத்திற்கு வந்தால் வெற்றிலை நன்றாக இருக்கும் என்ற ஆசை மேலிட்டால், நாம் புலனடக்கம் செய்தவர்களாக மாட்டோம். அப்போது, அந்த ஆசையானது அறுக்கப்படாமல், எஞ்சி நின்று, இறைவனை அடைவதையும் தடைசெய்கிறது. இவைகளுக்கு இடங்கொடுக்காமல் பழக்குதல்தான் ஒழுக்கநெறி என்று கூறப்படுவது. நாம் எந்தநோக்கத்தைக் கொண்டுள்ளோமோ அதை அடைவதற்காக, வழியில் எதுவந்தாலும் அவைகளை நோக்காது, வரும் இடையூறுகளைக் களைந்துவிட்டால், தானே இறைவனை அடையும் கதவானது திறக்கப்பட்டுவிடும். சிங்கத்தினைக் கொன்றுவிடு என்று கூறவில்லை; அடங்கும்படிச்செய் என்றுதான் சொல்லப்படுகிறது.

அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கிலை
அஞ்சும் அடக்கில் அசேதன மாமென்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே.

இப்படி இறைவனை அடைதலைப்பற்றிக் கூறப்படுகிற ஒழுக்கம்பற்றிய பாடல்களைச் சொல்லிக்கொண்டே போகலாம்.

அடியார்பெருமை என்னும் ஒரு தலைப்பிலே, வேடிக்கையாகக் கூறப்படுகின்ற

திருப்பாட்டையும் இங்கே நாம் எடுத்துக் கொள்வோம்.

என்தாயோடு என்னப்பன் ஏழேழ் பிறவியும்
அன்றே சிவனுக்கு எழுதிய ஆவணம்
ஒன்ருய் உலகம் படைத்தான் எழுதினுன்
நின்ருன் முகில்வண்ணன் நேரெழுத் தாயே.

'என்னுடைய அப்பன் என்னைச் சிவபெருமானுக்கு எழுதிக் கொடுத்திருக்கின்ருர்; அதை ரிஜிஸ்தரும் செய்துவைத்திருக்கிருர்; ஏழேழு பிறவிகட்கும் சிவனுக்கு அடிமை; எத்தனை பிறவி எடுத்தாலும் அவனுக்கு அடிமை' என்று எண்ணுகிற ஒழுக்கநெறி ஒருவனுக்கு வரவேண்டும். ஏழேழ் பிறவியும் இறைவனை நாம் மறவாதிருத்தல் வேண்டுமென்ற நல்ல கருத்து, விளையாட்டாக வெளியாகிறது. இவ்வாறு நகைச்சுவைபட மிக அழகாக - விளையாட்டாகவே நல்ல கருத்துக்களைக் கூறியிருக்கிருர் நம் திருமூலர். ஒழுக்கத்தின் பயன் ஏழேழ் பிறவியும் இறைவனை மறவாதிருத்தல்தான். இத்தகைய அரிய எண்ணங்களை நாம் இன்று நினைக்க, பேச, கேட்க ஒரு வாய்ப்பைத் தந்தருளுகிற - இன்னும் தரப்போகிற குருமகாசந்நிதானம் அவர்களுக்கு மீண்டும் ஒருமுறை வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக்கொண்டு இத்துடன் முடித்துக்கொள்கிறேன்.

மெய்த்தவத் தானை விரும்பும் ஒருவர்க்குக்
கைத்தலம் சேர்தரு நெல்லிக் கனியொக்கும்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற தேவர்கள்
அத்தனை நாடி அமைந்தொழிந் தேனே.

—திருமூலர்.

'அடியார் பெருமை'

திரு. G. வரதராஜன் அவர்கள், B. A.,
திருச்சி.

அடியார் என்ற சொல் சிவனடியாரையே குறிக்கும். பொதுச்சொல் ஒன்றை அடையின்றிச் சொன்னல் உயர்ந்த பொருளேயே குறிக்கும். ஒழுக்கம் என்ற சொல் பிற ஒழுக்கங்களைக் குறிக்காது உயர்ந்த நல்லொழுக்கத்தைக் குறிப்பிடுவது போலவும், உடையான் என்ற ஒருசொல் பிற செல்வத்தை உடையவனைக் குறிப்பிடாது அருட்செல்வத்தை உடைய சிவபிரானைக் குறிப்பிடுவது போலவும், அடியார் என்ற சொல் பிற அடியாரைக் குறிப்பிடாது சிவனடியாரையே குறிக்கும்.

அடியார் என்ற சொல்லின் பொருளைச் சிந்திப்போம். அடிமை செய்பவர் அடியார் என்பதும் ஒரு பொருள். சிவபெருமான் அசேதனப் பிரபஞ்சத்தை நோக்க உடையான் என்றும், சேதனப் பிரபஞ்சத்தை நோக்க ஆண்டான் என்றும் நமது பெருமக்கள் இயற்றிய சாத்திரதோத்திரங்களினல் நாம் அறிகிரும். எனவே, சேதனப் பிரபஞ்சமாகிய உயிர்கள் அனைத்திற்கும் அவனே இயமானன். உயிர்களனைத்தும் பொதுவாக அவன் அடிமைகளே. எல்லா உயிரும் அவனது அடிமை என்பதைத் திருமந்திரப் பாடலும் கூறுகிறது.

என்தாயோடு என்னப்பன் ஏழேழ் பிறவியும்
அன்றே சிவனுக்கு எழுதிய ஆவணம்
ஒன்ருய் உலகம் படைத்தான் எழுதினன்
நின்ருன் முகில்வண்ணன் நேரெழுத் தாயே.

என்தாய் தந்தையரோடு, ஏழுபிறவிகளிலும் சிவனது அடிமை என்று அடிமைச் சீட்டு எழுதியாகிவிட்டது; அந்தச் சீட்டை எழுதியவன் உலகத்தைப் படைத்த பிரமதேவன்; அதற்குச் சாட்சி முகில்வண்ணனுகிய கண்ணன் என்று திருமூலநாயனர் கூறிய கருத்துக்களிலிருந்து தெளிவாக விளங்குகிறது.

இனி, அடியார் என்ற சொல்லுக்கு, மற்ருெரு பொருளேயும் காண்போம். சிவபெருமானது திருவடியை இடையருது சிந்தித்து, அவனுடைய திருவடியையே அடுத்து இருப்பதால் அடியார் என்று கூறப்படுகிருர்கள் என்னலாம்.

அடுத்த இன்னுயிர்கட்கு அளவில்பேரின்பம்
கொடுப்பது முதல்வநின் குஞ்சிதபதமே.

என்ற குமரகுருபரசுவாமிகளின் பாடலும் ஒப்புநோக்கற்பாலது. அந்தத் திருவடி எவ்வாறு உள்ளது? அதன் பயன் என்ன? அதை எவ்வாறு காணவேண்டும்? என்பனவற்றையும் சிந்திப்போமாக.

தெளிவுடைய அடியார்களுக்குத் திருவடியே சிவமாகவும், சிவலோகமாகவும், செல்கதியாகவும், அடைக்கலப் பொருளாகவும் இருக்கிறது என்பது திருமூலநாயஞரின் வாக்கிலிருந்து தெரிகிறது. அதனுல் உயிர்கள் அடையும் பயன் என்ன?

திருவடி ஞானம் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலம் மீட்கும்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே.

திருவடிஞானம் சாலோக, சாரூப, சாமீப, சாயுச்சியப் பதவிகளைக்கொடுக்கும் என்ற உண்மை திருமூலர் கருத்திலிருந்து தெரிகிறது. திருவடியை, ஆண்டவன் குருவடிவில் வந்து, தன் தலைமேல் வைத்து, தன்னைக் கருவிலே தள்ளாமல் ஆண்டு கொண்டான் என்று அவரது பாடலால் நன்கு அறியலாம்.

திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்
பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னை
குருவடி விற்கண்ட கோனைஎம் கோவை
கருவழி வாற்றிடக் கண்டுகொண் டேனே.

குருவடிவில் வந்து திருவடியைத் தன் தலையில் வைத்த எம்பெருமானை, தனக்கு அரசன் என்றும் தனக்குத் தலைவன் என்றும் கூறி, தன்னைப் பிறவிக்கடலினின்றும் கரையேறச் செய்த பெருமையினையும் திருமூலர் பாராட்டுகிறார். அதனால் சிவபிரானது திருவடி பிறவிநோய்க்கு ஒரு மருந்தாகும் என்ற உண்மை புலப்படுகிறது. இப்படி உயர்ந்த திருவடியை - இவ்வளவு நன்மைதரும் திருவடியை எவ்வாறு காண வேண்டும்? இறைவனது திருவுருவத்தை மூன்று பகுப்புக்களாக நமது அறிவுநூல்கள் கூறும். அவை திருவடி, திருமுகம், திருமுடி என்பன. பராசக்தியே திருவடியாகவும், பூர்ணநிறைவே முகமாகவும், வாக்கிற்கு எட்ட முடியாத சுகமே முடியாகவும் குறிக்கப்படுகிறது.

பரைஉயிரில் யானெனதென் றறநின்றது அடியாம்
பார்ப்பிடமெங்கும் சிவமாய்த் தோன்றுவது முகமாம்
உரையிறந்த சுகமதுவே முடியாகும்.

திருவடி வணக்கத்தால் திருவருளைச் சிந்திக்கவும், பூர்ணநிறைவு பெறவும், சச்சிதானந்தத்தை அடையவும் முடியும் என்பது நமக்குப் புலனாகிறது; திருவருளின் பெருமை நன்கு விளங்குகிறது.

இனி, அடியார் என்ற சொல்லுக்கு இன்னொரு பொருளும் உண்டு. அடியார்கள் தங்களை உலகத்திலுள்ள எல்லாப்பொருள்களிலும் கடையவர்கள் என்றும், கீழேயுள்ளவர்கள் என்றும் கருதுவதால் இப்பெயர் வந்ததாகவும் கொள்ளலாம். திருவடியை அணைந்தாரது தன்மையைக் கூற வந்த மணிவாசகர்,

யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவர்க்கும் கீழாம் அடியேனை - யாவரும்
பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென்
மற்றறியேன் செய்யும் வகை. [எம்பெருமான்

என்று தன்னுடைய சிறுமையும் இறைவனது பெருமையும் எண்ணி வியக்கிறார். ஏன் அடியார்கள் தம்மைப் புழுவினும் கடைப்பட்டவர்களாகக் கருதுவதற்குரிய காரணத்தைத் தெரிந்துகொள்வதும் நலம். நிறைந்த கல்விமான்கள், முனைப்பின்றிப் பணிவோடு இருத்தலையும், குறைந்த அறிவுடையவர் பணிவின்றி ஆணவத்தோடு இருத்தலையும் காண்கிறோம். ஏன்? நிறைந்த அறிவுடைய பெரியவர்கள் குன்றின்மேல் ஏறி நின்றவர்க்கு ஒப்பாவர். உலகத்தில் உள்ள கடல், நிலம் முதலியவற்றைக் காணும் திறம்பெற்றவர். அதனால் கல்வியாகிய கடலின் ஆழமும், தான் முகந்து கொண்ட கல்வியாகிய நீரின் சிறுமையும் அவர்களுக்குத்தெரிகிறது. அதனாலன்றோ மாணிக்கவாசகரும்,

கல்வி யென்னும் பல்கடல் பிழைத்தும்

என்றார். அதனால் கற்றறிந்தவர் அடங்குகிறார். ஆனால், குறைந்த அறிவுடையோர் அடக்கமின்றியிருக்கின்றார். அவர்களால் கல்வியின் பரப்பையும், கல்விமான்களின் சிறப்பையும் உணர முடியாது. அதனால் அவர்கள், தங்களது பெருமையை வியந்து பேசித் தருக்கித் திரிவார்கள். இந்தக் கருத்தைத் திருவள்ளுவநாயனாரும் நன்றாக விளக்கியுள்ளார்.

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து.

பெரியோர்கள் முனைப்பின்றி இருப்பார்களென்பது எல்லா மொழி பேசும் எல்லா நாட்டு மக்களுக்கும் ஒத்த கருத்தாகும். மகாத்மாகாந்தியடிகள் தான் எழுதியுள்ள 'சத்தியசோதனை' என்னும் நூலில் "சத்தியத்தை நாடிச் செல்லுகின்ற ஒருவன் எல்லா உயிர்களினும் தன்னைக் கடையனாகக் கருதவேண்டும்; உலகத்து மக்களால் மதிக்கப்படும் துரும்பாக அவன் மதிக்கப்பட வேண்டும்; அப்பொழுதுதான் அவன் அதற்குரியவனாவான்" எனக் கூறியிருத்தலும் இக்கருத்தினை வலியுறுத்தும். இதுபோலவே ஆண்டவனுடைய திருவருள் பெற்ற அடியார்கள் அவனை அணுகியுள்ளவர்களாதலால், அவனுடைய திருவருள்

பெருக்கம் அனைத்தும் அறிகிறார்கள். அவ்வாறு அறியுங்கால், அவனால் படைக்கப்பட்ட நூற்றொருகோடியின் மேற்படவிரிந்த அண்டங்களுள், தாம் ஒரு அணு அளவாக வுள்ளோம் என்ற உண்மையை உணருகிறார்கள். அதனால் அடியார்கள் தங்களை உயிர்களுள் கடையவர்களாகக் கருதுகிறார்கள். எனவே, அடியார்கள் என்பவர்கள், இறைவனுக்கு அடிமைகளாகக் கருதுகின்றவர்கள் என்பதும், அவனது திருவடியிலேயே பொருந்தி அவனையே சிந்தித்து இருப்பவர்கள் என்பதும், எல்லா உயிர்களினும் தாம் கடைப்பட்டவர்கள் என்று உணர்பவர்கள் என்பதும் பெறப்பட்டன.

இனி, அடியாரது அடையாளங்களையும், இயல்புகளையும், பெருமையையும் அறிந்துகொள்ளவேண்டும்.

நீறு கண்டிகை கொள்ளும் நியதியர்
ஏறும் ஐந்தெழுத் தெண்ணும் உளத்தினர்
மாறில் பத்தியிற் பூசை வயக்குநர்
ஆறு சூடி அடியவ ராவரால்.

பரவு கோயில் பணிபல செய்பவர்
விரவு மேன்மை புராண விருப்பினர்
உரவு றும்அர வோதை எழுப்புவர்
அரவு பூண்டவர்க்கு அன்பர்கள் ஆவரால்.

மெய்யெலாம் திருநீறு நிறையப்பூசி, அக்கமணிமாலையை அழகுபெறப் புனைந்து, ஒருநெறிய மனத்தோடு ஐந்தெழுத்தினை எண்ணி, அன்போடு பூசைபண்ணுபவர் என்பதும்; கையினால் உழவாரத்தொண்டு புரிந்து, வாயினால் அவனதுபுராணத்தைப் பாடி, உள்ளத்தால் நினைந்து, ‘ ஹர ஹர ’ என்ற ஓசையை எழுப்புபவர் என்பதும் சூதசங்கிதைப் பாடல்களால் நாம் அறியக் கிடக்கின்றன. இன்னும்,

பூதம் ஐந்தும் நிலையில் கலங்கினும்
மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்
ஓது காதல் உறைப்பின் நெறிநின்றார்
கோதி லாத குணப்பெருங் குன்றனார்.

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்.

பஞ்சபூதங்கள் தத்தம் நிலையிற்றிரிந்தாலும், தாம் திரியாது இறைவனது திருத்தாளில் உறைப்போடு நிற்பவர் என்பதும், இருவினையொப்புடன் பொருந்தி ஓடும் செம்பொன்னும் ஒக்கநோக்கும் சிறப்புடையவர் என்பதும் சேக்கிழார் பெருமானின் திருவாக்குகளால் அறிகிறோம்.

இனி, ஞானசாத்திரத்திலே முதல் நூலாகவுள்ள மெய்கண்டார் அருளிச் செய்த சிவஞானபோதம் என்ற பெருநூலில் அடியார்களது பெருமை நன்றாக விளக்கப்படுகிறது.

செம்மலர் நோன்றாள் சேரலொட்டா
அம்மலம் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலறநேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே.

அயரா அன்பின் அரன்கழலடைந்த ஜீவன்முக்தர்களும் தாம் ஊழ்வினைப்பயனை நுகருங்காலத்தில், வாசனாமலம் தாக்காதிருத்தற்பொருட்டு, சிவனடியார்கள் திருவேடத்தை இடையறாது சிந்திக்கவேண்டும் என்று கூறுகின்றது சிவஞானபோதம். இன்னும் அடியார் வாழுகின்ற நாட்டிலே பருவந்தோறும் மழைபொழியும்; உட்பகை வெளிப்பகைகளினால் உண்டாகும் துன்பங்கள் இரா என்பதை,

திகைக்குரி யானொரு தேவனை நாடும்
வகைக்குரி யானொரு வாதி யிருக்கிற்
பகைக்குரி யாரில்லை பார்மழை பெய்யும்
அகக்குறை கேடில்லை யவ்வுல குக்கே.

என்ற திருமூலர்பாடலால் அறிகின்றோம். அடுத்து ஈசனடியார், மயங்காவழிசென்று வானுலகாள்வர் என்றும், அவர்களுக்கு எட்டுத் திக்குகளும் தோள்களாகவும், பாதாளம் திருவடிகளாகவும், விசும்பே முடிகளாகவும் உள்ளன என்றும் வர்ணிக்கின்றார்.

இயங்கும் உலகினில் ஈசன் அடியார்
மயங்கா வழிசெல்வர் வானுல காள்வர்
புயங்களும் எண்டிசை போதுபா தாள
மயங்காப் பகிரண்ட மாமுடி தானே.

இத்திருப்பாட்டிலே, சிவபெருமானது திருவடிவமே அடியாரது திருவுருவமாகக் கூறப்பட்ட பெருமையினைக் கண்டு மகிழ்வோமாக. இன்னும் அடியார்களுக்கு அன்னமளித்தலை மாகேசுரபூசை என்று கூறுகிறார். அதற்கென ஒரு பகுதி திருமந்திரத்தில் இடம்பெற்றுள்ளது. ஈசுவரனுக்குச் செய்யும் பூசை அடியார்களுக்கு ஆகா; ஆனால், அடியார்களுக்கு ஒன்று செய்தால், அது இறைவனுக்குச் செய்ததாகும் என்றும் அறிகிறோம்.

படமாடக் கோயில் பகவற் கொன்றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க் கொன்றீயில்
படமாடக் கோயில் பகவற்கங் காமே.

ஆயிரம் அந்தணர்கட்கு இல்லங்கள் அமைத்துக் கொடுப்பதைக் காட்டிலும், ஆயிரம் கோபுரம் கட்டிமுடிப்பதைக்காட்டிலும் ஒரு அடியார்க்கு ஒருபகல் உணவு அளிப்பதின் பலன் அதிகம்.

அகரம் ஆயிரம் அந்தணர்க் கீயிலென்
சிகரம் ஆயிரம் செய்து முடிக்கிலென்
பகரும் ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரில்லை என்பது நிச்சயந் தானே.

இதுகாறும், அடியார் என்ற சொல்லின் பொருளையும், அவர்களது பெருமையையும் ஒருவாறு சிந்தித்தோம்.

சிவயோகி ஞானி செறிந்தஅத் தேசம்
அவயோகம் இன்றி அறிவோருண் டாகும்
நவயோகம் கைகூடும் நல்லியல் காணும்
பவயோகம் இன்றிப் பரலோகம் ஆமே.

—திருமூலர்.

" நம்பிரான் திருமூலன்
அடியார்க்கும் அடியேன் "